உ

# தருமதீபிகை

(மூலமும்—உரையும்)



## ஆறும் பாகம்.

ஆசிரியர்
ஜெகவீரபாண்டியனர்.

மதுரை. சி. வி. என். பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றன.
1956.

## இதில் அடங்கி யுள்ளவை.

---

# முகவுரை.

இது தருமதீபிகையின் ஆறுவது பாகம். அரசதருமங்களை யும் நீதிமுறைகளையும் அமைச்சு நிலைகளையும் யூக விவேகங்களை யும் தெளிவாக விளக்கியுள்ளது. அறிவு முதல் உரம் ஈருகப் பன்னிரண்டு அதிகாரங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன.

சிறந்த அறிவு நலங்கள் நிறைந்து உயர்ந்த பெரியோர்களைத் துணைக்கொண்டு உறுதி நிலைகளைக் கருதி ஓர்ந்து மாந்தரை எவ் வகையும் செவ்வையாகப் பாது காத்து வருவது வேந்தன் கட மையாம். ஒரு நாடு அதில் வாழுகின்ற மக்களாலும் வேந்து முறையாலும் வியனு விளங்கி வருகிறது. இனிய குணநலங் களால் மனிதன் மணம் பெறுகிருன். இதயம் புனிதம் ஆனுல் அங்கே அரிய பல மகிமைகள் உதயம் ஆகின்றன. தரும சிந் தனையோடு கருமங்களைக் கருதிச் செய்; வீரம் உடையனுய் விளங்கி நில்; ஏழைகளுக்கு இரங்கி இதம் புரிக; உண்மையான வண்மையால் உயர்ந்த புகழ்கள் விளைந்து வருகின்றன. தீது யாதும் படியாமல் நெறிமுறையே ஒழுகி நீதிமானுய் நிலவுக; நித்திய அநித்தியங்களை உய்த்துணர்ந்து உத்தம விவேகியாய் ஒளிபெற்று உயர்க; புனித எண்ணங்கள் புண்ணியங்களை அரு ளுதலால் அவ்வழியே பழகி எவ்வழியும் விழுமியனுய் வாழுக; யூகம் பெருகி யூகியாய் வரின் யோகம் பெருகி உன்பால் உரி மையாய் வரும்; உள்ளம் தகுதியாய் உயர்ந்து ஓங்கின் உயர் நலங்கள் மிகுதியாய் விளைந்து ஓங்கும்; அரிய கருமங்களை ஆய்ந்து உரிய கடமைகளை ஓர்ந்து செய்; செய்யும் வினைகளால் சிறப்புகள் சேர்கின்றன; ஒத்த பிறப்பினராயினும் உயர்ந்த காரியங்களைச் செய்பவர் சிறந்த மேலோராய்ச் சீர்த்தி பெறு கின்றனர். தகவும் தரமும் மிகவும் மேன்மையைத் தருகின்றன. தரம் பெருகி வருபவர் உரம்பெருகி உயர்கிருர். இவ்வாறுன நீர்மை சீர்மைகள் நன்கு சுரந்து இதில் நிறைந்திருக்கின்றன.

திருவள்ளுவர் நிலையம் — இங்ஙனம்

மதுரை. — ஜெகவீரபாண்டியன்.

24—1—56.

## நூலின் நிலை.

அறிவும் ஆற்றலும் ஆட்சியும் மாட்சியும்
நெறிசெய் வீரமும் வண்மையும் நீதியும்
உறுதி யூகம் உரம்முதல் யாவுமே
செறியும் பேரறை தேர்கஇந் நூலையே.

வருபடை எதிர் தாங்கினன்;
பெயர்படை புறங் கண்டனன்;
கடும்பரிய மாக் கடவினன்;
நெடுந்தெருவில் தேர் வழங்கினன்;
ஓங்கியல் களிறு ஊர்ந்தனன்;
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்;
பாண் உவப்பப் பசி தீர்த்தனன்;
மயக்குடைய மொழி விடுத்தனன்; ஆங்குச்
செய்ப எல்லாம் செய்தனன் ஆகலின்
இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே. (புறம், 239)

பாண்டிய மன்னன் ஆற்றியுள்ள ஆட்சி முறையும், அனுபவித்துள்ள போக நலங்களும், நடந்து காட்டியுள்ள ஒழுக்க முறைகளும் இதில் வியப்பை விளைத்து நிற்கின்றன. கவியைக் கருதி நோக்கிப் பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். விழுமிய வாழ்வுகள் விழிதெரிய வந்தன.

அரிய பல பண்பாடுகள் அமைந்த இந்த அரசனுடைய ஆட்சியில் குடிசனங்கள் பெருமகிழ்ச்சியடைந்து யாண்டும் இனிது வாழ்ந்து வந்தனர். இந்த மன்னனுடைய அறிவும் சீலமும் மன்னுயிர்க்கு இன்னமிர்தங்களாய் இதம் புரிந்து வந்தன. கலை ஞானம் நிறைந்த ஒருவன் தலைவனாய் வரின் அந்த நாடு பலவகையிலும் சிறந்து உயர்ந்து விளங்கும் என்பதை இந்தக் குலமகனுடைய ஆட்சி உலகம் அறிய நன்கு உணர்த்தி நின்றது.

"Only a philosopher-king is fit to guide a nation." (Plato)

"கலைஞானமுடைய அரசனே நாட்டை நல்ல வழியில் நடத்தத் தகுதியானவன்" என்னும் இது இங்கே அறியவுரியது. அரசனது நிலையையும் ஆட்சி முறை முதலிய அரசியல் துறைகளையும் குறித்துக் கூறிவரும் போது கிரீஸ் தேசத்துப் பெரியாரான பிளாட்டோ என்பவர் இவ்வாறு உறுதியாய் உரைத்திருக்கிறார். ஞானசீலம் தோய்ந்துவரின் நன்மைகள் வாய்ந்து வரும்.

நல்ல கல்வியறிவுக்குப் பயன் நாட்டு மக்களை நன்கு பாதுகாத்து வருவதேயாம்; அந்தக் காப்பு முறையில் தலைசிறந்து வரும் அரசன் யாண்டும் மேன்மையாய் நிலை உயர்ந்து விளங்கு

வான். கடமையை யுணர்ந்து காரியம் புரிவதே கரும வீரமாம்.

---

765. குற்றங்கள் நீக்கிக் குணநலங்கள் ஆக்கியே
அற்றங்கள் நேரா தயலொதுக்கிப்—பெற்றுள்ள
ஆட்சியைச் செவ்வையா ஆற்றிவரின் அவ்வரசு
மாட்சி மிகுந்து வரும். (ரு)

இ—ள்

மடி முதலிய குற்றங்களை ஒழித்துக் குண நலங்களை வளர்த்து இடையூறுகளை எதிர்நிந்து விலக்கித் தனது ஆட்சியை எவ்வழியும் செவ்வையாகச் செய்துவரின் அந்த அரசுஅரிய பல மாட்சிகளை அடைந்து என்றும் இனிது விளங்கும் என்பதாம்.

இது ஆட்சிக்கு உரிய மாட்சியை உணர்த்துகின்றது.

மனிதன் குணங்களால் உயர்ந்து வருகிறான்; குற்றங்களால் தாழ்ந்து படுகிறான். உயர்வு தாழ்வுகளுக்கு இயல்புகள் மூல காரணமாயுள்ளன. நல்ல இயல்பு மனிதனை நல்லவனாக்கி நலம் பல புரிகின்றது; தீய இயல்பு தீயவனாக்கி அல்லல் பல செய்கின்றது. துன்பத் தொடர்புகளும் இழிவுகளும் பழி இயல்புகளால் விளைந்து வருதலால் அவை ஒழிந்த அளவு மனிதன் இன்ப நலன்களையும் இனிய மேன்மைகளையும் அடைந்து கொள்கிறான். அவனோடு சேர்ந்து பழகி வருபவரும் இனிய நீர்மைகள் தோய்ந்து விழுமியோராய் உயர்ந்து வருகிறார்.

சார்ந்ததன் வண்ணமாய் நேர்ந்து வருகிற இத்தகைய மனித சமுதாயத்தை இனிது ஆளவந்த அரசன் அறிவு சீலங்கள் நிறைந்து பலவகையிலும் புனிதனாய் உயர்ந்திருக்க வேண்டும். அரசன் இனியனாய் உயர்ந்த போது ஆட்சி எவ்வழியும் செவ்வையாய் மாட்சியடைந்து விளங்குகிறது. நீர்மை நிறைந்த நேர்மையான ஆட்சியில் சீர்மைகள் செறிந்து விளைந்து வரும் ஆதலால் அங்கே வாழ்ந்து வருகிற மாந்தர் திவ்விய மகிமைகள் தோய்ந்து யாண்டும்இனியராய் மகிழ்ந்து உயர்ந்து வருகின்றார்.

குடி சனங்களை இனிது காக்க நேர்ந்த அரசன் மடி மறதி முதலிய கெடுதிகள் தன்பால் நேராமல் தன்னை முதலில் நன்கு பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு காத்த பொழுது

தான் அவன்பால் புகழ் பூத்து வரும். இழிவான குற்றங்கள் பழி பாவங்கள் போல் அழிவுதரும் ஆதலால் விழுமிய நிலையில் விழியூன்றியுள்ள அரசன் எவ்வழியும் அவற்றை யாதும் அணு காமல் விலகி நிற்கின்றான். குற்றங்கள் நீங்கிய அளவு அங்கே குணங்கள் ஓங்கி வருகின்றன. அவைவர எவையும் இனிமையாம்.

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை. (குறள், 434)

உலகம் காக்க வுரிய அரசன் முன்னதாகத் தன்னை இன்ன வாறு காத்துக் கொள்ள வேண்டும் எனத் தேவர் இவ்வாறு காட்டியிருக்கிறார். கள்வர் முதலாயினோர் கவர்ந்து கொள்ளாத படி அரிய பொருளை உறுதியோடு கருதிப் பாதுகாத்தல் போல் தனது உரிய தலைமையில் குற்றம் புகாமல் வேந்தன் விழிப் போடு ஒழுகிவர வேண்டும் என்பதை இது தெளிவா விளக்கி யுள்ளது. குற்றம் ஒழியின் வெற்றியும் இன்பமும் விளைகின்றன.

அற்றம் = அழிவு, கேடு. பெருமையை அறுத்துக் கெடுத் துச் சிறுமையை விளைத்து நிற்பது அற்றம் என வந்தது. குற்றம் அற்றம் தரும் கொடிய பகை ஆதலால் அதனைக் கடிது கடிவது முடிமன்னர்க்கு நெடிய வெற்றியாம்.

இழிந்த புன்மைகள் யாதும் இன்றி உயர்ந்த தன்மைக ளோடு ஒழுகி வரும் அரசன் விழுமிய மகிமையாளனாய் விளங்கி வருகிறான். அவனுடைய ஆட்சி நீதிமுறை தழுவி நெறி யே வருதலால் அரிய புகழ்ஒளி வீசிப் பொலிந்து திகழ்கின்றது.

“இறப்பப் பெருகி இசைபடுவது அல்லால்
சிறப்பிற் சிறுகுவது உண்டோ? அறக்கோலால்
ஆர்வமும் செற்றமும் நீக்கிமற்று யார்கண்ணும்
இன்னாத வேண்டா இகல்வேல் மறமன்னர்
ஒன்னார்க்கு உயர்த்த படை.” (தகடூர்)

செருக்கும் சினமும் சிறுமையும் இன்றி யாண்டும் நேர்மை யோடு நின்று நீதிமுறை புரிந்து எவ்வுயிர்க்கும் இதம் செய்து வருகிற மன்னன் யாவரும் புகழ்ந்து போற்ற என்றும் இசை மிகுந்து உயர்ந்து விளங்குவான் என இது உணர்த்தியுள்ளது.

நாடு ஆளும் வேந்தர் நாளும் நன்கு நாடிச் செய்ய வேண்டிய காரியங்கள் பல. பொழுது பழுதாகாமல் எவ்வழியும் உலக மக்களுடைய சேமத்தைக் கருதி வருவதே அரசனது உரிய கருமமாம். குடி சனங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு மகிழ்ச்சி அடைந்து வாழுகின்றார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்த மன்னன் முடி உயர்ச்சியடைந்து ஒளி மிகுந்து விளங்குகின்றது. உரிய சனம் உள்ளம் உவந்துவரின் அரியாசனம் இன்ப வெள்ளம் மிதந்து வரும் என்பது சீன தேசத்தில் வழங்கி வரும் பழமொழி. மாந்தர் உவந்து வர வேந்தன் உயர்ந்து வருகிறான்.

சரியான முறையில் தேசத்தைப் பாதுகாத்து வருகிற அரசன் ஈசன் அருளை எய்தி இருமையும் இன்பம் பெறுகின்றான். சீவர்களை ஆதரித்து அருளுவது தேவ தேவனுடைய இயல்பு ஆதலால் அந்த உரிமையைச் செய்து வருபவன் திவ்விய மகிமையை எய்துகின்றான். தனக்கு நேர்ந்த தலைமை தனிமுதல் தலைவனுடைய அருள் நிலைமை என்னும் பொருள் நிலையை உணர்ந்து தெருள் மிகுந்து அரசன் நீதிமுறை செய்யின் அவன் அரிய தத்துவ ஞானியாய் உத்தம நிலையில் உயர்ந்து கொள்கிறான். உண்மையான நல்ல அறிவு அரசனுக்கு எவ்வழியும் நன்மை தருகின்றது. அத்தகைய அறிவு இல்லையானால் அந்த அரசு எத்தகைய செல்வ வளங்களை எய்தியிருந்தாலும் இழிந்து பாழாம். மதிமாண்பு அதிமாண்புகளை அருளுகின்றது.

"Unguided by knowledge, the people are a multitude without order, like desires in disarray." (Durant)

"நல்ல அறிவோடு முறை செய்து அரசன் காவான் ஆயின் குடி சனங்கள் யாண்டும் ஒழுங்கீனமாய் மனம் போனபடி புரிந்து நிலை குலைந்து உழலுவர்" என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது. கடமையைக் கருதி யுணர்ந்து உரிமையோடு ஓர்ந்து செய்யும் ஆட்சி யாண்டும் உயர்ந்த மாட்சியாய் ஓங்கி வரும்.

மன்னன் மதிமாண்பு மன்னுயிர்க்கு இன்னமுதாம்
அன்னதின்றேல் யாவும் அவம்.

இதனை உன்னி உணர்ந்து உண்மை தெளிக.

———

766 கற்றவரைக் கண்ணாகக் கைதழுவி மெய்தெளிந்து
மற்றவரை எல்லாம் மதித்தறிந்து—உற்ற
தகுதி யளவாகத் தக்க வகையில்
பகுதி புரிதல் பயன். (சு)

இ-ள்.

கல்வியறிவுடைய நல்லோர்களைக் கண் எனக் கைதழுவி உண்மை நிலைகளை ஓர்ந்து தெளிந்து எல்லாருடைய இயல்புகளையும் ஆய்ந்து அறிந்து நடுவு நிலைமையோடு அரசு ஆட்சி புரிந்து வரின் நிறைந்த பலன்கள் அங்கே விளைந்து வரும் என்பதாம்.

தக்க பக்கத்துணை அரசனுக்கு மிக்க பலமாம்; ஆகவே அத்தகைய தகுதியாளரை அவன் உறவாத்தழுவிக் கொள்ள வேண்டும் என அவனது உறுதி நலனை இது உணர்த்துகின்றது.

அரிய பல காரியங்களைக் கருதிச் செய்ய வேண்டிய கடமை அரசனுக்கு உரிமையாய் அமைந்துள்ளது. பருவம் தவறாமல் யாவும் ஆராய்ந்து பாதுகாத்து வருபவன் கருமவீரனாய்ப் பெருமை பெற்று வருகிறான். தன்னுடைய ஆட்சியைத் தகுதியா நடத்தத் தக்க துணைவரைப் பக்கம் சேர்த்துக் கொண்டு எவ்வழியும் செவ்வையாய்க் கூர்ந்து ஓர்ந்து நெறிமுறையோடு குடிகளைப் பாதுகாத்துவரின் அம்மன்னன் முடிவேந்தர் எவரினும் முதன்மை எய்தி யாவரும் அடிஏந்தி வர நிற்கின்றான்.

அரசபாரம் தாங்குதல் அரிய செயல் ஆதலால் அதற்கு உரிய துணைகளை ஓர்ந்து கொள்வது பெரிய சீர்மையாம். நாடு ஆளும் காரியங்களை நாடிச்செய்து வரும் அளவு அந்த அரசனுக்குத் திருவும் கீர்த்தியும் பெருகி வருகின்றன. உரிய கடமையை ஊன்றி உணர்ந்து புரிந்த பொழுது அங்கே பெரிய மகிமைகள் ஓங்கி எழுகின்றன. செயலளவு உயர்வுகள் உளவாகும்.

பொழுதைப் பழுதாக்காமல் எவ்வழியும் விழி யூன்றி நோக்கி வினையாளரை அரசன் ஆள வேண்டும். நாடி முறை செய்யக் கோடி திரு ஓடிவரும் என்னும் பழமொழியால் வினையாளரை விநயமாக் கருதி இனிது ஆண்டு வரும் ஆட்சியால் விளைந்து வரும் மாட்சிகள் ஈண்டு வெளியாய் நின்றன.

நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடாது உலகு. (குறள், 520)

அரச காரியங்களைச் செய்து வரும் அதிகாரிகளை அரசன் நாளும் நன்கு கவனித்து வந்தால் தேசம் முழுவதும் செம்மையாய் நடந்து வரும் எனத் தேவர் இவ்வாறு உணர்த்தியுள்ளார்.

நுகத்தில் பூட்டிய மாடுகளைக் கவனித்து ஓட்டினால் வண்டி சரியாய் ஓடும்; அது போல் கருமத்தில் நாட்டிய தலைவர்களைக் கருத்தோடு செலுத்தி வந்தால் ஆட்சித்தேர் எவ்வழியும் மாட்சியாய்ச் சிறந்து விளங்கி வரும். தகுதியான அறிஞர்களைத் தேர்ந்து தெளிந்து அவரைத் துறைகள் தோறும் முறையே நிறுவி அரசன் சதுரோடு முறை செய்து வந்தால் அந்த நாடு எந்த வகையிலும் சிறந்து எல்லா வளங்களும் நிறைந்து விளங்கும். கரும வீரர்களான அரசியல் நிபுணர்களைச் சரியாக ஆள வேண்டியிருத்தலால் அரசன் பெரிய அறிவாளியாயிருக்க வேண்டும். சிறந்த அறிவுதான் மனிதனை உயர்ந்த நிலையில் உயர்த்தியருளுகிறது. அதன் ஒளிவழியேவாழ்வு வளமுறுகிறது.

" Knowledge has its seat in the head; it is the eye of desire, and can become the pilot of the soul. " (Plato)

" அறிவு தலைமையாய் நின்று மனித விருப்பத்தை விழுமிதா நிறைவேற்றும் விழி போல் உள்ளது; உயிர் வாழ்வு துயர் உறாதபடி நல்ல வழி காட்டியாய் அது அமைந்து நிற்கிறது" எனப் பிளாட்டோ என்னும் கிரீஸ் தேசத்துப் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார். அறிவு மனிதனுக்குச் செய்து வருகிற மாட்சியைத் தத்துவநோக்கோடு இது உய்த்துணரச் செய்கிறது.

இத்தகைய அறிவை அரசன் உரிமையாகப் பெற்றிருந்தால் எத்தகைய நிலையிலும் அவன் உத்தமனாய் உயர்ந்து விளங்குவான். தன் ஆட்சிக்கு உரிய அறிவாளிகளைச் சரியாக அமைத்துக் கொள்வதிலேயே அவனுடைய மாட்சிகள் யாவும் மருவி நிற்கின்றன. உற்ற துணை வெற்றி வினையாகிறது.

கற்றவரைக் கண்ணாகக் கைதழுவி என்றது கல்வியறிவுடைய நல்ல அறிவாளிகளை அருமை பாராட்டி உரிமையோடு தழுவிக் கொண்டால் அந்த அரசு விழுமிய நிலையில் ஓங்கி வரும்

ஆதலால் ஈங்கு அதன் பாங்கு தெரிய வந்தது. காரியசித்திகளை அடைந்து அரசன் சீரிய வெற்றிகளில் விளங்க வேண்டுமாயின் கற்றறிந்த பெரியோர்களை உற்றதுணையா அவன் பற்றிக் கொள்ள வேண்டும். பெற்ற துணைகள் பெரு மகிமைகள் புரிகின்றன.

ஒற்றர் தங்களை ஒற்றரின் ஆய்தலும்;
கற்ற மாந்தரைக் கண்எனக் கோடலும்;
சுற்றம் சூழ்ந்து பெருக்கலும்; சூதரோ
கொற்றம் கொள்குறிக் கொற்றவர்க்கு என்பவே. (1)

நீதியால் அறுத்து அந்நிதி ஈட்டுதல்;
ஆதி யாய அரும்பகை நாட்டுதல் ;
மோதி முள்ஒடு முட்பகை கண்டிடல் ;
பேது செய்து பிளந்திடல் பெட்டதே. (சீவகசிந்தாமணி)

அரசியல் துறைகளையும் முறைகளையும் இவை குறித்து வந்துள்ளன. சீவகமன்னனுக்கு அவன் தாய் இவ்வாறு போதித்திருக்கிருள். அரச குடியில் பிறந்த மகளிரும் ஆட்சி முறைகளை நன்கு அறிந்துள்ளமை இந் நாட்டின் மாட்சியாய் மருவியுள்ளது. தடாதகைப் பிராட்டியார் மதுரையில் பெண்ணரசியாய் அமர்ந்து பேருலகை ஆண்டது பெரு மகிமையாய் நீண்டது.

நேர்ந்த உளவுகளை நேரே ஓர்ந்து வரும்படி உய்த்து விடுத்த ஒற்றர் நிலைகளை மருமமா ஒற்றி உணர்ந்து கொள்; கற்றமாந்தரைக் கண் எனக் கருதி உற்ற துணையா உரிமை செய்து கொள்; சுற்றத்தாரை நன்கு பெருக்கி வருக; தரும நீதியோடு பொருளை ஈட்டுக; பழமையான பகைவர் கிழமையாய்வரினும் அவரை விரைந்து நம்பாமல் விலகி நில்; முள்ளை முள்ளால் களைந்து எடுத்தல் போல் மூண்ட பகையை வேறு ஓர் நீண்ட பகையால் நீக்கி ஒழி; நாட்டு மக்களுக்கு எவ்வழியும் ஆக்கமான நிலைகளையே நாடிச்செய்; இவ்வாறு செய்துவரின் அரசு என்றும் வெற்றியுடையதாய் விளங்கி வரும் என அரசியல் முறைகளை வரிசைப் படுத்தி அத்தாய் கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

தேச மக்கள் சீர்மையாய் வாழ்ந்து வரும்படி கூர்மையா ஓர்ந்து செய்வதே அரசனது தேர்ந்த கடமையாம். அந்த உரிமையைச் செய்துவரும் அளவு அவன் பெருமை பெற்று வருகிருன். கருமங்களைக் கருதிச் செய்யின் தருமங்களாகின்றன.

" Labour diligently at your proper callings, in order to give settlement to the aims of the people. " (Confucius)

" பொதுசனங்களுடைய நோக்கங்களுக்கு உரிமையாய் உறுதி தரும் பொருட்டு உன் கருமங்களை நீ கவனமாக் கருதிச் செய் " என அரசனை நோக்கிச் சீன தேசத்துப் பெரியார் ஒருவர் இங்ஙனம் கூறியுள்ளார். உற்ற குடிகளை யாண்டும் உவந்து வர்ழச் செய்; நீ கொற்றவனாய் நீண்டு உயர்ந்து வாழுவாய்.

---

767 நாட்டுமக்கள் இன்பமுடன் நன்கமைந்து வாழ்தலும்
தேட்டில் சிறந்து திகழ்தலும்—நீட்டி நின்ற
செங்கோல் அரசன் செயலே அயலொன்றும்
அங்கே இலைகாண் அறி. (எ)

இ-ள்

ஒரு நாட்டிலுள்ள மக்கள் இன்பமாய் இனிது வாழுதலும், சிறந்த செல்வங்களை ஈட்டி உயர்ந்து திகழ்தலும் அந்நாட்டை ஆளுகின்ற அரசனது நல்லஆட்சி முறையால் அமைகின்றன; நெறியான அந்த ஆளுகையை நாளும் நன்கு கருதிச் செய்க என்பதாம்.

மக்கள் இன்புற மன்னன் அன்பு புரிந்து ஆட்சி புரிய வேண்டும். சிறந்த அரசனுடைய உயர்ந்த ஆளுகைக்குத் தகுந்த அடையாளம் அந்த நாட்டில் வாழ்ந்து வரும் யாவரும் எந்தக் கேட்டையும் யாதும் காணமல் யாண்டும் இனியராய் வாழ்வதேயாம். அமைதியான சுக வாழ்வு கருமத்தாலும் தருமத்தாலும் கனிந்து வருகிறது. உரிய தொழில்களை ஊக்கிச் செய்து குடிகள் குணமுடையராய்வரின் அங்கே பணமுடையாதும் நேராது; எல்லா வளங்களும் நிறைந்து செல்வ நிலைகள் சிறந்து திகழும்.

கருமங்களைக் கருதிச் செய்து பொதுசனங்கள் திருவடைந்துவரினும் அரசன் தருமவானாய் நின்று தன் கடமையை உரிமையோடு செய்யானாயின் அந்தக் குடிமக்கள் இனிய சுகங்களை அனுபவித்து அமைதியாய் வாழமுடியாது. செழித்து வளரும் பயிர்களை வேலி பாதுகாத்து வருதல் போல் செல்வமாய்த் தழைத்து வரும் குடிகளை அரசன் பாதுகாத்தருள வேண்டும். மன்னன் காப்பு மாறுபடின் அங்கே இன்னல் நிலைகள் மூப்பா

யச் சீறி எழும். நாடு கேடாய் நைந்துபடின் அதனை ஆளும் அரசனையே யாவரும் நிந்தனை செய்து நேரே நொந்து பழிப்பர்.

நாட்டு மக்கள் நலமாய் வாழும் நிலைமை நாட்டுத் தலைவனிடமே தகவாய் அமைந்துள்ளது. தன் தகுதியை உணர்ந்து எவ்வழியும் தக்கதைச் செய்து அவன் காத்து வர வேண்டும்; அவ்வாறு ஆற்றிவரும் அரசனே மிக்க சீர்த்தியைமேவி வருகிறான்.

உயர்ந்த அரச பதவி சிறந்த தருமத்தின் பயனாய் விளைந்து வருதலால் அந்த நிலையை அடைந்தவன் நிலையான நீதி நியமங்களை இயல்பாய் மருவி நிற்கிறான். சீவகோடிகளை ஆதரித்து அருளுவதே தனது உண்மையான சீவியமா அவன் எண்ணி நேர்கின்றான். உலக உயிர்களுக்குச் செய்கிற அன்பும் ஆதரவும் தலைமையான புண்ணியங்களாய்த் தழைத்து வருகின்றன; வரவே அந்த அரசு என்றும் தெய்வ நிலையமாய் நிலைத்து வருகிறது.

கி. பி. இரண்டாயிரத்து நானூற்றுநாற்பது ஆண்டுகளுக்கு முன் சீன தேசத்தில் ஒரு சக்கரவர்த்தி இருந்தான். அவனுடைய பெயர் கு [Kuh] என்று கூறப்படும். அவனது ஆட்சி வழி முறையே அந்நாட்டில் மாட்சிமை அடைந்து வந்துள்ளது. அரச நியதிகளைக் குறித்து அவன் வரைந்து வைத்துள்ள முறைகளை வியந்து மேல் நாட்டாரும் புகழ்ந்துள்ளனர். அம் மன்னன் மருவி வந்த நீதி முறைகளில் ஒன்று அயலே வருகின்றது.

" No virtue is higher than to love all men, and there is no loftier aim in government than to profit all men. " [Kuh]

" எல்லாரும் இன்பமாய் வாழ அன்பு புரிவதே தருமம்; மனித சமுதாயத்துக்கு இனிதா உதவி செய்வதைக் காட்டிலும் அரசாட்சிக்கு உயர்ந்த குறிக்கோள் வேறு யாதும் இல்லை " எனப் பழங்காலத்துச் சீன மன்னன் குறித்திருப்பது ஈண்டு உளங் கூர்ந்து ஓர்ந்து சிந்தித்துத் தேர்ந்து கொள்ளத்தக்கது.

மாந்தர் நன்மையாய் மகிழ்ந்து வாழ ஓர்ந்து புரிபவனே உண்மையான வேந்தன் ஆவான் என்பது ஈண்டு விளங்கி நின்றது. அரசு புரிவது ஆருயிர்களுக்கு ஆதரவு புரிவதாம்.

தன் நாட்டில் வாழுங்குடிகள் செல்வ வளங்களில் சிறந்து எங்கும் உள்ளம் உவந்து உயர்ந்து வாழ்ந்துவரின் அதுவே நல்ல

செங்கோல் ஆட்சியாம். அந்த அரசன் தரும நீதிமானய்ப் பெருமை பெற்று விளக்குவான். அவனுடைய நாடு பலவகை நலங்களும் மலிந்து யாண்டும் எழில் மிகுந்து இனிது விளங்கும்.

காடும் புனமும் கடல் அன்ன கிடங்கும் மாதர்
ஆடும் குளனும் அருவிச்சுனைக் குன்றும் உம்பர்
வீடும் விரவும் மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலும் மலர்ப் பல்லவப் பள்ளி மன்றே. (1)

தெள்வார் மழையும் திரையாழியும் உட்க நாளும்
வள்வார் முரசம் அதிர்மா நகர் வாழு மாக்கள்
கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ.
(இராமாயணம்)

தசரத மன்னனுடைய ஆட்சிக் காலத்தில் கோசலா தேசமும் அயோத்தி நகரமும் இருந்த நிலைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. வாவி ஏரி நதி முதலிய நீர் நிலைகளும் பூஞ்சோலைகளும் இனிய கனி நிழல்களை உதவுகிற இளமரக்காவுகளும் யாண்டும் பொங்கிப் பொலிந்து இன்ப நிலையங்களாய் விளங்கியிருக்கின்றன. நிதி வளங்களைக் குடிசனங்கள் யாதும் பாதுகாவாமலே எங்கும் பொங்கி நின்றன. கள்ளர் பயம் எள்ளளவும் இல்லை; களவு என்ற பேரே அந்தத் தேசத்தில் தெரியாது; உள்ளம் உவந்து ஈயும் வள்ளல்கள் எல்லாப் பொருள்களையும் யாருக்கும் அள்ளிக் கொடுக்க எதிர் நோக்கி நின்றனர்; ஆனல் யாரும் வந்து வாங்குவார் இல்லாமையால் அங்கே கொள்வதும் கொடுப்பதும் இல்லாமல் போயின. யாவரும் நிறை பெருந்திருவினராய்ப் புனித நீர்மைகள் தோய்ந்து தரும நீதிகள் வாய்ந்து மனித சமுதாயம் அந் நாட்டில் மகிழ்ந்து வாழ்ந்து வந்துள்ளமையை இதனல் அறிந்து கொள்ளுகிறேம். கள்வார் இல்லை; கோள்வார் இல்லை என்னும் குறிப்பு மொழிகள் கூர்ந்து உணரவுரியன. களவும் யாசகமும் இழிவான பழி வறுமைகளால் விளைவன்; அந்த அழி கேடுகள் அங்கு யாதும் இல்லை; உள்ளம் தூயராய் எல்லாரும் எல்லாச் செல்வங்களையும் எய்தியிருந்தனர். இத்தகைய சமுதாயத்தைத் தன் நாட்டில் உளவாக்கி எத்தகைய தாழ்வும் நேராமல் எவன் ஆட்சி புரிந்து

வருகிருனே அவனே எல்லா மாட்சிகளையும் இனிது அடைந்து உத்தம அரசனாய் ஒளிபெற்று விளங்குகிருன். தன் நிலைமையை ஓர்ந்து தலைமையாய் நின்று வேந்தன் நீதி புரிந்து வர வேண்டும்.

---

768 தந்தைதாய் என்னவே தன்னையே தன் குடிகள்
சிந்தைசெய்து நிற்கும் செயலினுர்—அந்த
உரிமையை உள்ளத்தில் ஓர்ந்தரசன் என்றும்
கருமம் புரிதல் கடன். (அ)

இ-ள்

தன்னையே தந்தை தாய் என்று குடிசனங்கள் சிந்தை செய்து ஒழுகி வருதலால் அந்த உரிமையை உணர்ந்து எவ்வழியும் அவர் இனிது வாழ்ந்து வரச் செவ்வையா ஆராய்ந்து அரிய வினை புரிந்து வருவதே அரசனது பெரிய கடமையாம் என்க.

அரசனுக்கும் குடிகளுக்கும் உள்ள உறவுரிமைகள் உயர் தர முடையன. ஒரு மகனுக்குத் தாயும் தந்தையும் போல் தேச மக்களுக்கு அரசன் அமைந்திருக்கிருன். தாய் உணவு முதலியன ஊட்டித் தன் மைந்தனை இனிது பேணுவள்; தந்தை அறிவு நலங்களைப் போதித்து அவனை உயர் நிலையில் நிறுத்துவன்; இந்த இரு வகை நலன்களையும் மக்களுக்கு ஒக்க உதவி அரசன் உரிமையாய் யாண்டும் இனிமை செய்து அருளுவன்.

தடித்த ஓர் மகனைத் தந்தை ஈண்டு அடித்தால்
    தாயுடன் அணைப்பள்; தாய் அடித்தால்
பிடித்து ஒரு தந்தை அணைப்பன்; இங்கு எனக்குப்
    பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத்து ஆடும்
    புனித நீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
    அம்மையப்பா! இனி ஆற்றேன். (அருட்பா)

கடவுளை நோக்கி இராமலிங்க அடிகள் இவ்வாறு உருகி உரையாடியிருக்கிருர். எனக்குத் தாயும் தந்தையும் நீயே என்று ஆண்டவனை வேண்டி அம்மையப்பா! என அன்போடு அழைத்திருப்பது அவரது உள்ளத்தின் உருக்கத்தை உணர்த்தி நிற்கிறது. எவ்வழியும் இனிய ஆதரவாயுள்ள உண்மை யுறவை உணர்ந்து

கொண்டமையால் அந்தப் பொருளை நினைந்து மகான்கள் உருகு கின்றனர். தத்துவக் காட்சியில் எழுந்த அந்த உத்தம உருக்கம் உலக உள்ளங்களை உருக்கி உயர் கதிகளை அருளி வருகிறது.

உயிர்க்கு உண்மையான தாயும் தந்தையும் தெய்வமே என்றது போல் அரசனும் அமைந்திருக்கிறான். செய்து வரும் ஆதரவை நோக்கி வையம் அவனை வாழ்த்தி வருகிறது. காப்புத் தெய்வம் என மன்னன் மாட்சிமை பெற்றிருப்பது அவனது ஆட்சித்திறனையும் அருளி வரும் நலனையும் அறிவுறுத்தி நின்றது.

எல்லாவற்றையும் எங்கும் நன்கு அறிந்து வரும் கடவுள் போல அரசனும் உலகநிலைகளை ஓர்ந்து உணர்ந்து முறை செய்யவுரியவனாய் மருவியிருக்கிறான். கூரிய அறிவுக் காட்சியால் சீரிய அரசாட்சி சிறந்து வீரிய நிலையில் விளங்கி வருகிறது.

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில். (குறள், 582)

உலக மக்களுடைய நிலைகளையும் நிகழ்ச்சிகளையும் அரசன் நாளும் நாடி அறிந்து கொள்ள வேண்டும்; அவ்வாறு கொண்ட போதுதான் குறைபாடுகளைக் கண்டு குணம் செய்ய முடியும்; அரசின் முறையும் இனிதாம் என இது முடிவு செய்துள்ளது.

தன் நாட்டில் யாதொரு கேடும் நேராமல் நாடிக்காத்து மாந்தர் யாண்டும் மகிழ்ந்து வாழ்ந்து வரும்படி செய்வதே வேந்தன் தொழிலாம்; இந்தக் கடமையைச் செய்து வரும் அளவே அவன் தலைமையாய் நிலைத்து வருவான்; முறைமை தவறின் இறைமை குன்றிச் சிறுமையாய் இழிந்து படுவான்.

தேச மக்கள் இனிது வாழ நீதியோடு பாதுகாக்கவுரிய அரசன் அரிய பல நீர்மைகள் தோய்ந்து நெறிமுறையே ஒழுகி வர வேண்டும்; சிறந்த அரசரது உயர்ந்த நிலைமைகளை அயலே வரும் பாடல்களில் காண வருகிறோம்.

ஏடவிழ் பைந்தார் இமையோர் பதம் பெறினும்
நாடு நடுங்க நன்கல்லவை புரியார்;
வேடர் பரிவேட்டம் செய்யார்; வினை தருஞ் சூது
ஆட நினையார்; மட்டு உண்ணார் அரசரே. (1)

குரவர் தமைக் காப்பர் செய்ந்நன்றி கொல்லார்
கரவடரைக் காய்வர் பழி கண்ணோட்டம் செய்யார்

இரவலருக்கு ஈவர் எதிர்ந்தோர் முனையின்
விரவு தமதுயிரும் எண்ணார்கள் வேந்தரே. (2)

தேவர் நிலைகடவார்; மேலோர் திறம் பிழையார்;
நாவின் இரண்டுரையார்; நன்கல்லவை புரியார்;
காவல் முறைதிறம்பார்; காமச்செயல் பெருக்கார்;
பூவலயம் காவல் புரியும் புரவலரே. (3)

தீ யூட்டித் தாம் உண்ணும் செய்தவத்தோர் ஆனினங்கள்
நோயூட்டு காயம் இகழ்ந்தியற்று நோன்பினோர்
வேயூட்டு தோளார் விருத்தர் சிறு பாலர்தமைத்
தாயூட்டிப் போற்றுதல் போல் தார்வேந்தன் காக்குமால்.
(பிரமோத்தரகாண்டம்)

உண்மையான அரசனுடைய தன்மைகளை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். செருக்கு முதலிய சிறுமைகளின்றி யாண்டும் பெருந்தன்மையாளராய் எவ்வுயிரையும் இனிது பேணி வருவதே செவ்விய வேந்தர் சீர்மையாம். தாய் ஊட்டிப் போற்றுதல்போல் தார்வேந்தன் காக்கும் என்றதனால் மக்கள் பால் அவனுக்கு உள்ள உரிமையும் காப்பு முறைமையும் நன்கு தெரிய வந்தன.

தாய் அன்பு தழுவி நிற்பதே தலைமையான அரசின் நிலைமையாம். "தாய் ஒக்கும் அன்பின்" எனப் புலவர் பாடும் புகழோடு தசரத மன்னன் பொலிந்து நின்றது ஈண்டு உணர்ந்து கொள்ளவுரியது. ஆதரித்து வரும் அளவே அரசு சீர்மையுறும்.

இன்னவாறான அன்பும் ஆதரவுமின்றிப் பதவி மமதையும் பொருளாசையும் பெருகி அரசன் மருள் கொண்டிருப்பின் அந்த நாடு நொந்து தவிக்கும். அவனும் அவகேடனாய் இழிந்து அழிந்து ஒழிவான். அரசு நீர்மை யின்றேல் சீர்மை குன்றும்.

"Ruin comes when the trader, whose heart is lifted up by wealth, becomes ruler." (plato)

"பொருளாசையால் மருள் கொண்டுள்ள வணிகர் அரசு ஆள நேரின் நாடு அழிவுற நேரும்." எனப் பிளாட்டோ என்னும் மேல்நாட்டுப் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார். ஆட்சி புரியவுரியவன் எத்தகைய உத்தம நிலையில் இருக்க வேண்டும் என்பதை இதனால் நன்கு உய்த்து உணர்ந்து கொள்ளுகிறோம்.

நாட்டு மக்களுடைய இதத்தை நாளும் நன்கு நாடி எவ்வழியும் செவ்வையாய் அவரைப் பாதுகாத்து வருபவனே அரசன் என்னும் பெயருக்கு உரியவனாய் வருகிறான். பூபாலன், காவலன் என அரசனுக்கு அமைந்துள்ள நாம நீர்மைகள் நேமமாய்ச் சிந்திக்கவுரியன. குடிகள் இன்புறக் கோமுறை புரிவதே முடிமன்னன் கடமையாம். உண்மையான அரசன் உயிர்களிடம் தாய்போல் பேரன்பு கொண்டுள்ளமையால் யாதொரு இடரும் நேராதபடி எவ்வழியும் அவற்றை ஆதரவோடு பாதுகாத்து வர நேர்ந்தான். காப்பு முறைகள் தருமநீதிகளைத் தழுவி வரலாயின. யசோதரன் என்னும் மன்னன் உஞ்சயினி நகரிலிருந்து அரசு புரிந்து வந்தான். அவனுடைய தாய் பெயர் சந்திரமதி. தன் மகனுக்கு ஏதோ கிரக பீடை உள்ளது என்று தெரிந்து அதற்குப் பரிகாரமாகக் காளிகோவிலுக்கு ஒரு கோழியைப் பலியிடும்படி கூறினாள். அந்தச் சொல்லை கேட்டதும் வேந்தன் உள்ளம் வருந்தினான். பிள்ளைப்பாசத்தால் பிரியமாய்ச் சொன்ன அவளுக்கு அரிய அரசநீதியைத் தெரிய உரைத்தான். அம்மன்னன் கூறிய மதிமொழிகள் அதி நயமுடையன; அயலே வருகின்றன.

யசோதரன் உரைத்தது.

என்னுயிர் நீத்தது ஏனும் யான் உயிர்க்கு உறுதி சூழாது
என்னுயிர்க்கு அரணம்நாடி யான்உயிர்க்கு இறுதி செய்யின்
என்னை இவ்வுலகு காவல் எனக்கினி இறைவி கூறாய்!
மன்னுயிர்க்கு அரணம் மண்மேல் மன்னவர் அல்லரோதான்.

யானுயிர் வாழ்தல் எண்ணி எளியவர் தம்மைக் கொல்லின்
வானுயர் இன்ப மேலால் வருநெறி திரியும் அன்றி
ஊனுயிர் இன்பம் எண்ணி எண்ணம் மற்று ஒன்றுமின்றி
மானுயர் வாழ்வு மண்ணின் மரித்திடும் இயல்பிற் றன்றே. (2)

அன்றியும் உன்னின் முன்னர் அன்னைநின் குலத்துளோர்கள்
கொன்றுயிர் கன்றும் உள்ளக் கொடுமைசெய் தொழிலர் அல்லர்;
இன்றுயிர் கொன்ற பாவத்து இடர் பல விளையும் மேலால்
நன்றி ஒன்று அன்று கண்டாய் நமக்கு நீ அருளிற் றெல்லாம். (3)
(யசோதர காவியம்)

பெற்றதாயை நோக்கி யசோதரன் இவ்வாறு பேசியிருக்கிறான். உலகவுயிர்களை உரிமையோடு காப்பது அரசனது கடமை

யாம்; பிறப்புரிமையான அந்தத் தருமத்தை மறந்து விடுவது பாவமாம்; என் உயிர் போனாலும் எந்த ஒரு பிராணிக்கும் நான் யாதொருதுயரும் புரியேன் என்று அவன் உறுதி கூறியிருப்பது ஊன்றி உணரவுரியது. "மண்மேல் மன்னுயிர்க்கு அரணம் மன்னவர் அல்லரோ?" என்று விநயமாய் வினவியது தாய் மனம்தெளிந்து சீவதயையைப் பேணிவர வந்தது. ஆருயிர்கட்கு ஆதரவு புரிவதே ஆட்சியின் மாட்சியாம். அரணம் = பாதுகாப்பு.

சீவகோடிகளைப் பாதுகாத்தருள்வதே செங்கோல் வேந்தின் சீர்மையாம் என்பதை யசோதர மன்னன் இங்கே நன்கு அறிவுறுத்தியருளினான். பிற உயிர்களைப் பேணி வருவதில் தருமம் பெருகி வருகிறது; வரவே அம் மன்னன் புண்ணியவானாய் உயர்ந்து எண்ணரிய மகிமைகளை அடைந்து கொள்ளுகிறான்.

ஒரு சிறிய பறவைக்காகத் தனது அரிய உயிரை வழங்கிய சிபி மன்னனுடைய சரிதம் அரசமரபுக்கெல்லாம் வரிசையான பெருமையை அருளிப் பேரொளியோடு நிலவி வருகிறது.

பறவை மன்னுயிர்க்குத் தன் உயிரை வழங்கினான்.
(இராமா, குலமுறை, 7)

விசுவாமித்திரர் சனகனிடம் இங்ஙனம் வியந்து புகழ்ந்திருக்கிறார்.

புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேல்
சினங்கெழு தானைச் செம்பியன். (புறம், 37)

எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன். (1)

அறன்அறி செங்கோல் மறநெறி நெடுவாள்
புறவுநிறை புக்கோன். (2)

புறவுநிறை புக்குப் பொன்னுலகம் ஏத்தக்
குறைவில் உடம்பு அரிந்த கொற்றவன். (3)
(சிலப்பதிகாரம், 20, 23, 29)

மறாஅன் இறைஎன்று சரண்அடைந்த வஞ்சப்
புறாநிறை புக்க புகழோன். (இராசசோழன் உலா)

கொலையேறு உடம்படையக் கொய்தாலும் எய்தாத்
துலையேறி வீற்றிருந்த சோழன். (குலோத்துங்கன்உலா)

புறவு ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை.
(இராமா, திருவவதார 65)

புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள் வேந்தன்.
(இராமா, கும்பகருண, 355)

புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன். (புறம், 46)

பறவையைப் பாதுகாத்தருளிய சிபி மன்னனது பெருந்தன்மையை இவ்வாறு பலரும் புகழ்ந்து போற்றியுள்ளனர். பெற்ற தாயினும் பேரன்புடையனாய் உயிர்களை இவன் பேணி வந்துள்ள நிலையும் நீர்மையும் உலக வுள்ளங்களை உருக்கியுள்ளன.

குடிகளிடம் பொருள் வரவையே நாடித் தன்னலமே கருதி இன்ப போகங்களை மாந்தித் திளைத்து இறுமாந்து களித்திருக்க நேர்ந்தால் அந்த அரசன் இந்தவாறு அருள் நீதியுடையவனாய் அரிய செயலைச் செய்து பெரிய புகழை அடைய நேர்வனா?

தத்துவ ஞானமும் சித்த சுத்தியுமுடைய உத்தம அரசர்கள் இந்நாட்டில் முன்னம் வித்தகமாய் விளங்கியிருந்தனர். அதனால் மாந்தர் யாண்டும் சாந்த சீலராய்ச் சுகமே வாழ்ந்து வந்தனர். தேசங்கள் எவ்வழியும் செவ்வையாய்ச் செழித்து வந்தன.

"Until the kings of this world have the spirit and power of philosophy and wisdom, cities will never cease from ill, nor the human race." (Plato)

"இந்த உலகத்தை ஆள நேர்ந்த அரசர் கலைஞானமும் ஆன்மபோதமும் அடைந்திருந்தாலன்றி மனிதசமுதாயமும் நாடு நகரங்களும் தீமைகளிலிருந்து மீள முடியா" என்று கிரீஸ் தேசத்துத் தத்துவ ஞானியாகிய பிளாட்டோ இவ்வாறு கூறியிருக்கிறார். அறிவு நலம் சுரந்து தரும நீதிகள் நிறைந்து வேந்தன் ஆந்துணையும் ஆதரவு புரிந்து வந்தால் மாந்தர் யாண்டும்மகிழ்ந்து வாழ்ந்து மகிமை தோய்ந்து மறுமை நலமும் பெருகி வருவர்.

தன்னுயிர்போல் மன்னுயிரைத் தான்பேணும் மன்னனே
பொன்னுயிர் ஆவன் பொலிந்து.

இதனை உன்னி யுணர்ந்து வேந்தர் ஒழுகி வர வேண்டும்.

———

769. தேசமக்கள் நல்வாழ்வே செங்கோலின் வாழ்வென்னும்
வாசகத்தை நன்கு வகுத்துணர்ந்து—மாசு
படியாமல் மன்னன் படிபுரந்து வந்தால்
அடியாம் அனைத்தும் அவன். (கூ)

இ—ள்

அரசனுடைய செங்கோல் சிறந்து வாழ்வது தேச மக்களுடைய நல்ல வாழ்வினலேயாம்; ஆகவே தன் ஆட்சியில் மாசு யாதும் படியாமல் மன்னன் நன்கு பாதுகாத்து வர வேண்டும்; அவ்வாறு வரின் அகிலவுலகமும் அவன் வசமாய் வரும் என்க.

அரச வாழ்வும் குடிவாழ்வும் ஒருங்கே அறிய வந்தன.

தனது தலைமையான நிலைமை யாதும் நிலை குலையாமல் என்றும் நிலைத்து வர வேண்டுமானல் குடி சனங்களுடைய நிலைமையைக் கூர்ந்து நோக்கி அரசன் யாண்டும் ஓர்ந்து பேணி வர வேண்டும். வேருக்கு நீர் வார்த்தால் மரத்தின் கிளைகள் செழித்துத் தழைத்து வரும்; அதுபோல் ஊருக்கு உதவி புரிந்து உரிமையோடு பார்த்துவரின் அரசனது குடி பெருமை மிகப் பெற்று எவ்வழியும் செழுமையாய்ச் செவ்விய நிலையில் கிளர்ந்து வளர்ந்து தேசு மிகுந்து வரும் என்க.

மாந்தர் மனம் மகிழ்ந்து வரும் அளவு வேந்தர் இனம் உயர்ந்து வருகிறது. தலைமைச் சிறப்பைத் தாங்கியுள்ளவன் அந்த நிலைமைப் பொறுப்பை உணர்ந்து நீர்மையோடு நாட்டைப் பேணி வருவது சீர்மையான ஆட்சியாய்ச் சிறந்து வருகிறது. ஆளும் தகைமை அவனி வாழும் வகைமையில் வந்தது.

நாடு மகிழ நலம் புரிந்து தலம் புரந்து வருபவன் நாடிய பொருள்களையெல்லாம் நன்கு எய்தி நீடிய வாழ்வுடன் நிலவி வருகிறன். உரிய கடமையை ஓர்ந்து செய்வது அரிய தவம் ஆகிறது; ஆகவே அது பெரிய மகிமையை அருளிப் பேரின்பம் தருகிறது. நீதி முறையால் ஆதிபகவன் அருள் அமைகிறது.

கோளும் ஐம்பொறி யும்குறை யப்பொருள்
நாளும் கண்டு நடுவுறு நோன்மையின்
ஆளும்அவ் அரசே அரசு; அன்னது
வாளின் மேல்வரு மாதவம் மன்னனே.
[இராமா, மந்தரை, 13]

பொறி வெறியனாய்ப் போகங்களில் இழிந்து உழலாமல் நாளும் கருமங்களை நன்கு கவனித்துப் பொருளை ஈட்டித் தொகுத்து வகுத்து அருளோடு யாவரையும் இதமாய்ப் பேணி வருபவனே அரசன் ஆவான்; அந்த அரசு கூரிய வாள் மேல் இருந்து செய்யும் சீரிய மாதவமாய்ச் சிறந்து விளங்கி யாண்டும் மகிமை சுரந்து வரும் என இது உணர்த்தியுள்ளது.

தேசத்தை ஆளுவது எவ்வளவு அரிய செயல்! அதனை உரிமையாக உடையவன் எத்துணைப் பொறுப்போடு உத்தமனாய் உயர்ந்திருக்க வேண்டும் என்பது ஈண்டு உய்த்துணர வந்தது. மனித சமுதாயம் நெறிமுறை தழுவி இனிது வாழ்ந்து வர உரிமையோடு பாதுகாத்து வருவது அரிய பெரிய அரச தருமமாய் மருவி வருகிறது. அத்தகைய குலதருமத்தை நலமாகப் பேணி வருபவன் உத்தம அரசனாய் ஒளி மிகுந்து உயர்ந்து திகழ்கிறான்.

தன் கடமையைக் கருதிச் செய்கிறவன் அரிய தவத்தைச் செய்தவனாய்ப் பெரிய மகிமைகளை அடைந்து கொள்கிறான். உலக மாந்தர் உவந்துவர எந்த அரசு முறைபுரிந்து வருகிறதோ அந்த அரசை அமரரும் புகழ்ந்து வருகின்றனர். அரிய தவத்தையுடைய முனிவரும் பெரிய பதவியை அடைந்துள்ள அமரரும் உவந்து புகழ ஒருவன் அரசு புரிந்துவரின் அந்த ஆட்சி எத்தனை மாட்சியாய் உயர்ந்திருக்கும்! இராமன் மரபு போல் பரம்பரையாகத் தரும நீதிகள் தழைத்து வந்த அரசரிடமே அத்தகைய உத்தம ஆட்சி காட்சியாய் வந்துள்ளது. சீவகோடிகள் இன்புடன் வாழ அன்புடன் அரசு புரிவது அரிய மாதவம் ஆகிறது.

அருந்தவம் அரசபாரம் இரண்டுமே அரிய; தம்மை
வருந்தியும் உயிரை ஓம்பி மனத்தினை வணக்கல் வேண்டும்;
திருந்திய இரண்டும் தத்தம் செய்கையில் திரியுமாயின்
பெருந்துயர் விளைக்கு மன்றே பிறங்குதார் நிறங்கொள் வேலோய்!

அந்தரம் திரியும் செய்கை அமரர்தம் அரசு வேண்டி
இந்திர வுலகம் காணும் நெறியவை யாவை? என்னின்,
மந்திரம் வழாத வாய்மை மாதவம் முயறல் அன்றேல்
தந்திரம் தழுவிச் செங்கோல் தளர்விலன் தரித்தல் என்றான்.

(சூளாமணி)

அரசும் தவமும் இதில் நேரே வரிசையாய் அறிய வந்துள்ளன. குடிகள் மகிழ அரசுபுரிவது நெடிய தவம்; அங்ஙனம் புரிபவன் இந்திரபதவியை எளிதே அடைந்து கொள்வன் என்பது இங்கே தெளிவாய் நின்றது. தான் ஏந்திய செங்கோலின் படி செம்மையாக உயிரினங்களைப் பேணிவரின் அந்த அரசனுக்கு அரிய பல நன்மைகள் காணியாய் வருகின்றன. தேசத்தைச் செவ்வையாக் காத்துவரின் அங்கே ஈசன் அருள் பூத்து வருகிறது.

மாசு படியாமல் மன்னன் படி புரந்துவரின் அனைத்தும் அவன் அடியாம் என்றது ஞாலம் முழுவதும் அவனை நயந்து நிற்கும் கோலம் காண வந்தது. குடியைத் தழுவி நீ கோல் ஓச்சி வந்தால் உன் அடியைத் தழுவி உலகம் உவந்து வரும் என ஒரு முடி மன்னனுக்கு மனு முனிவர் போதித்தருளினர்.

தன் உயிரைப்போல மன்னுயிரைப் புரந்து வருபவனே உண்மையான மன்னன் ஆகின்றான். இனிய நீர்மை தோய்ந்த அந்த அரசனை மனித சமுதாயம் புனித தெய்வமாப் போற்றி வருகிறது. நன்மைகளை நாடியறிந்த தன்மையாளனே புன்மைகளை நீக்கிப் பொதுமக்களைப் பேண வல்லவனாகின்றான்; அத்தகைய அறிவாளியையே யாவரும் அவாவி மகிழ்கின்றனர்.

"The people need the guidance of philosophers as desires need the enlightenment of knowledge." [Plato]

"மன விருப்பங்களுக்கு அறிவு விளக்கம் போல் குடிசனங்களுக்குக் கலை ஞானிகளுடைய ஆதரவு அவசியமாயுள்ளது" என மேல் நாட்டு அரசியல் அறிஞர் இங்ஙனம் அறிவுறுத்தியிருக்கின்றார். நல்ல கலையறிவுள்ள அரசனே நாடு ஆள உரியவனாகிறான். அந்த ஆட்சியே மாட்சி யுடையதாம்.

---

770 காசினியைக் கண்ணோடிக் காத்து வருமளவே
தேசினிமை எல்லாம் செழித்து வரும்—மாசிரிய
மானவரை ஓம்பிவரின் மற்றவனே மேலாகி
வானவரை ஓம்ப வரும். (ய)

இ—ள்

அரசன் உலகத்தை இனிது பாதுகாத்து வரும் அளவே

புகழும் இன்பமும் வளமாய் உளவாம்; குற்றம் குறைகள் நேராமல் மனிதரைப் பேணிவரின் அந்த மன்னன் பின்பு தேவரைப் பேணும் திவ்விய நிலைமையை நேரே எய்துவான் என்க.

காசினி = பூமி. தேசு = கீர்த்தி. ஒளி மிகுந்த புகழ் தேசு என வந்தது. தேசம் பெற்றவன் தேசு பெற வேண்டும்.

பிறந்த மனிதன் எவனும் தனக்கு உரிய கடமையைக் கருதிச் செய்யவே உரிமையாய் மருவியிருக்கிறான். தன் கருமத்தைச் செய்யாமல் ஒருவன் காலத்தைக் கழித்துவரின் அவன் கடையனாய் இழிந்து படுகிறான். காரியங்களைச் செய்து வரும் அளவே சீரும் சிறப்பும் எய்தி வருகின்றான். மனித இனத்துள் தனி மகிமை அடைந்துள்ள அரசன் தனது நிலைமையை உணர்ந்து நிலம் புரந்துவரின் அந்தத் தலைமை என்றும் குன்றாமல் வென்றி வீறோடு விளங்கி யாண்டும் மாண்பு சுரந்து வரும்.

நரபதி, மகிபதி, தராபதி என அரசனுக்கு அமைந்திருக்கும் பெயர்கள் அவனுடைய நிலைமைகளைத் துலக்கி நிற்கின்றன. மனித சமுதாயம் அமைதியாய் வாழ உலகத்தை இனிது பாதுகாத்து வருபவனே மன்னன் என்னும் பேர்க்கு உண்மையான உரிமையாளன் ஆகிறான். சிறந்த புண்ணியத்தினாலேயே ஒருவன் தேசாதிபதியாய்ப் பிறந்து வருகிறான்.

"அறம்புரிந்து அம்ம அரசிற் பிறத்தல்
துறந்த தொடர்பொடு துன்னிய கேண்மை
சிறந்தார்க்கும் பாடு செயலீயார் தத்தம்
பிறந்தவேல் வென்றிப் பொருட்டு." (தகடூர்)

புரிந்த அறத்தின் பயனால் ஒருவன் அரசன் ஆகின்றான்; அங்ஙனம் சிறந்த நிலையில் பிறந்தவன் கரும வீரனாய் உயர்ந்து யாண்டும் வென்றியோடு விளங்க வேண்டும் என இது விளக்கியுள்ளது. ஆளும் தலைமை அதிசய ஆண்மையாம்.

அரிய நிலையில் வந்துள்ள சரியான ஒரு தலைவனால் உலகம் நெறியே நடந்து வருகிறது; அவனுடைய ஆணை வழியே யாவரும் ஒழுகி விழுமிய நிலையில் விளங்கி வருகின்றனர்.

**" All cannot be rulers, and men are generally best governed by a few. Some born to govern, and others to obey.**
**(Goldsmith)**

"எல்லாரும் அரசராயிருக்க முடியாது; மனித சமுதாயம் சில தலைவரால் நன்கு ஆளப்படுகிறது; சிலர் ஆளப்பிறந்துள்ளார்; பலர் அடங்கி வாழ நேர்ந்துள்ளார்" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணர வுரியது

நீதி முறைகளை ஓர்ந்து தீதுகள் களைந்து தேசத்தைப் பாதுகாக்கும் பான்மையில் வந்துள்ளமையால் அரசனிடம் அரியபல மேன்மைகள் அமைந்திருக்கின்றன. பரிபாலன முறை யாதும் பழுதுபடாமல் நெறியே அமைந்துவரின் நேரே அங்கு தெய்வீக அருள் சேர்ந்து திகழ்கின்றது. தன் பொறுப்பை உணர்ந்து கடமையைச் செய்து வரும் அளவு சிறப்புக்கள் செழித்து வருகின்றன. பருவம் தவறாமல் கருமம் புரிவதே தருமமாம்.

ஆளும் அரசா அடைந்தான் அதையுணர்ந்து
நாளும் சரியா நடந்துவரின் — கேளும்
கிளையும் பெருகிக் கிளரொளிநீர் ஞாலம்
விளையும் உவகை விரிந்து.

தனது நிலைமையைச் சீர்தூக்கி நோக்கித் தகுதியாய் ஒழுகி வந்தால் அந்த அரசனுடைய ஆட்சி விழுமிய நிலையில் உயர்ந்து என்றும் செழுமையா விளங்கி வரும். ஒரு நாட்டிலுள்ள பல கோடி மக்களுடைய வாழ்வு அரசனுடைய கருமக் காட்சியில் மருவியிருக்கிறது. தன் பொறுப்பை உணர்ந்து உரிமையோடு அரசன் கடமையைச் செய்துவரின் அந்த ஆட்சி எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து சீர்த்தியோடு உயர்ந்து விளங்கும்.

அல்லல் அடையாமல் மக்கள் நல்ல நிலையில் வாழ்ந்து வரச் செய்துவரின் அதுவே நல்ல அரசாம். இளந்திரையன் என்பவன் காஞ்சிபுரத்தில் இருந்து அரசு புரிந்தான். அவன் ஒரு குறுநில மன்னனே ஆயினும் அறிவு நலங்களில் பெரியனாய் நாட்டை இனிது பேணி வந்தான். மக்கள் எவ்வழியும் மிக்க இன்பமாய் மேவி வாழ்ந்தனர். அவனது ஆட்சிக் காலத்தில் அந்த நாடு இருந்த நிலைமையைக் குறித்து அறிஞர் பலரும் வியந்து புகழ்ந்துள்ளனர். ஒன்று அயலே வருகிறது.

"மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்கு தானை மூவர் உள்ளும்

இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி அன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையற் படர்குவிர் ஆயின்
கேள் அவன் நிலையே கெடுகநின் அவலம்
அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வெளவும் களவேர் வாழ்க்கைக்
கொடியோர் இன்றவன் கடியுடை வியன்புலம்
உருமும் உரறாது; அரவும் தப்பா;
காட்டு மாவும் உறுகண் செய்யா; வேட்டாங்கு
அசைவுழி அசைஇ நசைவுழித் தங்கிச்
செல்மோ இரவல! சிறக்கநின் உள்ளம்." (பெரும்பாண்)

திரையனது ஆட்சியின் மாட்சியை இது காட்சிப் படுத்தியுள்ளது. களவு முதலிய இழி தொழில்கள் அவன் நாட்டில் கிடையா; காட்டுமிருகங்களும் யாருக்கும் இடையூறு செய்யா; எந்த நேரமும் யாதொரு பயமுமின்றி யாரும் எவ்வழியிலும் எதையும் கொண்டு செல்லலாம்; அல்லல் என்பது யாண்டும் இல்லாதபடி அவன் ஆண்டு நீண்ட புகழோடு நிலவி வந்துள்ளான் என்பதை ஈண்டு இதனால் நன்கு அறிந்து கொள்கிறோம்.

சீவர்கள் இனிது வாழத் தனியுரிமையோடு அரசன் பாதுகாவல் செய்து வரின் அங்கே தருமதேவதை நனி மகிழ்ந்து வாழும். மழைவளம் சுரந்து நிலம்வளம் நிறைந்து பல வளங்களும் அந்நாட்டில் மிக விளைந்து மேன்மை மிகுந்து திகழும்.

"நீதி மன்னர் நெறிமுறை செய்யினே
மாதம் மும்முறை வானம் வழங்குமே."

என்றதனால் அரசன் நெறியோடு ஆண்டு வந்தால் அந்நாடு வளமாய் நீண்டு வரும் என்பது தெரிய வந்தது. பகை, பசி, பிணி, துயர் யாதும் இன்றி யாவரும் உவகையாய் வாழ்ந்து வர வேந்தன் வகை புரிந்துவரின் அது வானக வாழ்வாய் ஒளி புரிந்து தெளிவடைந்து விழுமிய நிலையில் விளங்கி வரும்.

மாந்தாதா என்னும் வேந்தன் அரசு புரிந்த காலத்தில் புலியும் புல்வாயும் ஒரு துறையில் நேரே நீர் அருந்தி வந்தன; அந்த ஆட்சி சீர் அமைந்து திவ்விய நிலையில் உயர்ந்து வந்துள்ளது.

கருதலரும் பெருங்குணத்தோர் இவர் முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவனம் முழுதாண்டு சுடர்நேமி செல நின்றோர்
பொருதுறைசேர் வேலினாய் புலிப் போத்தும் புல்வாயும்
ஒரு துறையில் நீர் உண்ண உலகாண்டோன் உளன் ஒருவன்.

(இராமா, குலமுறை 5)

இத்தகைய உத்தமமான நீதி மன்னரைப் பாரத மாதா பெற்று வந்துள்ளது. தரும நீதிகள் தோய்ந்து இங்ஙனம் பெருமை பெற்றிருந்த நாடு இன்று சிறுமை யுற்றிருக்கிறது. புறத்தே சனத்தொகை பெருகியுள்ளது; அகத்தே மடமையும் புன்மையும் மருவியுள்ளன. ஆகவே வறுமையும் சிறுமையும் மண்டி அல்லல்களும் அவலக்கவலைகளும் யாண்டும் நீண்டு நிற்கின்றன.

நல்ல அறிவும் சீலமும் இல்லாமையால் மக்கள் அல்லல்களில் அழுந்தி அவலம் அடைய நேர்ந்தனர். தருமமும் சத்தியமும் அதிசய சத்திகளுடையன; அவற்றை இழந்த அளவு எவரும் இழிந்தவராகின்றார். சத்திய சீலமுள்ள ஒருவன் எதிரே பத்தாயிரம் பேரும் பணிந்து நிற்பர். அத்தகைய உத்தம ஆத்தும சத்தியை ஒழிய விட்ட சமுதாயம் எதுவாயினும் அது இழிவாய் அழிவு பட்டதேயாம். உயிர்ஒளி குறைய உயர்வு ஒளிகிறது.

A little group of wise hearts is better than a wilderness full of fools; and only that nation gains true territory, which gains itself." (Ruskin)

"மூடக்கூட்டம் பெருங்காடு போல் பெருகியிருப்பதனினும் ஞான சீலமுள்ள சிறிய குழு மிகவும் நல்லது; அறிவு நலமுடைய அந்தச் சமுதாயமே உண்மையான இராச்சியத்தை உரிமையா அடைகிறது" என ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். குறிப்புகூர்ந்துநோக்கவுரியது.

உள்ளப் பண்புடைய நல்லவர்களாலேயே நாடு நலம் பல அடைகிறது. நல்லோர் இருப்பது பல்லோர்க்கும் இன்பமாம்.

நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. [ஔவையார்]

நல்லோரால் உலகிற்கு உளவாம் நன்மையை இதனால் நன்கு உணர்ந்து கொள்கிறோம். நல்ல நீர்மைகளால் தருமங்கள்

விளைகின்றன; அந்தப் புண்ணிய விளைவுகள் எண்ணரிய மேன்மைகளையும் இன்ப நலங்களையும் விளைத்தருளுகின்றன.

தருமகுணங்கள் அமைந்த இத்தகைய உத்தமர்களை எந்த நாடு உரிமையாப் பெற்றிருக்கிறதோ அந்த நாடு பெருமைகள் யாவும் நிறைந்து புத்தேள் உலகம் போல் பொலிந்து விளங்கும். புனிதமான அந்த மனிதசமுதாயத்தை ஆளநேர்ந்தவன் அதிசய மகிமைகள் தோய்ந்து உலகம் துதி செய்ய வருகின்றான்.

எல்லா உயிர்களையும் இனிது பேணுவதே நல்ல அரசின் நீர்மையாம். அந் நீர்மையாளன் யாண்டும் சீர்மையாளனாய்ச் சிறந்து திகழ்கிறான். இராமன் அரசு முடி சூட நேர்ந்த போது வையமும் வானமும் ஒருங்கே வாழ்த்தி நின்றன. அப்பொழுது அவனைக் குறித்து வசிட்ட முனிவர் உவந்து புகழ்ந்தார். அறிவு நலம் கனிந்தஅவருடைய உரைகளில் சில அயலே வருகின்றன.

பொன்னுயிர்த்த பூ மடந்தையும் புவி எனும் திருவும்
இன்னுயிர்த்துணை இவன் என நினைக்கின்ற இராமன்
தன்னுயிர்க்கு என் கை புல்லிது தற்பயந்து எடுத்த
உன்னுயிர்க்கு எனநல்லன் மன்னுயிர்க்கெலாம் உரவோய்!

மண்ணினும் நல்லள் மலர் மகள் கலைமகள் கலையூர்
பெண்ணினும் நல்லள் பெரும்புகழ்ச் சனகியோ நல்லள்
கண்ணினும் நல்லன் கற்றவர் கற்றிலா தவரும்
உண்ணு நீரினும் உயிரினும் அவனையே உவப்பார். [2]

மனிதர் வானவர் மற்றுளார் அறங்கள் காத்து அளிப்பார்
இனி இம் மன்னுயிர்க்கு இராமனின சிறந்தவர் இல்லை;
அனையன் ஆதலின் அரச! நிற்குறு பொருள் அறியின்
புனித மாதவம் அல்லது ஒன்று இல்லெனப் புகன்றான்.(5)

(இராமாயணம்)

இந்தக் கவிகளைக் கருத்து ஊன்றி நோக்கிப் பொருள்களையும் சுவைகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். பூமிதேவியும், இராசலட்சுமியும் இராமனைத் தம் இன்னுயிர்த்துணை என எண்ணி மகிழ்ந்துள்ளனர். அந்த மகிழ்ச்சி நிலை அவனது மகிமையைத் துலக்கியுள்ளது. சீவகோடிகள் யாவும் சிந்தை களித்துள்ளமையால் அரசாய் வந்த அவன் எந்த நிலையினன் என்பதை எளிது தெளிந்து கொள்ளலாம். இனி இம் மன்னு

யிர்க்கு இராமனில் சிறந்தவர் இல்லை என்று முனிவர் துணிந்து கூறியிருப்பது உணர்ந்து கொள்ள உரியது. இராமனைப் போல் ஒரு அரசனை இனிமேல் இவ்வுலகம் மீண்டும் யாண்டும் அடைந்து கொள்ள முடியாது என்று முடிவு செய்திருக்கிறார். இக் கோமகன் புரிந்து வந்த ஆட்சி நிலையை உவந்து இராமராச்சியம் என மனித சமுதாயம் வழிவழியே புகழ்ந்து வருகிறது. நீதி நெறியான அரசுமுறை நிரந்தரமான சீர்த்தியை விளைத்தருளியது.

வானவரை ஓம்ப வரும் என்றது இங்கே மனித சமுதாயத்தை இனிது பேணி வந்தவன் பின்பு தேவர்க்கு அதிபதியாய்ச் சிறந்து விளங்குவான் என்பது தெரிய வந்தது. உரிய கடமையை ஓர்ந்து செய்தவனுக்குப் பெரிய பதவிகள் நேர்ந்து வருகின்றன. கரும வீரன் தரும வீரனாய் உயர்கின்றான்.

அரசன் மேலான நிலையினன்; கருவிலே திருவனாய்த் தருமம் தோய்ந்து வந்தவன்; அரியன ஆய்ந்து செய்பவன்; அவன் புரியும் கருமங்கள் தரும நீதிகளையே தழுவி எழுகின்றன.

" The superior man employs all his power to do that which is just and proper, and for the good of mankind. justice alone is his guide. " [Confucius]

" தலைமையான அரசன் மனித சாதியின் நன்மையை ஓர்ந்து சரியான நீதி முறைகளை எவ்வழியும் நெறியே செய்கிறான்; நீதியே அவனுக்கு யாண்டும் வழி காட்டியாயுள்ளது. " என்னும் இது ஈண்டு ஊன்றி உணர வுரியது. தேச நன்மையை நீ நாடிச்செய்; ஈசன் அருள் உன்னைநாடி உரிமையோடு ஓடிவரும்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அரசனது அறிவு அரிய பயனுடையது.
கலைஞானங்கள் கனிந்து தெளிவது.
அறம் பொருள் பெருக உரம்புரிந்து வருவது.
பெரிய காரியங்களைப் பேணிச் செய்வது.
ஆட்சியில் உயர்ந்து மாட்சி தருவது.
கற்றவரைப் பேணி வெற்றி மிகப் பெறுவது.
மக்கள் இன்புற மாண்பு புரிவது.
தாயன்பு செய்து தழைத்து நிற்பது
தேசம் செழித்துவரச் சிறந்து திகழ்வது.
தெய்வ ஒளியாய் உய்தி யுறுவது.

என்வது அறிவு முற்றிற்று.

# எழுபத்தெட்டாவது அதிகாரம்.

## ஆ ற் ற ல்.

அஃதாவது செய்யவரிய கருமங்களைச் சீர்மையாச் செய்து வரும் நீர்மை. அரசனுடைய அறிவு வினையாண்மைகளில் வீரியமாய் மேன்மை யடைந்து வர வேண்டும் என உணர்த்துகின்றமையால் அறிவின் பின் இது உரிமையா வைக்கப்பட்டது.

771 சிறந்த திருவுடையன் ஏனும் அரசன்
பிறந்த குடியின் பெருமை—நிறந்தெரியத்
தன்னுடைய ஆற்றலைநேர் தான்காட்டி நில்லானேல்
பின்னடையும் பீழை பெரிது. (க)

இ-ள்

சிறந்த செல்வ வளங்களை அடைந்திருந்தாலும் தான்பிறந்த குடியின் பெருமையை உணர்ந்து அரிய வினையாண்மைகள் புரிந்து யாண்டும் புகழோடு அரசன் உயர்ந்து வரவேண்டும்; அவ்வாறு வரவில்லையானல் எவ்வழியும் அவனுக்கு இழிவே விளையும்; அது விளையாவண்ணம் விரைந்து வினை புரிக என்பதாம்.

ஊக்கி வினைசெய் என்று இது உணர்த்துகின்றது.

பிறந்த மனிதருள் ஒருவன் சிறந்தவனாய் உயர்ந்து வருவது அவனுடைய செயல் இயல்களின் உயர்வுகளாலேயாம். கூரிய அறிவு இருந்தாலும் சீரிய செயலோடு சேர்ந்து முயன்ற போது தான் அது சிறந்து திகழ்கிறது. காரியம் தோயாத அறிவு வீரியம் தோயாது என்னும் முது மொழியால் கருமத்தின் உறுதி நலனை உணர்ந்து கொள்கிறோம். அரிய வினைகளைச் செய்பவரே பெரிய மனிதராய்ப் பெருகிப் பேர் பெற்று வருகின்றனர்.

உரிய தொழிலை ஒருவன் ஊக்கிச் செய்துவரின் அது பொருளையும் புகழையும் ஆக்கி அருளுகிறது. கருமம் செய்யாமல் தளர்ந்து நின்றால் பெருமைகள் யாவும் இறழ்ந்து போம். வினையாண்மையில் மூண்ட அளவு ஆன்ம சத்தி வெளியாய் நீண்டு வருகிறது. சீவ ஒளி செயலிலேதான் தெளிவாய் விளங்குகிறது.

தொழில் புரிவது உயிர்; சோம்பி இருப்பது சாவு.

ஊக்கி முயல்வான் உயிருடைய னுயுயர்ந்து
ஆக்கம் பலவும் அடைகின்றான்---நோக்கி
முயலா திருந்தான் முழுமடைய னாகி
அயலே யிழிந்தான் அழிந்து.

முயலாமல் மடி கொண்டிருப்பதால் விளையும் குடி கேடுகளை இது குறித்துக் காட்டியுள்ளது. முயன்று வரும் அளவே மனிதன் உயர்ந்து வருகிறான். எங்கே முயற்சி இல்லையோ அங்கே உயர்ச்சியில்லை. கருமங்களைக் கருதிச் செய்வதிலேயே பெருமைகள் உரிமையா மருவி யிருக்கின்றன.

தாதை மூதாதையர் பெரும் பொருளை ஈட்டி வைத்திருந்தாலும் தனது சொந்த முயற்சியால் ஈட்ட வல்லவனே உலகக் காட்சியில் உயர்ந்த மாட்சியை அடைகிறான். முன்னோர் சேர்த்து வைத்ததைக் கண்டு களித்து உண்டு சுகித்து ஊனமாய்த் திரிவது ஈனமே யாம். கிடைத்தது போதும் என்று சோம்பலாய் இருந்து தின்பவன் இழிந்தவனாய்க் கழிந்தே போவான்.

" Dull content is unworthy of a man." [Philosophy]

" மந்தமான மனக் களிப்பு மனிதனை எந்த வகையிலும் இழிந்தவனாக்குகிறது " என்னும் இது இங்கே சிந்திக்கவுரியது. உயர்ந்த நிலைகளையே நினைந்து உள்ளம் துணிந்து எந்தச் சமுதாயம் முயன்று வருகிறதோ அந்த இனம் உலகில் தலை சிறந்து விளங்குகிறது. வினையாண்மைகளால் மேலான மேன்மைகள் மனிதனுக்கு விளைந்து இனிமைகள் சுரந்து வருகின்றன.

தனி மனிதனைவிட அரசன் மிகவும் பொறுப்புடையவன். நாடு முழுவதும் நலமாய் வாழப் பாடு படுபவன் ஆதலால் அவனிடம் கூரிய அறிவும் காரிய ஆற்றலும் சீரிய துணிவும் நேரிய ஆண்மையும் எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து நிற்கின்றன.

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள் பவற்கு. (குறள், 383)

உலகத்தை ஆள நேர்ந்த அரசர் யாண்டும் உரிமையோடு தழுவியிருக்க வேண்டிய விழுமிய நீர்மைகளைத் தேவர் இவ்வாறு விளக்கி யுள்ளார். கல்வி யறிவு காரிய நோக்கு உள்ளத்துணிவு ஆகிய இம் மூன்று தன்மைகளும் வேந்தனிடம் என்றும் நிலை

யாயிருக்க வேண்டும் என்றதனால் அத் தலைவனுடைய கருமத் திறல்களைக் கருதி உணர்ந்து உறுதிகளை ஓர்ந்து கொள்ளுகிறோம்.

தூங்காமை என ஈங்கு வந்துள்ள இம் மொழி பலரைத் தூங்கச் செய்துள்ளது. இக்காலத்து அரசியல் துறையை மருவிப் பெருமை பெற்றுள்ள ஒருவர் ஒரு சபையில் பேசும் பொழுது இந்தக் குறளை எடுத்து வீசினார். அரசன் உறங்கக் கூடாது என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறார் என்று விளக்கமும் சொல்லினர். குறளைப் படிக்க வேண்டும் என்ற ஆவல் இந் நாளில் பலரிடம் பரவி வருகிறது. அந்த வரவில் இந்த உரை இப்படி வந்துள்ளது. எப்படியாவது வள்ளுவப் பெருமான் வாய்மொழியை வாயளவிலாவது பிழையாய்ப் பேசி வருவது சிறிது ஆறுதல் தருகிறது. உரிய பொருளை உணர்ந்து கொள்வது நல்லது.

தூங்குதல்=சோம்பியிருத்தல். தூங்காமை=காரியத்தில் விரைந்து கருத்து ஊன்றி விழிப்போடு வேலை செய்தல். உள்ளம் தளராமல் எவ்வழியும் ஊக்கி முயன்று நாட்டைப் பாதுகாத்து மக்களுக்கு நலம் புரிந்து வருவதே அரசனது கடமையாம். நீங்காத கருமக் காட்சிக்குத் தூங்காமை உரிய துணையாய் நின்று அரிய பல நன்மைகளை ஆக்கியருளும் ஆதலால் அந்த உறுதியான பெரிய நிலைமை தெரிய அது தலைமையாய் வந்தது.

தூங்காமை அரணுடைமை படையுடைமை
துணிவுடைமை தூய்மை கேண்மை
நீங்காமை அறிவுடைமை நாணுடைமை
பொறைமை புன்மை நெறிச் செலாமை
பூங்காமை எனக்கொடுக்கும் கொடை மடமை
இவை தழுவிப் புரவு பூண்டோன்
தீங்காம் ஐ வகைப்பயம் தீர்த்து ஆறகற்றி
ஏழ்நிலம் கோல் செலுத்தா நின்றோன்.

(திருவாப்பனூர்ப் புராணம்)

அரசனுக்கு அமைந்திருக்க வேண்டிய குணநலங்களைத் தொடுத்து இது குறித்துள்ளது. குறிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். தூங்காமை இதன் கண்ணும் முதலில் வந்துள்ளது. தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவர் யோகிகள்;

தூங்காமல் கருமங்களில் ஓங்கி உயர்வுறுவர் அரசர்கள். கரும வீரனாய் உயர்ந்த போதுதான் அரசன் தருமவீரன் ஆகின்றான்.

அரசன் பெருந்திருவுடையவன்; அவன் யாதொரு கருமங்களையும் கருதிச்செய்ய வேண்டிய அவசியமில்லை; நல்ல சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டு உல்லாசமாய்க் களித்திருக்கலாம் என்று வெளியே தோன்றும். அவ்வாறு இருந்தால் அந்த அரசு விரைந்து இழிந்து அழிந்தே போம். உற்ற தலைமைக்கு அழிவு நேராதபடி நிலைமையை உணர்ந்து அரசன் நெறியே முறை செய்யவேண்டும். அதனால் இறைமை இனிமையுறுகிறது.

தன் நாட்டில் விரிந்து பரந்துள்ள மனித சமுதாயத்தின் வாழ்க்கை வசதிகள் யாவும் அரசனுடைய கண் காணிப்பிலேயே மருவி யிருக்கின்றன. அந்தக் கருமக் காட்சிகளை உரிமையோடு கருதிச் செய்து வரும் அளவே அவனது ஆட்சி மாட்சியாய் நீட்சியடைந்து வரும். குடிகள் சுகமாய் வாழ முறை புரிந்து வருபவனே முடி மன்னனாய் முதன்மை பெற்று நிற்கின்றான். அரிய காரியங்களைச் செய்து முடிப்பதிலேயே பெரிய மேன்மைகள் மருவிப் பேறுதியங்கள் பெருகியுள்ளன.

“ Life is not made for happiness, but for achievement. ”

[Hegel]

“ உயிர் வாழ்வு சுகத்துக்காகப் படைக்கப் படவில்லை; உரிய கருமங்களைச் செய்து முடிக்கவே அது படைக்கப்பட்டுள்ளது ” என ஹீஜல் என்னும் ஜெர்மன் தேசத்துப் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார். கருமம்கருதாத சுகி கடையனாகிறான்.

வருந்தி முயன்று சிறந்த கருமங்களைச் செய்து முடித்தவன் பிறந்த பயனைப் பெற்றவனாகின்றான்; மற்றவன் குற்றமாய்க் குலைந்து போகின்றான். உயர்ந்த வேந்தனாய்ப் பிறந்தவன் சிறந்த வினையாளனாய் விளங்கி யிருக்க வேண்டும்; அந்த விளக்கமே அவனுக்கு யாண்டும் மேன்மையாய் நீண்ட புகழ் தரும்.

அருந்திறல் அரசனாய் அமைந்து வந்தவன்
இருந்தலம் புரந்துதன் இசைகள் ஓங்கவே
பெருந்தகை யாளனாய்ப் பெருகி நிற்பனேல்
விருந்தென அமரரும் விழைந்து போற்றுவார்.

இதனை வேந்தன் தெரிந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

772 வெளியெழுந்த போதுதான் வெய்யோன் கிரணம்
ஒளிபரந்து எவ்வுலகும் ஓங்கும்—தெளிவுடைய
வேந்தும் துணிந்து வினையாற்றின் அப்பொழுதே
போந்து விளங்கும் புகழ். (உ)

இ-ள்

சூரியன் உதயமாய் மேலே எழுந்த பொழுதுதான் அவனது கிரணங்கள் பரவி யாண்டும் ஒளி வீசி நீண்டு நிலவும்; அது போல் வீரியமுடைய அரசனும் காரியங்களை உறுதியாக் கருதிச் செய்த போதுதான் அவனது புகழ் விரிந்து எங்கும் உயர் நிலையில் ஓங்கி ஒளி மிகுந்து நிற்கும் என்க.

உலக ஒளியாகிய சூரியனுக்கு வெய்யோன் என ஒரு பெயர் மேவியுள்ளது. வெம்மையான கிரணங்களை யுடையவன், எல்லாராலும் விரும்பிப் போற்றப் படுபவன் என்னும் பொருட் குறிப்போடு அது பொருந்தி எழுந்தது. வையம் தொழுது வருவது வெய்யோன் என வந்தது. வேந்தனோடு வெய்யோனை இணைத்து வைத்தது மாந்தருக்கு மகிழ்ச்சியாய் உலகத்தை நடாத்தி உறுதி புரிந்து உதவி செய்து வரும் உரிமை நோக்கி.

சூரியன் அரிய பெரிய ஒளியுடையனாயினும் ஒதுங்கி மறைந்திருந்தால் அது வெளியே தெரியாது; ஊக்கி மேலே தோன்றிய போதுதான் எங்கும் ஒளி பரந்து பொங்கிப் பொலிந்து விளங்குகிறது. அதுபோல் அறிவு திரு ஆண்மை முதலியவற்றால் அரசன் பெரிதும் சிறந்திருந்தாலும் கருமம் கருதித் துணியாது நின்றால் அவை மருமமாய் மழுங்கி மடிந்து கிடக்கும்; வினையாண்மையில் மூண்டு எழுந்தால் எல்லா ஆற்றல்களும் வீறோடு வெளியே விளங்கித் தோன்றும். காரியங்களில் முனைந்த போதுதான் வீரிய ஒளிகள் சீரிய கலைகளை வீசிச்சிறந்து திகழ்கின்றன.

அறிவு இச்சை செயல் என்னும் இவை உயிர் விளக்கங்களாய் முறையே ஒளி வீசி நிற்கின்றன. கண் எதிரே காணப்பட்ட பொருளை மனிதன் ஊன்றிப் பார்க்கிறான். அதன் நிலைமைகளை நேரே ஓர்ந்து அறிகிறான்; இதமானது என்று தெரிந்தால் தனக்கு அது வேண்டும் என்று விரும்புகிறான்; அதன் பின் அதனை அடைய முயல்கின்றான். வினையாண்மையில்

மூண்டு முயன்ற அளவு மனிதன் உயர்ந்து வருகிறான். மானச மருமங்கள் மனித தருமங்களா மருவி நிற்கின்றன. இயல்பும் செயலும் குணமும் குணியுமாய் மணம் புரிந்து வருகின்றன.

செய்கின்ற காரியங்கள் சீரிய பலன்களை நேரே விளைத்து வருதலால் வினையாளன் நினையாபலே நிறைந்த செல்வங்களையும் சிறந்த மேன்மைகளையும் அடைந்து கொள்ளுகிறான். தன் கருமத்தை உரிமையோடு ஒருவன் கருதிச் செய்யும்பொழுது அங்கே தருமதேவதை துணை புரிகிறது; புரியவே அரிய பெரிய பலன்கள் பெருகி வருகின்றன. வரவே மகிமைகள் விரிகின்றன.

சோம்பல் வறுமைத் துன்பங்களுக்கு உரிமையாயுள்ளது; அதனை மருவி நின்றவன் எவ்வழியும் இழிவே அடைவான். மடி மூதேவி; முயற்சி சீதேவி. என்னும் முதுமொழியால் அந்த இரண்டின் நிலைகளையும் நீர்மைகளையும் நன்கு தெரிந்து கொள்ளலாம். படி படியின் முடியும் முடிவாய் முடிந்து போம்.

முயற்சி எல்லாச் செல்வங்களையும் இனிது அருளுகிறது; உயர்ச்சி நிலைகள் யாவும் அதனால் ஒருங்கே உளவாகின்றன. உள்ளக் கிளர்ச்சியோடு ஊக்கி முயன்றவனை நாடி நல்ல மேன்மைகள் எல்லாம் வெள்ளமாய் விரைந்து ஓடி வருகின்றன.

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு. (குறள், 610)

சோம்பல் இல்லாத அரசன் உலகம் முழுவதையும் தனக்கே தனி உரிமையாக ஒருங்கே அடைவான் என இது உணர்த்தியுள்ளது. அடி அளந்தான் என்றது திருமாலை. அவன் இரண்டு அடியால் அளந்து கொண்ட எல்லா உலகங்களையும் மடி இல்லாத மன்னன் ஒரே அடியாய் அடைந்து கொள்ளுவன் எனத் தேவர் இவ்வாறு கூறியது அரசன் யாண்டும் அயர்ந்திராமல் எவ்வழியும் செவ்வையாய் முயன்று வர வேண்டும் என்று கருதியேயாம். பலனைக் காட்டி நலனை ஊட்டினார்.

மடி மிடியை விளைக்கும்; குடியைக் கெடுக்கும்; அதனை அடியோடு ஒழித்து விடுக; அது ஒன்று ஒழியின் அரிய பல செல்வங்களும் பெரிய மேன்மைகளும் உன்பால் உரிமையாய்

வந்து சேரும் என வேந்தனுக்கு விநயமாய் போதித்திருக்கும் இந்த இனிய போதனை யாரும் கருதி யுணர வுரியது.

ஊக்கி முயல்வதினாலேயே மனிதன் உயர்ந்து கொள்ளுகிறான்; தன் உயர்ச்சிக்குத் தானே பூரண காரணனாயிருக்கிறான்; பெருமைகள் எல்லாம் நல்ல கருமங்களால் உளவாகின்றன.

ஆற்றல், ஊக்கம், உறுதி, துணிவு, முயற்சி என்னும் மொழிகள் வினையாண்மைகளில் மனிதன் வீறுகொண்டு எழுவதை விளக்கி வந்துள்ளன. உள்ளத்தின் ஊக்கமே மனிதனது உயர்வுக்கு மூலகாரணமாயுள்ளது. " உள்ளத்து அனையது உயர்வு " என்பது வள்ளுவப் பெருந்தகை வாக்கு.

" உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல். " (குறள், 596)

என உயர்ச்சி நிலையை அரசர்க்கு இவ்வாறு அவர் போதித்திருக்கிறார். உயர்ந்த எண்ணம் சிறந்த மனிதனைத் தருகிறது.

ஜெர்மன் தேசத்து மேதை ஆகிய கேதே (goethe) என்பவர் மனித தத்துவங்களை இனிது விளக்கியிருக்கிறார். உண்மையான உயர்ந்த மனிதனை ஊக்கமே ஆக்கியருளுகிறது என்று அவர் குறித்துள்ளார். வினையாண்மையை நுனித்துநோக்கும்படி உரைத்துள்ள அவருடைய உரைகளை அயலே காண வருகிறோம்.

" Energy will do anything that can be done in this world; and no talents, no circumstances, no opportunities will make a man without it. " [Goethe]

" இந்த உலகத்தில் செய்யக் கூடிய எதையும் ஊக்கம் செய்து முடிக்கும்; அது ஒன்று இல்லையானால் கல்வியறிவு, கால அனுகூலம், பொருள்வசதி முதலிய எவையும் மனிதனை உயர்த்த முடியா" என்று இவ்வாறு அவர் கூறியிருக்கிறார். கரும முயற்சியைப் பெருமையா விளக்கியுள்ள இது கருதி உணர வுரியது.

ஊக்கம் உடையனாய் அரசன் காரியங்களை நோக்கிவரின் ஆட்சி மாட்சியாய் நடந்து வரும்; பொருள் அறம் புகழ் முதலிய உயர்நலங்கள் யாவும் வளமா வளர்ந்து நிலையாய் விளங்கும்.

தேசப் பாதுகாப்பாகிய பெரும் பொறுப்புடையவன் ஆதலால் யாண்டும் தளராமல் நின்று மூண்டு முயன்று வர வேண்டும்; காலம் இடம் வலிகளைச் சாலவும் கருதி அமைச்சர்

முதலிய அதிகாரிகளைச் சரியாக ஏவிக் கரும நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து வந்தால் அந்த வேந்தனை மாந்தர் வணங்கி வாழ்த்தி வருவர். காரியக் காட்சி சீரிய மாட்சியை அருளுகிறது.

ஆற்றும் வினையின் அளவே அரசன்பேர்
ஏற்றம் பெறுவன் எதிர்.

வினைமாட்சியே வியனான மாட்சிகளை எல்லாம் ஒருங்கே அருளும் ஆதலால் பெரும் பேருடைய அந்த மாட்சியை எந்த வகையிலும் சொந்தமா அரசன் அடைந்து கொள்ள வேண்டும்.

---

773 கருதி முயலும் கருத்தின் அளவே
வருதி உயர்வின் வளர்ந்து—கருதிவினை
ஆற்று திருந்தால் அவலமே எவ்வழியும்
கூற்று யடரும் குவிந்து. (ங)

இ-ள்

உறுதியோடு கருதி முயன்றுவரும் அளவே அரசன் பெரிதும் உயர்ந்து வருகின்றான்; அங்ஙனம் உணர்ந்து முயலாமல் அசதியாய் அயர்ந்திருந்தால் வசையும் துயரங்களும் எவ்வழியும் அடர்ந்து தொடர்ந்து அவல நிலையில் தாழ்த்தும் என்க.

இது கருதி முயல்க என உறுதி கூறுகிறது.

கருத்து திருத்தமாக வுடைய மனிதனே எங்கும் நன்கு விருத்தியடைந்து விளங்குகிறான். கூரிய மன உணர்வு சீரிய மகிமைகளை விளைத் தருளுகின்றது. கருதி உணர்வது கருத்து என வந்தது. சிந்தனை, கவனம் என்பன மானச விருத்திகளை விளக்கி நிற்கின்றன. தன் நிலைமையை எண்ணி வரும் அளவு மனிதன் தலைமையை நண்ணி வருகிறான். எண்ணி உணராதவன் மண்ணாய் மடிந்து போகிறான். எண்ணம் இழந்தவன் எல்லாம் இழந்தான்.

கூர்ந்து கவனித்து ஓர்ந்து உணர்ந்தவரே உயர்ந்து திகழ்கின்றார். அங்ஙனம் ஓராதவர் உயர்நிலைகளை இழந்து விடுகின்றார்; விடவே இழிந்தவராய்க் கழிந்து நிற்கின்றார். நினைப்பின் அளவே நிலை என்றதனால் நினையாமல் அயர்ந்து நிற்பதால் வினையும் புலைகளையும் அழிவுகளையும் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

நல்ல எண்ணத்தால் மனிதன் எல்லா நலன்களையும் எங்கும் அடைந்து வருகிருன். உயிர் வாழ்க்கைக்கு உரிய உயர் நிலைகள் யாவும் உள்ளத்தின் பரிபாகத்தாலேயே உளவாகி வருவது ஓர்ந்து சிந்திக்கவுரியது. உள்ளே உள்ள உள்ளத்தின் படியே வெளியே மனிதன் தெளிவாய் விளங்கி நிற்கின்ருன்.

" Will is the essence of man." [Philosophy]

"சித்தம் மனிதனது சத்து" என்னும் இது ஈண்டு உய்த்துணரத் தக்கது. மனிதனுடைய சாரம் முழுவதும் மன நினைவில் உள்ளமையால் அதன் நிலைமைக்குத் தக்கபடியே அவன் நிலைத்து வருகிருன். நல்ல நினைவால் எல்லா நலன்களும் விளைகின்றன.

மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம். (குறள், 457)

என்றதனுல் உயிருக்கும் மனதுக்கும் உள்ள உறவுரிமையும் உறுதி நலனும் உணரலாகும். மனம் செம்மையாஞல் இம்மையும் மறுமையும் நன்மையாய் வருகின்றன. அரிய மகிமைகள் யாவும் இனிய மனத்தால் தனியே வந்து அமைகின்றன.

கல்வியறிவை விட நல்ல மனம் உயர்ந்தது.

மனப் பண்பாடோடு படிந்தபொழுதுதான் அறிவு உயர்வாய் மதிப்புறுகிறது. படியாதாயின் அது கடிதாய் அயலே திரிகிறது. இதயம் இனியதாஞல் இன்ப நலன்கள் எல்லாம் அங்கே உதயமாகின்றன. மனம்போல வாழ்வு என்னும் பழமொழியால் அதன் விழுமிய நிலை விளங்கி நிற்கிறது. சான்ருேர், பெரியோர் என உலகில் ஒளி பெற்றுள்ளவர் எவரும் மன நலத்தாலேயே உயர்ந்திருக்கின்றனர்.

" Character lies in the will, and not in the intellect. "
(Schopenhauer)

" ஒழுக்கம் மனத்தில் அமைந்துள்ளது; அறிவில் இல்லை "

என மேல் நாட்டு அறிஞரும் இங்ஙனம் குறித்திருக்கின்றனர். இனிய மனம் இன்ப நிலையமாய் நிலவுகிறது.

உயர் வாழ்வுக்கு உரிமையாயுள்ள இத்தகைய மனத்தைப் பண்படுத்தி ஆட்சியை மாட்சியாக் கருதி வந்தால் அந்த அரசன் உத்தம நிலையில் உயர்ந்து ஒளி மிகுந்து விளங்குவான்.

உலகப் பாதுகாப்பில் பலவகை நிலைகளைக் கூர்ந்து கவனிக்க வேண்டியவனாய் வேந்தன் நேர்ந்து நிற்கின்றான். துறவிகள் சித்தர்கள் என உலகவாழ்க்கைகளைக் கடந்தவர்கள் போல் உயர்வேடங்கள் கொண்டுள்ளவர்களையும் அரசன் நாடிஅறிந்து உண்மை நெறிகளில் ஒழுகி வரும்படி செம்மையா உறுதிகள் புரிய வேண்டும் ஆதலால் யாண்டும் அவன் ஆராய்ந்து ஓர்ந்து தேர்ந்து வருவது நீண்ட சதுரப்பாடாய் நிலவி வருகிறது.

வேட நெறிநில்லார் வேடம் பூண்டு என்பயன்?
வேட நெறிநிற்போர் வேடம் மெய் வேடமே;
வேட நெறிநில்லார் தம்மை விறல் வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே. (1)

மூடம் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வும் மன்னனும்
பீடொன்று இலனாகும் ஆதலால் பேர்த்துணர்ந்து
ஆடம் பரநூல் சிகை யறுத்தால் நன்றே. (2)

ஞானம் இலாதார் சடைசிகை நூல் நண்ணி
ஞானிகள் போல நடிக்கின்றவர் தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானம் உண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே. (3)

(திருமந்திரம்)

குடிசனங்களையே அன்றித் துறவற நிலைகளிலுள்ளவர்களையும் அரசன் கூர்ந்து கவனித்து ஓர்ந்து செய்ய வேண்டிய நீதி முறைகளைக் குறித்துத் திருமூலர் இவ்வாறு உரைத்திருக்கிறார். ஆன்ற உரைக்குறிப்புகள் ஊன்றி உணரவுரியன.

அகத்தே ஞான சீலங்கள் இன்றிப் புறத்தே உயர்ந்த தவ வேடங்களைப் புனைந்து கொண்டு பெரிய ஞானிகளைப் போல் திரிகின்ற போலி வேடதாரிகளை அரசன் தண்டித்து அடக்காவிட்டால் நாட்டுமக்கள் அவரை நம்பி ஏமாந்து போவர்; போகவே விவேகங்கள் குன்றித் தீமைகள் பெருகும் ஆதலால் அவை நிகழாதபடி பாதுகாக்க வேண்டிய பொறுப்பு வேந்தனுக்கு நேர்ந்து நின்றது. அல்லவை களைவது நல்லவை புரிவதாம்.

கபடம் வஞ்சனை பொய் களவு முதலிய இழிநிலைகள் மனித சமுதாயத்தில் பரவாமல் அரசன் பாதுகாத்துவரின் அந்த நாடு

புனித நிலையில் பொலிந்து இனிய பல வளங்களும் நிறைந்து தனி மகிமையோடு தழைத்து யாண்டும் செழித்து விளங்கும்.

நரபதி சோதித்து ஆக்குதல் நாட்டிற்கு நலம் என்றதனுல் அரசன் ஆற்றும் செயல்கள் எல்லாம் நாட்டின் நலன் கருதியே வரும் என்பது தெரிய வந்தது. நாடன் என்று அவனுக்குப் பெயர் அமைந்துள்ளது. நாட்டை யுடையவன் என்பது அதன் பொருள். தனது உடைமையை உரிமையோடு கருதிக் காப்பது அவனுடைய இனிய கடமை. உரியது புரிய அரியது வருகிறது.

---

774 எந்நிலையை எய்தநீ எண்ணுகின்றுய் இப்பொழுதே
அந்நிலையில் ஏறநீ ஆண்மையுளாய்—உன்னியுடன்
உள்ளம் துணிவாய் உயர்வினையை ஆற்றிவரின்
வெள்ளம் விளையும் வியன். (௪)

இ-ள்

எந்த உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்று நீ எண்ணுகின்றுயோ அந்த நிலையை அடைந்து கொள்ளத் தக்க ஆண்மை உன்னிடம் மேன்மையாய் அமைந்துள்ளது; அதனை உணர்ந்து துணிந்து வினைபுரியின் உயர்வுகள் வெள்ளமாய் விளைந்து உன்பால் உரிமையோடு விரைந்து வரும் என்பதாம்.

இது உன்னத நிலையில் மன்னன் உயரவேண்டும் என்கின்றது.

அதிசய ஆற்றல்களும் மதிநலங்களும் மனிதனிடம் இயல்பாய் அமைந்திருக்கின்றன. அரிய பெரிய மிருகங்களும் அவன் எதிரே அஞ்சி நிற்கின்றன; அடங்கி நடக்கின்றன. நெடிய கடல்களை நேரே கடந்து செல்கிருன்; பெரிய மலைகளை எளிதே தாண்டிப் போகிருன்; வான வீதிகளில் மானமாய் உலாவி வருகிருன். ஆனவரையும்யாண்டும் போய்எதையும் செய்கிருன்.

உள்ளக்கிளர்ச்சிகளோடு துள்ளி எழும்பொழுது மனிதன் நல்ல வளர்ச்சிகளை அடைகிருன். எதையும் அடையலாம் என்ற ஊக்கமும் உறுதியும் எவனிடம் பெருகியுள்ளனவோ அவன் ஒரு அதிசய தீரனுய் உலகம்போற்ற ஒளிசெய்து நிற்கின்றுன். இடம் பொருள் ஏவல் முதலிய காரிய சாதனங்கள் வெளியே வசதியாய் அமையாது போயினும் மனவுறுதியுடையவன்

ஆண்மையோடு முயன்று மேன்மை பெறுகிருன். உள்ளமே துணையாய் ஊக்கி யுள்ளவன் புறத்துணைகளைப் பெரிதும் எதிர் பாராமல் அறத்திறலோடே அமைந்து அரியன ஆற்றி நிற்கிருன்.

கருதிய எதுவும் உறுதி யுடையவனுக்கு உரிமையாய் வருகிறது. தான் அடைய விரும்பியதைத் தடையின்றி அடைந்து கொள்பவன் தலைமையான ஆண்மையாளனுய் உலகில் உயர்ந்து திகழ்கின்ருன். காரியங்களைக் கண்ணும் கருத்துமாய் எண்ணி வருபவன் சீரிய பலன்களை நேரே நண்ணி மகிழ்கின்ருன்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். (குறள், 666)

வினையாண்மையில் மனத்திண்மை யுடையவர் எண்ணிய பொருள்களை எண்ணிய படியே எய்துவர் எனத் தேவர் இவ்வாறு உறுதி கூறியுள்ளார். மனந்தளராமல் துணிந்து முயல்; நீ நினைந்தன எல்லாம் நேரே வரும் என ஊதியத்தைக் காட்டிப் போதித்திருப்பது மனித சமுதாயத்துக்கு ஊக்கத்தை ஊட்டி ஆக்கத்தை அருளியிருக்கிறது.

" It is never too late to be what you might have been. "
(George Eliot)

" நீ அடைய வேண்டியதை அடைந்து கொள்ளக் காலம் கடந்து போக வில்லை; என்றும் அது உனக்கு இதமாயுள்ளது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணர வுறியது.

பருவம் கடந்து போயது என்ருே, வசதி இல்லை என்ருே மறுகி மயங்காதே; உறுதியாகத் துணிந்து கருமங்களைச் செய்; அது உண்மையான பலன்களை உனக்கு உதவியருளும். உலக வாழ்வு செல்வத்தால் செழித்து வருகிறது; அந்தச் செல்வம் வினையாண்மையால் விளைந்து வருகிறது. எல்லாரும் செல்வத்தை விரும்புவதற்குக் காரணம் வாழ்க்கையை அது வளம் செய்து வருவதைப் பார்த்தேயாம். விளைவு காண விழைவு நீண்டது.

வறுமையால் வாடவும், சிறுமையாய் வாழவும் யாரும் விரும்புவதில்லை; பெருமையாய் வாழவே யாவரும் விரும்புகின்றனர். இனிய பெருமைகளை எவ்வழியும் தேடுகின்றனர்.

" Men seek to be great." (Emerson)

" தாம் பெருமையா இருக்கவே மனிதர் நாடுகின்றனர் "

என மனித இயல்பைக்குறித்து எமர்சன் இவ்வாறு உரைத்திருக்கிறார். செல்வம் அதிகாரம் புகழ் முதலிய உயர் நிலைகளை இங்ஙனம் நாடியுழலும் இயல்பினையுடைய மனிதர் அதற்கு உரிய கருமங்களைக் கருதிச் செய்ய வேண்டியவராயினர். நாளும் கடமைகளை நாடிவரும் அளவே பீடும் பெருமையும் கூடி வரும் செய்யும் வினைகளே செல்வங்களை அருளுகின்றன.

ஒருவனுடைய சிறந்த அறிவுக்குத் தகுந்த பயன் தனது கருமங்களைப் பருவம் தவறுமல் அவன் கருதிச் செய்து வருவதேயாம். காரிய நோக்கு சீரிய ஆக்கமாகிறது.

" To know
That which before us lies in daily life,
Is the prime wisdom. " (Milton)

" தினசரி வாழ்க்கையில் தன் முன் உள்ள கடமையை அறிந்து கொள்வதே ஒருவனுக்கு முதன்மையான ஞானம் ஆம்" என ஆங்கிலக்கவிஞராகிய மில்டனர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

அறிவு மனிதனுக்குப் பெருமை தரும் ஆயினும் உரிய கருமங்களைக்கருதி முடியாமல் வறிதே மறுகி யிருப்பின் சிறுமையேயாம்; அறிவாளி என்பதை விடக் கருமவீரன் என்பது பெருமை தருவதாம். ஒருவனிடம் கூரிய அறிவு இருந்தாலும் வினையாண்மையில் வீறு கொள்ளவில்லையானல் வியனை மேன்மையை அவன் அடைய முடியாது. உழைப்பே உயர்வை அருளுகிறது.

அறிவு, ஆற்றல் என்னும் இருமொழிகளும் உறவுமுறையா மருவிக் குறிலும் நெடிலுமாக் கூடிவந்துள்ளன. காரண காரிய நிலையில் கருத நின்றன. அறிவுடைய மனிதன் உள்ளம் துணிந்து ஊக்கி வினை ஆற்றுவது ஆற்றல் என வந்தது. ஆற்றல்=செய்தல். ஆண்மையோடு செய்யும் அரிய செயல் தெரிய நின்றது.

" செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்
வெண்திங்களுள் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை. " [புறம், 38]

சோழ மன்னனது அதிசய ஆற்றலை இது குறித்து வந்துள்ளது. பொருளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். அரிய

செயல் செய்வதே அரசருக்கு உரிய கடமையாம். நல்ல வசதிகள் அமையாது போயினும் உள்ளமே துணையாய் ஊக்கி வினை செய்யும் மன்னன் மன்னிய புகழோடு மன்னி நிற்கின்றான்.

" மண்ணகன்று தன்கிளையின் நீங்கி வனம்புகுந்து
பண்ணும் தவத்திசைந்த பார்த்தன்தான்— எண்ணிறந்த
மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலம்தொலைத்தான்
கோதண்ட மேதுணையாக் கொண்டு." (தண்டி)

அரசை இழந்து கிளைகளை நீங்கிக் காடு புகுந்திருந்தும் அருச்சுனன் அசுரர்களைத்தொலைத்து அமரர்களைக் காத்தருளினான். யாதொரு துணையும் இல்லாமல் ஒரு வில்லைக் கொண்டு தன் உள்ளமே துணையாச் சென்று அரிய செயல் ஆற்றிப் பெரிய புகழ் பெற்றான். விசயன் என்னும் பேருக்குத் தக்கபடி அதிசயங்களைப் பெற்று உலகம் துதி செய்ய நின்றான். அரச குலத்தில் தோன்றிய வேந்தர் யாவரும் அந்த வீரன் போல் வினையாண்மை புரிந்து யாண்டும் மேன்மை அடைய வேண்டும்.

---

775 முயற்சி யுடையார் முதுநீ ருலகில்
உயர்ச்சி அடைவர் ஒழிந்தார்—இகழ்ச்சிமீக்
கொண்டு பழிவறுமை கூர்ந்து சிறுமைதுயர்
கண்டு கழிவர் கலுழ்ந்து. (ரு)

இ-ள்

முயற்சியுடையவர் உலகில் உயர்ச்சி அடைந்து ஒளி மிகுந்து விளங்குவர்; அதனையிழந்தவர் இகழ்ச்சி படிந்து இழி வறுமைகள் தொடர்ந்து அழிதுயரங்களில் அழுந்தி ஒழிவர் என்க.

உயர்வு இழிவுகள் உணர வந்தன.

உலக மக்கள் பலவகை நிலைகளில் யாண்டும் நிலவியுள்ளனர். எல்லாரும் உண்ணுகின்றனர்; உடுக்கின்றனர்; வசிக்கின்றனர். ஆகவே உணவு உடை உறையுள்கள் மனிதசமுதாயத்தின் அவசிய தேவைகளாய் எங்கும் மருவி நின்றன. நிற்கவே யாவரும் அவற்றைத் தேடவும் சுகிக்கவும் ஓடி அலைய நேர்ந்தனர். இயற்கைவிளைவுகள் அதிசயமருமங்களாய் மருவியிருக்கின்றன.

மனிதன் செய்துவரும் வினைக்கு ஆள்வினை என்று பெயர்

அமைந்திருப்பது ஆய்ந்து சிந்திக்கத் தக்கது. ஆள் செய்யும் வினை, ஆளும் வினை, ஆண்மையாளர் செய்யும் வினை என அது பொருள் அமைந்து மனிதனது செயல் நிலையை விளக்கியுள்ளது.

ஆள்வினையைச் செய்து வரும் அளவே ஒருவன் ஆளாய் வருகிறான்; அதனை இழந்து நின்றால் அவன் இழிந்தவனாகிறான். ஆளும் வினையும் ஆளின் நிலையும் கேளும் கிளையுமாய்க் கெழுமி யுள்ளன. உரிய வினை புரிபவன் பெரிய மனிதனாகிறான்.

*ஆள்வினை இழந்தவன் ஆள்நிலை இழந்தான்;*
*தாழ்வினை அடைந்து வாழ்வினை ஒழிந்தான்.*

ஆள் வினைக்கும் உயிர் வாழ்வுக்கும் உள்ள உறவுரிமைகளை இதனால் உணரலாகும். ஊக்கி வினை செய்தவனே உயர்ந்த வீரனாய் ஒளி பெற்றுச் சிறந்த மேன்மைகளை அடைந்து வருகிறான்.

“முடியா ஆள்வினை முடித்தனம் இன்றுஎன
வடியேர் தடங்கண் வாள்என மிளிரும்
கொடியேர் சாயலைக் குடங்கையில் தழீஇப்
பிடி ஏற்றினனால் பெருந்தகை உவந்து.” (பெருங்கதை,44)

அரிய ஆள்வினையைச் செய்து முடித்த உதயணமன்னனது உயர் பெருந்தகைமையை இது உணர்த்தியுள்ளது. தான் செய்து கொண்ட காரிய சித்தியைக் கண்டு அவன் உள்ளம் பூரித்து உவந்துள்ளமை உரையால் உணர வந்தது.

செல்வமும் சிறப்பும் தருகிற ஆள்வினையை ஒருவன் கை விடின் வறுமையும் சிறுமையும் அவனை மருவிக் கொள்ளுகின்றன. ஈனம் அடையாதபடி மானமா மனிதன் வாழவேண்டுமானால் அவன் ஆள்வினையை ஞானமா ஆள வேண்டும். உரிய நிலைமையை உணர்ந்து முயற்சியைச் செய்யாது ஒழியின் உயர்ச்சி ஒழிந்துபோம் ஆதலால் அயர்ச்சி இழிந்த பழியாய் நின்றது.

“ஆள்வினை இன்மை பழி.” (குறள், 618)

தொழில் செய்யாமையே பழி எனத் தேவர் இவ்வாறு விழி தெரிய விளக்கியிருக்கிறார். பழி படிந்து பாழாகாமல் தொழில் புரிந்து எவ்வழியும் சிறந்து விழுமிய நிலையில் உயர்ந்து கொள்க.

அரும்பொறி இன்மை பழிஅன்று யார்க்கும்
அறிவறிந்து ஆள்வினை இன்மை

பெரும்பழி எனலான் ஒருவன் வீட்டின்பம்
பெருமை கொண்டு இகழலர் பெரியோர்;
விரும்பும் அஃது அடையும் வகை அருட் குருவால்
விளங்கியும் உளங்கையில் கனிபோல்
வரும்படி நாளும் முயன்றுரு என் போல்
மதியிலார் தமையிகழ் வதலால்.

[வைராக்கிய தீபம், 75]

இம்மை வாழ்வுக்கு ஆள்வினை நன்மை தருவது போல் மறுமை வாழ்வுக்கும் உரிமையாய் அது பெருமை தருகிறது எனக் கரும நலனை இது காட்டியிருக்கிறது. பொய்யா மொழியைத் தழுவி எழுந்து உயிரினங்களுக்கு அதி விநயமாக உய்தியை உணர்த்தியுள்ள இது ஊன்றி உணரத்தக்கது.

பேரின்ப வீட்டை அடைவது அரிது ஆயினும் அதனை அடைய வேண்டுமே என்ற எண்ணம் கொஞ்சமாவது நெஞ்சில் இருக்கக்கூடாதா? சிறிதும் அது இல்லாது இருப்பது பொல்லாத கொடிய பழியாம் எனச் சாந்தலிங்க சுவாமிகள் வையமாந்தருடைய மையலான மதிகேட்டை நினைந்து மனம் இரங்கி வருந்தியிருக்கிறார். அவரது மனநிலை மகிமை மருவியுளது.

பிறவித் துயரங்கள் எல்லாம் நீங்கிப் பேரின்ப நிலையை அடைதற்கும் ஆள்வினை ஊழ்வினையாய் உதவிபுரிகிறது; அதனைப் புனிதமாச் செய்து வருக என்பது இங்கே இனிது உணரவந்தது.

முயன்று வருபவன் எவ்வழியும் செவ்வையாய் உயர்ந்து வருகிறான்; முயலாமல் அயர்ந்து நின்றவன் யாண்டும் இழிந்து கழிகின்றான். இழிவு நேராமல் உயர்வை நோக்குக.

முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (குறள், 616)

முயற்சி செல்வத்தை ஆக்கி மனிதனை இன்பத்தில் உயர்த்தும்; அயர்ச்சியான சோம்பல் வறுமையுள் புகுத்தித் துன்பத்தில் ஆழ்த்தும் என்னும் இது நாளும் சிந்தித்து உணரத் தக்கது.

செயத்தகு முயற்சி செய்திடின் செயிர்தீர்
செய்யவள் மணாளனும் இரங்கி
வியத்தக வேண்டும் யாவையும் அளிப்பன்
விளம்புறு முயற்சி செய்யானேல்

நயத்தகு போகம் அளித்திடான் என்று
நானிலத்து அறிஞர் நன்கு உரைப்பர்
உயத்தகு நெறிமால் அடியுனல் என்றே
ஓர்ந்தமா தவப்பெருங் கடலே!
(குசேலோபாக்கியானம்)

முயற்சி செய்தவனுக்கே திருமகள்கணவன் எல்லா இன்ப நலன்களையும் உவந்து அருளுவன்; அது செய்யாதவனுக்கு அவன் யாதும் செய்யான் என இது குறித்திருக்கிறது. வினையாளனைத் தெய்வமும் விழைந்துவரும் என்பது தெளிந்து கொள்ள வந்தது. உரிய வினை செய்ய அரிய பயன்கள் விளைகின்றன.

உலக மக்களுக்குத் தலைமை அதிபதியாய் அரசன் அமைந்திருத்தலால் தன் பொறுப்பை உணர்ந்து கருமங்களைக் குறிப்போடு கூர்ந்து செய்து தேர்ந்து தெளிந்து வர வேண்டும்.

மாந்தர் எங்கும் மகிழ்ந்து வாழ ஓர்ந்து வினை புரிபவனே செங்கோல் வேந்தனாய்ச் சிறந்து திகழ்கிறான்; அங்ஙனம் செய்யாதவன் வெங்கோலனாய் விளிந்து போகிறான். உரிய ஆதரவு பிழைபடின் கொடிய வேதனைகள் விளைந்து நெடிய பழிகள் நிறைந்து விடுகின்றன. பாதுகாவலே நீதிகளாகிறது.

வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழியா நிற்பர்;
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்ளப்
பாய்ந்த புலியன்ன பாவகத்தானே. (திருமந்திரம், 245)

தன் கடமையைச் செய்து காவாமல் வேந்தன் கொடுமை செய்ய நேர்ந்தால் புலியைக்கண்ட புல்வாய்கள் போல் குடிகள் திகிலடைந்து வருந்துவர் எனத் திருமூலர் இவ்வாறு குறித்திருக்கிறார். யாண்டும் ஆள்வினையாளனாய் நின்று ஆட்சியைக் கருதிக் காத்து அரசன் உறுதி செய்து வர வேண்டும் என்பது கருத்து.

---

776 சீரும் திருவும் சிறப்பும் பிறவுமெலாம்
நேர நினைந்துநீ நீள்கின்றாய்—சேரும்
வகையறிந்து செய்யின் வருமே அனைத்தும்
தொகையாய் முயன்று தொடர். (சா)

இ-ள்

செல்வம் கீர்த்தி சிறப்பு முதலிய எல்லா மேன்மைகளும்

வேண்டும் என்று யாண்டும் நீ ஏங்கி நிற்கின்றாய்; அவை உன் பால் வந்துசேரும் வகையை விழியூன்றி உணர்ந்து வினைசெய்து வந்தால் யாவும் ஒருங்கே விரைந்து பெறுவாய் என்பதாம்.

ஆசைகள் மனித சமுதாயத்தை அலைத்து வருகின்றன. அரிய பல பொருள்கள் வேண்டும் என்று யாவரும் யாண்டும் அவாவி அலைகின்றனர். கருதிய பொருள் கிடைத்தால் மேலும் அதிகம் பெற விழைந்து சாலவும் தவிக்கின்றனர். பெற்றதில் ஆசை குறைகிறது; பெறாததில் ஆசை விரிகிறது. மானச மருமங்கள் அதிசய விசித்திரங்களாய்ப் பெருகி நிற்கின்றன.

மேலான நிலைகளை அடைய வேண்டும் என்று உள்ளத்தில் மூண்டு எழுகின்ற விருப்பங்களே மனிதரை உலகத்தில் உயர்ந்து விளங்கச் செய்கின்றன. கருதிய நினைவுகள் கரும வினைகளாய் வருகின்றன. அவசிய தேவைகளை நாட நேர்ந்தவன் அதிசய சேவைகளைக் கூட நேர்ந்தான். பசி உணவை நாடச்செய்கிறது; வறுமை பொருளைத் தேடச் செய்கிறது; வெயில் நிழலைக் கூடச் செய்கிறது; துன்பம் இன்பத்தை அடையச் செய்கிறது.

அல்லலான சோதனைகள் மனிதனுடைய வளர்ச்சிக்கு நல்ல சாதனைகளாய் நிற்கின்றன. துயரம் நேர்ந்த போதுதான் உயிர் உயர நேர்கிறது. துன்பம் ஒழிய இன்பம் விழைகிறது.

"துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது."

(இராமா, கங்கை **69**)

குகனுக்கு இராமபிரான் இவ்வாறு போதித்துள்ளார். இது பொருளாள முடையது; கருதி உணரத்தக்கது. புலையான துன்ப நிலைகளைக் கண்டு நொந்தவன் நிலையான இன்பநிலைகளைக் காண விழைந்து வேணவாவோடு விரைந்து முயல்கின்றான்.

சுக வாழ்வில் அழுந்திக் கிடப்பவன் நிழலின் கீழுள்ள பயிர்போல் வளர்ச்சி குன்றி மழுங்கிக் கிடக்கிறான். துயரம் தோய்ந்தால் அந்த மனிதன் துணிந்து எழுந்து எந்த வகையிலும் முயன்று யாண்டும் உயர்ந்து கொள்ளுகிறான்.

"Struggle is the law of growth." [Philosophy]

"போராட்டம் வளர்ச்சிக்கு வளமையாயுள்ளது" என்னும் இது இங்கே அறிய வுரியது. நெருக்கடிகள் கூறு கூறுப்பு

களை விளக்கின்றன. நேர்ந்த இன்னல்களால் நெஞ்சம் துணிந்து முயன்று நேரே உன்னத நிலைகளை அடைந்த மாந்தர் பலர். துயரத் தொடர்பால் மனிதன் உயரத் தொடங்குகிறான்.

"A man reaches his full height only through compulsions, responsibilities, and suffering." (Hegel)

"காரியப் பொறுப்பு, துன்பம், அவசியம் ஆகிய இவைகள் மூலமாகவே தனது பூரணமான உயர்ச்சியை மனிதன் அடைகிறான்" என ஹீஜல் என்னும் பேரறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். வருத்தம் வரக் கருத்து விருத்தி பெறுகிறது.

நேர்ந்த அல்லல்கள் மனிதனை நேரே உந்தித்தள்ளுகின்றன. தள்ளவே அவன் துள்ளி எழுந்து உள்ளி யுணர்ந்து ஊக்கி முயன்று உயர்ந்து செல்லுகின்றான். மூண்ட துயரங்களே பாண்டவர்களை நீண்ட புகழோடு நிலைத்திருக்கச் செய்தன.

இராமன் அயோத்தியில் சக்கரவர்த்தியாய் அமர்ந்திருந்தால் அவனது உக்கிர வீர நிலை உலகத்துக்குத் தெரியாமல் போயிருக்கும். அரசு முடி துறந்து அடவி புகுந்து அல்லல் பல அடைந்தமையால் எல்லையில்லாத அதிசயங்களை அவன் செய்ய நேர்ந்தான். வானும் வையமும் வணங்க மான வீரனாய் நின்றான்.

"கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் காத்த கழல் வேந்து."

எனக் கோதண்ட வீரன் புகழ் ஓங்கி நிற்கின்றான். வேந்து, கழல் வேந்து, கான் கடந்த வேந்து, கடல் கடந்த வேந்து, காத்த வேந்து, இடுக்கண் காத்த வேந்து, இமையோரைக் காத்த வேந்து எனக் கூர்ந்து நோக்கி ஆர்ந்த சுவைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும். உண்மையான வேந்தன் எப்படி இருக்க வேண்டும் என்பதை இராமன் ஒழுகிக் காட்டியிருக்கிறான். விழுமிய ஒழுக்கம் வியப்புகளை விளைத்துள்ளது.

வெய்ய தீமைகளை ஒழித்து வையத்தைப் பாதுகாத்து மாந்தர் யாண்டும் மனம் மகிழ்ந்து வாழ்ந்துவரச் செய்வதே வேந்தன் கடமையாம் என எங்கும் விளக்கியுள்ளான். இக் கோமகனுடைய அறிவும், ஆற்றலும் பரிபாலன முறைக்கே உரிமையாய் நின்று வேந்தருக்கு விரிந்த போதனைகளைச் செய்தன.

வேந்தன் வீயவும் யாய்வரம் மேவவும்
ஏந்தல் எம்பி வருந்தவும் என்நகர்
மாந்தர் வன்துயர் கூரவும் யான் வனம்
போந்தது என்னுடைப் புண்ணியத்தால் என்ருன். (1)

அறம்தவா நெறி அந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலேயேன் எனின்
இறந்து போகினும் நன்று இதுவல்லது
பிறந்து யான் பெறும் பேறுஎன்பது யாவதே. (2)

(இராமா, அகத்திய, 18, 19)

இராமனுடைய உள்ளக் கிடக்கை இந்தக் கவிப்படங்களில் ஒளி செய்துள்ளது. வனம் போந்தது என்னுடைப் புண்ணியம் என்றது எண்ணியுணர வந்தது. ஊரில் இருந்தால் உலகில் நிகழ்கின்ற துயரங்கள் தெரியாது போய்விடும்; அடவி புகுந்தமையால் யாவும் தெரிய வந்தன; நல்லோர்களுக்கு அல்லல்கள் செய்கின்ற பொல்லாதவர்களைத் தொலைத்து ஒழித்து எல்லாரும் இனிது வாழ இதம் புரிந்த போதுதான் நான் பிறந்த பயனை அடைந்தவன் ஆவேன் என்று இந்த வீர வள்ளல் உரைத்திருப்பது உலகஉள்ளங்களை உருக்கி உயர்நிலைகளைவிளக்கியிருக்கிறது.

தனது தனியான அருந்திறலாண்மையால் திருந்திய பண்போடு மனித சமுதாயம் இனிது வாழ்ந்து வரும்படி இப்பெருந்தகை புரிந்துள்ளான். காரியத் துணிவு கருமவீரன் தருமவீரன் என்னும் சீரிய புகழைச் சீராமனுக்கு நேரே விளைத்தருளியது.

"Without adventure civilization is in full decay." [Whitehead]

"துணிவான முயற்சி இல்லையானல் மனித சமுதாயத்தின் நாகரிகம் முழுதும் அழிந்து போம்" என ஒய்ட்ஹேட் என்னும் மேல் நாட்டு அறிஞர் இவ்வாறு செவ்வையாக் கூறியிருக்கிருர்.

மனிதனது உன்னத நிலைக்கெல்லாம் மூலகாரணமாயிருப்பது முயற்சியே. அந்த உயர்ச்சி நலனை ஊன்றி உணர்ந்து யாண்டும் அயர்ச்சியில்லாமல் மூண்டு முயன்றுவரின் அரிய பல பெருமைகள் நீண்டு பெருகிவரும். தனக்கு உரிய உள்ளத் துணிவை உறுதியாகப் பயன் படுத்தி வேந்தன் உயர்ந்து கொள்ளவேண்டும், ஊக்கம் உற ஆக்கம் வருகிறது.

777 காலம் கருதிக் கரும நிலையோர்ந்து
மூலம் தெரிந்து முயன்றக்கால்—ஞாலமெலாம்
கொள்ள விழைந்தாலும் கூடும் மடியுறினே
எள்ளிடமும் எய்தாதே எண். (எ)

இ-ள்

பருவம் அறிந்து உரிமையோடு ஓர்ந்து கரும நிலைகளைக் கருதிச் செய்தால் உலகம் முழுவதும் தலைமையா அடையலாம்; அந் நிலைமைகளை உணராமல் நீ சோம்பியிருந்தால் எள் அளவு இடமும் கிடைக்காமல் எள்ளல் அடைந்து இழிவாய் என்க.

அறிவு முயற்சி, மனமுயற்சி, தேக முயற்சி என மருவியுள்ள வினையாண்மைகளே மனிதனுடைய உயர்ச்சி நிலைகளுக்கு மூலகாரணங்களாய் முடிந்திருக்கின்றன. செய்யும் செயல் உய்யும் வகையாய் உருவாகித் தெய்வத் திருவா எழுகிறது.

உயர்ந்த நோக்கோடு உள்ளம் துணிந்து கருமத்தை ஒருவன் கருதிச் செய்ய நேரின் இருமையும் பெருமை பெறுதற்கு உரிய தகுதியை அப்பொழுதே அவன் அடைந்து கொள்கின்றான். கருதி முயல்பவன் உறுதி நலங்களை அடைந்து உயர்ந்து வருகிறான். கருத்தோடு கலந்த உள்ளக் கிளர்ச்சி உயிரின் வளர்ச்சியாய் ஒளி புரிகின்றது. உள்ளம் முயன்று வர உயிர் வாழ்வு உயர்ந்து வருகிறது. அரிய பல மேன்மைகள் விளைகின்றன

"Men grow when inspired by a high purpose."
(Alexis carrel)

"உயர்ந்த நோக்கோடு கிளர்ந்து எழும்பொழுது மனிதர் உள்ளே சிறந்து வளர்ந்து வருகிறார்" என அலக்ஜிஸ் காரேல் என்னும் பெரிய விஞ்ஞானி இவ்வாறு குறித்திருக்கிறார்.

ஊக்கமான முயற்சி உயிர்க்கு ஆக்கம் ஆகிறது.

பொழுதைப் பழுது படுத்தாமல் விழுமிய நிலையில் அதனைப் பயன்படுத்தி வருகிற மனிதன் எந்த வகையிலும் உயர்ந்தவன் ஆகிறான். கருமம் தோய்ந்து வருகிற நேரம் தருமம் தோய்ந்து வருதலால் அதன் பெருமையும் பேறும் அறியலாகும். காலமும் கருமமும் உறவுரிமைகளாய் மருவி உறுதியருளி வருகின்றன.

வினைஎனப் படுவது வேற்றுமை கொளாது
நினையும் காலைக் காலமொடு தோன்றும். (தொல்காப்பியம்)

வினை காலத்தோடு கலந்து தோன்றும் என ஆசிரியர் தொல்காப்பியனார் இங்ஙனம் கூறியிருக்கிறார். ஒரு செயல் நிகழும்பொழுது அயலுள்ள சார்புகளை இயல் நூலார் இனமா விளக்கி யுள்ளார். கருமக் கரணங்கள் காண வந்தன.

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே. (நன்னூல்)

கரும நிகழ்ச்சியின் உரிமைகளை இது காட்டியுள்ளது.

கருவி முதலிய உபகரணங்கள் எவற்றினும் உரிமையான காலம் வினைக்குச் சாலவும் துணையாயுள்ளமையான் அது ஈண்டு முதன்மையாய் எண்ண நேர்ந்தது.

காலம் கருதி என்றது பருவம் அறிந்து செய்யும் வினை பெருமை பெற்று வரும் ஆதலால் அந்த மூலம் தெரிய வந்தது.

உரிய பொழுதை ஓர்ந்து அரசன் கருமம் செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யின் எவ்வழியும் செவ்வையாய் யாவும் இனிது முடிந்து அரிய பலன்கள் மேவி வரும்.

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (குறள், 481)

பொழுதை ஓர்ந்து வேந்தர் வினை செய்ய வேண்டும் எனத் தேவர் இவ்வாறு போதித்திருக்கிறார். காகமும் கூகையும் பறவைகள். பகலில் கூகைக்குக் கண் தெரியாது; ஆகவே அந் நேரம் பார்த்துக் காக்கை அதனைக் கொத்தி வெல்லும்; தன்னினும் வலிய கூகையைக் கால வாய்ப்பினால் காகம் எளிதே வென்று கொள்ளும் ஆதலால் அரசன் இந்தக் காட்சியைக் கண்டு தெளிந்து காலம் கருதி வினை செய்ய வேண்டும் என விநயமா விதித்திருப்பது நுனித்துணரத் தக்கது.

இடத்தொடு பொழுதும் நாடி எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்படல் இன்றிச் சூழும் மதிவல்லார்க்கு அரியது உண்டோ?
தடத்திடைக் காக்கை ஒன்றே ஆயிரங் கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்றுங் கின்னுயிர் செகுத்த தன்றே.

இழைபொறை ஆற்றகில்லா திட்டிடை தளர நின்ற
குழைநிற முகத்தி னார்போல் குறித்ததே துணிந்து செய்யார்;
முழையுறை சிங்கம் பொங்கி முழங்கிமேல் பாய்ந்து மைதோய்
வழையுறை வனத்து வன்கண் நரிவலைப் பட்ட தன்றே. (2)
(சீவகசிந்தாமணி)

காலம் அறிந்து, இடம் தெரிந்து வினை செய்ய வேண்டும்; பருவம் கண்டு சென்றமையால் ஒரு காகம் பல்லாயிரம் கூகைகளை ஒருங்கே வென்றது; இடம் தெரியாமல் பாய்ந்தமையால் ஒரு சிங்கம் நரியின் வலையில் அகப்பட்டு மாய்ந்தது; ஆதலால் இடம் காலங்களை இனிது தெளிந்து காரியங்களைச்செய்க எனச் சீவக மன்னனுக்கு அவன் தாய் இவ்வாறு கூறியிருக்கிறாள்,

வரியுடற்பொறி மாசுண வாய்ப்படு மதம்பாய்
கரியை மீட்டவன் கைப்படை தொலைந்த காலத்து
நரியின் வாய்த்தசை மீட்கவும் வலியின்றி நலிவான்
பரிய கூகையை வெல்லுமே காகமும் பகலில்.
(குற்றாலத்தலபுராணம்)

அரிய வலியுடைய ஒருவேடன் உரிய வில் இல்லாதபொழுது சிறிய நரியையும் கொல்ல முடியாமல் நைந்து நின்றான் என இது குறித்துள்ளது. காலமும் கருவியும் கருதியுணர வந்தன.

வேலமர் தடக்கை வீரரிப் பாடி வீடுசென் றணைதலும் புறத்தோர்
ஆலமர் சினையில் பல்பெருங் காகம் அரும்பகல் அழிந்த கூகையினால்
சாலவும் இடருற் றலமரக் கண்டு தம்மிலே முகம்முகம் நோக்கிக்
காலமும் இடனும் அறிந்தமர் செகுத்தல் கடன்எனக்கருதினர் அன்றே.
(பாரதம்)

பகலில் தோல்வி யடைந்து மெலிந்து வருந்தியிருந்த கூகை இரவு வரவும் பல காகங்களைத் தொலைத்தது; அந்நிலையினை நேரே கண்ட பாரதவீரர் காலம் அறிந்தே வினைசெய்ய வேண்டும் எனக் கருதியிருந்தனர்; அந்த நிலையை இது இங்ஙனம்காட்டியுள்ளது.

ஞாலம் புரந்தருள நேர்ந்த அரசன் காலம் கருதிக் காரியங்களைச் செய்துவரின் மேலான பலன்கள் யாவும் மேவி வரும். உரிய பருவம் தவறின் அரிய கருமங்கள் வழுவாய் அவலமடையும் ஆதலால் தக்க சமையத்தை மிக்க கவனமாப் பயன் படுத்த வேண்டும். காலம் அரிய பலனுடையது; உரிமை செய்து வருக.

" Catch the transient hour;
Improve each moment as it flies. " (Johnson)

" நிலையில்லாத நேரத்தை நிலையாகப் பிடி; அது விரைந்து பறந்து போகிறபடியால் ஒவ்வொரு நிமிடத்தையும் சிறந்த பயனுகச் செய்! " என ஜாண்சன் என்னும் ஆங்கிலப் புலவர் காலத்தைக் குறித்து இவ்வாறு கருத்தோடு கூறியிருக்கிருர்.

" Time is a precious gift. " [Time]

" காலம் அரிய தெய்வக்கொடை" என்னும் இது இங்கே அறியவுரியது. பொழுதைப் பழுது படுத்தாமல் விழுமிய நிலையில் பயன் படுத்தி வருதலால் மேல் நாட்டார் எல்லா வகையிலும் மேலோராய் விளங்கி நிற்கின்றனர். முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்து ராணியாயிருந்த எலிசபெத் அரசி மரணப் படுக்கையில் இருந்தபொழுது மறுகிப் புலம்பியதை அந் நாட்டார் இன்றும் பெருமையாப் போற்றி வருகின்ருர்.

"Millions of money for one inch of time!"
[Queen Elizabeth]

"ஒரு நிமிட நேரம் பத்து லட்சம் பவுண்" என அந்த வெள்ளை அரசி உள்ளம் வியந்து உரைத்திருப்பது ஊன்றி உணர வுரியது. இத்தகைய நேரத்தை வீணே கழித்து வெறுமையா யிருப்பது எத்தகைய கேடு! எத்துணை இழிவு! உய்த்துணர வேண்டும். அரிய பொழுதை அறிவது பெரிய மதியாம்.

காலத்தை எவன் உரிமையோடு பயன்படுத்துகின்ருனே ஞாலத்தை அவன் நன்கு பேணி வருகிருன்; அந்த அரசிடம் அரிய பல பெருமைகள் பெருகி வருகின்றன. பொழுதைப் பழுதாக் கழிய விடுவது உயிர் வாழ்வை இழிவா ஒழிய விடுவதேயாம். வீழ்நாள் விழாது பேணின் வாழ்நாள் வழாது காணும்.

வீணுகக் காலத்தை வேந்து விளியவிடின்
காணுன் ஒருசீரும் காண்.

உரிமையா வாய்த்த பொழுதை நல்ல வகையில் உபயோகிப்பவன் செல்வம் புகழ் முதலிய சீர்களைக் காண்கின்ருன்; அங்ஙனம் ஆற்ருதவன் அல்லலே கண்டு அவலமா யிழிந்து போகிருன். நாள் வீண் கழியின் அந்த ஆள் வீணே அழிகிருன்.

ஞாலத்தை ஆள நேர்ந்த மன்னன் காலத்தை வரைந்து கொண்டு கருமத்தைச் செய்துவரின் அந்த ஆட்சி அரிய பல மாட்சிகளை அடைந்து விளங்கும். காலம் வறிதே கழிய விடின் அவ் வாழ்வு பரிதாபமாய் இழிந்து பழியோடு பாழ்படுவதாம்.

"Every hour frittered away means unrelieved human misery." [Kirby page]

"வீணே கழிகிற ஒவ்வொரு கணமும் மனித சமுதாயத்தின் துயரை நீக்காத பழியுடையது" என்னும் இது இங்கே கருதி யுணர வுரியது. அரசனுக்கு அமைந்த நேரம் உலகைப் பாதுகாக்கும் உரிமையுடையது. உயிரினங்கள் துயர் உருதபடி இனிது பேண வுரிய அரிய பொழுதை வறிதே கழியவிடின் பெரிய பழியாம் ஆதலால் அவ்வாறு கழியாமல் எவ்வழியும் செவ்வையா அதனைப் பயன் படுத்தி வரவேண்டும்; அவ் வரவால் அரசுக்குஅரிய பெரிய மகிமைகள் யாண்டும் உளவாம்.

---

778. பொருளும் புகழும் பொருந்த விழைவார்
மருளும் மடியும் மருவார்—தெருளுளத்தே
கொண்டு முயல்வார் குலையார் நிலைஎன்றும்
கண்டு மகிழ்வார் கதி. (அ)

இ—ள்

பொருள் புகழ் முதலிய உயர் நலங்களை அடைய விரும்புபவர் மருள் மடி முதலிய இழிவுகளை மருவார; உள்ளம் தெளிந்து ஊக்கி முயன்று உயர்ந்த கதிகளைக் கண்டு மகிழ்வார்.

உயர்வான நிலைகளை அடைய உரியவரது இயல்புகளை இது இனிது விளக்கியுளது. மானச மருமங்கள் மதியூகமாய்க் காண வுரியன. மனம் புத்தி சித்தங்கள் வித்தக நிலைகளில் விரிந்து நிற்கின்றன. எண்ணம் விளைய எல்லாம் விளைகின்றன.

மனநினைவுகளால் மனித உலகம் யாண்டும் இனிது இயங்கி வருகிறது. வெளியே விரிந்து நிகழுகிற தொழில்கள் எல்லாம் உள்ளே யிருந்து கிளர்ந்த எண்ணங்களாலேயே இசைந்து திகழ்கின்றன. கருதி முயன்ற அளவு உறுதி நலன்களை மனிதன் அடைந்து வருகிறான். தனக்கு வேண்டிய இதங்களை நீண்ட

நோக்கோடு முன்னும் பின்னும் எண்ணி அறிந்து யாவும் எய்த முயல்கின்ருன். முயன்ற அளவு உயர்ந்து வருகிருன்.

தனது உயிர் வாழ்க்கைக்குப் பொருள் அவசியம் தேவையாயிருத்தலால் அதனையே முதன்மையாக விழைந்து திரிகிருன். பொருளாசையோடு பலவகை ஆசைகளும் மனிதனிடம் பெருகியுள்ளன. ஆராத ஆவல்கள் தீராது திரிகின்றன.

தன்னைக் குறித்து அயலார் புகழ்ந்து பேசக் கேட்பதில் மனிதனுக்குள்ள பேராசை இயல்பான மயலாய் விரிந்துள்ளது. இவ்வாறு விழைவுகளோடு வழிவழியே வந்துள்ளமையால் மனித சமுதாயத்திடம் தொழில்கள் நீண்டு வர நேர்ந்தன. பசியும் நசையும் பணிகளைச் செய்யத் தூண்டி மனிதரை ஆண்டு வருகின்றன. அவ்வரவு நிலைகள் இயல்பானஉறவுரிமைகளாயின.

கருவில் உருவாகி வந்த எவரும் கருமம் செய்வது கடமையாய் வந்தது. செய்ய வுரிய கருமத்தைச் செய்யாமல் நின்றவர் வெய்ய துயரங்களை அடைய நேர்கின்ருர். மடியும் மடமையும் குடிகேடுகள் உடையன; அவற்றை மருவ நேர்ந்தவர் குடிகேடராய் இழிந்து அடியோடு அழிந்து போகின்ருர்.

காரியங்களை வீரியமாக் கருதிச் செய்பவரிடம் சீரிய மேன்மைகளும் சிறந்த செல்வங்களும் விரைந்து வந்து அடைகின்றன. ஒருவன் உயர்ந்த ஆண்மகன் என்பது அவன் செய்கின்ற வினையாண்மையால் விளங்கி வருகின்றது. ஆட்சி புரிய நேர்ந்த அரசரது மாட்சிகள் யாவும் கரும வீரத்தில் மருமமாய் மருவியிருக்கின்றன. கருமங்களைக் கருதிச் செய்பவர் தருமங்களை உரிமையாக அடைந்து கோள்கின்ருர். அரிய புகழ்களும் பெரிய புண்ணியங்களும் அவரிடம் நேரே பெருகி நிற்கின்றன.

பகீரதன் சிறந்த அரசகுலத் தோன்றல்; திலீபன் என்னும் மன்னனுடைய அருமைத் திருமகன். அரிய பல குண நலங்கள் வாய்ந்தவன்; கருதிய எதையும் கடைபோகச் செய்யும் உறுதி மிகவுடையவன். தனது மூதாதையராகிய சகரர் கபில முனிவர் சாபத்தால் இறந்து பட்டதை அறிந்து வருந்தினன்: அவர்க்கு உரிய நீர்க்கடன் செய்ய விரும்பினன்; விண்ணுலகிலுள்ள தெய்வ கங்கையை இம் மண்ணுலகில் கொண்டு வர முயன்

ருன்; பிரமனை நோக்கி அரிய தவத்தைச் செய்தான். கருமமே கண்ணுய் இவன் கருதிச் செய்த தவம் எவரும் செய்ய முடியாத பெரு மகிமையுடையது.

பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதிர் ஒளியையும் துய்த்து மற்றதையும்
பருக லின்றியும் முப்பதி ணுயிரம் பருவம்
உருகு காதலின் மன்னவன் அருந்தவம் முயன்ருன். (1)

உந்தியம் புயத்து உதித்தவன் உறைதரும் உலகும்
இந்திராதியர் உலகமும் நடுக்குற இரைத்து
வந்து தோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன்
சிந்திடாது ஒரு சடையினில் கரந்தனன் சேர. (2)

புன்னுனித்தரு பனிஎன வரநதி புனிதன்
சென்னியில் கரந்து ஒளிதர வணங்கினன் திகைத்து
மன்னன் நிற்றலும் வருந்தல்நம் சடையள் வானதியின்று
என்ன விட்டனன் ஒருசிறிது அவனிபோந் திழிந்தாள். (3)

இழிந்த கங்கைமுன் மன்னவன் விரைவொடும் ஏகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை அழிப்பக்
கொழுந்து விட்டெரி வெகுளியின் குடங்கையில் கொள்ளா.

உண்டு உவந்தனன் மறைமுனிக் கணங்கள் கண்டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன் நிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழி கொடுத்தனன் குதித்து
விண்டு நீங்கினர் உடலுகு பொடியின் மேவினளே. (5)

நிரையம் முற்றிய சகரர்கள் நெடுங்கதி செல்ல
விரைமலர்ப் பொழிந்து ஆர்த்தன விண்ணவர் குழாங்கள்
முரசம் முற்றிய பல்லியம் முறைமுறை முழங்க
அரசன் அப்பொழுது அணிமதில் அயோத்தி மீண்டடைந்தான்.
(இராமாயணம்)

பகீரதன் அருந்தவம் புரிந்து ஆகாய கங்கையை இங்கே கொண்டு வந்திருக்கும் காட்சியை இது காட்டியுள்ளது. பிரமனை நோக்கியும் கங்கையை நினைந்தும் சிவபெருமானை எண்ணியும் அறுபதினுயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து தெய்வ நதியை இவ் வையத்தில் வரச் செய்து சகரர் உய்திபெற உதவியிருக்கி

றான். பகீரதன் கொண்டு வந்தமையால் கங்கைக்குப் பாகீரதி என்று ஒரு பெயரும் வந்தது. உள்ளம் தளராமல் ஊக்கி நின்று நெடுங்காலம் நிலைத்து முயன்று காரிய சித்தி அடைந்திருத்தலால் பகீரதப் பிரயத்தனம் என அரிய வினையாற்றலுக்கு உரிய உதாரணமாய் இவ் வேந்தன் என்றும் விளங்கி நின்றுள்ளான்.

கருமங்களைச் செய்வதில் அரசன் எவ்வாறு கருத்து ஊன்றியிருக்க வேண்டும் என்பதை இவன் சரித்திரம் நன்கு விளக்கி நிற்கிறது. பிற உயிர்கள் நலம் அடைந்து வாழ அரசன் முடி புனைந்திருக்கிறான். இந்த முடிவை உணர்ந்து யாண்டும் அயராமல் ஆட்சி புரிந்து வருபவனே உண்மையான அரசன் ஆகிறான். நாடன் என்று அரசனுக்கு ஒரு பெயர். நாடு நன்மை அடைய நாடி வருபவன் நாடன் என நேர்ந்தான். தன் பாடும் பதவியும் தெரிந்து அரசன் பீடு பெற ஒழுகி நேரே நீடி வர வேண்டும்.

---

779. ஊழிருந்தால் எல்லாம் உறுமென் றுரைபிதற்றித்
தாழா மடிதல் தவறாகும்—வாழை
இலையிலிட்ட சோறும் எடுத்தயின்றால் அன்றி
இலைகாண் பசிதீர் இடம். (௯)

இ—ள்

நல்ல ஊழ் இருந்தால் எல்லாம் தாமே வரும் என்று வீணே பிதற்றி விருதாவாய்ச் சோம்பியிருப்பது பெரிய பிழையாம்; எதிரே வாழையிலையில் இட்ட சோறும் கையால் எடுத்து உண்டால் அன்றி வெய்ய பசி தீராது என்பதாம்.

பசி தீர உண்ண விழைவது மனித இயல்பு; அவன் எண்ணி உணர வேண்டியதை இது இனிது உணர்த்துகின்றது. கடமை உணர்வு மடமை இருளை நீக்கி மகிமைகளை அருளுகின்றது.

உழைப்புகளின் வழியே பிழைப்புகள் யாண்டும் நடந்து வருகின்றன. கருமபூமி என்று இந்த உலகத்திற்கு ஒரு பெயர் அமைந்துள்ளமையால் மனித வாழ்வின் நிலைமையை அது மருமமா விளக்கி நிற்கிறது. உழையாமல் உண்பவன் பிழையாமல் பிழை செய்கின்றான்; கரும தேவதைக்குப் பெரிய கடனாளியாய் வழிமுறையே அவன் பிழைபட்டு நிற்கின்றான்.

உண்ணுகின்ற மனிதன் தனது உணவுக்கு உரிய கடமையை உணர வேண்டும். சிறந்த அரசன் ஆயினும் உயர்ந்த செல்வன் ஆயினும் உழைப்பை உணர வில்லை ஆயின் பழிப்புடையராய் அவர் பாழ்பட நேர்கின்றார். பணி புரியான் பழி புரிகின்றான்.

யாதும் முயலாமல் சுகமாய் இருந்து சாப்பிடுவது அவமான வாழ்வாம். மானம் அழிய ஈனமா வாழலாகாது.

சோம்பலான பழக்கம் மனிதனைத் தீம்பனாக்கித் தேம்பச் செய்கிறது. முயற்சியை எவன் இழந்து விட்டானே அன்றே அவன் இறந்து விட்டான். ஊக்கம் உறுதி உணர்ச்சி முதலிய உயர் நிலைகள் எல்லாம் சோம்பேறியை விட்டு ஒழிந்து போகின்றன; போகவே அவன் சாக நேர்ந்த படியாய்த் தாழ்ந்து வீழ்கின்றான். உழையாத பழக்கம் மனிதனைப் பிழையாகப் பாழ்படுத்துகிறது. உழைத்து வருவது உயிர் பெற்ற பயனைத் தழைத்து வருதலால் உழைப்பாளி உயர் நிலைகளில் ஒளிர்கிறான்.

உழைத்து உயர்ந்து வாழ உடல் வந்தது.

நினைந்து நீதிநெறியே உயர மனம் வாய்ந்தது.

உணர்ந்து தெளிந்து உய்தி பெற அறிவு அமைந்தது.

அருமையாக அடைந்த இந்தக் கருவி கரணங்களை உரிமையான நெறிகளில் செலுத்துவோர் பிறவிப்பயனைப் பெற்ற பெரியராய் உயர்கின்றார்; இவ்வாறு செய்யாதார் எவ்வழியும் யாதொரு பயனும் காணுமல் அவமே இழிந்து கழிகின்றார்.

உரிமையை உணர்ந்து பழகிய அளவு பெருமைகள் விளைந்து வருகின்றன; பழகாது விடின் சிறுமைகள் தொடர்ந்து கொள்ளுகின்றன. பழகிய பழக்கததின்படியே மனிதன் வழக்கமாய் வளர்ந்து வருகிறான். ஒரு நாள் வேலை செய்ய வில்லையானல் மறுநாள் அதில் அவனுக்குப் பிரியம் வராது. நாளும் கருத்தோடு வேலை செய்து பழகினவன் ஒரு நாழிகையையும் வீண் ஆக்க மாட்டான். கரும வீரனாய் அவன் பெரு மகிமை பெறுகிறான்.

மடியன், சோம்பேறி என இடிபுண்டு நிற்பவர் யார்? இளமையிலேயே தொழிலில் பழகாமல் வளமையாய் அலைந்து திரிந்தவரே இழிந்த சோம்பேறிகளாய் உலகில் உயர்ந்து நிற்கின்றார்.

எந்தத்தொழிலும் பழகாமல் வராது; நாளும்பழகி வந்த பழக்கத்தின் அளவே கருமம் வழக்கத்துக்கு வருகிறது. தான் தழுவிய பழக்கம் மனிதனை எழுமையும் தொடர்ந்து கொள்கிறது. நல்ல பழக்கம் நலம் பல தருகிறது; கெட்ட பழக்கம் கேடுகளை விளைக்கிறது. பழக்கம் மனிதனை ஆண்டு வருதலால் இளமையிலேயே நல்லவழிகளை அவன் நன்கு பழகிக் கொள்ளவேண்டும்.

"Custom is the principal magistrate of man's life, let men by all means endeavour to obtain good customs." (Bacon)

"பழக்கம் மனித வாழ்வின் தலைமை அதிகாரி; ஆதலால் எவ்வகையிலும் நல்ல பழக்கங்களையே நாடி மனிதன் அடைந்து கொள்ள வேண்டும்" என பேக்கன் என்னும் ஆங்கில அறிஞர் பழக்கத்தின்வளமையைஇவ்வாறுசெவ்வையாக்கூறியிருக்கிறார்.

நல்ல தொடர்பு எல்லா வகையிலும் இன்பம் தருகிறது. தொழிலில் பழகி வரின் வாழ்வு விழுமிய நிலையில் விளங்கி வரும் வினையாண்மை வழியே மேன்மைகள் விளைகின்றன. ஊழ் இருந்தால் வரும் என்று உள்ளம் மடிந்திருப்பது எள்ளலான சோம்பேறி வாழ்க்கையாம். மடியன் கொடிய மதிகேடன் ஆகிறான்.

ஊழ் என்றால் என்ன? முன்பு செய்த வினையின் விளைவே ஊழ் என உருவாகியுள்ளது. பழைய வினையான அது தப்பாமல் பயன் தருதல் போல் புதிய வினையும் மனிதனுக்கு அதிசய பலன்களை அருளி வரும். அவ்வரவு எவ்வழியும் இனிமையாம்.

பண்டு செய்த பெரிய நல்வினையின் பயனாலேயே இன்று ஒருவன் அரசன் ஆய் வந்துள்ளான்; அவ்வாறு வந்தவன் எவ்வழியும் முயன்று குடிகளுக்கு நன்மை செய்து தேசத்தைப் பாதுகாத்து வரவேண்டும். அந்தக் காப்பு முறையின் நிறை அளவே அரசு மாட்சி மருவி வரும். காவல் கழியின் காவலன் இழியும்.

விதி தரும் என்று வீணே சோம்பி இராதே; மதி வலியால் முயன்று அதிசய நலங்களை அடைந்து கொள்ளுக. எவ்வளவு வசதிகள் அமைந்திருந்தாலும் மேலும் மேலும் முயற்சி செய்ய வேண்டும். இலையில் இட்ட சோற்றையும் எடுத்து உண்டால் அன்றிப் பசி தீராது; ஆகவே உலையாத முயற்சியை ஊக்கிச் செய்க. ஆற்றும் கருமம் அரிய மேன்மைகளை அருளுகின்றது

முன்புநல் வினைசெய் தவர்முயற் றின்றி
முன்னிய எலாம் உண்பர் என்னில்
இன்ப வாலரியே முதலுப கரணம் எலாம்
இனிது உடையவர் ஏனும்
வன்புறும் அடுதல் முயற்சி யில்லாமை
வயிற்றெழு பசித்தழல் அவிய
நன்பதம் ஆமோ மறைமுழுது உணர்ந்த
நற்றவக் குணப்பெருங் குன்றே. (1)

கடவுள் ஈகுவன் என்று எண்ணி நித்தியமும்
கருதுறு முயற்சி செய்யானேல்
அடலுறு செல்வம் அடைகுவ னேகொல்?
அருங்கலத் திட்ட பாலடிசில்
மிடலுடைக் கரத்தால் எடுத்துணுது எங்ஙன்
வீங்கு வெம்பசிப் பிணி ஒழிப்பன்
உடல்பவம் தனக்கு ஓராகரமாகும்
உடனணி வாட்டு மெய்த் தவத்தோய்! (2)

முன்பொரு கராவால் மொய்வலி சிதைந்து
மும்மதக் கறையடிக் கயமும்
வன்புடைப் பொன்னன் புரிகொடு மையினால்
மனமெலி பிரகலா தனனும்
அன்பினோடு ஏத்தி அழைத்தலான் அன்றே
அலைகடல் வண்ணன் வந்து ஆண்டான்
என்பராதலினால் முயற்சி செய் பவருக்கு
எய்தரும் பொருளும் ஒன்றுளதோ? (3)

(குசேலம்)

ஊழ் ஊட்டும் எனினும் மனிதன் ஓயாது முயற்சி செய்ய வேண்டும்; அவ்வாறு செய்கின்ற கரும வீரனுக்கே தெய்வம் உரிமையாய்த் துணை செய்யும் என இவை உணர்த்தியுள்ளன. கவிகளின் குறிப்பைக் கருதி உணர்ந்து கொள்ள வேண்டும்.

உள்ளம் தளராமல் முயன்று வருவது உயர்ந்த பண்பாடாய்க் கிளர்ந்து வருகிறது. அரிய செல்வங்களும் பெரிய மதிப்புகளும் அதனால் விளைந்து வருகின்றன. வேந்தனுடைய ஆற்றல் வினையாண்மையால் ஏற்றம் பெற்று வருதலால் அதனைப் போற்றி வருமளவு புகழ் ஒளிகள் பொலிந்து விளங்குகின்றன.

780. ஒன்றும் முயற்சிசெய் தொண்பொருளை ஈட்டாமல்
சென்றுபிறர் பாலிரந்து சீரழிதல்—நின்றதொரு
வாவியின்கண் நீர்பருகான் வன்கானல் மேலோடி
ஆவி அழிதல்போல் ஆம். (ம)

இ—ள்

சொந்தமாய்த் தான் முயன்று பொருளை ஈட்டாமல் பிறரி டம் போய் இரந்து பெறுவது இழிந்த பேரிழவாம்; இனிய நீர் நிறைந்த வாவியில் புகுந்து நீர் பருகாமல் கொடிய கானலை நாடி ஓடி அழிவது போல் அது நெடிய கேடாம் என்க.

சுகமும் மரியாதையும் மனிதனுக்கு மிகவும் பிரியமானவை. துக்கமும் அவமானமும் தன்பக்கம் அணுகினும் அச்சமும் அருவருப்பும் அடைய நேர்கின்றான். இன்பமுடன் கண்ணிய மாய் வாழ விரும்புகிறவன் அதற்குத் தகுதியாகத் தன்னைச் செய்து கொள்ள வேண்டும்; அவ்வாறு செய்யானாயின் அவ் வாழ்வு அவலமாயிழிந்து வெவ்விய துயர்களை அடையும்.

இந்த உலக வாழ்வு பொருளால் இனிமை யுறுகிறது. ஆகவே அதனை அடைந்து கொள்ள வேண்டியவனாய் மனிதன் அமைந்து நின்றான். உழவு வாணிகம் முதலிய தொழில்களால் பொருள்கள் உளவாகி வருதலால் அவை சீவனோபாயங்களாய் நேர்ந்தன. உயிர்கள் உண்ணுதற்கு உரிய உணவுகளைப் பயிர்கள் விளைத்தருளுதலால் மனித வாழ்வுக்கு உழவு நேரே புனிதமான தொழிலாய் இனிது பேண வந்தது. உழவு உயிர் வாழ்வாயது.

உண்ண நேர்ந்த மனிதன் எவனும் உழைக்க வேண்டும் என்பது இயற்கை நியமமாய் நின்றமையால் அந்த உழைப்பு களுள் உழவு தலைமையாய் அமைந்தது. உழைப்பை யுடையது உழவு எனக் காரணக் குறியாய் வந்திருத்தலால் அதன் சிறப் பையும் சீர்மையையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகின்றோம்.

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை. (குறள், 1031)

உலகம் உழவால் உயிர்த்து வருகிறது எனத் தேவர் இவ் வாறு உணர்த்தி யிருக்கிறார். மெய் வருந்திக் கை முயன்று உழைக்க வேண்டுமே என்று அஞ்சி உழவுத் தொழிலை விட்டு

உத்தியோகம் முதலிய வேறு வழிகளில் மாறிப் போனவரும் உணவுப் பொருளுக்கு உழுவானை நாடியே ஓடி வர வேண்டும் ஆகலால் வருத்தம் மிகுந்திருந்தாலும் உழவே தலைமையான தொழில் என நிலையான புகழோடு அது நிலவி நின்றது. உரிமையான உழைப்பு ஒழிந்தால் பெருமையாய்ப் பிழைக்க முடியாது; ஆகவே யாவரும் உழைக்க வேண்டும் என்பது உண்மை நியதியாய் வந்தது. பாடு படுவது பீடு பெறுவதாம்.

"ஒருமாடும் இல்லாமல் மைத்துனனார்
உலகம் எல்லாம் உழுதே உண்டார்;
நரைமாடோ ஒன்றிருக்க உழுதுண்ண
மாட்டாமல் நஞ்சை உண்டீர்!
இருநாழி நெல்இருக்க இரண்டுபிள்ளை
தாம்இருக்க இரந்தே உண்டீர்!
திருநாளும் ஆயிற்றே செங்கமலைப்
பதிவாழும் தியாக ரே." (காளமேகம்)

காளமேகப் புலவர் ஒருமுறை திருவாரூருக்குப் போயிருந்தார். அப்பொழுது அங்கே திருநாள் நடந்து கொண்டிருந்தது; பிச்சாடனமூர்த்தியாய்ச் சிவபெருமான் எழுந்தருளி வந்தார்; அந்தக் கோலத்தைக் கண்டதும் கவிஞர் இந்தப் பாட்டைப் பாடினார். நகைச் சுவை சுரந்து வந்துள்ள இது உழைப்பின் பெருமையை உலகத்திற்கு நன்கு உணர்த்தி யுள்ளது. "ஐயா! தியாகராசரே! உமது மைத்துனர் நாராயணனுக்கு ஒரு மாடு கூட இல்லை; தம்முடைய கையாலேயே உழைத்துப் பூமியை உழுது சுக சீவியாய் வாழுகின்றார்; உமக்கு நல்ல ஒரு வெள்ளை மாடு இருக்கிறது; துடுக்கான பிள்ளைகள் இருவர் இருக்கின்றனர்; விதையைச் சேகரித்துக் கொடுக்க இதமான மனைவி இருக்கிறாள்; இருந்தும் நீர் உழவுத் தொழிலைச் செய்யாமையால் உணவு கிடையாமல் போயது; போகவே சாகலாம் என்று வேகமா நஞ்சை உண்டீர்; இறப்பு வரவில்லை; ஆகவே இரந்து திரிந்தீர்; உலகம் உமக்குத் திருநாளும் கொண்டாடுகிறது" என அன்புரிமையோடு கவி இறைவனைப் புகழ்ந்து கொண்டாடியிருக்கும் அழகை இதில் உவந்து கண்டு உள்ளம் வியந்து நிற்கிறோம்.

கடவுள் ஆனாலும் முயற்சி செய்ய வேண்டும்; சோம்பி

இருக்கக் கூடாது என்னும் தத்துவத்தை இது உய்த்துணரச் செய்துள்ளது. தொழில் செய்பவன் ஒளி செய்கின்றான்.

உலக பரிபாலனுன அரசன் முயற்சியை உயர்ச்சியாய்ப் போற்றி வரின் குடிசனங்கள் உள்ளக்கிளர்ச்சியோடு ஊக்கி உழைத்து வருவர்; பல்வகைச் செல்வங்களும் அங்கே தழைத்து விளங்கும். சீரிய வளங்கள் செங்கோலால் ஓங்கி வருகின்றன:

ஆறுபாய் அரவம்; மள்ளர் ஆலைபாய் அமலை; ஆலைச்
சாறுபாய் ஓசை; வேலைச் சங்குவாய் பொங்கும் ஓதை;
ஏறுபாய் தமரம்; நீரில் எருமைபாய் துழனி; இன்ன
மாறுமா றாகித் தம்மில் மயங்குமா மருத வேலி. (1)

படையுழ எழுந்த பொன்னும் பணிலங்கள் உயிர்த்த முத்தும்
இடறிய பரம்பில் காந்தும இனமணித் தொகையும நெல்லும்
மிடைபசுங் கதிரும் மீனும் மென்தழைக் கரும்பும் வண்டும
கடைசியர் முகமும் போதும் கண்மலர்ந்து ஒளிரு மாதோ. (2)

நீரிடை உறங்கும் சங்கம் நிழலிடை உறங்கும் மேதி
தாரிடை உறங்கும் வண்டு தாமரை உறங்கும் செய்யாள்
தூரிடை உறங்கும் ஆமை துறையிடை உறங்கும் இப்பி
போரிடை உறங்கும் அன்னம் பொழிலிடை உறங்கும் தோகை.

ஆலைவாய்க் கரும்பின் தேனும், அரிதலைப் பாளைத் தேனும்,
சோலைவாய்க் கனியின் தேனும் தொடையிழி இருலின தேனும்
மாலைவாய் உகுத்த தேனும வரமபிகந்து ஓடி வங்க
வேலைவாய் மடுப்ப உண்டு மீன்எலாம் களிக்கும் மாதோ. (4)
(இராமாயணம்)

தசரதன் ஆட்சிக் காலத்தில் அவன் நாடு செழித்திருந்த நிலைகளை இப் பாடல்கள் நயமாக் காட்டியுள்ளன. கவிகளின் சுவைகளையும் காட்சி நலங்களையும் கருதி உணர வேண்டும்.

மாந்தர் உவந்து முயன்று வருவதெல்லாம் வேந்தன் விழைந்து புரந்து வரும் நீர்மையில் சீர்மையாய் விளைந்து நிற்கின்றன. மானமா வாழவகுத்தருள்வது மன்னன் கடமையாம்.

தானாக உழைத்து உண்டு வாழ்வதில் மதிப்பும் இன்பமும் செழித்து வருகின்றன; உழையாமல் பிறருடைய ஆதரவை எதிர்பார்த்தோ, யாசித்தோ வாழ்வது மிகவும் ஈன வாழ்வாம்.

Serenity, health, and affluence attend the desire of rising by labour; misery, repentance, and disrespect, that of succeeding by extorted benevolence. [Goldsmith]

"தன் உழைப்பால் உயர விரும்புகிறவனிடம் அமைதி சுகம் செல்வம் முதலிய நலங்கள் இயல்பாய் வருகின்றன; பிறருடைய உதவியை நாடி அபகரித்து வாழ்பவன்பால் துன்பமும் பரிதாபமும் அவமானங்களும் உளவாகின்றன" என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது. அயலை நாடுவது அழிவை நாடுவதாம்.

தானாக முயன்று வாழ்வதில் மானம் மரியாதைகள் நிறைந்து மகிமைச் சுகங்கள் பெருகி நிற்கின்றன; இவ்வாறு முயலாமல் அயலாரை எதிர் பார்த்து யாசித்து வாழ்வதில் ஈன இழிவுகளே யாண்டும் நீண்டு இடர்கள் மூண்டுள்ளன.

தன் முயற்சியால் வருவது இனிய ஊற்று நீர் போல் இன்பம் தருகிறது; பிறர் பால் இரந்து கொள்வது இழிந்த சாக்கடை நீர்போல் துயரமே தரும் ஆதலால் அது எவ்வழியும் இகழ்ந்து வெறுக்கத் தக்கது. ஈனம் ஒழியின் மானம் விளையும்.

அறிவோடு முயன்று வருபவன் வாவி நீர் பருகுபவன் போல் ஆவி இன்புற்று வருகிறான்; அயலே யாசிக்கப் போனவன் கானல் நீரை நாடி அலைந்த பேதை போல் புலையா யிழிந்து தொலையாத துயரங்களை நிலையாக அடைந்து உழல்கின்றான்.

பாலைஎன்று உலர்ந்த செந்நிலங் கானல்
பரப்பினைப் புனல் என ஓடிச்
சாலவும் இளைத்துத் தவித்துழை யினங்கள்
தனித்தனி மறுகிய மறுக்கம்
மாலுளர்ந்து இருண்ட புன்மனச் சிறியோர்
மருங்கினில் இரந்திரந்து இடைந்து
காலறத் தேய்ந்த பலகலை மேலோர்
கருத்தினில் வருத்தம் ஒத்தனவே.

(சீறாப்புராணம், சுரத்தில் 6)

கானலைப் புனல் என ஓடி இளைத்த மான் இனங்கள் போல் கலை நலமுடைய மேலோர் புலையான புல்லரிடம் பொருளை நாடி அலைந்து வருந்தினர் என இது வரைந்து காட்டியுள்ளது.

ஒருவன் அரிய பல கலைகளைப் பயின்றிருந்தாலும் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்யவில்லையானால் அவன் வாழ்வு இழிவே அடையும் என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். கலையறிவு தலைமையானது; புனிதமான மகிமை யுடையது. புலமையை மதித்து மன்னர் முன்னாள் போற்றி வந்தனர்; அரச குலம் அழியவே அந்நிலைமை மாறியது. காலநிலையைஉணராமல் பழையபரம்பரை வாசனையால் புலவர் பலர் செல்வரிடம் சென்று அல்லல் அடைய நேர்ந்தனர். புலமையை அறிவின்பத்துக்கு உரிமையா வைத்துக் கொண்டு உலக நிலையில் கூல வாணிகன் சாத்தனார் போல் ஒரு தொழிலைத் தழுவி வாழ்க்கையை நடத்த வேண்டும். அவ்வாறின்றிப் புலமையை நேரே சீவனோபாயமாக் கொள்ள நேரின் அவ்வாழ்வு அல்லல் அடைய நேரும். வால்டேர் [Voltaire] என்பவர் சிறந்த கலைஞர்; பிரஞ்சு தேசத்து மேதை; பேரறிஞர் என்று மேல் நாடு முழுவதும் புகழ்மிகப் பெற்றவர். புலமையை ஒருவன் தொழிலாகக் கொண்டால் அவனுடைய வாழ்க்கை பரிதாபமாம் என்று பரிந்து வரைந்துள்ளார். அனுபவநிலையில் அறிந்ததை மனித சமுதாயம் அறிய அவர் உரைத்திருப்பது காண்க.

"Literature is the profession of the man who wishes to be useless to society and a burden to his relatives, and to die of hunger." [Voltaire]

"சமுதாயத்துக்கு உபயோகம் இல்லாதவனாய்த் தன் உறவினர்க்குப் பாரமாய்ப் பட்டினி கிடந்து சாகத் துணிந்துள்ளவன் எவனோ அவனே புலமையைச் சீவனோபாயமாக் கொள்ளுவான்" என அப் புலவர் இவ்வாறு குறித்திருக்கிறார்.

உயர்ந்த கல்வியறிவை வயிற்றுப் பிழைப்புக்கு நேரே பயன்படுத்த நேர்ந்த பொழுது அது மாறாய்ச் சீரழிய நேர்கிறது. சீரிய கூரிய அறிவை ஓர் அணு அளவு உபயோகித்து வேறு ஒரு தொழிலைச்செய்து கொண்டால் வாழ்க்கை சிறந்து நடந்துவரும்.

நல்ல கல்வியறிவுக்குப் பயன் அல்லல் யாதும் நேராமல் மானம் மரியாதைகளுடன் வாழ்வதேயாம். வாழ்க்கைக்கு ஒளி தருவது தொழிலே. தன் இயல்புக்குத் தக்கபடி ஒரு கருமத்தைக் கைக்கொண்டு உரிமையாய் வாழ்ந்துவரின் அது தருமமாய் வருகிறது. பிறரை எதிர் பாராமல் சுயமாய் முயன்று வாழ்

பவன் உலகில் உயர்வான மகிமையை அடைந்துகொள்ளுகிறான்.

யாரிடமும் எதையும் வாங்காதே; நீயாக முயன்று வாழ்; அந்த வாழ்வு அதிசய இன்பம் உடையது எனச் சீன தேசத்து அறிஞன் ஒருவன் தன் மகனுக்குப் போதித்திருக்கிறான். மானம் மரியாதைகளுடன் வாழவந்தபோதனைகள் அயலே வருகின்றன.

" A life of independence is a life of virtue. the man who can thank himself alone for the happiness he enjoys is truly blest." [Hoam]

"பிறரை எதிர் பாராமல் சுயாதீனமாய் வாழ்வது தரும வாழ்வாம்; தான் அனுபவிக்கிற இன்பங்களுக்குத் தானே முயன்று தன்னையே நம்பியிருக்கிற மனிதன் பெரிய பாக்கியவான்" என்னும் இந்த அரிய வாக்கியங்கள் ஈண்டு உரிமையோடு ஊன்றி உணரவுரியன. விழுமியவாழ்வு விழிதெரியவந்தது.

உன்னுடைய வாழ்வு புனிதமாய் இனிது நடக்க வேண்டுமானால் நீ அன்னியரை எதிர்பாராதே; நீயே முயன்று வாழ்; நெறிமுறையான அது தூய பேரின்ப வாழ்வாம்.

தனது குடிசனங்கள் கரும வீரர்களாய் உயர்ந்து புனித நிலையில் இனிது வாழ்ந்து வரும்படி வேந்தன் ஓர்ந்து செய்ய வேண்டும். அவ்வாறு செய்வதே செவ்விய ஆட்சியாம்.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வினை ஆற்றல் வேந்தனுக்கு ஏற்றமாம்.
முயன்றபொழுதுதான் அவன் உயர்ந்து விளங்குவான்.
கருத்தோடு முயல்பவன் விருத்தி அடைகிறான்.
எண்ணிய யாவும் இனிது எய்துகிறான்.
ஊன்றிய முயற்சி ஆன்ற உயர்ச்சியாம்.
சீரும் திருவும் சேர வருகின்றன.
காலம் கருதிச் செய்பவன் ஞாலம் பெறுகிறான்.
பொருளும் புகழும் அவனிடம் உரிமையா யுறுகின்றன.
ஆள்வினையாளன் ஊழ்வினையை நினையான்.
உரிய கருமமே பெரிய மகிமையாம்.

எ அ-வது ஆற்றல் முற்றிற்று.

# எழுபத்தொன்பதாம் அதிகாரம்.

## ஆட்சி

அஃதாவது நாட்டை ஆளும் முறை. அரசனுடைய சிறந்த ஆற்றலுக்கு நிறைந்த பயனாய் ஆட்சித்திறம் அமைந்துள்ளது; அவ்வுண்மையை உணர்ந்து கொள்ள அதன்பின் இது வைக்கப் பட்டது. அறிவு ஆற்றல்களோடு தொடர்ந்து ஆட்சி வந்தது.

781 ஆட்சி எனும்சொல் அரசனுயர் ஆளுகையைக்
காட்சியுறக் காட்டிக் கதித்துளதால்—மாட்சிபல
கண்டு தெளியக் கனிந்திருக்கும் அம்மொழியைக்
கொண்டு தெளிக குணம். (க)

இ-ள்

தேசத்தை ஆளுகின்ற அரசனது வினையாண்மை ஆட்சி என அமைந்தது; அரிய பல பொருள்களை அம்மொழி மருவியுளது; அதன் அருமையை உணர்ந்து பெருமையைத் தெளிந்து உரிமையை உவந்து செய்து கொள்ளுக என்பதாம்.

மனிதனுடைய எண்ணங்கள் வாய்மொழிகளால் வெளி வருகின்றன. வாழ்க்கையில் மருவியுள்ள பொருள்கள் எல்லா வற்றிற்கும் பெயர்கள் அமைந்திருக்கின்றன. யாவும் காரணம் தோய்ந்தே வந்துள்ளன. கூர்ந்து ஓர்ந்து உணரும் அறிவு மனித னிடம் இனிது அமைந்திருத்தலால் அவன் தேர்ந்து சொன்ன மொழிகள் வழி வழியே தெளிவாய் வழங்கி வருகின்றன.

உலகத்தைப் பாதுகாத்துக் குடிசனங்களை ஆதரித்து முறை புரிந்து வரும் இறைமை அரசனுக்கு உரிமையாய் அமைந்திருக் கிறது. அவனது வினையாண்மை ஆட்சி என்னும் சொல்லால் மாட்சியாக் குறிக்கப்பட்டுள்ளது. ஆளும் தன்மை ஆட்சி என நேர்ந்தது. நேரவே ஆளப்படும் உலகம் அறிய வந்தது. யாரும் ஆளாத பேரின்ப நிலையம் ஆட்சியில் உலகம் என நின்றது.

" வரம்பில் இன்பத்து ஆட்சியில் உலகம். "

(சீவகசிந்தாமணி, 381)

பேரின்ப வீட்டைக் குறித்து வந்துள்ள இது இங்கே கூர்ந்து

சிந்திக்கத்தக்கது. ஆளுகின்ற நிலைமையும் ஆளாத தலைமையும் நேரே தெரிய வந்தன. அரிய செயல் பெரிய பெயர் பெற்றது.

பொதுமக்கள் செய்துவரும் காரியங்கள் கருமம் தொழில் வினை என வந்துள்ளன. அரசன் ஆற்றுவது ஆட்சி என அமைந்தது. ஆண்மைக்குறிப்பு மேன்மையைத் துலக்கிநின்றது.

தலைமையாளனாய் நின்று நாட்டை நன்கு பரிபாலித்து மனித சமுதாயத்துக்கு நன்மை புரிய உரிய தன்மை அரசனுக்குச் செம்மையாய் அமைந்திருக்கிறது; அந்த உண்மையை ஆட்சி என்னும் பேர் மாட்சிமையாத் துலக்கி நிற்கிறது.

அரசுக்கும் ஆட்சிக்கும் உள்ள உரிமை கண்ணுக்கும் காட்சிக்கும் உள்ள உறவு போல் மருவியுள்ளது. காட்சி புரியும் அளவே கண் மாட்சி அடைந்து வருகிறது. காட்சி குன்றினால் கண் மாட்சி இழந்து போம்; அதுபோல் ஆட்சி குன்றினால் அரசன் பெருமை யிழந்து சிறுமை அடைய நேர்வான். பார்வை அளவே தீர்வை என்பது பழமொழி. தன் நாட்டை அரசன் நாளும் நாடி நோக்கி முறை புரிந்துவரின் குடிகள் எவ்வழியும் தொழில் புரிந்து செவ்வையாய் வாழ்ந்து வருவர்; தேசமும் வளங்கள் பல மலிந்து செழித்து விளங்கும். அந்த நாட்டின் செழிப்பு அரசனுக்குச் சிறந்த ஊட்டங்களைத் தந்து நிதியறையை விதி முறையே நிறைத்து வரும் ஆதலால் திறையோடு உலகு இறைஞ்சும் சீர்த்தியாளனாய் அவன் நிலை உயர்ந்து சிறந்து திகழ்வான். காவல் நீதி தேவ நியமமாய் நிலவியுள்ளது.

தன் கருமத்தைச் செம்மையாய்ச் செய்து வருகிற அரசன் செங்கோலனாய்ச் சிறந்து வாழ்கிறான். கோல் மாறிய பொழுது பால்மாறிய பிள்ளைபோல் அரசு பரிதாபமாய் இழிவுறுகின்றது.

வான் பொழியாது பொய்ப்பின் வையம் வெய்ய துயர் உறும்; கோன் தொழில் செய்யாது எய்ப்பின் நாடு பீடையாய் மாறிப் பிழைபாடுகள் மிகுந்து அழிகேடுகள் அடைந்து படும்.

“கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்தியல் இழந்த வியனிலம் போல
வேனில் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலம் திருகத் தன்மையிற் குன்றி

முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்."

(சிலப்பதிகாரம், காடுகாண்காதை)

தன் ஆட்சியைக் கவனியாமல் அரசன் நிலைமாறி நின்றால் அந்த நாடு கொடிய பாலைவனம் போல் நெடிய துயரங்களை அடையும் என இளங்கோவடிகள் இவ்வாறு குறித்திருக்கிறார். அரச குலத் தோன்றலான இப்புலவர் பெருமான் ஆட்சிமுறைகளைக் காவியத்தில் நன்கு காட்சிப்படுத்தி நலம் புரிந்திருக்கிறார்.

"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாம்" (இளங்கோ)

தனது அரசு முறையில் சிறிது பிழை செய்தாலும் அந்த அரசனைத் தருமதேவதை கொல்லும் என்று இங்ஙனம் சொல்லியிருப்பதைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும். அரசு ஆளப்பிறந்தவன் தன் கருமத்தைக் கருத்தோடு செய்துவரும் அளவே தருமம் அவனைக் காத்து வருகிறது; அவ்வாறு செய்யாமல் பிழை செய்ய நேரின் அவனை விட்டுத் தருமம் விலகி விடுகிறது; விடவே அவன் அழிதுயரங்களை நெடிது அடைய நேர்கின்றான்.

மனித சமுதாயம் இனிது வாழச் செய்வதே மன்னனது ஆட்சிக்கு மாட்சியாம்; யாதொரு அல்லலும் இல்லாமல் யாவரும் சுகமாய் எந்த நாட்டில் வாழ்ந்து வருகின்றனரோ அந்த நாடே நீதி முறையான ஆட்சியை யுடையதாம். தன் குடிசனங்கள் மன அமைதியுடன் சமமாய் வாழ ஆள்பவன் நீதி மன்னனாய் நிலவி நிற்கின்றான். நீதி முறை என்பது ஆதி பகவான் முறைபோல் துறைதோறும் நிறைபுரிந்துநெறிசெய்தருளுகிறது.

"Justice is effective coordination." (Plato)

"நீதிமுறை யாவருக்கும் சமநிலையில் ஆதரவு செய்கிறது" என்னும் இது இங்கே அறியத்தக்கது. தன் கருமம் தருமமாய்த் தழைத்துவர ஆட்சி புரிபவன் இருமையும் பெருமை பெறுகிறான்.

தான்புரி கருமங்கள் தரும மாய்வர
வான்புரி மதியுடன் வரைந்து செய்வதே
கோன்புரி முறை; அது கோடி நின்றதேல்
கான்புரி வேடனாய்க் கழிய நேர்வனே.

இதனைக் கருதி உணர்ந்து உறுதி காண வேண்டும்.

782 தேசமக்கள் எவ்வழியும் சீரும் சிறப்புமாய்
வாசம் புரிய வழிவகுத்து—நீசம்
அணுவும் அணுகாமல் ஆளும் அரசே
மனுவின் மனுவாம் மதி. (2)

இ-ள்

தன்நாட்டில் உள்ள மக்கள் எவ்வழியும் சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வருதற்கு உரிய வழிகளைத் தகுதியாக ஆய்ந்து வகுத்து அல்லல் யாதும் அணுகாமல் பாதுகாத்து வரும் அரசன் ஆதி மனுவினும் நீதி மனுவாய் நிலவி நிறை புகழ் பெறுவன் என்க.

தாம் சுகமாகவும் உயர்வாகவும் வாழவேண்டும் என்றே யாவரும் இயல்பாய் யாண்டும் முயன்று வருகின்றனர். இவர்கள் பலவகை நிலைகளில் மருவி வந்திருத்தலால் ஆவலும் தேவைகளும் அதிகரித்து நிற்கின்றன. அதனால் மாறுபாடான போராட்டங்கள் மீறி எழுகின்றன. மெலியரை வலியரும், வறியரைச் செல்வரும், அறிவிலிகளை அறிவாளரும் அடக்கி ஆள நேர்கின்றார். தன்னல விழைவு மனிதனிடம் மிகுதியாய் மன்னி இருத்தலால் வாழ்க்கைகளில் இன்னல்கள் பின்னி நிகழுகின்றன.

இன்னவாறான இடையூறுகளைத் தடை செய்து நீக்கிக் குடிசனங்கள் நெறிமுறையே ஒழுகி இனிது வாழும்படி செய்வது அரசனுடைய கடமையாய் அமைந்தது. கடமையைக் கருதிச் செய்பவன் தனது உடைமைக்கு உரியவன் ஆகின்றான்.

ஆளப்பிறந்தவன் வாழப்பிறந்தவர் யாவருக்கும் வாழ்க்கையை வளம்படுத்தி நிலம் திருத்தி நீதி புரிந்து வர வேண்டும். அவ்வாறு வந்தபோதுதான் அவனுடைய பிறப்பு இருப்பு அறிவு ஆற்றல் ஆட்சி மாட்சிமை அடைந்து மகிமைகள் பெறுகின்றன.

தனக்கு உரிமையாய் அமைந்த பரிபாலன முறையைச் சரியாகச் செய்துவரின் அந்த அரசன் அரிய பல மேன்மைகளை எளிதே அடைந்து கொள்ளுகிறான். அவ்வாறு கருமம் புரியாமல் நின்றால் தருமம் அவனை விலகி விடும் ஆதலால் சிறுமைகள் சேர நேர்கின்றன. உரிமையை உணராதவன் ஊனம் உறுகின்றான்.

தேசமக்கள் சிறந்து வாழ்வதும் இழிந்து தாழ்வதும் அரசனுடைய கருமக் காட்சியின் சிறப்பாலும் மறப்பாலும் வாய்ந்து

வருகின்றன. இத்தகைய அரிய பொறுப்பு தன்மேல் அமைந்திருத்தலால் மன்னன் யாண்டும் அயராமல் மூண்டு வினைசெய்ய வேண்டியது நீண்ட விதி நியமமாய் நின்றது. காவல் தெய்வமான திருமால் உறங்கும்போதும் உலக உயிர்களின் நிலைகளை நினைந்து உறங்குவார். அதனால் அவரது உறக்கம் அறிதுயில் என நின்றது. அத் துயில் அரசனுக்கும் உரிமையாம்

அரிதுயில் அறிதுயில் ஆன வாறுபோல்
புரிதிநீ புரிதுயில் புவனம் யாவையும்
பரிதிவா னவன்ஒளி பரந்த தென்னவே
பெரிதுநேர் பேணுக பெருமை காணுக.

அரசே! நீ உறங்கும் போதும் காப்புக் கடவுள் போல் உலக மக்களுடைய சேமத்தைப் பேணி வருக என்று ஒரு வேந்தனை நோக்கிப் போதித்துள்ள இது ஈண்டு ஊன்றி உணரவுரியது.

தனக்குப் பிறப்புரிமையாய் அமைந்த ஆட்சிப் பொறுப்பை உணர்ந்து நாட்டைப் பாதுகாத்து மக்களுக்கு நன்மை செய்து வரின் அவன் நீதி மன்னனாய் நிலவி நெடிய புகழ்களை அடைகிறான். உரிய கருமம் அரிய பெருமைகளை அருளுகின்றது.

" Justice is the having and doing what is one's own. " (Plato)

"ஒருவனுடைய சொந்தமான கடமையைச் செய்து உடைமையை அனுபவிப்பதே நீதி நெறியாம்" எனப் பிளாட்டோ இவ்வாறு கூறியிருக்கிறார். மன்னன் ஆட்சி மன்னுயிர்க்கெல்லாம் இன்னுயிர்த் துணையாயிருத்தலால் அவன் என்ன வகையிலும் பின்னம் உறாமல் பேணிவருவது காணியாய் வந்தது.

பெரும்பூண் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்
கருங்கழல் வெண்குடையான் காவல்----விரும்பான்
ஒருநாள் மடியின் உலகின்மேல் நில்லா
திருநால் வகையார் இயல்பு. (வெண்பாமாலை)

அரசன் காவல் ஒருநாள் மடியின் உலகம் பெருநோய் அடையும் என இது குறித்திருக்கிறது. குறிப்பைக் கூர்ந்து சிந்திப்பவர் அரசனது பொறுப்பையும் சிறப்பையும் ஓர்ந்து உணர்ந்து ஆட்சி நிலையை நன்கு தேர்ந்து கொள்ளுவர்.

" அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது."
(சிலப்பதிகாரம், 28)

மாதர் கற்பு மன்னர் முறையால் மன்னியுள்ளது என்னும் இது உன்னி யுணர வுரியது. ஆண்பாலும் பெண்பாலும் மாண்பாய் ஒழுகுவது விழுமிய ஆட்சியின் மாட்சியால் விளைவதாம்.

மனித சமுதாயம் புனித நிலையில் இனிது வாழ வேண்டுமானால் நீதிமுறை தழுவி அரசன் நெறியே ஆள வேண்டும். மாந்தர் மகிழ்ந்து வாழ்ந்து வரச்செய்யின் அவ்வேந்தன் மனுவின் மனுவாய் உயர்ந்து வானும் வியந்து புகழ விளங்கி மகிழ்வான்.

---

783 மனமொழி மெய் தீமை மருவாமல் பேணி
இனனும் உயிர்கட் கிதமாய்த்—தனையறிந்து
வாழ்வானே ஆனாலிம் மண்ணும் உயர் விண்ணும்
ஆள்வானே யாவன் அவன். (ந)

இ-ள்

உள்ளம் உரை செயல்களில் யாதொரு தீதும் சேராமல் உயிர்களுக்கு இதம் புரிந்து உண்மை உணர்வோடு வாழுகின்ற அரசன் வையமும் வானமும் ஒருங்கே ஆளும் அதிபதியாய் உயர்ந்து யாண்டும் துதிபெற்று விளங்குவான் என்க.

பலவகை நிலைகளில் பிரிந்து பரந்துள்ள மனித சமுதாயத்தை ஆள நேர்ந்த அரசன் புனித நிலையில் உயர்ந்திருக்க வேண்டும். தலைமை அதிபதி தகுதியாய் அமைந்த போதுதான் மக்கள் தக்க வழிகளில் ஒழுகி மிக்க நலன்களை அடைய நேர்வர். குடிகள் பெருந்தகவுடன் பொருந்திச் சிறந்து வாழ்ந்து வருவது கோமகன் திருந்தி வாழ்வதால் விளைந்து வருகிறது.

சேர்ந்த இனத்தின் படியே சீவர்கள் நேர்ந்து வருதலால் அரசனைச் சார்ந்த குடிகள் அவனுடைய இயல்பினை ஏய்ந்து இயங்குகின்றனர். மனம் தூயனாய் மன்னன் மாநிலம் காத்துவரின் மாந்தர் இனம் தூயராய் இனிது வாழ்கின்றனர். அறிவு சீலங்கள் நிறைந்த பெரியோர்களை உறவுரிமையாத் தழுவி அரசன் ஆட்சி புரிந்துவரின் அது விழுமிய மாட்சியாய் விளங்கி யாண்டும் வியன் பயன்களை விளைத்து எவ்வழியும் சிறந்து வரும்.

பெரியார்சொற் பேணிப் பிறழாது நின்று
பரியா அடியார்ப் பறியான்----கரியார் சொல்
தேருன் இயையான் தெளிந்தடிசில் ஈத்துண்பான்
மாருன்மண் ஆளுமா மற்று. (ஏலாதி)

அரசன் இன்னவாறு இனியனாய் வாழ வேண்டும் எனக் கணிமேதையார் இங்ஙனம் குறித்திருக்கிருர். உள்ளம் புனிதமுடையராய்ச் சீவதயையோடு உயர்ந்திருப்பவர் பெரியர் ஆதலால் அவரை மருவி ஒழுகிவரின் அரசனுக்கு அது மகிமை தருவதாம். செல்வம் அதிகாரம் முதலிய செருக்குகள் அரசனைச் சிறுமைப் படுத்தும் ஆதலால் அவ்வாறு படாதபடி பெரியோரைப் பேணி ஒழுகுவது அவனுக்குப்பெரிய பேருய் அமைந்தது.

குணநீர்மைகளால் உயர்ந்த வேந்தனை மாந்தர் மனம் உருகி மகிழ்ந்து தொழுகின்ருர். இனிது பாதுகாத்து இதம் புரிந்து வருகிற அளவே வேந்தன் தரும நீதிமானாய்ப் பெருமை பெற்று வருகிருன். செயல் இனியதாகவே உயர்வுகள் உளவாகின்றன.

தான் மணிமுடி சூடியது குடிகள் மனம் மகிழ்ந்து வாழ; செங்கோல் ஏந்தியது எங்கும் செவ்விய நீதி புரிய; அரியணையில் அமர்ந்தது அரியேறுபோல் வீரகம்பீரமாய் யாவரையும் அடக்கி ஆள; இத்தகைய நிலைகளை உய்த்துணர்ந்து ஒழுகி வருபவன் உத்தம அரசனாய் ஒளி மிகுந்து நிற்கின்ருன். இனிய குண நீர்மைகளால் மன்னன் அரியபுகழ்களை உரிமையா அடைகிருன்.

“ மன்னுயிர் அனைத்தும் தன்னுயிர் என்ன
மகிழ்வொடு தாங்கி யாரேனும்
இன்னலுற்று அயர்ந்தோம் எனக்கலுழ்ந்திடின் தன்
இருவிழி நீரினை உகுப்பான்;
அன்னவெந் துயரை நீக்குமுன் தான் ஒன்று
அயின்றிடான் துயின்றிடான் எவரும்
நன்னகர் எங்கும் உளன்எனப் பகர
நாடொறும் இயங்குவோன் கோனே. (1)

தான்இனி தியற்றும் மனுநெறிப் படிமுன்
தானடந்து அறவழி காட்டி
ஞானநற் குணத்தின் மேன்மையால் எவர்க்கும்
நாயகன் தான்எனத் தெரித்துத்

தானமும் தயையும் மெய்மையும் தவமும்
தற்பரன் வணக்கமும் பொறையும்
மானமும் மிகுத்து நரர்எலாம் செழிக்க
மகியர சளிப்பவன் மன்னே. (2)

தன்புகழ் கருதி மருவல ரோடும்
சமர்புரிந்து உயிர்களை மாய்த்துத்
துன்பமே செய்ய இயைந்திடான்; முற்போர்
தொடுத்திடான்; தன்னுயிர் அனைய
மன்பதைக்கு இடுக்கண் யாவரே செயினும்
வாளமர் இயற்றி நீக்கிடுவான்;
இன்பதுன்பங்கள் தனக்கும் மற்றவர்க்கும்
ஏகம் என்று எண்ணுவோன் வேந்தே." (நீதிநூல்)

உலகை ஆள நேர்ந்த உண்மையான வேந்தன் எவ்வாறு இருப்பன்? அவனுடைய அறிவும் குணமும் செயல்களும் எப்படி அமைந்து எவ்வழியில் ஒழுகி வரும்? என்பதைத் தெளிவாக இவை விளக்கியுள்ளன. கவிகளில் கனிந்துள்ள பொருள்களையும் குண நலங்களையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

இன்னவாறான இனிய தன்மைகள் நிறைந்தவனே மன்னன் என்றதனால் இங்ஙனம் அமையாதவன் அரசன் ஆகான் என்பது தெரிய நின்றது. உரிய பண்புகள் குறைந்த அளவு அரிய மேன்மைகள் மறைந்து போகின்றன. சிறுமைகள் சேர்கின்றன.

உயர்ந்த தலைமையை அடைந்து கொண்டவன் தனது நிலைமையை உணர்ந்து கடமையைச் செய்துவரின் அது கரும நியதியாய்ப் பெருமை தருகிறது; தருமமும் அவனிடம் பெருகி வருகிறது. நீதி முறையான பரிபாலனம் அரசனுக்கு நெடிய கீர்த்தியை அருளுதலால் அதனை எவ்வழியும் வழுவாமல் நிலையாக ஆற்றி வருவதை அவன் உரிமையோடு போற்றி வருகிறான்.

"The superior man places equity and justice above all else." (Confucius)

"தலைமையான கோமகன் தரும நீதிகளை எவற்றினும் மேலாக மதித்து யாண்டும் தளராமல் நடத்துகிறான்" என்னும் இது இங்கே அறிய வுரியது. சீன தேசத்துப் பெரியார் கூறியுள்ள இது அரச மரபுக்கு ஞான போதமா அமைந்திருக்கிறது

தருமம் தழுவி அரசன் கருமம் செய்தருளின் அவனது ஆட்சி என்றும் நிலைத்து மேலான மாட்சிகளை விளைத்து வரும்; அந்த விழுமிய வரவை வளமா வளர்த்து நலமாய் வருக.

---

784 குடியாட்சி யெல்லாம் குவிந்து தனது
முடியாட்சி யுள்ளே முடியப்—படியாட்சி
ஆற்றி வருகின்ற அவ்வரசை எவ்வரசும்
போற்றி வருமே புகழ்ந்து. (௪)

இ-ள்

உலகிலுள்ள பலவகை அரசுகளும் வியந்து மகிழ்ந்து பணிந்து வரும்படி தன் ஆட்சியை நடத்துகிற அரசன் அரிய பல மாட்சிகளை அடைவான்; அவனை யாவரும் புகழ்ந்து போற்றுவர்: தேவரும் உவந்து கொள்வர் என்க.

ஒருவரோடு ஒருவர் உசாவி அறிந்து உதவி புரிந்து கூடி வாழும் இயல்பு மனித இனத்தில் நீடி வந்துள்ளது. வீடு நிலம் மாடு மனை முதலிய பலவகை வசதிகளை வரைந்து கொண்டு மாந்தர் யாண்டும் வாழ்ந்து வருவதை ஓர்ந்து வருகிறோம். சுக சீவிகளாய் வாழவே யாவரும் ஆவலோடு முயன்று வருகின்றனர். மக்கள் வாழ்வு பக்கம் சிதையாமல் தக்க வகையில் நடந்து வரத் தகுதியான துணைவனாய்நேர்ந்தவனே வேந்தன் என விளங்கி நிற்கின்றான். அவனது நிலை வியனான பயனுடையது.

உடலுக்குக் கை கால் முதலிய உறுப்புகள் அமைந்திருத்தல் போல் உலகிற்கும் அங்கங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றால் அது நன்கு இயங்கி வருகிறது. தேகத்துக்குத் தலைபோல் தேசத்துக்கு அரசன் அமைந்திருத்தலால் அவனுக்குத் தலைவன் என்று ஒரு பெயரும் வந்தது. அப்பெயர் உயர்வு குறித்துளது.

தரை எனும் உடற்கு ஒரு தலைவனே தலை;
நரர் பல உறுப்புகள் நலங்கொள் மெய்யது
சிரமுறும் பொறிவழிச் செல்லும் தன்மை போல்
உரவரசனுக்கு அமைந்து ஒழுகும் வையமே. (1)

கோ அரிய சீவன் குடிகள் உடல் ஆவார்
சீவன் சும்மா இருக்கத் தேகம் உழைத்து ஓம்புதல் போல்
பூவலய மீதினில் தம் பூட்சிகளினால் உழைத்துக்
காவலனைக் காக்கக் கடனும் குடிகளுக்கே. (நீதிநூல்)

அரசனுக்கும் குடிகளுக்கும் இனிது அமைந்துள்ள உறவுரிமை களையும் தொடர்புகளையும் இவை உணர்த்தியுள்ளன. உருவக உரைகளும் உவமைகளின் குறிப்புகளும் ஊன்றிஉணரத் தக்கன.

சேர்ந்த அங்கங்களால் தேகம் இயங்குதல் போல் நேர்ந்த அரசு முறையால் தேசம் இயங்கி வருகிறது. கால்கள் நடக்கின்றன; கைகள் வேலை செய்கின்றன; கண்கள் பார்க்கின்றன; காதுகள் கேட்கின்றன; மனமும் அறிவும் நினைவு சிந்தனைகளால் நெறியே செலுத்துகின்றன; இவை யாவும் இனிது இயங்கிவரச் சீவன் தனியே தலைமையில் நின்றுள்ளது. இந்த நிலைமையில் அரசனும் நிலவியுள்ளான். உழவு வாணிகம் முதலிய தொழில்களைச் செய்து குடிசனங்கள் உலகை வளம் படுத்தி வருகின்றனர்; அவ்வரவு எவ்வழியும் செவ்வையாய் இனிது நடந்து வர அரசன் யாண்டும் நன்கு பாதுகாத்து வருகிறான்.

நீதி முறையான அப் பாதுகாவல் பிழையாய்ப் பழுதுபடின் குடிகள் துயரடைய நேர்கின்றார்; உற்ற துயரங்களை ஒழிக்க மூண்டு நாட்டுமக்கள் புரட்சி செய்ய நேர்ந்த போதுதான் மேல் நாடுகளில் குடியாட்சிகள் தோன்றலாயின. பொது சனங்களால் தேர்ந்து எடுத்த சிலர் ஆளுவதால் சனாதிபத்தியம் என இனவுரிமையோடு அது பெயர் பெற நேர்ந்தது.

இந்த நாட்டு வேந்தர்கள் ஆதிமுதல் நீதிமுறையோடு குடிகளை இனிது பேணி வந்துள்ளமையால் அவர் பால் பேரன்பு பூண்டு எல்லாரும் ஆர்வமாய்ப் போற்றி வந்துள்ளனர். அரசன் தெய்வத்தின் பிரதிநிதி என்று பெருமகிமையோடு பேண நேர்ந்தமையால் இறை என்னும் கடவுள் நாமத்தை அவன் அடைய நேர்ந்தான். உற்ற பேர் உய்த்துணர்வுடையது.

தருமநெறி தழுவி உயிர்கள் இன்புற ஆட்சி புரிகிற அரசன் என்றும் மாட்சி யடைந்து உயர்ந்து விளங்குகிறான்; அவனைத் தாய் தந்தை தெய்வம் என வையம் வாழ்த்தி வணங்குகிறது.

கோல்வரும் செம்மையும் குடைவரும் தண்மையும்
சால்வரும் செல்வம் என்று உணர்பெருந் தாதை போன்று
மேல்வரும் தகைமையால் மிக விளங்கினர்கள் தாம்
நால்வரும் பொருவில் நான் மறையெனும் நடையினர். (1)

சான்றெனத் தகையசெங் கோலினன் உயிர்கள் தாம்
ஈன்றநல் தாய்எனக் கருதுபேர் அருளினன்

ஆன்றஇச் செல்வமித் தனையும் மொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச் சொல்லினன். (2)

(இராமாயணம்)

இந்த இரண்டு பாடல்களையும் ஊன்றிப் படியுங்கள். தசரத மன்னனையும், அவனுடைய அருமைப் புதல்வர் நால்வரையும் இங்கே ஒருங்கே கண்டு களிக்கிறோம். அரசகுல உருவங்கள் தரும நீதிகளாய் மருவி நின்று இனிய காட்சிகள் தருகின்றன.

கடவுள் சாட்சிபோல் நடு நிலைமையாய் நின்று யாண்டும் நெறி முறையே நீதி செலுத்தும் செங்கோலினை யுடையவன்; ஈன்ற தாய் என உயிர்கள் கருதும் பேர் அருளினன் எனத் தசரத மன்னனைக் குறித்திருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

இத்தகைய உத்தம அரசர் ஆட்சியில் வாழும் குடிகள் எத்தகைய பாக்கியசாலிகள்! இன்னவாறு மன்னுயிர் இன்புற மனுநீதிகள் புரிந்து வந்த வேந்தர்களைப் பெற்று மேலான நிலையில் மேன்மை எய்தியிருந்த பாரத நாடு கால வேற்றுமையால் மாறு பட்டு மகிமை கெட்டுப் பரிதாப நிலையில் மறுகி யுள்ளது.

தரும குணங்கள் மருவிய அரசை அடைந்தபோதுதான் நாடு பெருமை அடைந்து விளங்கும். மாந்தரும் மாண்பு மிகுந்து மகிமையுடன் வாழ்ந்து யாண்டும் உயர்ந்து மகிழ்ந்து வருவர்.

---

785 நாட்டில் குடிசனங்கள் நன்மை யுறநாடித்
தேட்டின் வழிகள் செழிப்பாக்கி—மூட்டும்
பகைகோள் படியாமல் பாதுகாத் தாளும்
வகையே அரசின் வலி. (ரு)

இ-ள்

தனது நாட்டில் உள்ள மக்கள் நன்மையாய் வாழ்ந்து வரும்படி ஆய்ந்து புரிந்து வருவாய்க்கு உரிய வழிகளைப் பெருக்கிப் பகை முதலிய துயர்கள் படியாமல் பாதுகாத்து வரும் இயல்பே அரசுக்கு மேன்மையான உயர் வலியாம் என்க.

இது ஆளும் நிலை வாழும் வகையை உணர்த்துகின்றது.

ஓர் அரசு இனிதாய் நிலைத்து வர வேண்டுமானால் அங்கே குடிகள் வளமாய்ச் செழித்து வர வேண்டும். குடி உயர முடி

உயரும் என்பது முதுமொழி. முடிக்கும் குடிக்கும் அமைந்துள்ள தொடர்பை இப் பழமொழி கிழமையாய் விளக்கியுள்ளது. குடிசனங்கள் மகிழ்ந்து வாழ்ந்துவரின் அரசனது முடி உயர்ந்து ஒளி வீசி வரும். தலைக்குக் கால் போல் அரசுக்குக் குடி நிலைத்த உறுதியை உதவி வருகிறது. கால் நடந்து வரத் தலை தொடர்ந்து உயர்ந்து திகழ்கிறது. கால் முடமாய் நடக்க வில்லையானால் தலையும் மடமாய் நின்று விடும். குடிகள் செழித்து உவந்து வரும் அளவு அரசு தழைத்து உயர்ந்து வருகிறது; அவை வறுமை முதலிய சிறுமைகளால் தளர்ந்து நின்றால் அரசன் பெருமைகளை இழந்து பேதையாய் இழிந்து படுவான்.

உயிர் வாழ்வு நெல் புல் முதலிய பொருள்களால் பொலிந்து வருகிறது. சீவ ஆதாரமான அவை எங்கும் பொங்கி வரும்படி உழவு முதலிய தொழில்களை யாவரும் விழைந்து பேணி வர அரசன் உணர்ந்து செய்துவரின் நாடு உயர்ந்து வரும்; மக்களும் மகிழ்ந்து வருவர்; அவ்வரவு அரசுக்கு உரமாய் உறுதி புரிந்து வரும். ஏர் உயர அரசன் சீர் உயர்ந்து திகழ்கின்றது.

சோழ மன்னன் முடி சூடிய பொழுது புலவர் பலர் அவனை வாழ்த்தியருளினர். வாழ்த்துப் பாடல்கள் அவனுடைய மாட்சிகளை விளக்கி ஆட்சியைப் புகழ்ந்து நெடிதாய் வந்தன. கலை மணம் கமழ்ந்து பலவகை நயங்களும் அவை படிந்திருந்தன. அந்தக் கவிஞர் குழுவில் ஔவையும் கலந்திருந்தாள்; செவ்வையாய் ஒன்று பாடியருளினாள். அது அயலே வருகிறது.

வரப்புயர வாழ்க வரைந்து.

என்ற இந்த வாசகத்தைச் சிறிய முறி ஒன்றில் எழுதி அரசனிடம் கொடுத்தாள்; அவன் வாங்கிப் படித்தான். ஔவையை நிமிர்ந்து பார்த்தான்; அந்தப் பார்வை அதன் பொருளை அவாவி நின்றது. வெண்பாவின் ஈற்றடி போல் உள்ளதே; மற்றை மூன்று அடிகளும் தோன்ற வேண்டுமே என்று ஆன்ற ஆவலோடு அவன் கேட்டான். பாட்டி பாட்டை முடித்துக் காட்டினாள். அக் காட்சி கலையின் மாட்சியாய் விளங்கியது.

சங்கோல நீர்சூழ் தரணிதனில் எவ்வழியும்
செங்கோல் செலுத்திவரும் தேர்வேந்தே;---எங்கும்

நிரப்புநிலை நீங்க நிறைவளங்கள் ஓங்கும்
வரப்புயர வாழ்க வரைந்து.

அரசே! உன் நாட்டில் வறுமை யாதும் புகாதபடி வரம்பு செய்து வருக; அவ்வாறுவரின் அறம் பொருள் இன்பம் புகழ் யாவும் ஒருங்கே உளவாம் என உழவின் உளவு தெரிய இவ்வாறு உரைத்தருளினள். உரை நிறைபொருளாய் நிலவி வந்தது.

வரப்பு என்பது வயல்களில் நீர் தங்கியிருத்தற்கு வேலி போல் சூழ்ந்து நிற்கும் அணை. எல்லைக் கோடாய் நிற்றலால் வரம்பு என வந்தது. வரம்பு உயர நீர் உயரும்; நீர் உயர நெல் உயரும்; நெல் உயரக் குடி உயரும்; குடி உயரக் கோன் உயர்வான். இந்த உயர் நிலைகளுக்கு எல்லாம் உயிர் நிலையாயுள்ளமையால் வரப்பின் உயர்வைச் சிறப்பாக உணர்த்தினள்.

"வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும்
நீர்சான்று உயரவே நெல்உயரும்---சீர்சான்ற
தாவாக் குடிஉயரத் தாங்கருஞ்சீர்க் கோ உயரும்
ஓவாது உரைக்கும் உலகு." (சிறுபஞ்ச மூலம், 46)

கோவின் உயர்ச்சிக்கு முறையே அமைந்துள்ள மூல காரணங்களைக் குறித்து காரியாசான் என்னும் சங்கப்புலவரும் இங்ஙனம் கூறியிருக்கிறார். குடிகள் உயர்ந்து வாழ யாண்டும் உதவி புரிந்து இனிது புரந்து வருப்வனே தனி முதல் வேந்தனாய்த் தழைத்து வருகிறான். சேயைப் பாதுகாக்கும் தாயைப் போல நாட்டு மக்களைப் பேணி வருபவன் நலம் பல காணுகின்றான்.

தாய் அறியாத சேய் இருந்தாலும் தான் அறியாதவர் இல்லை
ஆயதன்மையினால் அறவழி நிற்கும் அறிஞரை அறிந்தவர்க்குஉரிய
தேய ஆதிக்கம் தந்து நன்னீதி செலுத்தி எங்கணும் மருந்தினுக்கும்
தீயவர் இலர்என்று இசையுற அடக்கும் திறலுளோன் பூதல வேந்தே.
சத்திரம் சோலை சாலைகள் குளங்கள் தண்ணதி மதகொடு ஆலயங்கள்
வித்தியா சாலை மாடகூடங்கள் வேறு வேறமைத்து வேளாண்மை
சத்தியம் அகலா வாணிகம் ஆதி சகல நற்றொழில் அவரவர்கள்
நித்தியம் முயல இத்திசை புரக்கும் நிருபனே நிருபனும் அன்றே. (2)
(நீதிநூல்)

அரசன் செய்ய வேண்டிய முறைகளும் துறைகளும் இவ்வாறு அறிய வந்துள்ளன. கரும வீரனாய்த் தரும நலங்களை வளர்த்து வருபவன் இருமையும் பெருமைகள் பெறுகின்றான்.

தனது ஆளுகையில் வாழுகிற மாந்தர் நல்ல உறுதி ஊக்கங்கள் தோய்ந்து யாண்டும் உழைத்து உயர்ந்து வர வேந்தன் உதவி வர வேண்டும். உள்ளக் கிளர்ச்சியும் உற்சாகமும் மனிதனுக்கு அதிசய ஆற்றல்களை அருளுகின்றன; அந்த உயர் நலங்களை அரசன் அயராமல் ஆதரித்துவரின் அவனது ஆட்சி என்றும் மாட்சியாய் உயர்ந்து மகிமைகள் பல நிறைந்து விளங்கும்.

---

786 பொங்கோத ஞாலம் புகழ்ந்து மகிழ்ந்துவரச்
செங்கோல் செலுத்தித் திசைஎங்கும்—மங்காத
கீர்த்தி வளரக் கிளர்ந்து வரும்அரசே
மூர்த்தி அரசுள் முதல். (சு)

இ-ள்

கடல் சூழ்ந்த உலகம் உளம் உவந்து புகழ்ந்துவர நெறியே செங்கோலைச் செலுத்திவரின் அந்த அரசு மங்காத கீர்த்தியுடையதாய் எங்கும் முதன்மை எய்தி உயர்ந்து நிற்கும் என்க.

தலைமையான அரசின் நிலைமையை இது உணர்த்துகின்றது.

முன்பு புரிந்த புண்ணிய நிலையில் உயர்ந்து வந்துள்ள அரசன் அந்நிலைமையை எண்ணி யுணர்ந்து தனக்கு நண்ணியுள்ள கருமங்களைக் கருதிச் செய்து வருவது உறுதியான கடமையாய் வந்தது. எந்த மனிதனும் அவனுக்குச் சொந்தமாய் அமைந்த காரியத்தைக் கருதிச் செய்துவரின் கருமவீரனாய் அவன் உயர்ந்து திகழ்கிறான். பெரியபலன்களும் நிறைந்து வருகின்றன.

வினையாண்மை மனிதனை வியனான நிலையில் உயர்த்துகின்றது. ஆண்மைக்கு மேன்மையாய் அமைந்துள்ள அரசன் ஆட்சியை நீதி முறையில் நெறியே செலுத்திவரின் அரிய பல செல்வங்களும் கீர்த்திகளும் அவனிடம் உரிமையோடு வந்து சேருகின்றன. முறைமை செய்துவரும் அளவு இறைமை எய்துகிறது.

இனிய பாதுகாவலான ஆட்சி முறை குடிகளுக்குச் சுகமான வாழ்வுகளை இயல்பா அருளுகின்றது. உயிர் வாழ்வு துயர் நீங்கி உயர்கிறது. சீவர்கள் உவந்து வாழ்ந்து வரவே அங்கே தெய்வத் திருவருள் சுரந்து வருகிறது; வரவே அந்த மன்னனுடைய நாடு மன்னிய வளங்களோடு மகிமை மிகப் பெறுகிறது.

இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. (குறள், 545)

உரிய நீதிமுறையே செங்கோலைச் செலுத்துகிற அரசனது நாட்டில் பருவ மழைகளும் பெரிய விளைவுகளும் ஒருங்கே உளவாம் என இது உணர்த்தியுள்ளது. மன்னன் ஆட்சிக்கும் மாநிலத்தின் மாட்சிக்கும் மருவியுள்ள உரிமை ஈண்டு ஊன்றி உணரவுரியது. அரச நோக்கு அவனியை உயர்வா ஆக்குகிறது.

குற்றங்களை நீக்கிக் குணங்களை வளர்த்து எவ்வழியும் செவ்வையாய் வேந்தன் பாதுகாத்துவரின் மாந்தர் மனம் மகிழ்ந்து வாழுவர்; தருமங்கள் யாண்டும் தழைத்து வரும்; அதனால் வானம் உவந்து காலம் தவருமல் கனிந்து மழை பொழியும்; வையமும் உவந்து மிகுந்த விளைபொருள்களை வழங்கியருளும். பொருள்கள் பெருகிவர அரசு பெரியமகிமையடையும்.

உலகம் அரசனை இனிய துணையாக வுடையது; தலைவனுன அவன் நீர்மையோடு நின்று கூர்மையாக ஓர்ந்து குடிகளைப் புரந்துவரின் நெடிய பல வளங்கள் எங்கணும் பெருகிப் பொங்கிய புகழோடு நாடு பொலிந்து பீடு மிகுந்து விளங்கும்.

" மழைதொழில் உதவ மாதிரம் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய
நிலனும் மரனும் பயன் எதிர்பு நந்த
நோய் இகந்து நோக்கு விளங்க
பொய் அறியா வாய்மொழியால்
புகழ்நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி யடிப்படரப்
பல்வெள்ளம் மீக்கூற
உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக!" (மதுரைக்காஞ்சி)

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் ஆண்டு வந்தபோது நாடு இருந்த நிலையும், அவனது ஆட்சி முறையும், மாட்சி நிறையும் இதனுல் அறிய வந்தன. பொய் அறியா வாய் மொழியால் புகழ் நிறைந்த நன் மாந்தரை உரிமையோடு துணையாகத் தழுவி யுள்ளமையால் அவ் வேந்தனுடைய மெய்யான குணநலங்களையும் மேலான நிலைமைகளையும் பரிபாலன நீர்மைகளையும் தெளிவாக நாம் நன்கு தெரிந்து கொள்ளுகிருேம்.

இத்தகைய விழுமிய வேந்தனைத் தமக்குத் தலைவனாகப் பெற்றுள்ள மாந்தர் எவ்வளவு பாக்கியசாலிகள்; அந்த நாடு எத்துணை உத்தம நிலையில் உயர்ந்திருக்கும் என்பன ஈண்டு உய்த்துணரத் தக்கன. இனிய அரசால் மனித இனம் மகிமையுறும்.

தருமநெறி ஒழுகி உயிரினங்களை உரிமையோடு பாதுகாத்து வரின் அந்த அரசன் அரிய பல மகிமைகளை எளிதே அடைந்து கொள்கிறான். வெற்றியும் புகழும் எவ்வழியும் அவன் பெற்று மகிழ்கிறான். செய்யும் நீதிகள் திவ்விய நிலைகளை அருளுகின்றன.

ஆர்கலி ஞாலத்து அறங்காவ லால்சிறந்த
பேரருளி னாற்குப் பெறலருமை யாதரோ?
வார்திரைய மாமகர வெள்ளத்து நாப்பண்ணும்
போர்மலைந்து வெல்லும் புகழ். (இரும்பல் காஞ்சி)

அறத்தின் வழியே ஞாலத்தைக் காத்து வருகிற அரசன் அரிய கீர்த்திகளையும் பெரிய வெற்றிகளையும் யாண்டும் பெற்று விளங்குவான் என்னும் இது ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது. உற்ற ஆட்சியை நெறியே செய்க; உயர்ந்த மாட்சி உரிமையாய் வரும். கரும நிலையில் பெருமைகள் விளைகின்றன.

---

787 குடியை இனிதோம்பிக் கொற்றம் புரிந்து
படிமுழுதும் இன்பம் பரப்பி—மடியின்றி
நாடிப் பகையடக்கி நண்ணானேல் அவ்வேந்தன்
பேடியே ஆவன் பிழை. (எ)

இ-ள்.

தனது குடிகளை இனிது பாதுகாத்து வெற்றி நிலைகளை விளைத்து உலகம் எங்கும் இன்ப நலங்களைப் பரப்பி எதிரிகளை அடக்கி விதி முறையோடு ஆளுகின்றவனே சிறந்த அரசன்; அவ்வாறு ஆளாதவன் இழிந்த பேடியாக் கழிந்து படுவன் என்க.

இது ஆண்மை வழுவின் அவலமாம் என்கின்றது.

உலகம் ஆளும் உரிமையோடு பிறந்து வந்துள்ள அரசன் சிறந்த மேன்மையில் உயர்ந்து நிற்கிறான். அந்த நிலை எந்த வகையிலும் நிலைத்து வர அவன் சொந்த நிலைமையை யுணர்ந்து தொழில் செய்து வர வேண்டும். தன் கடமையைக் கருதி

நின்று கருமங்கள் செய்து வருபவன் எவ்வழியும் பெருமைகள் பெறுகின்றான். உற்றஉரிமை உறுதியும் ஒளியும் பெற்றுஉயர்ந்து வருவது உடையவன் புரியும் வினையாண்மையாலேயாம்.

தன் நாட்டில் வாழும் குடிகளை நாட்டத்தோடு பாதுகாப்பவனே நலம் பல பெறுகின்றான். காப்பு முறையில் குறை நேராமல் காத்து வரும் அளவே காவலன் என்னும் பேர் அவனுக்கு உரிமையாய்ப் பூத்து வருகிறது. புரப்பது ஆகிய அச்சிறப்பு நிலை பிழைபடின் அரசனுடைய பிறப்பும் பேரும் பழி படும். மன்னனது சீரும் சிறப்பும் மன்னுயிர் புரக்கும் மாட்சியால் நீட்சியுற்று நிலவுகின்றன. புரப்பவன் பிரபு ஆகிறான்.

".காப்பே அரசுக்குக் கண்" என்பது பழமொழி. குடிசனங்களைப் பாதுகாப்பதில் அரசன் எவ்வளவு விழிப்புடையனாயிருக்க வேண்டும் என்பதை இது நன்கு விளக்கி யுள்ளது.

ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஈண்டிய புகழுடன் பாண்டிய மன்னன் ஒருவன் மதுரையிலிருந்து அரசு புரிந்தான். அவன் அருந்திறலாண்மையும் பெருதன்மையும் நிறைந்தவன். நிலம் நீர் தீ வளி வான் என்னும் ஐந்து பூதங்களின் இயல்பும் அவன் பால் அமைந்திருந்தமையால் பூதப்பாண்டியன் எனப் புகழ் பெற்று நின்றான். தேசமக்களை அதிக நேசத்தோடு பாதுகாத்து வந்தான் ஆதலால் முதுநீர் உலகம் அதிசய நிலையில் அவனைத் துதி செய்து வந்தது. அவனுடைய கீர்த்திப் பிரதாபங்களைக் கண்டு பொறாமை கொண்ட மறுபுல மன்னர் சிலர் பெருபடை திரட்டிப் போராட நேர்ந்தனர். பகையாய் மூண்டு வந்த அந்த வேந்தர் நிலையை இகழ்ந்து இவன் வெகுண்டு எழுந்தான். அங்ஙனம் சீறி எழுந்த பொழுது வீர சபதம் கூறினன். அருமையான அவ்வுரைகள் அயலே காண வருகின்றன.

மடங்கலின் சினைஇ மடங்கா உள்ளத்து
அடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்து
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறம் காணேன் ஆயின் சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக;
அறனிலை திரியா அன்பின் அவையத்துத்

திறனில் ஒருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக; மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பின்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனும் மன்எயில் ஆந்தையும் உரைசால்
அந்துவம் சாத்தனும், ஆதன் அழிசியும்,
வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்
கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றோ
மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலம் காவலின் மாறியான் பிறக்கே.

(பூதப் பாண்டியன்)

பாண்டிய மன்னன் கூறியுள்ள இச் சீரிய மொழிகளில் நீர்மைகள் நிறைந்துள்ளன; கூர்மையாய் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். பெரும் படைகள் உடையோம் என்று செருக்கி என்னோடு போருக்கு வந்துள்ள வேந்தரைப் புறங் காட்டி ஓடும்படி பொருது தொலைத்து வெற்றி விருதோடு இன்று மீண்டு வருவேன்; அவ்வாறு செய்யேன் ஆயின் நீதி முறை தவறிக் கொடுங்கோல் புரிந்த கடுங்கேடனாய் நான் நெடும் பழி அடைவேனாக; உயர்ந்த குடி வளங்கள் நிறைந்த சிறந்த இந்தத் தென்னாட்டைப் பாதுகாக்கும் அரசுரிமை நீங்கி இழிந்த ஒரு காடு காக்கும் காவல்காரனாய்ப் பிறந்து போவேனாக என்று இங்ஙனம் வீரவாதம் கூறிப் போர் மேல் ஏறியிருக்கிறான்; கூறியபடியே காரிய சித்தியை அடைந்து வந்து வீரிய வேந்தனாய் விளங்கி யாண்டும் நீதிமுறைகளை விளக்கி நின்றான்.

மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த தென்புலம் காவல் என்றதனால் தன் குடிப் பிறப்பையும், குடிகளைப் பாதுகாக்கும் பொறுப்பையும், தனது நாட்டின் மேன்மையையும் இவன் கருதிப் போற்றி வந்துள்ள உறுதியும் உரிமையும் உணரலாகும். நாட்டை அரசன் சரியாக்காக்கவில்லையானால் பின்பு காட்டைக் காக்கும் கூலிக்காரனாய்க் கடைப்பட்டுப் போவான் என்று குறித்திருப்பது இங்கே கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து கொள்ளத்தக்கது.

குடியை இனிது ஓம்புதல், கொற்றம் கருதல், படிமுழுதும் இன்பம் பரவப் பண்பு புரிதல், மடியின்றி முயலல், பகையை அடக்கல், உலக நிலை தெரிதல், உறுதி நலம் காணல் முதலிய உயர்தகைமைகளை இயல்பாக வுடையவன் உத்தம அரசனாய் ஒளி பெற்று நிற்கின்றான். நாடி அரசு புரிபவன் பீடு மிகுந்து நீடி நிலவுகின்றான். இங்ஙனம் செய்யாதவன் பேடியா யிழிந்து பிழை படுகின்றான். இழிவு நேராமல் விழுமிய நிலையில் ஒழுகி உயர்க. உரிமையை ஓர்ந்து செய்பவன் பெருமை பெறுகிறான்.

> கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
> புண்ணியத்தின் பாலதே ஆயினும்---தண்ணளியால்
> மன்பதை ஓம்பாதார்க்கு என்னாம்? வயப்படை மற்று
> என்பயக்கும் ஆணல் லவர்க்கு. (நீதிநெறி விளக்கம், 28)

அரசு பதவி அரிய புண்ணியத்தால் வருவது; அங்ஙனம் மகிமையாய் வந்த ஆட்சியைப் பெற்ற அரசன் தன் கடமையை உணர்ந்து கருணையோடு குடிகளைப் பாதுகாக்க வேண்டும்; அவ்வாறு காவானாயின் பேடி கைவாள் போல் அந்த அரசு பிழைபடும் என இது குறித்துள்ளது. பழி நேராமல் புகழ் ஏற வேண்டுமானால் அரசன் எவ்வழியும் விழியூன்றி உயிர்களை யாண்டும் செவ்வையாப் பேணி வரவேண்டும் என்பது காண வந்தது.

---

788 மக்கள் மகிழ்ச்சியே மன்னவன் ஆட்சிக்குத்
தக்க புகழ்ச்சியைத் தந்தருளும்—மக்களுளம்
நொந்து படினோ நொடியின்கண் அவ்வரசு
வெந்து படுமே விளிந்து. (அ)

இ-ள்.

மக்களுடைய மன மகிழ்ச்சியே மன்னனுடைய ஆட்சிக்குத் தக்க புகழ்ச்சியை அருளிவரும்; மக்கள் மனம் நொந்து புலம்பினால் அந்த அரசு விரைந்து வெந்து அழிந்து போம் என்க.

ஒரு அரசு நெடிது நிலைத்து வருவது அந்த நாட்டில் வாழுகின்ற குடிசனங்களுடைய உவகை நிலைகளைப் பொறுத்துள்ளது. பயிருக்கு உரம் போல் அரச தருவுக்குத் தருமமும் மக்களுடைய மகிழ்ச்சியும் உறுதி புரிந்து வருகின்றன. வேந்து வெந்து அழி

யாமல் ஏந்திய புகழோடு என்றும் இருக்க வேண்டுமானால் மாந்தர் மகிழ்ந்து வர ஓர்ந்து அவன் வினை புரிந்து வர வேண்டும்.

நீதி முறையே அரசு புரியின் ஆதி பகவன் அருள் வருகிறது; அது வரவே அந்த வேந்தன் எவ்வழியும் திவ்விய மகிமைகளை அடைந்து திகழ்கின்றான். வலியும் வனப்பும் புகழும் உயர்வும் செங்கோலால் பொங்கிப் பொலிவு மிகுந்து வருகின்றன.

மன்னவன் வலிசெங் கோலினால் அன்றி
வாளினால் சேனையால் இல்லை;
நன்னெறி வழுவா மன்னவன் தனக்கு
நாடெல்லாம் பேரரண்; உலகில்
மன்னுயிர் எல்லாம் அவன் படை; அன்னோர்
மனம்எலாம் அவனுறை பீடம்;
இன்ன தன்மையனாய் அரசளிப் பவனை
இகல்செயும் தெறுநரும் உளரோ? (நீதிநூல்.)

அரசன் நல்ல நெறியுடையவன் ஆனால் அவனுக்கு எல்லா மேன்மைகளும் வலிமைகளும் உளவாகின்றன; மாந்தர் யாவரும் தம் உயிர் என அவனை உரிமையோடு உவந்து போற்றி வருகின்றனர்; தெய்வத் தேசோடு அவன் சிறந்து விளங்குகின்றான்; அவனுக்கு மாறாக யாரும் நேரில்லார்; எல்லாரும் இனியராய் இணைந்து நிற்பர்என்பதை இங்கேஉணர்ந்துகொள்கிறோம்.

குடிகள் மனம் மகிழ்ந்து வாழக் கோமுறை புரிபவன் நெடிய வலிகளையுடையவனாய் நிலை பெற்று நிற்கிறான். நாடு உவந்துவர நாதன் உயர்ந்து வருகிறான் என்பது முதுமொழி. அரசனுடைய உயர்ச்சியும் உறுதியும் குடிகளுடைய மகிழ்ச்சியால் விளைந்து மகிமையா வரும் என்பது இதனால் விளங்கி நின்றது.

பெற்ற பிள்ளைகளைப் பெருமையா வளர்த்து வரும் தந்தை போல் உற்ற குடிகளை உரிமையாப் பேணி வருகிற அரசன் உயர்ந்த வெற்றிகளை யடைந்து ஒளி பெற்று மிளிர்கின்றான். மக்களுக்கு நலம் புரிவது மன்னனுக்குக் குல தருமம் ஆதலால் உரிமையான அதனைச் செய்தவன் இருமையும் பெருமைகளைப் பெறுகின்றான். கருமக் காட்சி தரும ஆட்சியாய் வருகின்றது.

"கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும் என
நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்." (புறம், 55)

யானை தேர் பரி வீரர் முதலிய படை வலிகள் நிறைந்திருந்தாலும் அறநெறியே அரசனுக்குத் திறமான வெற்றியாம் என்னும் இது ஈண்டு உய்த்துணரத் தக்கது. தருமமே ஜெயம் என்பது வேத மந்திரமாய் விளங்கி வருகிறது. அதனை உரிமையோடு தழுவி வருபவர் உயர் நிலைகளில் ஒளி மிகுந்து வருகின்றார்.

திரண்ட சேனைகள் இருந்தாலும், சிறந்த செல்வங்களும் உயர்ந்த அரண்களும் நிறைந்து நின்றாலும் அரசன் செங்கோல் இழந்து வெங்கோலன் ஆயின் அவை யாவும் விரைந்து அழிந்து போம். அரசு கோடிக் கொடியதானால் குடிகளே கூற்றாய்க் கொல்ல நேரும். கொடுமை யுடையவன் கடுமையா அழிகிறான்.

"கொடிய மன்னவர்க்குக் குடிகளே ஒன்னார்;
கோட்டையே அமர்க்களம்; அவர் தம்
அடிகள்தோய் நிலம் எங்கணும் படுகுழியாம்,
அயின்றிடும் அன்னமும் விடமாம்;
நெடிய ஆசனமே காசனமேடை;
நிமிர்உழையோர் நமன் தூதர்
கடிமனை மயானக் காடு எனின் கொடுங்கோல்
காவலர் உய்யுமாறுளதோ?"

நீதி முறை துறந்து அரசன் தீது புரிய நேரின் அவன் நீசமாய் நாசம் அடையும் நிலைகளை இது நன்கு வரைந்து காட்டியுள்ளது. இனிமை மாறிக் கொடுமை மீறிய பொழுது அங்கே அழிவு கடுமையாய் வருகிறது. காசனம் = கொலை. கொடிய அரசன் வீற்றிருக்கும் சிம்மாசனம் கொலையுண்டு சாகும் தூக்கு மேடையாம் என்றது எவ்வழியும் அவனுக்கு மூண்டுள்ள அழிவுகள் தெளிய வந்தது. தீமை எவனையும் தீய்த்து விடுகிறது.

தலைமையானவன் நிலைமை திரிந்தபோது நெடுந்துயராகின்றது; ஆகவே உலகம் அவனைப் பல வகையிலும் வெறுத்து விடுகிறது. குணமுடையனாய்க் குடிகளைத் திருத்தி இனிது புரந்தருள் புவன் மணமுடையனாய் மதிப்படைந்து வருகிறான்; அங்ஙன

மின்றி அவர்க்கு அல்லல் புரிய நேரின் அவர் உள்ளம் நொந்து அவனை எள்ளி இகழ நேர்வர்; நேரவே அவன் எவ்வழியும் தாழ்ந்து இழிவு பல அடைந்து அழிவுற நேர்கின்றான்.

குடி நொந்துவரின் முடி சிந்தி விழும் என்னும் பழமொழி கொடுங்கோல் அரசனுடைய அழிவு நிலையை விழி தெரிய விளக்கியுள்ளது. வெங்கோலன் விரைந்து வெந்து வீழ்கின்றான்.

குடியலைத்து இரந்துவெங் கோலொடு நின்ற
முடியுடை இறைவனும் மூர்க்கனும் பதரே. (நறுந்தொகை)

இனிய நீர்மைகுன்றி அரசன் கொடியன் ஆனால் மூர்க்கன், பதர் என இங்ஙனம் இழிந்து படுகிறான். பயனுடையவன் மணி யாய்உயர்வடைகிறான்; அஃது இல்லாதவன் பதராய் இழிவுறுகி றான். குடி வருந்தினால் முடி அழிந்து விடும்; அது உவந்தால் அது உயர்ந்து ஒளி பெற்று நிற்கும். நிலைமை தெரிந்து நீதி புரிக.

789 தரும நெறிதழுவித் தக்காரைப் பேணிக்
கருமம் கடைபோகச் செய்து—மருமங்கள்
யாவும் தெரிந்திங் கவனி புரந்துவரின்
தேவும் புகழும் தெளிந்து. (௯)

இ-ள்.

புண்ணிய வழிகளைப் பொருந்திக் கண்ணியமான மேலோர் களைப் பேணிக் கருமங்களைக் கருதிச் செய்து அரிய மருமங்களை ஆராய்ந்து தெளிந்து உலகைப் பாதுகாத்து வருகிற அரசனைத் தெய்வம் யாண்டும் புகழ்ந்து போற்றி வரும் என்பதாம்.

உலக வாழ்க்கையில் இன்பமும் வெற்றியும் மேன்மையும் தந்து மறுமையிலும் பெருமை தருவது தருமமே. அது மருவி வருகிற அளவு மகிமைகள் பெருகி வருகின்றன; ஒருவிய உட னே யாவும்ஒழிந்துபோகின்றன. போகவே புலைகள் ஆகின்றன.

பிறப்பிலேயே சிறப்பு அடைந்து வந்துள்ள அரசன் தன் மேன்மையான பிறவிக்கு மூலகாரணமாயிருந்தது தருமமே என்பதை உணர்ந்து கொண்டால் மறந்தும் வழுவாமல் அதனை எவ்வழியும் தழுவி ஒழுகி யாண்டும் விழுமியோனாய் விளங்கி வருவன். உண்மை நிலையைக் கருதியுணரும் உணர்வால் உறுதி நலன்கள் பெருகி உயர்நிலைகள் ஓங்கி ஒளி மிகுந்து வருகின்றன.

தான் உரிமையாச் செய்யும் கருமங்கள் தருமநீதிகள் தோய்ந்து வரின் அந்த வேந்தன் தெய்வீக நிலையைச் சேர்ந்து திகழ்கின்றான். வையகமும் வானகமும் பேரன்பு பூண்டு அவனை வாழ்த்தி வணங்குகின்றன. தருமநெறி இருமையும் பெருமை தருகிறது.

தரும நீதியின் தன்பயன் ஆவது உன்
கருமமே அன்றிக் கண்டிலம கண்களால்
அருமை ஒன்றும் உணர்ந்திலை ஐயநின்
பெருமை ஊழி திரியினும் பேருமோ?

(இராமா, மீட்சி, 231)

பரதனை நோக்கிக் கோசலைத் தாய் இவ்வாறு கூறியிருக்கிறாள். இக்கோமகனுடைய செயல்கள் யாவும் தருமம் தழுவி நீதி முறைகள் செழுமி திகழ்ந்துள்ள உண்மையை இங்கே நுண்மையாய் உணர்ந்து கொள்ளுகிறோம். தருமவானுடைய பெருமை ஊழியும் தேயாமல் ஒளி வீசி நிற்கும் என்பதை இவள் தெளிவாக்கித் தேசு மிகுந்து நிற்கின்றாள்.

நன்மையான தன்மைகள் அமைந்த பொழுது அந்த மனிதன் இம்மையிலேயே சுவர்க்க நிலையைக் காண்கிறான். நல்லவன் என்பதைவிடத் தருமவான் என்பது பெரு மகிமையுடையது. அரிய பல மேன்மைகள் அதனால் பெருகி வருகின்றன

"Good meant intelligent, and virtue meant wisdom." [Plato]

"நல்லது அறிவாயுள்ளது; தருமம் ஞானமாய் ஒளிர்கிறது" என்னும் இது இங்கே அறிய வுரியது. புண்ணிய நீர்மையால் எண்ணரிய சீர்மைகளும் இன்ப நலன்களும் உளவாகின்றன.

மனம் மொழி மெய்கள் புனிதமாய் உயிர்கட்கு இனியன செய்துவரின் அந்த அரசன் தருமமூர்த்தியாய்ப் பெருமை மிகப் பெறுகிறான். அவனுடைய செங்கோல் எங்கும் நீதி ஒளிகளை வீசி நெடிது நிலவுகின்றது. அறம் தழுவிய ஆட்சியே சிறந்த மாட்சிகளை விளைத்து வரும் ஆதலால் அது அதிசய நிலையமாய்த் துதிசெய்யநின்றது. புண்ணியம் புனித மகிமைகளை அருளுகிறது.

இறந்த நற்குணம் எய்தற்கு அரியவாய்
உறைந்த தம்மை எல்லாம் உடன் ஆக்குவான்
பிறந்த மூர்த்தி ஒத்தான் திங்கள் வெண்குடை
அறங்கொள் கோல் அண்ணல் மும்மத யானையான். (2)

சீற்றம் செற்றுப் பொய் நீக்கிச் செங்கோலினல்
கூற்றம் காய்ந்து கொடுக்க எனுந்துணை
மாற்ற மேனவின் ருன்தடு மாற்றத்துத்
தோற்றம் தன்னேயும் காமுறத் தோன்றினன். (2)
(குண்டலகேசி)

ஒரு அரசனுடைய குண நிலைகளை இவை குறித்துள்ளன. அறங்கோள் கோல் அண்ணல் என்றது தரும நீதிகளை உரிமையோடு தழுவியுள்ள செங்கோல் வேந்தன் என அவனுடைய நெறிமுறைகளை விளக்கி நின்றது. புண்ணியம் பொதிந்து வரும் அளவே ஆட்சி கண்ணியம் பொருந்தி வருகிறது.

மன்னன் நெறியுடையன் ஆனல் மக்கள் யாவரும் திருந்தி வாழுவர்; வாழவே அந்த நாடு பெருந்தன்மை நிறைந்து பெரு வளங்கள் சுரந்து விளங்கும். தக்காரைப் பேணி என்றது தகுதியுடைய பெரியோர்களை மிகுதியும் பேணி ஒழுகி வர வேண்டும் என்றவாறு. அறிவு சீலம் ஆற்றல்களில் சிறந்த மேலோர்களை உரிமையாத் தழுவி ஒழுகிவரின் அந்த அரசு எவ்வழியும் விழுமிய நிலையில் விளங்கி மேலான மகிமைகள் நிறைந்து வரும் என்க.

தக்கார் இனத்தனய்த் தான்ஒழுக வல்லானேச்
செற்ருர் செயக்கிடந்த தில். (குறள், 446)

தக்க பெரியோர்களை உறவா அணைத்து ஒழுகவல்ல அரசன் யாண்டும் வெற்றியுடையனய் மிக்க மேன்மைகளை அடைந்து வருவன் எனத் தேவர் இவ்வாறு உணர்த்தியுள்ளார். விரிந்த நிலமண்டலத்தை ஆள நேர்ந்த அரசனுக்கு எதிரிகள் நேர்வது இயல்பு ஆதலால் அந்தப் பகைவர் அடங்கி ஒடுங்கும்படி உயர்ந்த மேதைகளைத் துணையாக் கொண்டு அவன் வாழ வேண்டும். மதிமாண்புடைய நல்லோர்களை இனமாத் தழுவி ஒழுகின் அந்த ஆட்சி அதிமாண்புடையதாய் உயர்ந்து வழி முறையே ஒளி செய்து வரும். இனிய சார்புகள் எவ்வழியும் இன்பம் தருதலால் அவை திவ்விய அமுதங்களாய்ச் சிறந்து திகழ்கின்றன.

சேர்ந்தவர் தன்மையாய்ச் செறிந்து மன்பதை
சார்ந்துநேர் வருதலால் தகுதி யாளரை
ஓர்ந்துநீ உரிமையா உவந்து கொள்ளுக
ஆர்ந்தபே ரரசினி தமையும் யாவுமே.

இது இங்கே தேர்ந்து தெளிய வுரியது.

790 நீதி முறையில் நிலைத்து வருமளவே
ஆதி முதல்வன் அருள்புரிவன்—நீதி
வழுவின் அரசன் வழிவழி என்றும்
இழிவே அடைவன் இழிந்து. (ய)

இ-ள்.

நல்ல நீதிநெறிகளைத் தழுவி ஒழுகி வருகிற அளவே அரசனுக்கு ஆதிபகவன் அருள் புரிந்து வருவன்; அம்முறை வழுவினால் அவனது மரபு வழி வழியே இழிந்து பழி படிந்து அழிந்து போம்; அவ்வாறு அழியாமல் விழுமிய நிலையில் ஒழுகி உயர்க.

மனித சமுதாயத்தின் தனி அதிபதியாய் மன்னன் விதி முறையே வந்துள்ளான். தனது ஆதிபத்தியம் நிலைத்து வருவது நீதி சத்தியாலாம்; அதனை உணர்ந்து வரும் அளவு அவன் உயர்ந்து வருகிறான். உரிமையான உண்மை உணர்ச்சி அரிய பல நன்மைகளையும் அதிசய இன்பங்களையும் அருளி வருகிறது.

தானாக உணர்ந்து செய்யும் கருமத்தில் மான வீரங்களும் ஞான நீர்மைகளும் கமழ்ந்து திகழ்கின்றன. தன் நிலைமையை நினைந்து கடமைகளைச் செய்கிற அரசன் தலைமையில் சிறந்து நிற்கிறான். அவனிடம் அதிசய ஆற்றல்கள் பெருகி வருகின்றன.

மனச் சாட்சியை எதிரே நிறுத்தி அந்தரங்க ஆத்துமாவை நோக்கி ஆட்சி புரிந்து வருகிறவன் பரமாத்துவின் காட்சியையும் மாட்சியையும் நேரே காணுகின்றான். நல்ல நீதி மன்னனுக்கு எல்லா உண்மைகளும் எளிதே விளங்கும் ஆதலால் அவன் அயலை நோக்கி அயராமல் தன்னையே நோக்கிச் செயல் புரிகின்றான். அந்த உரிய கருமத்தில் அரிய மகிமைகள் மருவி மிளிர்கின்றன. உரிமையைப் பேணிவரின் பெருமைகள் வரும்.

தனக்கு உரிமையாய் அமைந்த கடமையை உண்மையாக ஊன்றிச் செய்கிற வேந்தன் உலகத் தலைவனாய் ஓங்கி விளங்குகின்றான். அற்புத ஆற்றல்கள் அவனிடம் ஒளி வீசி நிற்கின்றன.

"Abide in the simple and noble regions of thy life, obey thy heart, and thou shalt reproduce the Fore—world again."
[Emerson]

"உனது உயிர் வாழ்வின் உயர் நிலையில் இனிது அமர்ந்து

மனமே சான்ருய் நின்று இனமான நீதி முறைகளைச் செய்து வருக; அவ்வாறுவரின் கடந்துபோன புனித உலகங்களை நீ மறுபடியும் படைத்து விடுவாய்!'' என்னும் இந்த ஆங்கிலவாசகம் ஈங்கு ஊன்றி நன்கு ஓர்ந்து உணர்ந்து கொள்ளவுரியது.

உறுதியான ஊக்கத்துடன் தனது சுய சிந்தனையை விய னை நிலையில் செலுத்தி வருகிற அரசன் அதிசய சத்திகள் அடைந்து உலகம் துதி செய்யும் படியான பெரிய சித்திகளைச் செய்து விடுகிருன். புனித நினைவு மனிதனைத் தெய்வமாக்குகிறது.

உலக மக்கள் உள்ளம் உவந்து உயர்ந்து வாழ உறுதி புரிவதே அரசனுக்கு உரிய கடமையாம்; அந்த உரிமையைச் செய்து வருபவன் அரிய பல மகிமைகளை அடைந்து கொள்கிருன். அதிசயமான தெய்வீக ஆற்றல் அவனிடம் சிறந்து திகழ்கிறது. குடியை இனிது காப்பவன் முடியை நெடிது காக்கிருன்.

“குடிபுறங் காத்துஓம்பும் செங்கோலான் வியன்தானை
விடுவழி விடுவழிச் சென்ருங்கு அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்ருல் பசப்பே.''

(கலி, 130)

கணவன் பொருள் தேட அயலே பிரிந்து போனுன்; மனைவி தனியே வருந்தியிருந்தாள்; பிரிவின் பரிவினுல் உடல் வெளுத்துப் பசலை பூத்திருந்தது; பிரிந்து போயிருந்த நாயகன் மீண்டு வந்தான்; அவனைக் கண்டவுடனே பசப்பு நீங்கியது; வனப்பு ஓங்கியது; செங்கோல் வேந்தன் சேனையைக் கண்டவுடன் பகைவர் நீங்கி ஓடியதுபோல் அவளது பசலை நீங்கிப் போயது என இங்ஙனம் உவமைகூறி அரசின் மாட்சியைத் துலக்கியிருக்கிருர்.

“ நாட்டு வாயுளும் காட்டு வாயுளும்
கரத்தல் இன்றிப் பரத்தல் நன்றுஎனத்
தாமுடை நாடு நகரமும் தரீஇ
வாய்முறை வந்த வழக்கியல் வழாமை
ஏட்டுமிசை ஏற்றி இயல்பினின் யாப்புறுத்து
ஆற்றல் சான்ற அரும்பெறல் சுற்றமொடு
கூற்றமும் விழையக் கோல்இனிது ஓச்சிக்
கோட்டம் இன்றிக் குடிபுறம் காத்து
வாட்டொழில் தானை வத்தவர் பெருமகன்

அன்புடைத் தோழரோடு இன்புற்று ஒழுகச்
சிறந்த திருவொடு செல்வம் பெருக." (பெருங்கதை, 5)

வத்தவ தேசத்து மன்னன் ஆட்சி புரிந்துள்ள மாட்சியை இது உணர்த்தியுள்ளது. பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்ளுங்கள். கோட்டம் இன்றிக் குடி புறம் காத்து என்றது அவனது செங்கோல் நிலைமையைத் தெளிந்து கொள்ள வந்தது. தமக்கு வாய்த்துள்ள நிலைமையை உணர்ந்து தலைமையாளர் கடமையைச் செய்துவரின் நாடு நலம் பல அடைகிறது; அடையவே அதனையுடைய நாடன் பீடு மிகப்பெற்று நீடு வாழ்கின்றான். நீதிமுறையே அரசைப் பேணி வருபவன் ஆதி பகவனது அருளைப் பெறுகின்றான்; அதிசய மகிமைகள் அவனுக்குத் தனி உரிமைகளாய் இனிது பெருகி வருகின்றன.

குன்றென உயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென உலகிடை உலாவி மீமிசை
நின்றுநின்று உயிர்தொறும் நெடிது காக்குமே.
(இராமாயணம்)

தசரதன் உலகவுயிர்களைக் காத்து வந்துள்ள நிலைமையை இது உணர்த்தி யுள்ளது. இத்தகைய வுரிமையோடு சீவகோடிகளைப் பேணி வருபவன் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கின்றான்.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

ஆளும் தன்மை ஆட்சி ஆயது.
மன்னுயிர் புரப்பவன் மன்னன் ஆனான்.
புனிதனாய் ஆள்பவன் தனி மகிமையாளன்.
குடிகள் உயரக் கோன் உயர்வான்.
நாடு நலமுறின் நாடன் பலமுறும்.
செங்கோல் அரசே எங்கும் புகழ் பெறும்.
நாடி ஆளாதவன் பேடி ஆவான்.
மக்கள் மகிழ்ச்சியே தக்க புகழ்ச்சியாம்.
தருமம் தழுவிவரின் பெருமை பெருகி வரும்.
நீதிமுறை செய்யின் ஆதி அருள் பெய்யும்.

எகூ-வது ஆட்சி முற்றிற்று.



---

# எண்பதாம் அதிகாரம்.

## மாட்சி

அஃதாவது உயர்ந்த குண மாண்புகளின் நிலைமை. ஆட்சி புரிய நேர்ந்த அரசன் அரிய இனிய மாட்சிகளோடு மருவி யிருக்க வேண்டும் என உணர்த்துகின்றமையால் அதன்பின் இது வைக்கப்பட்டது. அரச நீர்மைகள் நேரே அறிய வந்தன.

791 மாந்தர் தலைமைப்பேணி மாநிலத்தைக் காத்தருளும்
வேந்தர்க் குயர்குணங்கள் வேண்டுமே—நேர்ந்துள்ள
சீர்மை மரபில் செனித்து வரினுமே
நீர்மை அளவே நிலை. (க)

இ-ள்.

மனித சமுதாயத்தை இனிது பேணி உலகத்தைப் பாது காக்க நேர்ந்த அரசர் உயர்ந்த குண நலங்களுடையராய்ச் சிறந் திருக்க வேண்டும்; பெரிய அரச குடியில் பிறந்திருந்தாலும் இனிய நீர்மை அளவே மகிமைகள் மருவி வரும் என்க.

குண நலமே உயர்நிலை என இது உணர்த்துகின்றது.

உலகில் காணும் உயிரினங்களுள் மனித மரபு உயர்ந்து நிற்கிறது. ஓர்ந்து உணரும் திறம் நன்கு அமைந்திருத்தலால் மனிதன் எங்கும் உயர்ந்தவனாய்ச் சிறந்து திகழ்கின்றான். இந்த மனிதக் கூட்டத்துக்குத் தலைமை அதிபதியாய் நேர்ந்தவன் அரசன் என வந்தான். மாந்தர் வணங்கி வாழ்த்த மகிமை தோய்ந்து வந்துள்ளமையால் வேந்தன் யாண்டும் வியனிலையாளனாய் விளங்கி நின்றான். சிறப்பு நிலை பிறப்புரிமையாய் வந்துள்ளது. சிறந்த குடிப்பிறப்புக்கு உரிய குண நலங்கள் நன்கு அமைந்த போதுதான் அந்த அரசன் உயர்ந்த கோமகனாய் ஒளி பெற்று நிற்கின்றான். இனிய இயல்பு அரிய உயர்வாகின்றது.

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. (குறள், 951)

செம்மையும் நாணமும் சீரிய குடியில் பிறந்தாரிடம் இயல்பாக அமைந்துள்ள நீர்மைகளாம் எனத் தேவர் இவ்வாறு குறித்துள்ளார். மேன்மையான நல்ல குடிப்பிறப்பிற்கு உரிய பான்மைகளை இது நன்கு வரைந்து காட்டி விளக்கியுள்ளது.

செப்பம் = மனத்தின் செம்மை. மனமும் வாக்கும் செயலும் தம்முள் மாறுபடாமல் ஒருமையாய் மருவி நிற்கும் நேர்மை செப்பம் என வந்தது. இந்தச் செவ்விய தன்மை செங்கோன்மைக்கு மூல முதலாம். பழி பாவங்களுக்குக் கூசி விலகும் விழுமிய நீர்மை நாண் என நின்றது. செம்மையும் நாணமும் உடையவர் எவ்வழியும் சிறந்த நன்மைகளையே செய்து வருவர்; புன்மைகள் யாதும் எவ்வகையிலும் அவர்பால் அணுகா.

இத்தகைய தன்மைகள் அமைந்த மன்னர் உத்தம நிலைகளை உலகில் பரப்பி எத்திசையும் புகழ இதம் புரிந்து வருகின்றனர். உயர் நிலையில் வந்துள்ள அரசரிடம் உயர் குணங்கள் இயல்பாக அமைந்துள்ளன. நீர்மைகளால் வேந்து சீர்மை யுறுகிறது.

"நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்
இவனில் தோன்றிய இவைஎன இரங்கப்
புரைதவ நாடிப் பொய்தபுத்து இனிது ஆண்ட
அரசன்" (நெய்தல்கலி)

சத்தியம் முதலிய உத்தம நீர்மைகளோடு உலகை ஆண்டவன் என ஓர் அரசனைக் குறித்துச் சங்கப் புலவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். நயன் முதலிய வியனுன குணங்கள் அவனிடம் தோன்றின என்றதனால் அவனது தோற்றமும் ஏற்றமும் துலங்கி நின்றன. நல்லஇயல்புகள் மன்னனை மருவி வருகின்றன.

"நயனும் நண்பும் நாணுநன் குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந்து ஒழுகலும்
நும்மினும் உடையேன்" (நற்றிணை, 160)

தனது நிலைமை நீர்மைகளைக் குறித்து ஒரு தலைவன் இவ்வாறு உரைத்துள்ளான். நயன் = ஈகை, இரக்கம், நீதி.

உலக மக்களுக்குத் தலைமையாளனுய் அரசன் உயர்ந்து வருதலால் குண நீர்மைகள் அவனிடம் இயல்பாய் அமைந்து வருகின்றன. உருவ அழகும் உள்ளப் பண்பும் விழுமிய மேன்மைகளும் அரச மரபோடு வழிமுறையே தழுவி மிளிர்கின்றன.

"வனப்பும் இளமையும் வரம்பில் கல்வியும்
தனக்கு நிகரில்லாத் தன்மையன்;
வென்றியும் விறலும் விழுத்தகு விஞ்சையும்

ஒன்றிய நண்பும் ஊக்கமும் முயற்சியும்
ஒழுக்கம் நுனித்த உயர்வும் இழுக்கா
அமைச்சின் அமைதியும் அளியும் அறனும்
சிறப்புழிச் சிறத்தலும் சிறந்த ஆற்றலும்
வெங்கோல் வெறுப்பும் செங்கோல் செல்வமும்
செருக்கிச் செல்லும் செலவினன்." (பெருங்கதை)

உதயண மன்னனுடைய குண மாண்புகள் இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளன. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

இனிய பான்மைகள் அரிய மேன்மைகள் ஆகின்றன. மணத்தால் மலர் மாண்புறுகிறது; குணத்தால் மனிதன் மகிமை யுறுகிறான். மனித சமுதாயத்தை இனிது பேண வந்த அரசன் குணங்களால் உயர்ந்த அளவு கோமுறையில் சிறந்து திகழ்கிறான்.

சத்தியம் கருணை நேர்மை முதலிய உத்தம நீர்மைகள் உயர்ந்த ஆத்தும சத்திகளாய் ஒளி புரிந்துள்ளன. இத்தகைய குண நலங்களை மருவிவருபவர் அரிய பெரியராய் அற்புதங்களைச் செய்கின்றனர். தேவர் முதல் யாவரும் குணம் மருவிய வழியே மணம் பெருகி மகிமை மாண்புகள் ஓங்கி வருகின்றனர்.

உருளு நேமியும் ஒண்கவர் எஃகமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளும் நல்லற மும்மனச் செம்மையும்
அருளும் நீத்தபின் ஆவதுண்டாகுமோ? (இராமாயணம்)

இதன் பொருள் நிலைகளை ஊன்றி உணர வேண்டும். அரச தருமங்களைப் போதித்து வரும்போது இராமனை நோக்கி வசிட்டர் இவ்வாறு கூறியிருக்கிறார். திருமால் சிவன் பிரமா மூவரும் தேவதேவர்கள். சீவ கோடிகளைக் காத்தல் அழித்தல் படைத்தல்களைச் செய்து வருகின்றனர். முதல்வராயுள்ள அவரும் தரும நீதிகளைத் தழுவி நின்றே தம் கருமங்களைப் புரிகின்றனர். அறம், மனச்செம்மை, அருள் இம் மூன்றும் அம் மூர்த்திகளுக்கு ஊன்று கோல்களாயுள்ளன. இக் குண நீர்மைகளைச் சிறிது நீங்கினும் அவர் வலியிழந்து பெரிதும் பிழைபட நேர்வர் என முனிவர் மொழிந்துள்ளது நுணுகி உணர்ந்து கொள்ள வுரியது.

நல்ல குணங்களினாலேதான் கடவுளும் வல்லவராய் நிலைத்து மகிமையாநிற்கிறார்; இந்த உண்மையை ஓர்ந்து மனிதன் குணவா

ளுய் நன்மை அடைந்து கொள்ளவேண்டும். தருமநீதி, மன நேர்மை, சீவதயை ஆகிய இவை தெய்வீக சத்திகளாயுள்ளன; இந்தக் குண மாட்சிகளைத் தழுவி ஒழுகி ஆட்சி புரிகிற அரசன் என்றும் வென்றி நிலையில் விளங்கி நின்று விழுமிய மகிமைகளை அடைந்து கொள்கிருன். தன்மை உயரத் தலைமை உயர்கிறது.

---

792. உண்மை உறுதி உயர்நோக்கம் எவ்வழியும்
திண்மை தெளிவு திறலுடைமை—நுண்மையாய்
ஆராய்ந் தறியும் அமைதி அரசுக்குச்
சீரேந்தி நிற்கும் சிறந்து. (உ)

இ-ள்

சத்தியம் மனவுறுதி உயர்ந்த குறிக்கோள் சிறந்த திண்மை தேர்ந்த தெளிவு ஆர்ந்த திறல் ஆராய்ந்து உணரும்அறிவு அமைதி ஆகிய இந் நீர்மைகள் அரசனுக்கு மிகுந்த சீர்மைகளை விளைத்து எவ்வழியும் உயர்ந்த நன்மைகளை அளித்தருளும் என்க.

இது மெய்யனுய் நின்று வையம் ஆளுக என்கின்றது.

விழுமிய தலைமையில் வழி முறையே சிறந்து நின்று உயிர்களைப் புரந்து வரும் உரிமையை உயர்ந்த கடமையாக அரசன் அடைந்து வந்துள்ளான். இயல்பாகவே அதிபதியாய் வந்துள்ள அவனிடம் உயர்வான குண நலங்கள் ஒளிபெற்று வருகின்றன. இனிய பண்புகளை மருவியுள்ள அளவு அரிய பெரிய மகிமைகளில் பெருகி நின்று அதிசய காரியங்களை அவன் செய்கின்ருன்.

உலகத்தை ஆளும் தலைமையும் உயர்ந்த ஆற்றலும் சிறந்த குணங்களால் திகழ்ந்து வருகின்றன. குணங்களுள் சத்தியம் மிகவும் சிறந்தது. புனித பாவனமாய் மனித சமுதாயம் தனி நிலையில் உயர்ந்து உய்யும்படி செய்ய வல்லது மெய்யே. இந்த ஒன்றை உரிமையோடு பேணிவரின் அந்த மனிதன் அதி பரிசுத்தனுய் ஓங்கி நின்று அரிய பல மகிமைகளை எதிரே காணுகிருன்.

உண்மை கடவுளின் உருவம். சத்து, சித்து, ஆனந்தம் எனக் கடவுளை வேதங்கள் வருணித்திருக்கின்றன. சத்தியமாய் இருப்பது எதுவோ அது சத்து என வந்தது. சத்தியத்தைஉறுதியாகப் பற்றி நிற்பவன் பரம்பொருளின் உரிமையைப் பெற்றுச்

சத்தனாய் நிற்கின்றான். சத்தன், சுத்தன் என்பன சத்தியவானுக்குப் பெயர்களாய் வந்துள்ளன. உடம்பு நீரால் சுத்தம் ஆதல் போல் உள்ளம் சத்தியத்தால் சுத்தம் ஆகிறது. நீராலன்றிவேறு யாதாலும் உடல் சுத்தம் ஆகாது; சத்தியத்தாலன்றி மனித உள்ளம் புனிதமாகாது. அகத்தூய்மை அதிசய மகிமையாம்.

> புறம்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை
> வாய்மையால் காணப் படும். (குறள், 298)

அகத்தை வாய்மையால் தூய்மை செய்யுங்கள் என்று மனித சமுதாயத்துக்குத் தேவர் இவ்வாறு போதித்திருக்கிறார். மனம் புனிதமான போது மனிதன் மகானாய் விளங்குகிறான். சத்தியம் சித்தத்தைச் சுத்தி செய்கிறது; அந்தச் சித்த சுத்தி அதிசய சத்திகளாய் அரிய சித்திகளைச் செய்கிறது. உள்ளத்தில் மாசு நீங்க உயிர் தேசு உறுகிறது; உறவே அந்த மனிதனிடம் அரியஆற்றல்கள் பெருகிப்பெரியமகிமைகள்மருவிவருகின்றன.

> My strength is as the strength of ten,
> Because my heart is pure. (Tenneyson

"என் உள்ளம் சுத்தமாயிருத்தலால் எனது பலம் அதிக வலியடைந்துள்ளது" என ஆங்கிலக் கவிஞராகிய டென்னிசன் இவ்வாறு கூறியிருக்கிறார். இது இங்கே நன்கு அறிய வுரியது.

உண்மை உள்ளத்தைப் புனிதமாக்கி உயர்ந்த திண்மையை அருளி மனிதனைப் புனிதமான ஒரு தெய்வமாத் திகழச் செய்கிறது; செய்யவே வையமாந்தர் எவரினும் மேய்யன் மேலானவனாய் விளங்கி யாண்டும் மகிமையோடு நீண்டு நிற்கின்றான்.

> "A devotee of Truth may not do anything in deference to convention."

"சத்தியத்தை உரிமையோடு பேணி வருகிறவன் யாவருக்கும் அடங்கி ஏதும் செய்ய வேண்டியதில்லை" எனக் காந்தியடிகள் இவ்வாறு உண்மையின் உயர்வை நன்கு குறித்திருக்கிறார்.

உள்ளத்தில் உண்மை யுடையவன் எவ்வழியும் யாதும் பிழையிலனாய் விழுமிய நிலையில் விளங்கி நிற்பன்; திண்மையும் தேசும் அவனிடம் செழித்து ஓங்கும்; தன் கடமைகளைக் கருதி யுணர்ந்து உயிர்களை உரிமையோடு பேணி அருளுவான்; அருள

வே பரப்பொருள் அருள் பெருகி வரும்; அதனால் எல்லா நலங்களையும் எளிதே அடைந்து ஒளிமிகுந்து அவ் வேந்தன் உயர்ந்து விளங்குகின்றான். வாய்மையாளன் வையம் யாவும் ஆளுகிறான்.

"வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்." (சிலப்பதிகாரம்)

சத்தியவானாய் உயிர்களைப் பேணி வருபவனுக்கு உளவாம் பலனை இது உணர்த்தியுளது. யாரும் அடைய முடியாத அரிய பொருள்கள் எல்லாம் வாய்மையும் கருணையும் உடையவரிடம் உரிமையாய் வந்து சேருகின்றன. இத்தகைய குண நீர்மைகளை எத்தகைய நிலையிலும் இனிது மருவி வருபவர் உத்தம அரசராய் ஒளிவீசி வருகின்றார். மெய்யனிடப் மேன்மைகள் மேவுகின்றன.

"பொய்ப்பகையே! மெய்க்கு அணியே! புகழின் வாழ்வே!"
(இராமாயணம்)

எனத் தசரதன் இப்படித் துதி பெற்றுள்ளான். சத்தியத்தை அரசன் எப்படிப் பேணி வர வேண்டும் என்பதை இந்தச் சக்கரவர்த்தி நன்கு ஒழுகிக் காட்டி யிருக்கிறான். மனித சமுதாயம் இனிது திருந்தி வருதற்கு மன்னனது புனிதநிலை இனிய வழி காட்டியாயுள்ளது. தலைவனை உலகம் தழுவி வருகிறது.

பெரிய எண்ணங்களையே பேணி ஒழுகி அரிய காரியங்களை ஆற்ற வேண்டும் என்பது உயர் நோக்கம் என்றதனால் உணர வந்தது. சிறியன சிந்தியாமல் பெரியனவே கருதி அரியன செய்து உரியன ஓர்ந்து புரிந்து வருவதே அரச இயல்பாம்.

நல்லது என்று ஒரு காரியத்தை எண்ணித் துணிந்த பின் இடையே நேரும் அல்லல்களைக் கண்டு நெஞ்சம் தளராமல் நிலைத்து நிற்பது திண்மை என நின்றது. அஞ்சாத ஆண்மையோடு அமைந்த இந்த நெஞ்சத் திட்பம் அரசுக்கு அதிசய மேன்மைகளை அருளி யாண்டும் உறுதி நலங்களை உதவி வரும்.

அருச்சுனன் நாடு இழந்து காடு புகுந்தான். மூண்டுள்ள பகையை வெல்ல வேண்டுமானால் ஆண்டவன் அருளை அடைய வேண்டும் என்று துணிந்தான். இமய மலையை அடைந்தான். சிவபெருமானை நினைந்து அருந்தவம் புரிந்தான். இவன் புரிந்த தவ நிலையைக் கண்டு அருந்தவர் யாவரும் வியந்து புகழ்ந்தார்.

ஒருதாளின் மிசைநின்று நின்றதாளின்
ஊருவின்மேல் ஒருதாளை ஊன்றி ஒன்றும்
கருதாமல் மனம்அடக்கி விசும்பின் ஓடும்
கதிரவனைக் கவர்வான்போல் கரங்கள் நீட்டி
இருதாரை நெடுந்தடங்கண் இமையாது ஓரா
யிரம்கதிரும் தாமரைப்போது என்ன நோக்கி
நிருதாதி யரின்மனுவாய்த் தவம்செய் வாரின்
நிகர்இவனுக்கு ஆர்கொல்என நிலை பெற்றானே. (1)

கருந்துறுகல் எனக்கருதிப் பிடியும் கன்றும்
களிற்றினமும் உடனுரிஞ்சக் கறையான் ஏறிப்
பொருந்துமுழைப் புற்றதெனப் புயங்கம் ஊரப்
பூங்கொடிகள் மரன்என்று பாங்கே சுற்றப்
பரிந்துவெயில் நாள்மழைநாள் பனிநாள் என்று
பாராமல் நெடுங்காலம் பயின்றான் மண்ணில்
அருந்தவமுன் புரிந்தோரில் இவனைப் போல்மற்று
ஆர்புரிந்தார் சிவசிவ வென்றறிய வாறே. (2)

(பாரதம், அருச்சுனன் தவநிலை, 38, 41)

விசயன் புரிந்துள்ள தவநிலையை இதில் வியந்து நோக்கி உவந்து நிற்கிறோம். எவ்வளவு மனத்திண்மை யிருந்தால் இவ்வளவு உறுதி யோடு ஒரு முகமாய் ஊன்றி நிற்க முடியும்? என்பதை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். சத்திரிய வீறு வெற்றியான வினையாண்மைகளோடு ஈண்டு விளங்கி நிற்கிறது.

கலைகள் பல பயின்று உலக நிலைகளை ஓர்ந்து உண்மைகளை ஆராய்ந்து தேர்ந்து தெளிந்து கொள்வது தெளிவு என வந்தது. தலைமை அதிகாரமும் திருவின் போகமும் செல்வ வளங்களும் பெருகியுள்ளமையால் அமைதியும் பணிவும் அரசனிடம் அமைந்து வருதல் அரிதாம். உள்ளத் தூய்மையும் அறிவுத் தெளிவும் அமைதியும் அமையின் அவை பேரின்ப நிலையங்களாம்.

சிறந்த பெருந்தன்மைக்கு அடையாளம் சித்த சாந்தியே. எதையும் நிதானமாக ஆராய்ந்து நிலைமைகளை உணர்ந்து நீதிகளை ஓர்ந்து கொள்வது அரசனுக்கு உயர்ந்த பண்பாடாய் வந்தது.

அபிடேக பாண்டியன் என்னும் இனிய அரசன் மதுரையிலிருந்து அரசு புரிந்து வருங்கால் அங்கே ஒரு சித்தர் தோன்றிப் பல அற்புதங்களைச் செய்தார். நகர மாந்தர் யாவரும் அவரை வியந்து புகழ்ந்தார். மன்னன் அவரை நேரே காண விழைந்து மந்திரிகளை அனுப்பினான். தம்மை அரண்மனைக்கு அழைத்து வரும்படி வேந்தர் அனுப்பினார் என அமைச்சர் வந்து சித்தரிடம் உரைத்து வேண்டினார். அதற்குச் சித்தர் சிரித்தார். "உங்கள் அரசனால் எனக்கு ஆக வேண்டிய காரியம் யாதும் இல்லை; போங்கள்!" என்று அவர் போக்கி விடுத்தார். அவர் மறுத்த நிலையை மன்னன் அறிந்தான்; வருத்தம் அடையவில்லை; "இறைவன் திருவருளைப் பெற்றுள்ள ஞான யோகிகள் எவரையும் மதியார்; நித்திய முத்தியில் நிலைத்து நிற்கின்ற அவர் அநித்திய வாழ்வுகளை அவாவி உழலுகின்ற நம்மை மதியாமல் இகழ்ந்து விட்டதே அவரது மாட்சியை விளக்கியுள்ளது" என வியந்து புகழ்ந்தான். அன்று இக் குரிசில் கூறிய நீர்மைகளை அயலே காணவருகிறோம்.

மன்னன் மொழிந்தது.

மன்னன்முன் அமைச்சர் சித்தர் மறுத்துரை மாற்றம் கூற
முன்னவன் அருள்பெற்று இம்மை மறுமையும் முனிந்தயோகர்
இந்நில வேந்தர் மட்டோ இந்திரன் அயன்மால் ஏனோர்
தன்னையும் மதிப்பரோ? என்றிருந்தனன் தருமவேந்தன்.

[திருவிளையாடல்]

காண விழைந்து அழைத்த தன் ஆணையை மறுத்து அவமதித்திருந்த சித்தரை இவ்வேந்தன் இவ்வாறு உவந்து உரைத்துள்ளான். இவனது மனநிலையும் மதி நலனும் பெருந்தன்மையும் இதனால் தெரிய நேர்ந்தன. தருமவேந்தன் என்றது இவனுடைய புண்ணிய நீர்மைகளை எண்ணியுணர வந்தது. சிறந்த பண்பாடுகள் நிறைந்துள்ள இடத்தில் செருக்கு சினம் முதலிய சிறுமைகள் மறைந்து போகின்றன; போகவே அரிய பெரிய குணங்களும் அதிசய மகிமைகளும் வளர்ந்து வருகின்றன.

சிறிய புன்மைகள் மருவிய பொழுது மனிதன் சின்னவனாயிழிந்து இன்னலுழந்து படுகிறான். பெரிய நீர்மைகள் பெருகி வருங்கால் அவன் பெருந்தகையாளனாய் உயர்ந்து அரிய மேன்மைகளை அடைந்து அதிசய கதிகளில் துதிகொண்டு திகழ்கிறான்.

நல்ல எண்ணங்களால் தன்னை நன்கு உயர்த்திக்கொள்ளுகிறவன் எல்லா நன்மைகளையும் ஒருங்கே அடைந்து ஒளி மிகுந்து நிற்கின்றான். புல்லிய மாசுகளை நீக்கி நல்ல தேசுகளை வளர்த்து வருகிற அரசன் தன்னையும்நாட்டையும் தெய்வீகநிலையில்உயர்த்தி வருகிறான். உற்ற ஆட்சி உயர்வதே கொற்றவன் மாட்சியாம்.

உலகத்தை ஆளும் தலைமையோடு உதித்து வந்துள்ளமையால் அறிவு நலங்களையும் நீதி முறைகளையும் நெறியே பயின்று துறைதோறும் தெளிந்து வேந்தன் நேரே உயர்ந்துகொள்கிறான்.

" The superior man raises himself continually in intelligence and in power of judgment. " [Confucius]

"நீதி முறையிலும் அறிவிலும் நாள்தோறும் தன்னை உயர்த்திக் கொள்ளுகிறவன் உயர்ந்த தலைவனாகின்றான்" என்னும் இது இங்கே அறிய வுரியது. தலைமை தகுதியால் நிலைபெறுகிறது.

நெறியான நீதி மன்னனை எல்லாரும் பிரியமாப் புகழ்ந்து போற்றுவர். சிறந்த கீர்த்திகள் உயர்ந்த தன்மைகளால் உளவாகின்றன. நீர்மையாளனை உலகம் உவந்து வாழ்த்தி வருகிறது.

"குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்லிசை நிலைஇய பண்பின்
நல்லியக் கோடன்." (சிறுபாண்)

பிறரிடம் நில்லாமல் செல்லுகின்ற புகழைத் தன்னிடம் நிலைத்து நிற்கும்படி செய்த பண்பினன் எனக் கோடன் என்னும் குறுநில மன்னனை இது குறித்துள்ளது. நல்ல பண்புகள் தோய்ந்து எல்லாரும் இன்புற ஆய்ந்து புரிந்து நலம் பல பெறுக.

---

793 கரிபரிதேர் ஊர்ந்துவந்து காட்சி தருதல்
அரியணையில் வீற்றிருந் தாய்தல்—உரிய
பருவம் தவறாமல் பார்த்துவினை செய்து
வருவ தரசின் வகை. (ந)

இ-ள்

யானை குதிரை தேர்களை ஊர்ந்து சீரோடு உலாவருதல், குடிகளுக்கு எளிதே காட்சி தருதல், அரியணையில் அமர்ந்து நீதி

விசாரணை புரிதல், பருவம் தவருமல் கருமம் கருதல், தரும நீதி புரிதல் முதலியன அரசனுக்கு உரிய கடமைகளாம் என்க.

வேந்தர் நிலைகள் விழுமிய கலைகளாய் விளங்கி யுள்ளன.

அரசனைத் தெய்வத்தின் பிரதிநிதி என்று வையம் வணங்கி வருவது பண்டு வழக்கமாய் வந்தது. திருவிழாக் காலங்களில் தெய்வ உருவம் வீதிகளில் உலாவருதல் போல் அரசரும் உரிய நாள்களில் பவனி வருதல் அவனி மரபு. அரிய பாதுகாவலுடைய பெரிய அரண்மனையில் இருப்பவன் ஆதலால் அரசனை எல்லாரும் எளிதே காண முடியாது; பலரும் ஒருங்கே காணுமாறு யானை சிவிகை முதலிய ஊர்திகளில் வெளிவருதல் அளி புரிந்த காட்சியாய் அமைந்து வந்தது. அரசுகளின் இயல்பான செயல் முறைகள் வரிசை மரபுகளாய் மருவி வந்துள்ளன.

அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய்மணிப்
புரைசை யானையின் வீதியில் போகவும்,
விரைசு கோலங்கள் காண விதியிலேன்
உரை செய்து என்னை? என் ஊழ்வினை உன்னுவேன்.
(இராமா, சூளாமணி 36)

சீதை பிரிந்து இலங்கைச் சிறையில் வருந்தி யிருந்த போது இராமனை நினைந்து இப்படி மறுகி யிருக்கிருள். தன் நாயகன் அரசர் பெருமானாய் அரியணையில் அமர்ந்திருக்க, யானை மேல் ஊர்ந்து வீதிகளில் பவனிவர, அரிய மணி அணிகள் பூண்டு கொலுவீற்றிருக்க, இராச கம்பீரமான அந்த அழகிய காட்சிகளைக் கண்டுமகிழும் பாக்கியத்தை இழந்த பாவி என அத்தேவி தன்னை நொந்து தவித்திருக்கும் நிலை உன்னியுணரவுரியது. அரிய குல அரசி ஆதலால் உரிய நாயகனை எண்ணி இவ்வாறு உருகி யிருக்கிருள். சக்கரவர்த்தி மகனைத் தக்க வகையாக் கருதினுள்.

வீதிவாய்ச் செல்கின்ருன் போல் விழித்து இமையாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் தேரில் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்.
(இராமா, உலாவியல் 6)

மிதிலையில் மணமகனாய் இராமன் உலாவந்த காட்சியை இது காட்டியுள்ளது. தேரில் சென்ற இராமனது பேரழகையும்,

வீதிகளில் திரண்டு நின்று கண்ட மங்கையர்களின் மகிழ்ச்சி நிலைகளையும், கவியின் சுவையையும் ஒருங்கே நோக்கி நாம் உவகைமீக் கூர்கின்றோம். வாள் வேல் முதலிய படைக்கலப் பயிற்சி போல் யானை ஏற்றமும் குதிரை ஏற்றமும் அரசர்க்கு உரியன. குடை நிழல் அமர்ந்து குஞ்சரம் ஊர்ந்தோர் என வேந்தர் இவ்வாறு ஏந்திய புகழோடு எழில் தோய்ந்து வந்துள்ளனர்.

பிரச்சோதனன் என்பவன் அவந்தி தேசத்து வேந்தன்; உஞ்சையம்பதியிலிருந்து அரசு புரிந்தவன். அவனுடைய பட்டத்து யானைக்கு நளகிரி என்று பெயர். அது சிறந்த அழகும், உயர்ந்த நிலையும், மிகுந்த வலியும் உடையது. ஒரு நாள் மதம் மீறி அது வெளி ஏறியது; நகரவீதிகளை நாசம் செய்தது; மாந்தர் வெருவி மறுகி ஓடினர்; அச்சமும் அல்லலும் உச்ச நிலையில் ஓங்கி நின்றன. அப்பொழுது அங்கே வந்திருந்த உதயண மன்னன் அதனை அடக்க நேர்ந்தான். யானைச்சாதியின் இயல்புகளையெல்லாம் நன்கு தெரிந்தவன்; வீணையில் வல்லவன்; நல்ல வாலிபன்; இசை நுணுக்கங்களை இனிது தெளிந்தவன்; உறுதியும் ஊக்கமும் பெரிதும் உடையவன்; வெறி கொண்டு நின்ற அந்த யானை எதிரே நேரே சென்றான்; கொலை நோக்கோடு குறித்து நின்ற அது இவன் தலையை நோக்கியது; நோக்கவே தன் கையில் இருந்த வீணையில் ஓர் இனிய இசையை எழுப்பினான்; அம் மதகரி அடங்கி வந்து இவன் முன் வணங்கி நின்றது; அதன் மத்தகத்தில் இவன் விரைந்து ஏறினான்; ஏறவே ஊரார் எல்லாரும் ஆனந்தம் மீதூர்ந்து யாண்டும் வியந்து ஆரவாரங்கள் செய்தனர்.

“ வீணை எழீஇ வீதியின் நடப்ப
ஆணை ஆசாற்கு அடியுறை செய்யும்
மாணிபோல மதக்களிறு படியத்
திருத்தகு மார்வன் எருத்தத்து இவர
அண்ணல் மூதூர் ஆர்ப்பொடு கெழுமி
மன்னவன் வாழ்க வத்தவன் வாழ்க
ஒலிகெழு நகரத்து உறுபிணி நீக்கிய
வலிகெழு தடக்கை வயவன் வாழ்கெனப்
பூத்தூய் வீதிதோறு ஏத்தினர் எதிர்கொள
அவந்தி அரசன் உவந்தனன் விரும்பி.” (பெருங்கதை, 2)

யானையை நேரே அடக்கி உதயணன் அருந்திறல் புரிந்துள்ளதை

இது வரைந்து காட்டியுள்ளது. ஆட்சி புரிய நேர்ந்த அரசனிடம் எவ்வளவு மாட்சிகள் அமைந்திருக்க வேண்டும் என்பதை இவன் சரிதம் ஓரளவு உணர்த்திப் பேரிசைகளை விளக்கி நின்றது.

கலைகள் பல பயின்று அறிவு நிலைகள் தெளிந்து உலகம் நலமுற உறுதி நலங்கள் புரிந்து வருபவன் உயர்ந்த அரசனாய் ஒளி மிகுந்து திகழ்கிறான். பருவ காலங்கள் தவறாமல் கருமங்களைக் கருதிச் செய்துவரின் தருமங்கள் பெருகி வருகின்றன. உரிமையை ஓர்ந்து செய்வதில் பெருமைகள் சேர்ந்து விளைகின்றன. வினைவைஓர்ந்து விதிமுறைதேர்ந்துபுரிந்துவிழுமியன் ஆகுக.

---

794 தன்னிலத்தில் வாழும் தனிக்குடிகள் என்றுமே
பொன்னிலத்தில் வாழும் புனிதர்போல்—உன்னியுளம்
ஓகை புரிந்துவர ஓர்ந்தரசு செய்துவரின்
வாகை வளர்ந்து வரும். (ச)

இ-ள்

தன் நாட்டில் வாழும் குடிசனங்கள் யாவரும் பொன் நாட்டில் வாழும் தேவர்கள் போல் உள்ளம் உவந்து வாழ ஓர்ந்து வழி செய்துவரின் அந்த அரசு எந்த வகையிலும் உயர்ந்து அதிசய வெற்றியை அடைந்து யாவரும் துதிசெய்ய வரும் என்க.

ஆட்சியிலுள்ள உன் நாட்டைப் பொன் நாடாகச் செய்து மாட்சி அடைக என மன்னனுக்கு இது உணர்த்துகின்றது.

தலைமையாய் ஆளும் உரிமையை அடைந்து வந்துள்ள அரசன் நிலைமையாய் வாழும் உரிமையை மருவி வந்துள்ள மனித சமுதாயத்தின் நலங்களை நாளும் நாடி நயமாய் வினை புரிந்து வருவது வியனான விதி நியமமாய் அமைந்தது. அல்லல்கள் யாதும் அணுகாமல் நல்ல சுக வாழ்வுகள் நாட்டில் தழைத்து வர உழைத்து வருபவனே உலகத் தலைவனாய் நிலைத்து வருகிறான்.

ஒரு குடியை ஒப்பி வருகிற குடும்பத் தலைவன் இடும்பைகள் பல அடைய நேர்ந்தாலும் உறுதி ஊக்கங்கள் குன்றாமல் அறிவோடு முயன்று நெறியே பேணி நெடும் புகழ் அடைகின்றான். தான் பிறந்த குடியைச் சிறந்த நிலையில் செம்மையா உயர்த்தியருள்பவனே உயர்ந்த ஆண் மகன் ஆகின்றான். ஆண்

மை என்னும் சொல் ஆளும் தன்மை என மேன்மையான பொருளை மருவியிருத்தலால் அதன் பான்மையை உணர்பவர் பலவும் தெளிந்து நலமானநிலையில் நன்கு உயர்ந்து கொள்ளுவர்.

பிறந்த குடியையும் பெற்ற நாட்டையும் பேணிக் காத்துச் சிறந்ததாகச் செய்து வருபவனே உயர்ந்த ஆண் மகனாய் ஒளி பெற்று நிற்கின்றான். ஆண்மையை மருவி வந்துள்ள தனது மேன்மையை உணர்ந்து கடமையைச் செய்துவரின் அவன் கரும வீரனாய்ப் பெருமைமிகப் பெறுகிறான். வினையாண்மையிலேயே எல்லா ஆண்மைகளும் ஒருங்கே விளைந்து வருகின்றன.

வினைக்கும் செய்பொருட்கும் வெயில் வெஞ்சுரம்
நினைத்து நீங்குதல் ஆண்கடன்; நீங்கினால்
கனைத்து வண்டுணும் கோதையர் தம்கடன்
மனைக்கண் வைகுதல் மாண்பொடு எனச் சொன்னான்.

(சீவகசிந்தாமணி)

அரிய வினைகளைச் செய்து பெரிய பொருள்களை ஈட்டி உரியவரை ஆதரிப்பது ஆண்கடன்; மனையுள் வைகி மகிமையோடு இருப்பது பெண்கடன் எனச் சீவக மன்னன் தன் மனைவியிடம் இன்னவாறு இருபாலாரின் கடமைகளை இனிதுகூறியிருக்கிறான்.

ஆளும் தன்மையை உரிமையா அமைந்து வந்துள்ள அரசன் மேன்மையான ஆண்மையாளன் ஆதலால் அவன் நாளும் நன்று ஆற்றியருள்வது வென்றி வீரமாய் வந்தது. வறுமை சிறுமை மடமை மடிமை கொடுமை பகைமை முதலிய துயரினங்கள் யாதும் காணாமல் கடிந்து உயிரினங்களை முறையோடு பேணி வருபவன் உயர்குல அரசனாய் ஓங்கி உலகம் புகழ நிலவி நிற்கின்றான் இதம் செய்பவன் எவ்வழியும் சிறந்து திகழ்கிறான்.

புரவலன் என அரசனுக்கு உரிமையாய் அமைந்த பெயர் தேசத்தையும் சீவகோடிகளையும் அவன் புரந்துவரும் நீர்மையை விளக்கிச் சீர்மையாய் வந்துள்ளது. தான் புனிதனாய் நின்று மனித சமுதாயத்தை இனிது பேணி வருபவன் மகிமை மாண்புகள் பெருகி மன்னிய புகழோடு யாண்டும் மருவி வருகிறான்.

மன்னிய பகைக்குழாம் ஆறும் வையகம்
துன்னிய அரும்பகைத் தொகையும் இன்மையால்
தன்னையும் தரையையும் காக்கும் என்பதம்
மன்னவன் திறத்தினி மருள வேண்டுமோ? (1)

நாமவேல் நரபதி உலகம் காத்த நாள்
காமவேள் கவர்கணை கலந்த தல்லது
தாமவேல் வயவர்தம் தழலங் கொல்படை
நாமநீர் வரைப்பகம் நலிவ தில்லையே. (2)

ஆறில்ஒன்று அறம்என அருளின் அல்லது ஒன்று
ஊறு செய்து உலகினின் உவப்ப தில்லையே;
மாறி நின்றவரையும் வணக்கின் அல்லது
சீறி நின்று எவரையும் செகுப்பது இல்லையே. (3)
(சூளாமணி)

பிரசாபதி என்னும் அரசன் குடிகளை உரிமையோடு ஆதரித்து வந்த நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. கவிகளில் மருவியுள்ள பொருள்கள் கருதி யுணர வுரியன. சிறந்த குணசாலியாய் நின்று அரசை ஆண்டு வந்திருத்தலால் பல வகையான இன்ப வளங்கள் நாட்டில் நிறைந்து நலம் சுரந்து வந்துள்ளன.

நெறியுடைய நீதிமான் அரசனாய் அமையின் அந்த நாடு கல்வி செல்வம் அறிவு அழகு முதலிய நிலைகளில் தலை சிறந்து விளங்கும்; இனிய போக பூமிபோல் அது தனி மகிமையாய்த் தழைத்து நிற்கும் என உலக சரித்திரங்கள் உரைத்திருக்கின்றன.

உருவில் மைந்தரில் வேனில்வேட்கு உடைகுநர் இல்லை;
பொருள் இல்லார்களில் தனதனைப் பொருவிலார் இல்லை;
தெருளில் மாக்களில் சேடனில் தாழ்குநர் இல்லை;
அருள் இல்லார்களில் ஐந்தரு நிகர்க்கலார் இல்லை.
(நைடதம்)

நள மன்னனது ஆட்சிக் காலத்தில் நிடதநாடு இருந்த நிலையை இது விளக்கியுள்ளது. மன்மதனிலும் பேரழகினர், குபேரனிலும் பெரு நிதியினர். ஆதிசேடனிலும் சிறந்த அறிவினர், ஐந்தருக்களினும் உயர்ந்த கொடையினர் அங்கே நிறைந்திருந்தனர் எனக் கவி வரைந்து குறித்திருப்பதை உவந்து நோக்கி வியந்து நிற்கிறோம். இன்பக் காட்சி ஆட்சியைக் காட்டியது.

வறியன் ஆவன் வடதிசை மன்னவன்;
அறிவி லாளன் அனந்தனும் ஆவன்; ஏர்
சிறியன் ஆவன் சிலைமதன்; பூம் பொழில்
வெறி யுலாவும் விளவலத்து எய்தினே. (பிரபுலிங்கலீலை)

மமகாரன் என்னும் அரசனது ஆட்சிக்காலத்தில் அவனுடைய நாடு இருந்த நிலையை இது காட்டியுள்ளது. நீதி மன்னரது நெறி முறையில் நிலம் அதிசய நிலைகளை அடைந்து அரிய பல வளங்களோடு விளங்கும் என்பது நன்கு உணர்ந்து கொள்ள வந்தன.

---

795 தத்தம் தலையில் தனிமுடிபூண் டுள்ளதுபோல்
ஒத்த குடிகள் உளமகிழ—வித்தகமாய்
ஆண்டுவரின் அவ்வரசை ஆண்டவனும் மேலாக
வேண்டி வருவன் விழைந்து. (௫)

இ-ள்

தங்கள் தலையிலேயே மணிமுடி சூடியிருப்பதாக மக்கள் எவரும் ஒக்க நினைந்து உளம் மகிழ்ந்து வர அரசை ஆண்டுவரின் அந்த வேந்தனைக் கடவுளும் விழைந்து உவந்து தழுவிக் கொள்வர்; ஆகவே சீவர்களுக்கு இதம் செய்து திவ்விய நிலையை அடைக என்பதாம்.

இது குடித் தலையை முடித்தலை ஆக்குக என்கின்றது.

இனிமையான காட்சிகளையும் இன்பமான பொருள்களையும் இதநலங்களையுமே மனிதர் யாண்டும் விரும்பி வருகின்றனர். கொடுமைகளையும் கடுமைகளையும் துயரங்களையும் கண்டால் எவரும் அஞ்சி வெறுக்கின்றனர். ஐம்புலன்களும் இன்பநலன்களையே அவாவி அலைகின்றன; ஆகவே துன்பம் தோய்ந்தபோது துடித்து வருந்துகின்றனர். காற்று உயிர் ஆதாரமானது; அது இல்லையானால் உயிர் வாழ்வு இல்லை; ஆயினும் அது இதமாய் அமைந்த போதுதான் இன்புறுகின்றனர்; கடுமையாய் மோதினால் பேய்க் காற்று என்று இகழுகின்றனர்; இனிமையாய் வீசினால் இளந்தென்றல் என்று உளம் உவந்து கொள்ளுகின்றனர். மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங் காற்றே என இளந் தென்றலை ஈசனாக உவந்து இராமலிங்க அடிகள் இவ்வாறு பாடியிருக்கின்றார். உள்ளத்திற்குஇனிமையானதைஉயிர்க்குஉயிரான பரமன் எனப் பத்திப் பரவசத்தால் பாராட்டியுள்ளார். ஆதரவாய் இன்பம் தருவன எல்லாம் ஆதிமூலமே என மேலோர் ஓதி உருகுகின்றார். இறைவன் சுக சொரூபமாய் மிளிர்கின்றான்.

சந்திரன் இருளை நீக்கி எங்கும் இதம் செய்தலால் அமுதம் உடையது என மாந்தர் அதனை உவந்து கொண்டாடி வருகின்றார். ஒரு நாள் மதி உதயம் ஆயது; கலைகள் நிறையவில்லை; பிறை ஆகவே இருந்தது; குறையாயிருந்தாலும் உலகில் இருளை ஒழித்து ஒளியைப்பரப்பி உயிரினங்களுக்கு அது உதவி புரிந்தது.

நல்ல அரச குடியில் பிறந்தவர் இளைஞர் ஆயிருந்தாலும் துயர்களை நீக்கித் தன் நாட்டிலுள்ள குடிசனங்களை நன்கு பாதுகாத்து இதம் புரிவர் என்பதை அந்தப் பிறைக் காட்சி எங்கும் தெளிவா உணர்த்தி மன்னர் குல மாட்சியை நன்னயமா விளக்கி நின்றது. அயலே வருவது இங்கே அறிய வுரியது.

"இளையர் ஆயினும் பகைஅரசு கடியும்
செருமாண் தென்னர் குலமுதல் ஆகலின்
அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
புன்கண் மாலைக் குறும்புஎறிந்து ஓட்டிப்
பான்மையில் திரியாது பாற்கதிர் பரப்பி
மீனரசு ஆண்ட வெள்ளி விளக்கத்து." (சிலப்பதிகாரம், 4)

பாண்டிய மன்னருடைய குல முதல்வன் ஆதலால் இளம் பிறையாயிருந்தாலும் சந்திரன் இருளை நீக்கி உலகிற்கு இன்பம் பயந்தான். இந்த அரசர் மரபில் பிறந்தவர் இளையராயிருந்தாலும் அரசியல் முறைகள் யாவும் தெரிந்து அவல நிலைகளை நீக்கி நீதி நெறியே உலகைப் பேணியருளுவர் என்பது இங்கே காண வந்தது. இயற்கைக் காட்சியால் இறைமாட்சி விளங்கியது.

மாந்தர் எவ்வழியும் இனியராய் வாழ வழிகோலி அருளுவதே செங்கோல் வேந்தரின் சீரிய கடமையாம். சுதந்தரவுணர்வு மானம் மரியாதை முதலிய உயர்ந்த பண்பாடுகளோடு யாவரும் உவந்து வாழ்ந்து வர உதவி புரிந்து வரும் அரசை உயிரினும் இனியனா எண்ணி உலக மக்கள் புகழ்ந்து போற்றி வருவர்.

இராமன் அரியணையில் அமர்ந்து மணிமுடி சூடியபொழுது மாந்தர் யாவரும் அதிசய பரவசராய் மனம் மிக மகிழ்ந்தனர். அந்த மகிழ்ச்சி நிலையைக் கவி அழகாக வரைந்து காட்டியிருக்கின்றார். அயலே வருவன ஈண்டு உய்த்து நோக்கி உணர வுரியன.

சித்தம் ஒத்தனன்என் றேதும் திருநகர்த் தெய்வச் செல்வ
உத்தமத்து ஒருவன் சென்னி விளங்கிய உயர்பொன் மௌலி

ஒத்தழு வுலகத் தோர்க்கும் ஓங்கிய உவகை ஓரின்
தத்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தெனத் தளர்வு தீர்ந்தார்.

பன்னெடுங் காலம் நோற்றுத் தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற
பின்னெடுங் கணவன் தன்னைப் பெற்றிடை பிரிந்து முற்றும்
தன்னெடும் பீழை நீங்கத் தழுவினுள் தளிர்க்கை நீட்டி
நன்னெடும் பூமி என்னும் நங்கைதன் கொங்கை ஆர. (2)

(இராமா, திருமுடிசூட்டு படலம்)

இந்தக் கவிகளைக் கருதிக் காணுங்கள்; பொருள் நிலைகளைத் துருவி நோக்கி உரிமையோடு ஓர்ந்து உணருங்கள். சமத்துவம், சகோதரத்துவம், பொதுவுடைமை, மக்கள் ஆட்சி, குடியரசு என இந்நாளில் பெரிய ஆரவாரமாய்ப் பேசி வருகிற படிநிலைகள் எல்லாம் இந்த முடியரசு எதிரே அடிசாய்ந்து வீழ்ந்துள்ளன.

ஒவ்வொரு மனிதனும் மணிமகுடம் தரித்த மன்னனாய் மகிழ்ந்து வாழ இராமன் மன்னி இருந்துள்ளதை உன்னி யுணர்ந்து உவகைமீக் கூர்கின்றோம். அந்தப் புண்ணிய மூர்த்தியை எண்ணி வியந்து இன்பம் மீதூர்கின்றோம். மாட்சிமையுடைய மகிமையான அந்த இனிய வாழ்வை எந்த ஆட்சியில் காண்பது? இதனை ஈண்டு நன்கு சிந்தனை செய்ய வேண்டும்.

அரசன் புனிதம் நிறைந்த புண்ணியவானாய் அமைந்த பொழுது அந்த நாடு இன்பபோகங்கள் யாவும் சுரந்த புண்ணிய லோகமாய்ப் பொலிந்து விளங்குகிறது. அங்கே வாழுகின்றவர் சுவர்க்க வாசிகள்போல் எவ்வழியும்சுகமாய்ச் சுகித்து வருகிறார்.

சிறந்த நீதி முறையான உயர்ந்த ஆட்சிக்கு அடையாளம் எல்லாரும் இனியராய் உயர்ந்து இன்பமா வாழச் செய்வதே யாம். அரசின் அன்பும்ஆதரவும் இன்பவாழ்வை அருளுகின்றன.

"Morality is kindness to the weak." (Jesus)

"நீதிநெறி என்பது ஏழைகளுக்கு இரங்குவதே" என ஏசுநாதர் இவ்வாறு செவ்விய அருளோடு கூறியிருக்கிறார்.

"Morality is the bravery of the strong." (Nietzsche)

"பலசாலிகளுக்குத் தைரியமாயிருப்பதே நீதிமுறை" என நீட்சே என்பவர் நியாயநிலைக்குஇங்ஙனம் பொருள்குறித்துளார்.

"Morality is the effective harmony of the whole." [Plato]

"எல்லாரும் இனியராய் வாழச் செய்வதே நல்ல நீதிமுறை" என் பிளாட்டோ என்பவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். நியாய நீதிகளைக் குறித்து மேல் நாட்டு மேதைகள் கூறியுள்ளவைகளை இங்கே கூர்ந்து பார்க்கிறோம். மெலியர் வலியர் முதலிய எல்லாரும் சுகமா இனிது வாழ இதம் புரிவதே நல்ல அரசாட்சியாம். உண்மையைக் கருதி யுணர்ந்து யாண்டும் உதவி புரிந்து உயர்க.

---

796 எவ்வுயிரும் காப்பவன் ஈசனே ஆனாலும்
இவ்வுலகம் காக்கும் இறைமையைச்—செவ்வியுடன்
தந்தருளி யுள்ளமையால் தார்வேந்தன் சீரோர்ந்து
முந்தறிய வுள்ளான் முதல். (சு)

இ-ள்

எல்லா உயிர்களையும் ஈசனே காக்கின்றான்; ஆயினும் இந்த உலகத்தைக் காத்துவரும் உரிமையை அரசனுக்கு அப்பரமன் அருளியிருக்கிறான்; ஆகவே அந்நிலைமையை உணர்ந்து நீதி செய்து வருவது அரசனுக்குத் தலைமையான கடமையாம் என்க.

தனது தலைமை நிலைமை உரிமை கடமைகளைத் தெளிவாக ஓர்ந்து உணர்ந்தபோதுதான் தன் கருமங்களை வேந்தன் சரியாகத் தேர்ந்து செய்ய நேர்கின்றான். மனிதசமுதாயம் சுகமாகவும் நலமாகவும் வாழ்ந்துவர வழி கோலித் துறைகள் தோறும் கூர்ந்து முறை செய்து வருகின்றவன் இறைமையின் பெருமையைத் தனி யுரிமையாக எய்தி உயர் மகிமை பெறுகின்றான்.

இறைமை என்னும் சொல் நிறைந்த பொருளுடையது. தலைமை, தெய்வத்தன்மை, இராச்சிய முறை, அரசாட்சி, பரிபாலன நிலை முதலிய பொருள்களை உணர்த்தி வருகிறது. தோன்றியுள்ள மொழி ஆன்ற தலைமையில் தோய்ந்துள்ளமையால் அது இங்கே ஊன்றி உணர்ந்து உரிமை காண வந்தது.

உலகில் நேருகின்ற தீதுகளை நீக்கி உயிரினங்களை இனிது பாதுகாத்து வரும் அளவே அரசன் உயர்வடைந்து வருகிறான். குடிகளைக் காப்பது அரசனது கடமை; தன் கடமையைக் கருத்தூன்றிச் செய்து முடித்து வருபவன் சிறப்புகளை எய்தி உயர்கின்றான். சீவர்களைக் காத்தருளும் சீர்மை ஈசனுக்கு இயல்

பான நீர்மையாய் அமைந்துள்ளமையால் அந்தக் காப்பு முறையைப் பிறப்புரிமையாப் பெற்று வந்துள்ள அரசனும் தேய்வீக நிலையில்சேர்ந்து தன் சிறப்பானகடமையைச்செய்யநேர்ந்தான்.

எவ்வுயிரும் காக்கஒரு ஈசன்உண்டோ இல்லையோ
அவ்வுயிரில் யான்ஒருவன் அல்லேனோ---வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதேன் அன்னே
வருகுவது தானே வரும். (திருவள்ளுவர்)

கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்
விருப்புற்று அமுதளிக்கும் மெய்யன்---உருப்பெற்றால்
ஊட்டி வளர்க்கானோ ஓகெடுவாய் அன்னாய் கேள்
வாட்டம் உனக்கேன் மகிழ். (அதிகமான்)

இட்டமுடன் என்தலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவ னும்செத்து விட்டானோ---முட்டமுட்டப்
பஞ்சமே ஆனாலும் பாரமவ னுக்கன்னாய்!
நெஞ்சமே அஞ்சாதே நீ. [ஔவையார்]

உலக உயிர்களைக் காத்தருளுவது பரமனே என்பதை இவை சுவையாக வரைந்து காட்டியுள்ளன. காவல் உரிமையில் தேவனோடு பங்காளியாய் நேர்ந்துள்ள காவலன் தனது கருமத்தைச் சரியாகச் செய்துவரும் அளவு அவனது பிரியத்தைப் பெறுகிறான்.

அரசியல் கோடாது அரனடியார்ப் பேணும்
முரசியல் தானைவேல் மன்னர்---பரசோன்
கழலிணை பொதுவில்காப் பாக
வழி வழி சிறந்து வாழியர் பெரிதே.

(சிதம்பரச் செய்யுட் கோவை)

அரசியல் கோடாமல் நல்லோரைப் பேணிவருகிற அரசன் இறைவனுடைய உறவைத் தனி உரிமையாக எய்தி வழி வழியே சிறந்து வாழுவான் என இது உணர்த்தியுள்ளது. பரசு = மழு. பரசு பாணியான சிவபெருமான் கருணையை வரிசையோடு அரசு புரிபவன் எளிதே அடைந்து கொள்ளுவான் என்றதனால் நல்ல ஆட்சியால் வரும் மாட்சியை இங்கே நன்கு அறிந்து கொள்ளுகிறோம். சீவர்களை ஆதரிப்பதால் திவ்விய மகிமை விளைகின்றது.

நெறிமுறை ஒழுகி நீதி நிலையாய் உயிர்களை ஓம்பி வருபவனிடம் தருமம் வளர்ந்து வருகிறது; அது வரவே அவன் புண்ணியவானாய் உயர்ந்து திகழ்கிறான்; எண்ணிய யாவும் எளிதே

எய்தப் பெறுகிறான்; அவன் நண்ணியுள்ள இடமும் நலம் பல சுரந்து வளங்கள் நிறைந்து வாழ்வுகள் உயர்ந்து வருகிறது.

பூமி சந்திரன் என்பவன் சாவக நாட்டு மன்னன்; நாக புரம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தான். அவனுக்கு ஒரு புதல்வன் பிறந்தான்; சிறந்த பல குணங்கள் அவனிடம் நிறைந்திருந்தன. தரும நீர்மைகள் பெருகியிருந்தமையால் புண்ணிய ராசன் எனப் புகழ் மிகுந்து விளங்கினான். அவனுடைய ஆட்சிக் காலத்தில் அந்நாடு செல்வ வளங்கள் மலிந்து பல்வகை நலங்களும் பொலிந்து எவ்வழியும் இன்ப நிலையமாய் விளங்கியது.

"நாக புரம்இது நன்னகர் ஆள்வோன்
பூமிசந்திரன் மகன் புண்ணிய ராசன்
ஈங்கிவன் பிறந்த அந்நாள் தொட்டும்
ஓங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது;
மண்ணும் மரனும் வளம்பல தரூஉம்;
உண்ணின்று உருக்கு நோய்உயிர்க்கு இல்எனத்
தகைமலர்த் தாரோன் தன்திறம் கூறினன்."

(மணிமேகலை, 24)

துறவிகளும் முனிவர்களும் இன்னவாறு உவந்து புகழ அவன் உயர்ந்திருந்தான். மன்னன் இனிய குணநீர்மைகள் உடையனாய் மக்களை உரிமையோடு ஆதரித்துவரின் அவன் தனி மகிமையில் உயர்கிறான்; அவனது நாடு பீடும் பெருமையும் பெறுகின்றன; வானம் அங்கே வாரி வழங்குகிறது; வையம் வளம் சுரந்து அருளுகிறது; தெய்வத்திருவருளும் சிறந்து திகழ்கிறது என்னும் உண்மையை அவன் சரிதம் இங்கே நன்கு விளக்கியுள்ளது. இறையுரிமையை முறையோடு செய்து துறை தோறும் ஆய்ந்து இதம் புரிந்து நிறைபுகழோடு நிலவி வாழுக.

---

797 மன்னன் வழிமுறையே மன்னுயிர்கள் வாழ்ந்துவரும்
அன்ன இயல்பால் அவன்என்றும்—தன்னைப்
புனித நிலையிலே போற்றிவர நேர்ந்தான்
துனிசிறிது நேரின் துயர். (எ)

இ-ள்

மாந்தர் யாவரும் வேந்தன் புரிந்த வழியே நடந்து வாழ்ந்து வருவர்; ஆகவே என்றும் அவன் புனித நிலையில் தோய்ந்து

எவ்வழியும் இனிது இருக்க நேர்ந்தான்; அவனிடம் பிழை சிறிது நேரினும் துயர் மிகவும் பெருகிப் பழிகள் பரவிவிடும் என்க.

ஒருவரோடு ஒருவர் சேர்ந்து அளவளாவி வாழ்ந்து வரும் இயல்பு மனித இனத்திடம் தலைமையாய் அமைந்திருக்கிறது. எறும்பு முதலிய சிறிய பிராணிகளிடமும் இந்த நிலைமை மருவியுள்ளதை யாண்டும் கண்டு வருகிறோம். சுற்றம், உறவு, கிளை என்னும் மொழிகள் மனிதனுடைய பக்கச் சூழல்களை நன்கு விளக்கிவருகின்றன. புடைசூழ்ந்துள்ள தொடர்புகளின்படியே எவனும் நடை தோய்ந்து வெளியே தெளிவோடு திகழ்கிறான்.

அகம் புறம் என்னும் இருவகை நிலைகளில் சீவர்களுடைய வாழ்வுகள் உருவாகி மிளிர்கின்றன. உள்ளே மனம்; வெளியே இனம். புனிதமான இனிய மனம் இருமையும் பெருமையா இன்பம் தருகிறது; அத்தகைய இனமும் அவ்வாறே புரிகிறது. இவை பிழையுடையன வாயின் அந்த மனித வாழ்வு எவ்வழியும் பழி துயரங்களேயாம். இயற்கை செயற்கைகளாய் அமைந்த மனமும் இனமும் நல்லனவாயின் அந்த மனிதன் நல்லவனாய் உயர்ந்து நலம் பல காணுகிறான்; அல்லனவாயின் அவலமாய் இழிந்து தாழ்கின்றான். மனத்தாலும் இனத்தாலும் மாந்தர் உருவாகி வருவது ஓர்ந்து உணர்ந்து கூர்ந்து தெளிய வுரியது.

மனத்தானும் மாந்தர்க்கு உணர்ச்சி; இனத்தானும்
இன்னான் எனப்படும் சொல். (குறள், 453,)

மனம் இனம் என்னும் இருவகைத் தொடர்புகளையும் குறித்து உணர்த்தியுள்ள இதனைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும். தான் சேர்ந்த இனத்தின் படியே மனிதன் வெளியே தலை நீட்டி வருகிறான். நல்லவன், தீயவன், பெரியவன், சிறியவன் என இன்னவாறு உலகில் ஒருவன் உலாவி வருவது அவன் சேர்ந்த இனத்தின் தன்மைகளைப் பொறுத்தே யாண்டும் நிகழ்கின்றது.

நீ நல்லவனாய் உயர வேண்டுமானால் நல்ல இனத்தோடு சேர்ந்து பழகுக என மனித சமுதாயத்துக்குத் தேவர் இவ்வாறு புனித போதனையை அதி விநயமா இனிது செய்திருக்கிறார்.

சார்ந்த சார்பின்படியே மனிதன் நேர்ந்து வருதலால் தான் சாரும் இனத்தின் சீர்மை நீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். செம்மையான இனத்தைச்

சேர்ந்துவரின் யாண்டும் நன்மையே நீண்டு விளைந்து வரும்.

"I live not in myself, but I become portion of that around me." [Byron]

"நான் தனியே இல்லை; என்னைச் சூழ்ந்துள்ள சூழலின் பாகமாகவே ஆகியுள்ளேன்" என பைரன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார். சுற்றுச் சார்பு மனிதனைப் படைத்துவரும் விசித்திர நிலையை இவர் நன்கு விளக்கியுள்ளார்.

"I am a part of all that I have met." (Tennyson)

"நான் சந்தித்துள்ள சார்பின் அளவே வாழ்வில் நான் மருவியிருக்கிறேன்" என டென்னிசன் என்னும் கவிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். சார்ந்தபடி மாந்தர் நேர்ந்து வருகின்றார்.

மனித இயல்பு இன்னவாறு மன்னி நிற்றலால் அந்த இனத்தை இனிது ஆளவந்த மன்னன் புனித நிலையில் உயர்ந்து இனியனாயிருக்க வேண்டும். தலைமையாயுள்ள அரசனது நிலைமையின் படியே உலக மக்கள் ஒழுக நேர்வர் ஆதலால் அவன் விழுமிய நிலையில் இல்லையாயின் அந்நாடு இழிவுகள் பல அடைய நேரும். மன்னன் நோக்கே மன்பதை போக்கு என்பதை அறிக.

இகழின் இகழ்ந்துஆங்கு இறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப---இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை. (நீதிநெறி விளக்கம், 44)

நீர் ஓட்டத்தின் படியேசெல்லுகின்ற தெப்பம்போல அரசனுடைய போக்கின் படியே குடிசனங்கள் போவர் என இது குறித்துள்ளது. உவமைக் குறிப்பால் இருவகை நிலைகளையும் உணரலாகும். ஆதாரமும் ஆதேயமும் அறிய வந்தன. அரசனுக்கு மாறாக யாதும் கூறாமல் அவனது போக்கின் படியே மனித சமுதாயம் போகும் ஆதலால் நீரில் மிதந்து செல்லும் மிதவை அதற்கு நேரான உவமையாய் நேர்ந்து வந்தது.

முடி எவ்வழி அவ்வழியே குடி என்பது முதுமொழி.

மாந்தர் இனியராய் மாண்பு மிகுந்து வாழ்வது வேந்தனது நீர்மையால் விளைந்து வருகிறது. பலருடைய வாழ்வு நலம் அடைந்துவரத் தான் தலைமையாய் நிலைத்து நிற்றலால் தன்பால்

பிழை புகாதபடி பேணி எவ்வழியும் செவ்வியனாய் ஒழுகி வருவது அரசனுக்கு யாண்டும் விழுமிய கடமை ஆயது.

செங்கோலும் வெண்குடையும் செம்மைக்கும் தண்மைக்கும் அடையாளமாக அமைந்துள்ளன; ஆகவே அந்த இராச சின்னங்களை உரிமையாக வுடையவன் செவ்விய நீர்மையும் எவ்வுயிர்க்கும் இரங்கி யருளும் சீர்மையும் தோய்ந்து நிற்பது சிறப்பு நிலையாய் நேர்ந்தது. உரிமை அளவு பெருமை விளைகிறது.

புனிதம் = பரிசுத்தம். மனம் மொழிகள் தூய்மையாயிருப்பவன் புனிதன் என நின்றான். துனி = குற்றம். மாசு, மறுவின்றித் தேசத்தை ஆண்டு வருபவன் யாண்டும் தேசுமிகப் பெற்றுத் திவ்விய மகிமைகளை அடைந்து திகழ்கின்றான்.

"தண்வைப்பின் நால் நாடு குழீஇ
மண்மருங்கினான் மறுவின்றி
ஒரு குடையான் ஒன்று கூறப்
பெரிது ஆண்ட பெருங்கேண்மை
அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
அன்னோன் வாழி வெல்வேல் குரிசில்."

(பொருநராற்றுப் படை)

கரிகால்வளவன் என்னும் சோழ மன்னனை இது குறித்துள்ளது. அவனுடைய குண மாட்சியும் ஆட்சியும் இங்கே அறிய வந்தன. தருமநீதிகள் தழுவி உரிமையோடு அரசு புரிந்துள்ளான். குற்றம் இலனாய்க் குண நலங்கள் பொருந்தியிருந்தமையால் மறுவின்றி என மகிமை ஒன்றி நின்றான். நல்ல தன்மைகள் அமைந்தபோது அரசனிடம் அதிசய வன்மைகள் உளவாகின்றன; ஆகவே சூரியன் ஒளியில் காரியங்கள் நடத்தல் போல் அவன் கருதிய படியே யாவும் எளிதே நடை பெறுகின்றன.

---

798 மாசு சிறிதும் மருவாமல் மன்னவன்
தேசு புரந்து சிறந்துவரின்—பேசியஇஞ்
ஞாலம் முழுதும் நலமாய் நடந்துமேல்
சீலம் திகழும் சிறந்து. (அ)

இ-ள்

யாதொரு மாசும் மருவாமல் அரசன் புனிதனாய் இனிது நடந்து

உயிர்களைப் பாதுகாத்துவரின் உலகம் முழுவதும் நல்ல நிலையில் உயர்ந்து எல்லா வகையிலும் சிறந்து திகழும் என்க.

அழுக்குப் படிந்த கண்ணுடி ஒளி மழுங்கி இருத்தல்போல் மாசு படிந்த மனம் தெளிவிழந்து நிற்கும். கண்ணில் மாசுபடின் பார்வை மங்கி விடும்; மனத்தில் மாசுபடின் உணர்வுக் காட்சி ஒழிந்து போம். மாசு = அழுக்கு, குற்றம். தேசு = ஒளி, ஞானம்.

தன் உள்ளத்தைத் தூய்மையா வைத்துக் கொள்பவன் எல்லா நிலைகளையும் எளிதே தெளிந்து கொள்கிருன். சித்தசுத்தியில் தெய்வீக சத்தி விளைகிறது; ஆகவே அதனையுடையவன் அரிய பல மகிமைகளை அடைந்து பெரிய கதிகளைப் பெறுகிருன்.

செல்வம் அதிகாரம் சேனுபலம் முதலிய நலங்கள் அமைந்திருந்தாலும் உள்ளம் தூயனுய் நல்ல குணங்கள் அமையவில்லையானுல் அந்த அரசன் சிறந்த மேன்மையை அடைந்து கொள்ளான். இனிய நீர்மைகளின் வழியே சீர்மைகள் விளைந்து வருகின்றன. ஒரு தேசத்தைத் தேசுபெறச் செய்ய வுரியவன் மாசு யாதும் மருவாமல் தேசுடையனுய்ச் சிறந்திருக்க வேண்டும்.

மனித சமுதாயம் மன்னன் இயல்பின் படியே மன்னி வருதலால் அவனுடைய குணம் குற்றங்களை இயல்பாகவே அஃது அடைய நேர்கின்றது. அரசன் சிறு தவறு செய்தாலும் அது பெரிதாய் விரிந்து நாடு முழுவதும் பரவிக் கேடு படுகிறது.

நெறி நியமமாய் நின்று நீதி புரிய உரிய அரசன் சிறிய பிழை செய்ய நேர்ந்தாலும் பெரிய தெய்வ தண்டனை அவனைச் சேர்ந்து வருத்துகிறது. தலைமை தனி நிலைமையில் நிகழ்கிறது.

நிடத நாட்டு வேந்தன் ஆன நளன் அரிய பல குண நலங்கள் அமைந்தவன்; சிறந்த நீதிமான். நளநீதி என வழங்கி வரும் பழமொழியால் இவனது நெறி முறையும் நீதி நிலையும் அறியலாகும். இந்த நல்ல அரசன் மீது பொல்லாத கலிக்குக் பொருமை யுண்டாயது. குரோதம் கொண்ட அவன் இவனை எப்படியாவது கெடுத்துவிட வேண்டும் என்று கடுத்து மாவிந்த புரம் என்னும் இராசதானியை அடைந்தான். எவ்வழியும் யாதொரு பிழையும் காணுமையால் இவன் அருகே அவன் அணுக முடியவில்லை. ஏதாவது சிறு மாசு நேராதா? என்று ஆசையோடு எதிர்பார்த்திருந்தான். யாதும் நிகழவில்லை; கொடுங் கேடனை அவன் நெடுங்காலம் நேர் நோக்கி நின்றுன். பன்னி

ரண்டு வருடங்கள் கழிந்தும் இம் மன்னனிடம் மாசு ஏதும் காணுமையால் அவன் மனம் சலித்து மீள நேர்ந்தான்; அன்று மாலையில் தேவ பூசை செய்ய இவன் கால் முகங்களைக் கழுவினுன்; அவ்வாறு கழுவும் பொழுது முழுதும் நீரால் நனையாமல் இடது காலில் சிறிது வெளி இருந்தது; அதனையே பிழையாக் கொண்டு கலி இவனைக் கதுவிக் கொண்டான். கொள்ளவே உள்ளம் திரிந்து சூதாடி அரசை இழந்து அடவி புகுந்து மனைவியைப் பிரிந்து அல்லல் பல அடைந்தான்.

ஆண்டுஇரண்டா றெல்லை அளவும் திரிந்தேயும்
காண்டகைய வெங்கலியும் காண்கிலான்---நீண்ட புகழ்ச்
செந்நெறியால் பார்காத்த செங்கோல் நிலவேந்தன்
தன்னெறியால் வேறுர் தவறு. (1)

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி---சிந்தைஎலாம்
தன்வயமே ஆக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து. (2)

நாராய ணுய நமஎன்று அவனடியில்
சேராரை வெந் துயரம் சேர்ந்தாற்போல்---பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி. (நளவெண்பா)

நளனைக் கலி தொடர்ந்திருக்கும் நிலையை இவை காட்டியுள்ளன. நிகழ்ந்துள்ள நிலைமைகள் நினைந்து சிந்திக்கத்தக்கன.

நிழலுமிழ்ந்து உதிரம் காலும் வயிரவாள் நிடதர் கோமான்
எழுபுவி வேந்தர் யாரும் இடுதிறை கொணர்ந்து எஞ்ஞான்றும்
தொழுதனர் ஏத்தி நிற்பத் தொடுகடல் உடுத்த ஞாலம்
முழுவதும் ஒருகோல் ஓச்சி முறைவழா தளித்தா னன்றே. [1]

கோவடு குருதி வேலான் கொழுஞ்சுடர் பட்ட காலைச்
சேவடி கழுவ லின்றிச் செய்கடன் கழித்தல் நோக்கிக்
காவலற் சேருங் காலம் கருதுபு பன்னீ ராண்டு
மேவரு தான்றி யுற்ற வெங்கலி மேயி னுனே. (நைடதம்) (2)

கலி மேவிய வகையை இவற்றுலும் கண்டு கொள்ளுகிறோம்.

அரசன் எவ்வளவு நெறி நியமமாயிருக்க வேண்டும் என்பதை இந்த நிகழ்ச்சி நன்கு விளக்கியுள்ளது. சிறிய தவறு நேரி

னும் பெரிய துயரங்களை அவன் அனுபவிக்க நேர்கின்றான். அரச பதவி உயர்வான மகிமையுடையது ஆயினும் அவம் புகாமல் காப்பதில் அஞ்சத் தக்க கவலைகள் மிஞ்சியிருக்கின்றன.

“ மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்;
பிழையுயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்;
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்.”

(சிலப்பதிகாரம், 25)

அரசு ஆளுவதிலுள்ள கவலைகளையும் பொறுப்புகளையும் சேர மன்னன் இவ்வாறு பரிவோடு கூறியிருக்கிறான். குறிப்புகளைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்தித்துக் கொள்ள வேண்டும். பெரிய சுகவாசி போல் அரசன் வெளியே தோன்றினாலும் வையம் காக்கும் வகையில் வெய்ய சஞ்சலங்கள் அவன் நெஞ்சில் விரிந்து நிற்கின்றன. கவலைகள் காவலனைக் கதுவியுள்ளன.

“ Uneasiness lies the head that wears the crown.”

[Shakespeare]

“ மணி மகுடம் தரித்த மன்னர் தலையில் இன்னல் நிறைந்திருக்கிறது” என்னும் இது இங்கே எண்ணவுரியது. ஆட்சி புரிவது அருஞ் செயல்; அதனை மாட்சியாய் நடத்தின் மகிமையுடையதாம். தெய்வ சாட்சியாச் செங்கோல் செலுத்துக.

---

799 தன்னை உயர்த்தித் தரணி தனைஆள
முன்னவன் செய்த முதன்மையை—மன்னவன்
எண்ணி உணர்வானேல் எவ்வழியும் புண்ணியமே
நண்ணி வருவன் நயந்து. (கூ)

இ-ள்.

மாந்தருள் தன்னை வேந்தனா உயர்த்தி இறைவன் அருளியுள்ள தலைமையை அரசன் உணர்வான் ஆனால் எவ்வழியும் தருமமே தழுவி விழுமிய நிலையில் ஒழுகி வருவான் என்க.

இது தருமம் கருதிக் கருமம் புரிக என்கின்றது.

ஒரு நாட்டை ஆளும் தலைமை அரிய பெரியதவப்பேற்றால் அமைகிறது. அகிலலோக நாயகன் ஆன ஆண்டவன் அருள் நலனைப் பூண்டவரே ஈண்டு அரசராய் வருகின்றார். தமது தலைமையின் நிலைமையை உணர்ந்து தம் கடமையை உரிமையோடு செய்து வருபவரே பெருமை யடைந்து யாண்டும் மகிமையுடன் மருவி மிளிர்கின்றார். உரிய கருமம் உயர் தருமமாய் வருகிறது.

ஒத்த மனிதருள் ஒருவன் தலைமையாய் அரசாளவும் மற்றவர் அவனுக்கு அடங்கி நடக்கவும் அமைந்திருப்பது சமுதாயத்தின் நியமமாய் நேர்ந்து வந்துள்ளது. அவயவங்கள் சேர்ந்து அங்கம் இயங்குவது போல் சமுதாயம் தொடர்பான உறவுரிமையால் இயங்கி வருகிறது. தொடர்புகள் தொன்மை தோய்ந்தன.

பிள்ளைக்குத் தந்தை, மனைவிக்கு நாயகன், மாணவனுக்கு ஆசான் அமைந்துள்ளது போல் உலகக் கூட்டத்துக்கு அரசன் தலைவனாய் அமைந்திருக்கிறான். உரிமையான நல்ல தலைவன் இல்லையானால் அந்த இனம் ஒழுங்கு முறை சிதைந்து அல்லல் பல அடையும். ஒரு நாட்டில் அரசு முறை அற்றபோது அந்த நிலை அராசகம் என நிந்திக்கப்படும். நாதியற்ற நாடு; கேள்வி கேட்பார் இல்லை என இன்னவாறு இன்னலுழந்து சொல்வதெல்லாம் தலைவன் இல்லாத நிலைமையால் நேர்ந்து வருகின்றன. வேந்தன் இல்லையானால் மாந்தர் வாழ்வு மருண்டு இருண்டு யாண்டும் புலையாய்ப் பொல்லாத நிலைகளில் புரண்டு குலையும்.

வேந்தனே இல்லா விடின் உலகத்து
மேலது கீழதாம்; மணம் செய்
காந்தனுக்கு அடங்கிக் களத்திரம் நடவாள்:
காதலர் தந்தைசொற் கேளார்:
மாந்தர் வேளாண்மை முதல் தமக்குரிய
வளமைகூர் தொழில்களின் முயலார்;
சாந்தரும் தீயர் ஆவரேல் தீயர்
தன்மையைச் சாற்றுமாறு எவனோ? (1)

நம்மனை மைந்தர் கிரகவாழ்வு எல்லாம்
நரபதியால் அவன் இலனேல்
அம்மனை தீயர் கைவசம் ஆவள்;
அருநிதி கொள்ளையாம்; நாளும்

வெம்மையோடு ஒருவர் ஒருவரை உண்பார்;
மேலவர் அசடரால் மெலிவார்;
அம்மாறதெல்லாம் உணர்ந்து அரசாணைக்கு
அமைதல் நற்குடிகளின் இயல்பே. (நீதிநூல்) (2)

ஒரு நாட்டில் தலைமையான அரசன் இல்லையானால் அங்கே மக்கள் நிலைமை என்னும்? என்பதை இவை தொகையாச் சுட்டிக் காட்டியுள்ளன. பூமிபாலகன் என அரசனுக்கு ஒரு பெயர் அமைந்துள்ளது; பூமியை அவன் பரிபாலித்து வரும் உண்மையையும் உரிமையையும் இப்பேர் சீராகத் துலக்கி நிற்கிறது. காப்புத் தெய்வமாய்க் காவலன் காட்சி புரிந்துள்ளான்.

அரசன் நீதி நெறியே ஆண்டுவரின் அந்த நிலமண்டலம் அதிசய வளங்களை யுடையதாய்ப் பல மண்டலங்களும் துதி செய்துவர யாண்டும் புகழ் ஒளி வீசிப் பொலிந்து விளங்கும்.

முறையறிந்து அவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந்து உயிர்க்கு நல்கும் இசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந்து உயிர்க்கும் தெய்வப் பூதலம் தன்னின் பொன்னின்
நிறைபரம் சொரிந்து வங்கம் நெடுமுது காற்றும் நெய்தல்.
(இராமாயணம்)

அரசனுடைய நீர்மை சீர்மைகளையும், அவனது காப்புத் திறத்தையுப், அவனால் பூமி அடைந்து வரும் சேமத்தையும் இக்கவி சுவையாக உணர்த்தியுள்ளது. கப்பலின் ஏற்றுமதியைக் காட்ட வந்த கவி ஆட்சியின் மாட்சியையும் அதிவிநயமாக் காட்டியருளினார். சிறந்த அரசனுடைய பரிபாலனத்தால் பூதலம் ஆறுதலடைந்திருத்தல் போல் சுமந்து சென்ற பாரத்தை இறக்கிவிட்டுத் துறைமுகத்தில் மரக்கலம் தனியே சுகமாயிருந்தது; அந்த இருப்பை இங்ஙனம் சிறப்பா விளக்கியிருக்கிறார்.

முறை அறிதல், அவாவை நீக்கல், முனிவுழி முனிதல், இறையறிதல், உயிர்க்கு நல்கல் முதலிய குண நலங்கள் அரசனுக்கு மண நலங்களாம். தனக்கு உரிய இறைவரியைத் தவிர அரசன் வேறு பொருளை விரும்பலாகாது; முறை தவறி விரும்பின் குடிகள் அஞ்சுவர்; அஞ்சவே அது கொடுங்கோன்மையாய் விரிந்து நெடும் பழியோடு கடுங்கேடுகளை விளைக்கும்.

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (குறள், 552)

நாட்டிலே அரசன் குடிகளிடம் பொருளை வலிந்து கேட்டால் காட்டிலே வேடன் மக்களை நலிந்து வழிப்பறி செய்வது போலாம் என அதன் கொடுமையை இது உணர்த்தியுள்ளது.

உறையில் வாளொடு மாவழங் குறுவனத்து ஓடி
மறவன் ஓர் பொருள் தருகென இரத்தலை மானும்
இறைவன் வாழ்குடி தன்னில்ஒன் றொருபொருள் இரத்தல்
அறவன் ஆகிய நீ இதை அறிந்திலை அந்தோ.
(பிரபுலிங்க லீலை)

குடிகொன்று இறைகொள்ளும் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலு மாண்பே---குடிஓம்பிக்
கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல. (நீதிநெறி விளக்கம்)

அரசன் ஆசை மண்டி அநியாயமாய்க் குடிகளிடம் பொருளைக் கேட்கலாகாது; கேட்டால் அது கேடாய் அவனுக்குப் பழியை விளைக்கும் என இவை காட்டியுள்ளன. பசுவுக்குப் பசும் புல்லை வயிறு நிறையவூட்டிப் பாலைக் கறப்பது போல் குடிகளுக்கு இதம் செய்து உதவி அவரிடமிருந்து பருவம் அறிந்து திறை பெறுவதே அரசு முறையாம்; அந்த முறை கடந்து பேராசைப் படுவது பெரிய கொடுமையாம். தன் மேல் அன்பும் பிரியமும் மாந்தரிடமிருந்து நாளும் வளர்ந்து வர வேந்தன் முறை புரிந்து வர வேண்டும்; அவர் அஞ்சி அடங்க அதிகாரமாய் ஆள நேரின் அந்த ஆட்சி பரிதாபமாய் வீழ்ச்சியுறும்.

" He that only rules by terror
Doeth grievous wrong. " (Tennyson)

" குடிகளை அச்சுறுத்தி ஆளுகிற அரசன் கொடிய தீமையைச் செய்தவனாகிறான்" என டென்னிசன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். மக்கள் பால் அன்பு பொங்கி வர ஆண்டு வருக; அதுவே அரசுக்கு நீண்ட இன்பமாம்.

நாளும் குடிகள் நயந்து மகிழ்ந்துவர
ஆளும் அரசே அரசு.

இதனை அரசன் நாளும் சிந்தித்து வர வேண்டும்.

---

800 மாந்தர் அமைதியாய் வாழ்ந்து வரினந்த
வேந்தன் மகிமை விளங்கிவரும்—மாந்தர் தாம்
அல்லலுற நேரினே அவ்வரச செவ்வகையும்
புல்லர சாகும் புலை. (ம)

இ-ள்.

தனது குடிசனங்கள் மன அமைதியுடன் இனிது வாழ்ந்துவரின் அந்த அரசனுடைய மகிமை அதிசய நிலையில் உயர்ந்து விளங்கி வரும்; குடிகள் அல்லலடைய நேர்ந்தால் அவன் புல்லியனு யிழிந்து புலையடைந்து ஒழிந்து போவான் என்க.

ஒருவனுடைய பிறப்பு சிறப்படைந்து வருவது அவனது செயல் இயல்களின் உயர்வுகளாலும் இனிமைகளாலுமேயாம். சுவைகள் சுரந்து வரும் அளவு கனிகள் சிறந்து உயர்வடைந்து வருகின்றன; மனிதனும் அவ்வாறே இனிய நிலையளவு புனிதனாய் உயர்ந்து தனி மகிமை அடைந்து வருகிறான். உள்ளம் இனியதாய் உயர உரை செயல்கள் யாவும் இனியனவாய் உயர்தலால் மன நலமுடைய அந்த மனிதன் இனமான பல நலங்களும் உடையனாய் மாநிலத்தில் யாண்டும் மகிமைபெறுகின்றான்.

மனிதருள் தலைமையாய் வருகின்ற அரசன் எவ்வழியும் செவ்வியனாய் உயர்ந்து வருவது சீரிய நியமமாய் நேர்ந்தது. சமுதாயத்தைத் தகுதியாகப் பேணிவரும் தகைமை மிகுதியாக அமைந்தபோதுதான் அவன் மேன்மை மிகப் பெறுகின்றான். சிறந்த அரசனது உயர்ந்த ஆட்சிக்கு அடையாளம் மாந்தர் யாவரும் மகிழ்ந்து வாழ்ந்து வரச் செய்வதேயாம். குடிகளை உயர்த்திக் குணமா வாழச் செய்பவன் முடி உயர்ந்து முதன்மையாய் நிலவுகின்றான். உலகம் அவனை உவந்து கொண்டாடுவதால் பூமிதிலகம் எனப் பொலிந்து விளங்குகிறான். மன்னுயிர் இனிது வாழ இன்னருள் புரிந்து மன்னி வருகிற மன்னன் வாழ்வை வையமும் வானமும் உன்னி வாழ்த்தி வருகின்றன.

வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புகழ் ஏத்தப்
பகைவர் ஆரப் பழங்கண் அருளி
நகைவர் ஆர நன்கலம் சிதறி
ஆன்றவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்!

வான்தோய் நல்லிசை உலகமொடு உயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து
மன்எயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பின் நின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்று பெரிது உடையையால் நீயே
வெந்திறல் வேந்தேஇவ் உலகத் தோர்க்கே. (பதிற்றுப்பத்து)

நார் முடிச் சேரல் என்னும் மன்னனுடைய குண மாண்புகளையும் ஆட்சிமுறைகளையும் அருள் நிலைகளையும் இது உணர்த்தியுள்ளது. காப்பியஞர் என்னும் சங்கப் புலவர் இவ்வேந்தனை வியந்து இங்ஙனம் பாடியிருக்கிருர். ஆன்று ஆவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்! என்று நேரே விளித்திருப்பது இவனுடைய சீர்மை நீர்மைகளைத் தெளிவா வெளிப்படுத்தி நிற்கிறது. இவ்வுலகத்தோர் உவந்து வாழும் வகையை இவன் உணர்ந்து செய்திருக்கிருன். உதவி நிலை உள்ளத் தகுதியால் உயர்ந்துளது.

சித்த சாந்தி மனிதனுக்குப் பெரிய பாக்கியம்; தரும நெறி தழுவி ஒழுகி வருகிற புனிதம் உடையார்க்கே அஃது இனிது அமையும். தனது ஆட்சியில் வாழுகின்ற மக்கள் மன அமைதியோடு வாழ்ந்து வரும்படி செய்கிற அரசன் நல்ல நீதிமான் ஆகிருன். அல்லல் அவலங்கள் இல்லாதபோது தான் அமைதியான இனிய வாழ்வு யாண்டும் நன்கு சுரந்து வருகிறது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

குண நலமே அரசுக்கு உயர் நிலை.
உண்மை நேர்மைகள் ஒளி தருகின்றன.
காரியம் கருதல் சீரிய பெருமை.
மாந்தர் மகிழ்வு வேந்தர்க்கு உயர்வு.
மன்னுயிர் இன்புற மன்னன் மாண்புறும்.
காப்பு முறை கடவுள் நிலை.
புனித நீர்மை புண்ணிய மாகும்.
சீலம் உடையான் ஞாலம் உடையான்.
கருதி உணர்வது உறுதி தருவதாம்.
பல்லுயிரும் வாழ நல்லரசு ஆளுக.

அ௰-வது மாட்சிமுற்றிற்று.

# எண்பத்தோராம் அதிகாரம்.

## வீ ர ம்.

அஃதாவது யாண்டும் உள்ளம் தளராத உயர்ந்த உறுதிநிலை. அரசனுக்கு உரிய குணமாண்புகளுள் வீரம் தலைமை ஆனது ஆதலால் அந்நிலைமை தெரிய ஈண்டு முதன்மையா வைக்கப்பட்டது. ஆட்சியின் மாட்சிக்கு வீரம் எவ்வழியும் உரமாய் உதவி புரிந்து வருகிறது; அவ் வுறவுரிமை இங்கே காட்சியாய் வந்தது.

801. வீரம் அரசுக்கு மேலான நீர்மையாய்த்
திரம் புரிந்து திகழ்தலால்—வீரம்
உடையான் எவையும் உடையான்; இலனேல்
அடையான் மகிமை அவன். (க)

இ-ள்

அரிய பல மேன்மைகளை வீரம் ஆற்றியருளுதலால் அரசனுக்கு அது மேலான பான்மையாய் அமைந்துள்ளது; அதனை உரிமையாக வுடையவன் எல்லா நலன்களும் ஒருங்கே யுடையனாய் உயர்ந்து விளங்கி அரிய மகிமைகள் பெறுகின்றான் என்க.

ஆளும் தலைமையில் வழி முறையே தொடர்ந்து வருகிற அரச மரபிடம் அரிய பல பெரிய குணங்கள் மருமமாய் மருவி வருகின்றன. அந்நீர்மைகளுள் வீரம் பெருவரவாய்ப் பெருகியுளது. உறுதி ஊக்கங்கள் தழுவி உள்ளத்தில் எழுகின்ற உயர்ச்சியான உணர்ச்சி வீரம் என நின்றது. எவ்வழியும் யாண்டும் நிலைகுலையாத தலைமைத் தன்மையே வீரம் ஆதலால் அதனையுடையவர் உயர் புகழாளராய் ஓங்கி ஒளி பெற்று நிற்கின்றார்.

உலகத்தை ஆள நேர்ந்த அரசர் எதிர்கின்ற இடையூறுகளை நீக்கி எழுகின்ற கலகங்களை அடக்கி மனித சமுதாயத்தை இனிது பாதுகாக்க வேண்டியிருத்தலால் அவர்க்கு வீரம் இயலுரிமையாய் ஏய்ந்துள்ளது. நீதி முறையை நெறியே நடத்த வல்லது வீரமே ஆதலால் அது அரசுக்குத் தலைமைத் தன்மையாய்ச் சார்ந்து சாதி நீர்மையாத் தோய்ந்து நின்றது.

நீதியும் வீரமும் கொடையும் மன்னர்க்குச்
சாதியின் தருமமாய்ச் சார்ந்து நின்றன;

ஓதிய மூன்றினில் ஒன்று குன்றினும்
போதிய அரசியல் புகழ்பெ றுதரோ. (1)

வீரமே பகைவரை அடக்கும்; மெய்க்கொடை
வாரமே புகழினை வளர்க்கும்; நீதியின்
சாரமே தரணியைத் தாங்கும்; இந்தமுச்
சீரமை அரசனே தேவன் ஆவனல். (2)

வீரமில் வேந்தனும், விளைவில் பூமியும்,
நீரமில் குளமும் நல் நிறையில் பெண்மையும்,
தாரமில் வாழ்க்கையும், தகவில் நெஞ்சமும்,
நேரென லாயிழி நிலையில் ஆழுமே. (3)

செயிருறு களைகளைச் செகுத்து நீக்கிநற்
பயிர்களைக் காத்தல்போல் படுவெம் பாதக
வயிரரைச் சுட்டற மடித்து மாண்புறும்
உயிர்களைக் காப்பதே உலகம் காப்பதே. (4)

(வீரபாண்டியம்)

இந்தப் பாசுரங்கள் இங்கே நன்கு சிந்திக்கத் தக்கன.

அரசியல் அமைதிகளும் அரசுக்கு வீரம் உறவுரிமையா யுறுதி புரிந்துள்ள தகைமையும் உணர வந்தன. ஆண்மை உறுதி ஊக்கம் தீரம் தைரியம் சூரம் சௌரியம் பராக்கிரமம் என்னும் மொழிகளில் வீர ஒளி வீசியுள்ளது. தலைமையான உயர்வு எங்கே இருக்கிறதோ அங்கே வீரம் இயல்பா நிலவி மிளிர்கிறது.

கல்வி ஞானம் தானம் தயை முதலிய நிலைகளில் சிறந்து நிற்பவரும் வீரத்தை மருவியே உயர்ந்து ஒளி மிகுந்து வருகின்றார். கல்வி வீரன், ஞான வீரன், தான வீரன், தயா வீரன் எனப் புகழ் பெற்று வந்துள்ளவர் வீரத்தின் வியனிலையை நயமா விளக்கி நிற்கின்றார். வினையாண்மையில் சதுரனாய் உயர்ந்து வருபவனைக் கரும வீரன் என உலகம் உவந்து கூறுகிறது. தருமத்தை யாண்டும் உறுதியாத் தழுவி வருபவனைத் தரும வீரன் என்கின்றார். சத்திய வீரன் என அரிச்சந்திரன் உத்தமமான பேர் பெற்று உலக சோதியாய் ஒளி வீசி நிற்கின்றான்.

குண நலங்களுள் வீரம் எத்தகையது? உயர் நிலையிலுள்ள அரசர்க்கு அது எவ்வாறு உயிர் நிலையாயுள்ளது? என்பதை

இங்கே உய்த்துணர்ந்து கொள்கிறோம். சத்திரியர்க்கு வீரம் வெற்றி நிலையமாய் விளங்கி வித்தக நலங்களை விளைத்து நிற்கிறது.

இராமன் இலங்கைமேல் படை எழுச்சி செய்தபோது இடையே கடல் கடக்க நேர்ந்தது. கடலின் அதிதேவதையான வருணனை நேரே காண விரும்பினான்; வேத விதி முறையே மந்திர செபம் செய்து அலைவாய்க் கரையில் தவம் புரிந்து இருந்தான்; ஏழு நாள் ஆகியும் அவன் வரவில்லை; ஆகவே கோசலைச் சிங்கத்துக்குக் கோபம் மூண்டது; "எளிய பரதேசி என்று என்னை இகழ்வா எண்ணியுள்ளான்; அவனது உள்ளச் செருக்கை அழித்து ஒழிக்க வேண்டும்" என உருத்து மூண்டான். அப்பொழுது இவ்வீரன் உரைத்த உரைகள் உக்கிர வீரங்களாய் ஒளி வீசி எழுந்தன. சில அயலே வருகின்றன.

*பாரம் நீங்கிய சிலையினன்; இராவணன் பறிப்பத்*
*தாரம் நீங்கிய தன்மையன்; ஆதலின் தலைசால்*
*வீரம் நீங்கிய மனிதன் என்று இகழ்ச்சிமேல் விளைய*
*ஈரம் நீங்கியது எறிகட லாமென இசைத்தான்.* (1)

*கானிடைப்புகுந்து அருங்கனி காயொடு நுகர்ந்த*
*ஊனுடைப்பொறை உடம்பினன் என்று கொண்டுணர்ந்த*
*மீனுடைக் கடற் பெருமையும் வில்லொடு நின்ற*
*மானுடச்சிறு தன்மையும் காண்பரால் வானோர்.* (2)

(இராமா, வருணனை வழி வேண்டு படலம்)

மானவீரன் கூறியுள்ள இவ்வுரைகளில் இயற்கையான வீரவுணர்ச்சிகள் ஓங்கி நிற்கின்றன. உள்ளக்கண்களால் ஊன்றி நோக்கி உண்மைகளை உணர வேண்டும். மானச தத்துவங்கள் வித்தக விநயமா விளைந்துள்ளன. யூகமாயுணர்பவர் உயிரின் நீர்மைகளைக் கூர்மையா ஓர்ந்து தேர்ந்து உவந்து கொள்வர்.

வீரம் நீங்கிய மனிதன் எனத் தன்னை எளிதாக எண்ணியதனாலேயே வருணன் நேரே வரவில்லை என்று இவ்வீர மூர்த்தி வீறிட்டு வில்லால் வெல்ல முயன்றது சொல்லால் விளங்கி நின்றது. வீரம் இல்லையானால் அந்த மனிதன் சாரம் இல்லாதவனாய்த் தாழ்ந்து படுவான் என்பது இங்கே ஓர்ந்து கொள்ள வந்தது. தலைசால் என வீரத்துக்குத் தந்துள்ள அடை கூர்ந்து சிந்திக்கத்தக்கது. தரும நீதிகளுக்கு உரிமையாய் வருகிற தறுகண்

மையே வீரம் ஆதலால் அதன் வியனை மேன்மை தெளிய லாகும். சுத்த வீரம் உத்தம நீர்மையாய் ஒளி மிகுந்துள்ளது.

அறிவு அருள் அமைதி முதலிய இனிய நீர்மைகள் பல இராமனிடம் பெருகியுள்ளன. அவற்றுள் எல்லாம் வீரமே இக்கோமகனை அதிமேன்மையா மகிமைப் படுத்தியுளது. தனது மனைவியைக் கவர்ந்துபோன இராவணனை வென்று அவ்வுத் தமியை மீட்டியருளியது இவனது சுத்தவீரமே. இதனை உய்த்து உணர்பவர் வீரத்தின் உன்னத நிலையை ஓர்ந்து தெளிந்து கொள்வர். வீரச் சேவகன், வீர வில்லி, வீரக் குரிசில், வீர நாயகன் என இந்த ஏந்தல் வீரப் பேரால் விளங்கி நிற்றலால் வீரத்தோடு வேந்துக்குள்ள உரிமை வெளிப்பட்டு நின்றது.

---

802. உள்ளம் தளரா துறுதி குலையாது
வெள்ளமென அல்லல் மிடைந்தாலும்—தள்ளரிய
வீரம் உடையான் விறல்வேந்த னாய்நின்று
தீரமே செய்வன் தெளிந்து. (உ)

இ-ள்.

அல்லல் பல அடைந்தாலும் நல்ல வீரம் உடையவன் உள்ளம் தளராமல் உறுதி குலையாமல் அரிய காரியங்களை ஆராய்ந்து செய்து யாண்டும் வெற்றி வேந்தனாய் விளங்கி நிற்பன் என்க.

உயர்ந்த உள்ளத் திண்மை சிறந்த பண்பாடுகளால் அமைந்து வருகிறது. நேர்மை வாய்மை முதலிய புனித நீர்மைகள் உடையவர் நல்ல மனவுறுதியுடையராய் மகிமை தோய்ந்து வருகின்றார். கள்ளம் கபடு கரவு முதலிய இழிவுகள் உடையவர் எவ்வழியும் கோழைகளாய் இழிந்து நிற்கின்றார். சிறிய இயல்புகள் மருவிய அளவு மனிதன் பெரிய மேன்மைகளை இழந்து விடுகின்றான். அச்சமும் திகில்களும் அவனை உச்சமாப் பற்றிக் கொள்ளுகின்றன. கொச்சைகள் பேடிகள் கோழைகள் என எள்ளி இகழப் படுபவர் இழிவான பழிகளோடு அழிவுறுகின்றனர். வீர தீர சூரர் என்பவர் விழுமியராய் விளங்குகின்றனர்.

ஆண்மை, தீரம், அஞ்சாமை என்னும் மொழிகள் மேன்மையான ஒளிகளை யாண்டும் வீசி நிற்கின்றன. ஆண்டகை

தீரன் அருந்திறலாளன் என உலகம் உவந்து புகழ நேர்ந்தவர் உயர்ந்த குல வீரராய் ஒளி பெற்று நிற்கின்றார். ஆண்டகை என இராமனைக் காவியப் புலவர்கள் யாவரும் ஆவலோடு கூறி வருவது அவனது அருந்திறலாண்மைகளை வியந்து மகிழ்ந்தேயாம். அரிய கடல் கடந்து பெரிய போர் புரிந்து கொடிய நிருதர் குழுவை அடியோடு முடிய நூறியுள்ள அவ்வீரனது ஊக்கமும் உறுதியும் உரையிடலரியன. வேந்துக்கு உரிய உயர் நீர்மைகள் யாவும் அவ்வேந்தலிடம் எவ்வழியும் திவ்விய ஒளிகளை வீசியுள்ளன. அஞ்சாத ஆண்மை எஞ்சாத மேன்மையாய் நின்றது.

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு. (குறள், 382)

மன்னனிடம் மன்னியிருக்க வுரிய குண நலங்களைத் தேவர் இன்னவாறு குறித்திருக்கிறார். அஞ்சாமையைத் தலைமையாக முதலில் நிறுத்தியதால் அரசுக்குத் தனி உரிமையான அதன் நிலைமை தெரிய வந்தது. அஞ்சுதல் = மனம் கலங்குதல். கலங்கிய நீரில் உருவம் சரியாகக் காண இயலாது; அதுபோல் நிலைகுலைந்த நெஞ்சு எதையும் செய்ய இயலாது. மனத்திண்மையோடு மருவியுள்ளவனே வினைகளைத் திண்மையாச் செய்து வியன் பயன் காண்கிறான். மேன்மையாய் ஆளவுரிய அரசனிடம் அரிய பல பான்மைகள் மருவியிருந்த போதுதான் அந்த ஆட்சி சிறந்து விளங்கி வரும். உரிய நீர்மைகள் உயர் சீர்மைகளாகின்றன.

அனுகீதை என்னும் அரிய நூலில் அரச நீர்மைகள் வரிசையாக் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றை மேல் நாட்டாரும் விரும்பி ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கின்றனர். வேந்தின் இயல்புகள் விழைந்து கொள்ளவந்தன; சில அயலேவருகின்றன.

"Nobility, enlightenment, courage, forgiveness, truth, equability, absence of fear, absence of stinginess, straightforwardness, purity, dexterity, valour." (Anugita)

"பெருந்தன்மை, தெளிவு, தைரியம், சகிப்பு, சத்தியம், சமநோக்கு, அஞ்சாமை, உலோபம் இல்லாமை, நேர்மை, தூய்மை, சாதுரிய சாகசம், வீரம்." என்னும் இவை நல்ல அரசுக்கு உரிய தன்மைகளாம். இவை இங்கே கருத வுரியன.

தனக்கு உரிமையான இனிய இயல்புகள் நன்கு அமைந்துள்ள அளவுதான் எந்த வேந்தனும் ஒளி பெற்று உயர்ந்து வருகிறான். உள்ளம் தளராத உறுதியும் தரும நீதியும் அரசியலுக்கு உயர் மகிமைகளை அருளுகின்றன. அந்நீர்மைகள் தோய்ந்த அரசனை உலகம் உவந்து போற்றிப் புகழ்ந்து கொண்டாடுகின்றது.

*"அரசியல் பிழையாது அறநெறி காட்டிப்*
*பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது*
*குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்*
*வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்;*
*உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்*
*பொய்சேண் நீங்கிய வாய்நட் பினையே!*
*முழங்குகடல் ஏணி மலர்தலை உலகமொடு*
*உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்*
*பகைவர்க்கு அஞ்சிப் பணிந்து ஒழுகலையே!*
*கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை."*

(மதுரைக் காஞ்சி)

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னனுடைய நிலைமை நீர்மைகளை இது குறித்துள்ளது. மாங்குடி மருதனார் என்னும் சங்கப் புலவர் இக்கோமகனுடைய குண நலங்களையும் அரசியல்முறைகளையும்நெறிகளையும்சுவையாகப்பாடியிருக்கிறார்.

இனிய அமிர்தத்தோடு உயர்ந்த பொன்னுலக வாழ்வு கிடைப்பது ஆயினும் பொய் பேச மாட்டான்; இவ்வுலகத்தோடு சிறந்த தேவர்கள் திரண்டு வந்தாலும் பகைவர்க்கு அஞ்சிப் பணிய மாட்டான் என்றதனால் இவனது சத்திய நிலையையும் சித்தத்தின் திடத்தையும் உத்தம வீரத்தையும் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். நீதிமன்னர் நித்தியசோதிகளாய் நிலவுகின்றனர்.

இத்தகைய மேலான அரசரை இந்நாடு முன்னம் பெற்றிருந்துள்ளதை நினைந்து வியந்து நெஞ்சம் களிக்கின்றோம். பொய் நீசம் என நீங்கி யாண்டும் எவ்வழியும் மெய்யே பேசி மேன்மை நீண்ட அந்தப் பாண்டியன் ஆண்டு வந்த நாட்டிலே இன்று பொய் பரவியிருக்கும் புலை நிலை குலை நடுங்கச் செய்கின்றது.

நாணமல் பொய்பேசி நாசமாய்ப்
போகின்ற நாட்டார் என்று

கோணமல் நிலைதெரிந்து குடிகேட்டின்
புலையுணர்ந்து கொள்வார் அம்மா!

என்று பாரத மாதாவிடம் ஈரநெஞ்சினர் இங்ஙனம் இரங்கி முறையிட்டுக் கரைந்து வருகின்றனர். தகுதியான அரசர் இந்நாளில் இல்லையாயினும் ஒவ்வொருவரும் அரச நீர்மை தோய்ந்து இந்நாட்டு மன்னராகலாம். மேன்மையாய் உயர்வதும் கீழ்மையாய் இழிவதும் அவரவர் இயல்பாலேயாம். நல்ல மனம் கெட்டது ஆனல் பொல்லாத வினை ஒட்டிக் கொல்லும். தன்வினை தன்னைச் சுடும் என்பது நெடிய பழமொழி. அவனவன் கேட்டுக்கு அவனவனே யாண்டும் பூரணமான காரணன் ஆகின்முன்.

" Our destiny in our hands. On the new road, we must now go forward. (Alexis carrel)

"நமது விதி நம் கையில் உள்ளது; புனிதமான புதிய வழியில் இனி நாம் மேலே போக வேண்டும்" எனப் பிரஞ்சு தேசத்து ஒரு விஞ்ஞானி இங்ஙனம் மெய்ஞ்ஞானம் கூறியிருக்கிருர்.

நல்ல வீரம் தோய்ந்து உள்ளம் புனிதமாய் உயர்ந்து கொள்க; எல்லா மேன்மைகளும் உன்னை உவந்து கொள்ளும்.

---

803. சிங்கக் குருளை சிறிதெனினும் திண்டிறல்சேர்
வெங்கட் கரியும் வெருவுமால்—அங்கதுபோல்
வீர மரபோன் வெகுண்டால் பெரும்படையும்
போரில் உடைந்தொழிந்து போம். (௩)

இ-ள்

சிங்கக்குட்டி சிறியது ஆனாலும் அதனைக் கண்டால் பெரிய மதயானையும் அஞ்சி ஓடும்; அதுபோல் வீரமரபோன் இளையன் ஆயினும் அவன் எதிரே பெரிய படைகளும் உடைந்து ஒழிந்து போம் என்க. குருளை என்றது உரிய இளமை தெரிய வந்தது.

உலகம் அரசனைப் பெருமையாக் கருதி வருகிறது. அரிய பல குணங்கள் அவனிடம் மருவி வருதலால் பிறப்பிலேயே சிறப்படைய நேர்ந்தான். வயதில் இளைஞன் ஆயினும் முதியரும் அவனை மதித்து வணங்கிப் போற்றுகின்றனர். அருந்திறலாண்மை அரச மரபிடம் பொருந்தி வருதலால் இளைஞர் எனினும்

அவர் பால் விழுமிய நிலையைக் கருதி மரியாதையாய் யாரும் ஒழுகுகின்றனர். பிறப்புரிமையில்சிறப்புகள்பெருகிவருகின்றன.

அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றன என்று எண்ணி
இகழின் இழுக்குத் தரும். (ஆசாரக்கோவை)

பாம்பும் சிங்கமும் குட்டியாயிருந்தாலும், நெருப்புச் சிறிதாயிருந்தாலும் அவற்றை எளிமையா எண்ணி நெருங்கலாகாது; அதுபோல் அரசையும் கருதி ஒழுக வேண்டும் என இது காட்டியுள்ளது. அரசு நிலையை உணர வரிசை உரிமைகள் வந்தன.

சிங்கம் மிருகங்களுக்குத் தலைமையானது; பெருமிதமும் கம்பீரமும் உடையது; மிருக ராசன் எனப் பேர் பெற்றது. அரசன் மனிதருக்குத் தலைமையானவன்; வீர கம்பீரமுடையவன்; நராதிபன் என்று பேர் பெற்றுள்ளான். இத்தகைய தொகை வகையினால் சிங்கம் அரசருக்கு உவமையாய் வந்தது.

சிங்கக் குருளைக்கு இடும் தீஞ்சுவை யூனை நாயின்
வெங்கட் கடுங்குட்டிக்கு ஊட்ட விரும்பினளோ?
(இராமா, நகர் 117)

சிங்க ஏறு அனைய வீரன். [இராமா, கங்கை, 43]

இராமனைச் சிங்கக்குருளை, சிங்க ஏறு என இவை குறித்துள்ளன. வெல்லும் திறலைக் குறிப்புகள் விளக்கி நின்றன.

கொல்லும் சிங்கக் குட்டியும் போன்றிவ் வுலகு ஏத்தச்
செல்லும் மன்னனே சீவகன் தெய்வப் பகை வென்றே.
[சிந்தாமணி 364]

சிங்கக்குட்டி எனச் சீவகனை இது சுட்டியுள்ளது.

"He was a lion in the fight." (Roderick)

"போரில் அவன் ஒரு சிங்கம்" என மேல்நாட்டாரும் வீரத்துக்குச் சிங்கத்தை நேரே உவமை கூறியுள்ளனர்.

சின்னக் குட்டியாயிருந்தாலும் சிங்கம் பெரிய மதயானையையும் வெல்ல வல்லது. இளைஞராய் இருந்தாலும் சிறந்த அரசகுமாரர் எதிர்ந்த பகைவர் எவரையும் வெல்ல வல்லராய் வீறு கொண்டு நிற்கின்றார். அவ் வீர நிலை நேரே தெரிய வந்தது.

கரிகால் வளவன் என்பவன் ஒரு சோழ மன்னன். இளஞ்சேட் சென்னி என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். இவன் இளமையாயிருக்கும்போதே தந்தை இறந்து போனான். தாயாதிகள் அரசுரிமையை வலிந்து கவர்ந்து கொண்டார்; இவனைக் கொல்ல மூண்டு அல்லல் பல செய்து சிறைப்படுத்தி யிருந்தார். அந்தக் கொடிய சிறையைக் கடந்து வெளியே வந்து நெடிய பகைவரை நேரே வென்று தொலைத்துத் தனது அரசை அடைந்து அதிசய நிலையில் இவன் ஆட்சி புரிந்தான். இளமையிலேயே வீரத்திறலில் விளங்கியிருந்த இவனது தீர ஸ்தரியங்களை வியந்து வீர வேந்தன் என்று உலகம் புகழ்ந்து போற்றியது.

“கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர் பிணியகத் திருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழி கொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணிதின் உணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறிவாள் கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி” [பட்டினப்பாலை]

பகைவர் செய்த சதியிலிருந்து தப்பி வெளியேறி அவரை அடியோடு வென்று இவன் முடி சூடி அரசாண்ட நிலையை இந் நூல் விரிவாக விளக்கியுளது. இந்நூலைப் பாடியவர் உருத்திரங் கண்ணனார் என்னும் சிறப்பு வாய்ந்த சங்கப் புலவர். அக்கவிஞருக்குப் பதினாறு லட்சம் பொன் இவன் உவந்து தந்தான்.

“தழுவுசெந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொடு ஆறுநூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்” (கலிங்கத்துப்பரணி)

இவ்வீரனுடைய கொடை நிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம். இவன் அரசு புரிந்து வருங்கால் இரு குறுநில மன்னரது பெரிய குடி வழக்கு ஒன்று நேர்ந்தது. இம்முடி மன்னனிடம் அதனைத் தீர்க்க இசைந்தார்; நேரே வந்தார்; வயதில் இளையனாயிருத்தலால் அரிய நீதி முறையை இக்குமரன் எவ்வாறு செய்ய முடியும்? என அவர் திகைத்து நின்றார்; அக் குறிப்பை இவன் உணர்ந்து கொண்டான்; வழக்கை மறுநாள் விசாரிப்பதாக இவன் உரைத்து விடுத்தான்; குறித்தபடி அவர்

வந்தார்; முதிய ஒரு கிழவன் போல் நரை முடி தரித்துக் கொண்டு அரியணையில் அமர்ந்து யாவும் ஆராய்ந்து நீதி முறையை நேர்மையாக நெறியே செய்தான்; இவனது மதி யூகத்தையும் மனநலத்தையும் வியந்து புகழ்ந்துஅவர் மகிழ்ந்து சென்றார்.

“உரைவுமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப---நரை முடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்.” (பழமொழி, 21)

“இளமை நாணி முதுமை எய்தி
உரைமுடிவு காட்டிய உரவோன்.” (மணிமேகலை, 4)

இவன் நியாயம் புரிந்துள்ள முறையை இவை வரைந்து காட்டியுள்ளன. வீரம் கொடை நீதிகளில் இவன் தலை சிறந்து விளங்கினான். கொடிய மதயானைகள் போல் செருக்கி நின்ற பெரிய பகைவர் அனைவரையும் அடக்கி ஒடுக்கி இளமையிலேயே இவன் வளமையாய் உயர்ந்து ஆட்சி புரிந்தது அதிசய மாட்சியாய் நின்றது. வீரத் திறலுடையவன் வியனிலையில் விளங்கி நிற்பான் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

---

804. வெற்றி அபிமன்முன் வில்இழந்தும் வாள்எடுத்துக்
கொற்றம் புரிந்து கொடுஞ்சமரில்—சுற்றிநின்ற
மாற்றலரை வீட்டினான் மாறுவரோ வீரருளம்
ஏற்றதுணை இல்லெனினும் எய்த்து. (௪)

இ-ள்.

தன் கையில் இருந்த வில்லை இழந்தும் வீர அபிமன் யாதும் தளராமல் மூண்டு போராடி யாண்டும் அதிசய நிலையில் நீண்டு நின்றான்; உற்றதுணைகள் பக்கத்தே இல்லை எனினும் வெற்றி வீரர் எய்த்து மீளார்; வீறோடு பொருது விளங்கி நிற்பர் என்க.

மானம் வீரம் என்னும் இந்த இரண்டு நீர்மைகளும் மானிட சாதிக்கு மேலான சீர்மைகளை அருளுகின்றன. ஈன நிலைகள் யாதும் அணுகாமல் தன்னை இனிது பேணி நிற்பதே மானம் என வந்தது. உயர்ந்த மனிதத்தன்மையை என்றும் நிலை நிறுத்தி வருவது என்னும் குறிப்பை இது குறிப்பாக் குறித்துள்ளது.

உயிரினும் மானம் பேணத்தக்கது என்றதனால் இதன் உயர் நிலை உணரலாம். விழுமிய மேன்மை யுடையது வியனாய் நின்றது.

மானமே என்னுயிர் மகிமை வாய்ந்தது
தானமும் ஞானமும் தவமும் அன்னதே.

அருச்சுனன் கண்ணனிடம் இன்னவாறு கூறியிருக்கிறான்.

நிலையான மகிமையை மனிதனுக்குத் தலைமையா அருளி வருதலால் மானம் உயிரினும் இனியது என மதியுடையார் மதித்து வந்துளார். ஆன்ம ஒளியின் மேன்மை வெளியாயது.

"Honour is venerable to us because it is no ephemeris-
[Emerson]

"மானம் என்றும் அழியாத மகிமையுடையது; ஆதலால் அது நாம் போற்றத்தக்கது" என அமெரிக்க மேதையான எமர்சன் மானத்தின் மாட்சியை இவ்வாறு கூறி யிருக்கிறார்.

மானம் உடையவனைக் கவரிமான் கன்று என்று புகழ்கின்றார்; அஃது இல்லாதவனைக் கழுதை என்று இழிவாக எள்ளி இகழ்கின்றார். உயர்நிலையும் இழிபுலையும் ஒருங்கே உணரவந்தன.

"மானமுள் ளோர்கள் தங்கள் மயிரறின் உயிர்வாழாத
கானுறு கவரி மான்போல் கனம்பெறு புகழே பூண்பார்;
மானமில்லோர்கள் எங்கும் மழுங்கலாய்ச் சவங்கலாகி
ஈனமாம் கழுதைக்கு ஒப்பாய் இருப்பர் என்றுரைக்கலாமே."
(விவேகசிந்தாமணி)

மானம் உடையவனது மேன்மையும் அது இல்லாதவனது கீழ்மையும் இதனால் தெளிவாய்த் தெரிய வந்தது. இழி நிலையில் யாதும் தாழாமல் எவ்வழியும் உயர் நிலையில் புனிதமாய் வாழ்வதே மானமாம். அதனை இனிது பேணி வரும் உறுதி நிலை வீரம் என நின்றது. எல்லாக் குண நலங்களும் நிலை குலையாமல் எவ் வழியும் தலைமையாய் நிலைத்து வருவது வீரத்தாலேயாம்.

அரிய இந்த வீரம் உடையவர் யாண்டும் பெரிய மகிமைகளை அடைந்து வருகின்றார். சிங்கம் குட்டியாயிருந்தாலும் அதன் எதிரே கொடிய மிருகங்களும் குலை நடுங்குகின்றன; வீரமுடையவன் இளைஞனாயிருந்தாலும் அவன் எதிரே எவரும்

தலை வணங்குகின்றனர். மணிகளுள் வயிரம்போல் குணங்களுள் வீரம் உயர்தரமாய் யாண்டும் ஒளி வீசி நிற்கின்றது.

வீரம் எந்த உயிரில் மருவியுள்ளதோ அந்த மனிதன் இளையன் ஆயினும் தனியனாயினும் அதிசய நிலையில் துதி கொண்டு விளங்குகின்றான். தன்னையுடையவனை வீரம் தனி மகிமையில்உயர்த்தி மன்னிய புகழைநன்னயமா அருளுகின்றது.

அபிமன்னன் அருச்சுனனுடைய அருமைத் திருமகன். அழகும் வீரமும் விழுமிய நிலையில் இவனிடம் கெழுமி நின்றன. பெற்ற தந்தையைப் போலவே உற்ற இம்மைந்தனும் வில்லாண் மையில் அதிசயமுடையனாய்த் துதி கொண்டு நின்றான். பாரதப் போர் மூண்டபோது சமர பூமியில் இவன் புரிந்த அமராடல் களைக் கண்டு அமரரும் அதிசயித்து வியந்தனர். எதிரிகள் நெடிய அரணா அமைத்திருந்த மூரணான சக்கர வியூகத்தை உடைத்து உக்கிர வீரமாய்ப் போராடினான். துரியோதனன் மகன் முதலாக அரசகுமாரர்கள் பலர் மாண்டு மடிந்தனர்; மடியவே கன்னன் கிருபன் துரோணன் முதலிய பெரிய வில் லாளிகள் மூண்டு பொருதார்; அவர் யாவரும் அஞ்சி அலமர இவன் வெஞ்சமராடினான்; முடிவில் வில் ஒடிந்து போயது; போகவே யாதும் தளராமல் வாளாடல் புரிந்து ஆளரிபோல் அடலாண்மை புரிந்தான். ஏறியிருந்த தேரும் எடுத்து நின்ற வில்லும் இழந்து போனான் என்று கிளர்ந்து வந்து வளைந்த வீரர் கள் எல்லாரும் அழிந்து வீழ இவன் விரைந்து வென்றான்.

தேர்போனது பரிபோனது சிலைபோனது சிறுவன்
போர்போனது இனிச்சென்றமர் புரிவோம்என நினையாக்
கார்போல்நனி அதிராஇதழ் மடியாஎறி கடல்வாய்
நீர்போலுடன் மொய்த்தார்வெரு வுறஓடிய நிருபர். (1)

துச்சாதனன் மகன்மன்னர் தொழுந்துச்சனி என்னும்
நச்சாடர வனையான்இனி நானேபழி கொள்வேன்
இச்சாயகம் ஒன்றால்என எய்தான் அவன் முடியோடு
அச்சாயகம் வடிவாள்கொடு அறுத்தான் அடல்அபிமன். (2)

துரியோதனன் மகனும்பொரு துச்சாதனன் மகனும்
புரியோதன முனைவென்றமை புரிவின்முனி கருதா

அரியோமெனு மறையாலடல் அம்பாயிரம் எய்தான்
வரியோலிடு கழலான் அவை வாள்கொண்டு துணித்தான். [3]

சொரியுங்கணை மழைஏவு துரோணாரியன் வில்லும்
பரியுங்கட விரதத்தொடு பாகும்பல பலவாய்
முரியும்படி வடிவாள்கொடு மோதா அமர் காதா
விரியும்சுடர் எனநின்றனன் விசயன்திரு மகனே. [4]

ஒருக்காலழி தேர்அன்றியும் உருள்ஆழிகொள் தேர்மேல்
இருக்கால்வர முக்கால்வர எக்காலும அழித்தே
பெருக்காறணை செய்தொத்தவிர் பிள்ளைப்பிறை அனையான்
செருக்கானகை செய்தான்வரி சிலைஆசிரி யனையே. (5)

(பாரதம்.)

துரோணச்சாரியர் முதலிய பெரிய போர் வீரர்களோடு தனியே நின்று அபிமன்னன் போராடி வென்றிருக்கும் நிலைகளை இங்கே கண்டு நாம் வியந்து நிற்கின்றோம். யாதொரு துணையுமின்றி வாள் ஒன்றே துணையாக் கொண்டு உறுதியோடு ஊக்கி மூண்டு போராற்றி வந்தவன் இறுதியில் ஒரு தோள் இழந்து பரிதாபமாய் மடிந்து வீழ்ந்தான். இவன் இறந்ததை அறிந்ததும் இருதிறச் சேனைகளும் ஒருங்கே பரிந்து வருந்தின. தருமர் உருகி அழுது மறுகிப் புலம்பியது பெரிய சோகமாய் நீண்டது.

தருமர் நொந்து தவித்தது.

“பிறந்ததினம் முதலாகப் பெற்றெடுத்த
விடலையினும் பீடும் தேசும்
சிறந்தனை என்று உனைக்கொண்டே தெவ்வரை வென்று
உலகளாச் சிந்தித்தேன்யான்
மறந்தனையோ எங்களையும் மாலையினால்
வளைப்புண்டு மருவார் போரில்
இறந்தனையோ என்கண்ணே என்னுயிரே
அபிமாஇன்று என்செய் தாயே! (1)

தேனிருக்கு நறுமலர்த்தார்ச் சிலைவிசயன்
இருக்கவரைத் திண்டோள் வீமன்
தானிருக்க மாநகுல சாதேவர்
தாமிருக்கத் தமராய் வந்து
வானிருக்கின் முடிவான மரகதமா
மலையிருக்க வாழ்வான் எண்ணி

யானிருக்க வினையறியா இளஞ்சிங்கம்
இறப்பதே என்னே என்னே! (2)

நின்றனையே எனைக்காத்து நீஏகென்று
யானுரைப்ப நெடுந்தேர் ஊர்ந்து
சென்றனையே இமைப்பொழுதில் திகிரியையும்
உடைத்தனையே தெவ்வர் ஓட
வென்றனையே சுயோதனன்தன் மகவுடனே
மகவனைத்தும் விடங்கால் அம்பில்
கொன்றனையே நின்ஆண்மை மீண்டுரைக்கக்
கூசினையோ குமரர் ஏறே! (3)

உனக்குதவி ஒருவர்அற ஒருதனிநின்று
அமர்உடற்றி ஒழிந்த மாற்றம்
தனக்குநிகர் தானான தனஞ்சயனும்
கேட்கினுயிர் தரிக்கு மோதான்
எனக்கவனி தரவிருந்தது இத்தனையோ?
மகனே! என்று என்று மாழ்கி
மனக்கவலை யுடனழிந்து மணித்தேரின்
மிசைவீழ்ந்தான் மன்னர் கோவே!" (பாரதம்) (4)

போரில் மாண்ட அபிமன்னனை நினைந்து தருமர் இவ்வாறு மறுகிப் புலம்பி உருகி அழுதிருக்கிறார். இவனுடைய அருந்திறலாண்மையும் வீரபராக்கிரமங்களும் வியப்புகளை விளைத்துள்ளன. உயிர் அழிய நேர்ந்தாலும் வீரர் உள்ளம் தளராமல் ஊக்கிப் பொருவர் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். சுத்த வீரரைக் குறித்துக் கூறுங்கால் இவனது வீரத்திறல் உத்தம உவமையா உரைக்க வருகின்றது.

ஆரமருள் ஆண்டகையும் அன்னவகை வீழும்
வீரர்எறி வெம்படைகள் வீழஇமை யானாய்ப்
பேரமருள் அன்றுபெருந் தாதையொடும் பேராப்
போரமருள் நின்றஇளையோனிற் பொலிவுற்றான்.
[சீவகசிந்தாமணி, 288]

கன்னனோடு போராடிய அபிமன்னனைப் போல் எதிரிகள் ஏவிய அம்புகள் எதிரே விழித்த கண் இமையாமல் சச்சந்தன் பொருது விளங்கினான் என இது குறித்துள்ளது. பருவம்

நிரம்பாத இளைஞன் தன்னந் தனியே நின்று பெரிய போர் வீரர் பலரையும் முரிய வென்றது அரிய வென்றியாய்த் தெரியவந்தது.

வீரத்திறல் அதிசய ஆண்மையாய் அமைந்து வருதலால் அது யாவராலும் துதி செய்யப் பெறுகிறது. தம் நாட்டைப் பாதுகாக்க, நீதியை நிலை நிறுத்த, அரசுக்கு ஆதரவாக, உரிமையை அடைந்து கொள்ள, இன்னவாறு தகுதியான காரணங்களால் ஆடவர் போராடப் போதலால் அவர் வீரக் குரிசில்களாய்விளங்கி மேலான புகழ்களை அடைந்து கொள்கின்றனர்.

தருமமும் ஈதேயாம் தானமும் ஈதேயாம்
கருமமும் காணுங்கால் ஈதாம்---செருமுனையில்
கோள்வாள் மறவர் தலைதுமிய என்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின். (தகடூர்.)

எதிரிகளுடைய தலைகளைத் துமித்து என் மகன் வாள் வாயில் மாள நேரின் அதுவே தருமம்; தானம்; கருமம் என ஒரு வீரத்தாய் இவ்வாறு கூறியிருக்கிறாள். கொடிய படுகொலைகள் நேர்கின்ற போரை இங்ஙனம் உரிமையாக் குறித்தது அதன் அருமையும் பெருமையும் மருமமாய்க் கருதி யுணர வந்தது.

One to destroy, is murder by law;
And gibbets keep the lifted hand in awe;
To murder thousands, takes a specious name,
War's glorious art, and gives immortal fame. (Young)

"ஒருவனைக் கொல்வது சட்டப்படி கொலை ஆகிறது; அங்ஙனம் கொன்றவன் தூக்குமரத்தில் மரண தண்டனை அடைகிறான்; ஆயிரக் கணக்காக் கொல்லுகிறவன் வீரன் என வியன் பெயர் பெறுகிறான்; போரின் மகிமை பொருவரு கலையாய் அழியாத புகழைக் கொடுக்கிறது" என வீரக் கலையை விளக்கியுள்ள இந்த ஆங்கிலக் கவி ஈங்கு ஊன்றி உணர வுரியது.

மனிதரிடம் மருவியுள்ள மேன்மைகள் சமையம் நேரும் போதுதான் வெளியே தெரிய வருகின்றன. வீரர் நிலைகளைப் போர்க் களங்கள் நேரே விளக்கிக் காட்டுகின்றன. செருமுகம் இல்லையேல் பொருமுகம் தெரியாது. மாந்தருள் மன்னன்போல் மாண்புகளுள் வீரம் மகிமை தோய்ந்து உயர்ந்துள்ளது.

805. ஆண்மை அடியாய் அமைந்த பெருவீரம்
ஏண்மை யுடன்ஒருவன் எய்திநின்றால்—மாண்மைமிகப்
பெற்றிந்தப் பேருலகம் பேணி மகிழ்ந்தேத்த
உற்றுத் திகழ்வன் உயர்ந்து. (ரு)

இ-ள்.

உயர்ந்த ஆண்மை வழியே சிறந்த வீரம் பிறந்து வந்துள்ளது; அந்த அதிசய தீரத்தை யுடையவன் உலகம் முழுவதும் உவந்து வியந்து புகழ்ந்து போற்ற உயர்ந்து திகழ்வான் என்க.

பிறந்த மக்கள் எல்லாரும் உலகில் சிறந்த புகழுடையராய் உயர்ந்து விளங்குவதில்லை. அரிய நீர்மைகளோடு பெரிய செயல்களைச் செய்தவரே பெரும் புகழாளராய் விளங்கி வருகின்றார். உயர்ந்த நிலைகளைக் கண்டபோது மாந்தர் உள்ளம் உவந்து புகழ்ந்து பேசுகின்றார்; அவ்வுரை வழிமுறையே புகழ் ஒளியாய் நிலவுகின்றது. வீரம் கொடை நீதிகளால் விளைந்துவரும் புகழ் யாண்டும் வியனான நிலையில் துலங்கி வருகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இத்தமிழ் நாட்டில் ஒரு முதியவள் இருந்தாள். அவளுடைய தந்தை போரில் மாண்டு போனான்; மூன்று ஆண்டுகள் கழிந்தபின் மீண்டும் நாட்டில் போர் மூண்டது; தன் அரசனுக்கு உதவியாகத் தனது கணவன் போருக்குப் போனான்; அங்கே அருந்திறலோடு அடலாண்மை புரிந்தான்; எதிரிகள் பலரை வென்றான்; முடிவில் இறந்து விழுந்தான். பெற்ற தந்தையும் கொண்ட கணவனும் உற்ற நாட்டின் உரிமைக்காக உயிர் துறந்தனர் என்று பெருமிதமாய் அவள் உறுதி பூண்டிருந்தாள்; மறுபடியும் போர் நேர்ந்தது; அக்கிழவிக்கு ஒரே ஒரு மகன்தான் இருந்தான்; அவனுக்கு அப்பொழுது வயது இருபத்தொன்று நடந்து கொண்டிருந்தது. போர்ப் பறை கேட்டதும் தன் அருமை மகனை உரிமையோடு போர்க் கோலம் செய்து போர்க் களத்துக்கு அனுப்பினாள். அவளுடைய மன நிலையையும் வீரப்பான்மையையும் வியந்து நாடும் நகரமும் புகழ்ந்து போற்றின. அயலே வரும் பாடலில் அவளது சரித நிலை மருவியுளது. கருதிக் காணுக.

கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே
மூதில் மகளிர் ஆதல் தகுமே;

மேனாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே;
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே;
இன்றும், செருப்பறைகேட்டு விருப்புற்றுமயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே. [புறம், 279]

இந்த வீரத்தாயின் மனநிலையை உணர்ந்து நாம் வியந்து நிற்கின்றோம். இனிய பெண்மையிடம் அரிய திண்மைகள் உள்ளன.

இத்தகைய உத்தமத் தாய்கள் உதித்திருந்தமையால் நாட்டில் சுத்த வீரர்கள் யாண்டும் தோன்றி நின்றனர். நிலத்தின் நிலையை விளைவு காட்டுதல் போல் குலத்தின் நிலையைக் குடிப் பிறந்தாரது குணமும் செயலும் மணமாக் காட்டுகின்றன.

சிறந்த வீரக் குடியில் பிறந்த ஒரு கிழவி யிருந்தாள். யாரிடமும் வீர வாழ்க்கையைக் குறித்து அவள் விரும்பிப் பேசுவது வழக்கம். ஒரு ஆடவன் பிறப்பு சிறப்பு அடைய வேண்டுமானால் தன் நாட்டின் நன்மைக்காக அவன் இறப்படைய வேண்டும் என இன்னவாறு கூறி வருவாள். அவளுக்கு ஒரு மகன் இருந்தான்; அரசனுக்கு உதவியாகப் போருக்குப் போனான். வீர பராக்கிரமத்தோடு போராடினான்; மாற்றார்படை ஏற்றம் உற்றிருந்தமையால் ஆற்றல் புரிந்தும் ஈற்றில் இறந்து போனான். மகன் இறந்த செய்தியைச் சரியாகத் தெரியாமல் சிலர் மாறுபாடாக வந்து அத்தாயிடம் சொன்னார்: "அம்மா! உன் மகன் போராட முடியாமல் புறங்காட்டி ஓடி உயிர் தப்பிப் பிழைத்தான்" என்று உரைத்தார். அந்தச் சொல்லைக் கேட்டதும் அவள் உள்ளம் கொதித்தாள். என் மகன் பேடி போல் ஓடியிருக்க மாட்டான்; நீங்கள் சொல்லுகிறபடி அவன் செய்திருந்தான் ஆனால் "அவன் பால் உண்டு வளர்தற்கு ஏதுவாயிருந்த என் முலைகளை அறுத்து எறிவேன்" என்று கூறிய ஒரு வாளைக் கையில் எடுத்துக் கொண்டு போர்க்களத்துக்கு ஓடினாள்; நாடித் தேடினாள்; பிணங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். துணிபட்டுக் கிடந்த தனது அருமை மகனது உடலைக் கண்

டாள்; பிடித்திருந்த வாளை அயலே கடுத்து வீசினுள்; அந்த உடம்பை எடுத்து மார்பில் அணைத்து மகிழ்ந்தாள்; "நீ பிறந்த குடியை மேன்மைப்படுத்திச் சிறந்த வீரசுவர்க்கத்தைஅடைந்த ஓ என் அருமை மகனே! உன்னைப் பெற்ற பேற்றை இன்று நான் முற்றவும் பெற்றேன்" என்று உள்ளம் களித்து உரைத்தாள். இந்த வீரக் கிழவியின் தீரச் செயலை வியந்து நாடும் அரசும் நயந்து புகழ்ந்தன. புலவர் பாடும் புகழையும் அடைந்தாள். அயலே வருகிற கவியில் இவளது சரிதம் சுவையாக வந்துளது.

"நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலைஅறுத் திடுவென் யான் எனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்து வேறுகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே."

(காக்கைபாடினியார்)

போர்க்களத்தில் இறந்து கிடந்த மகனைக் கண்டதும் அவனைப் பெற்ற பொழுது உண்டான மகிழ்ச்சியினும் அதிகமான உவகையைக் கொண்டாள் என்றதனுல் இந்த வீரத் தாயின் உள்ளத் திண்மையையும் உறுதி நிலையையும் நினைந்து வியந்து நெஞ்சம் களிக்கின்றோம். தீரமான பெண்மையிலிருந்து வீரமான ஆண்மைகள் மேன்மையாய் விளைந்து வந்துள்ளன.

பண்டைக் காலத்தில் அரச ஆட்சியோடு சிறந்து இந்நாடு பீடும் பெருமையும் பெற்றிருந்த மாட்சிகளை இவை காட்சியாக் காட்டி நிற்கின்றன. குடி சனங்கள் படை வீரர்களாய் நின்று வேந்தனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தனர்; அவனும் அதிசய வீரனுய் நின்று யாவரையும் உரிமையோடு ஆதரித்து வந்துள்ளான். வீரர் குடி நாட்டுக்கு வெற்றி முடியைச் சூட்டியுள்ளது. அந்த வுண்மை இந்த வீரக் கிழவிகளின் விழுமிய சரித்திரங்களால் ஈண்டு நன்கு விளங்கி நின்றது.

---

806. தானம் தயைகல்வி தன்னையுணர் ஞானமென
ஆனவகை வீரம் அமைவுறினும்—மானமிகு
போர்வீரம் ஒன்றே புகழ்வீரம்; அன்னதே
நேர்வீரம் ஆகும் நிலைத்து. (சு)

இ—ள்

தான வீரம், தயா வீரம், கல்வி வீரம், ஞான வீரம் எனப் பலவகை வீரங்கள் உள எனினும் மானம் மிகுந்த போர்வீரமே யாண்டும் புகழ் வீரமாய் உயர்ந்து நேரேநிலைத்து நிலவுகின்றது.

இது, வியனுன வீரத்தின் நயன் அறிய வந்தது

குண நீர்மைகள் வீரத்தால் மணம் அடைந்து வருகின்றன. வீரம் இல்லையானல் சிறந்த தன்மைகளும் சிதைந்து படுகின்றன. மரத்துக்கு ஆணிவேர் போல் மனிதனுக்கு வீரம் உறுதி பயந்துள்ளது. ஊக்கம் உறுதி திடம் திண்மை தைரியம் துணிவு என்பன வீரத்தின் கிளைகளாய் விரிந்து பரந்துள்ளன.

தான் உறுதியாக் கைக்கொண்ட நல்ல ஒழுக்கங்களை எவ்வழியும் செவ்வையாப் பாதுகாத்து நிற்பவர் சிறந்த சீல வீரராய் உயர்ந்து திகழ்கின்றார். பிறர் மனை நோக்காமை பேராண்மை என்று தேவர் கூறியிருத்தலால் ஏக பத்தினி விரதம் அரிய பெரிய வீரம் என்பது தெரிய வந்தது. பேரின்ப சாதனங்களாய்ப் பெருமை பெற்றுள்ள தவம் யோகம் ஞானம் மோனம் வைராக்கியம் என்பன வீர நீர்மையின் சாரங்களாயுள்ளன.

தனது வண்மை நிலையில் யாண்டும் திண்மையாயிருந்து வந்தமையால் கன்னன் தானவீரன் என வானமும் வையமும் வாழ்த்த நின்றான். இவனுடைய கவச குண்டலங்களைக் கவர்ந்து கொள்ள விழைந்து மாயன் இந்திரனை ஏவினன். அவன் ஓர் முதிய வேதியனாய் மருவி வந்தான். வஞ்சமாய் வந்த அவனை இவன் நெஞ்சம் உவந்து உபசரித்து, "பெரியீர்! யாது வேண்டும்?" என்றான். கருதி வேண்டியதைத் தர முடியுமா? என்று அவன் கரவோடு கேட்டான்; இவன் உறுதியாய்த் தருகிறேன் என்றான். இவனது உயிர்நிலையமாயிருந்த அந்த அணிகளையே அவன் கேட்டான்; உடனே கொடுத்தான்; அங்ஙனம் கொடுக்கும்போது ஆகாயவாணி தடுத்தது. "வந்துள்ளவன் இந்திரன்;

மாயன் வஞ்சமா ஏவியுள்ளான்; யாதும் கொடாதே" என்று வானம் ஒலித்துத் தடுத்தும் இவன் களித்துக் கொடுத்தான்.

அருத்தி ஈதல்பொற் சுரதருவினுக்குமற்
றரிதுநீ அளித்தியோ? என்று
விருத்த வேதியன் மொழிந்திட நகைத்து நீ
மெய்யுயிர் விழைந்திரந் தாலும்
கருத்தி னோடுனக்கு அளித்திலேன் எனில்எதிர்
கறுத்தவர் கண்ணிணை சிவப்ப
உருத்த போரினில் புறந்தரு நிருபர் போய்
உறுபதம் உறுவன் என்றுரைத்தான். (1)

வந்த அந்தணன் கவசகுண் டலங்களை
வாங்கிநீ வழங்கெனக்கு என்னத்
தந்தனன் பெறு கெனஅவன் வழங்கவிண்
தலத்தில்ஓர் தனி அசரீரி
இந்திரன் தனை விரகினுல் மாயவன்
ஏவினுன் வழங்கல்நீ எனவும்
சிந்தையின்கண் ஓர் கலக்கமற்று அளித்தனன்
செஞ்சுடர்த் தினகரன் சிறுவன். (2)

(பாரதம், கிருட்டிணன் 241-242)

கன்னனது மனவுறுதியை இவை காட்டியுள்ளன. இவனுடைய கொடை வீரம் அதிசய நிலையது. போர்வீரமும் நேர்மையோடு மேன்மையாய் மேவியுள்ளது. அருச்சுனன் மீது ஒரு பாணம் தான் தொடுக்க வேண்டும் என்று பெற்ற தாய் வந்து இவனிடம் வரம் வேண்டிய பொழுது இவன் உரைத்த மொழிகள் விழுமிய நிலைகளில் வீர ஒளிகளை வீசி வந்தன.

தெறுகணை ஒன்று தொடுக்கவும் புனைந்து
செருச்செய்வோன் சென்னியோடு இருந்தால்
மறுகணை தொடுப்பது ஆண்மையோ?
வலியோ? மானமோ? மன்னவர்க்கு அறமோ?
உறுகணை ஒன்றே பார்த்தன்மேல் தொடுப்பன்
ஒழிந்துளோர் உய்வர் என்றுரைத்தான்
தறுகணர் அலர்க்கும் தறுகணு னவர்க்கும்
தண்ணளி நிறைந்தசெங் கண்ணுன்.

(பாரதம், கிருட்டிணன் 259)

கன்னனது தான வீரமும் மான வீரமும் போர் வீரமும் யாரும்வியந்துபுகழவியனைநிலையில் பொலிந்துவிளங்குகின்றன.

உற்ற இயல்புகள் வீரத்தால் ஒளி மிகுந்து வருகின்றன. தன் கவியில் குற்றம் கூறியதாக இறைவன் நேரே வந்து நெற்றிக் கண்ணைத் திறந்து காட்டி வெருட்டிய போதும் நக்கீரர் யாதும் அஞ்சாமல் எதிர்த்து நின்று "சுவாமி! நெற்றியில் மட்டும் அல்லாமல் உடம்பு முழுவதும் கண்களாக் காட்டினலும் உங்கள் பாட்டில் குற்றம் உள்ளது; அந்தக் குற்றம் எப்படியும் குற்றமே" என்று வெற்றி வீரோடு கூறினமையால் கல்வி வீரர் என அவர் நல்லிசை பெற்றுப் பல்லோரும் போற்ற நின்ருர்.

சீவ கோடிகளுக்கு இரங்கி எவ்வழியும் தயை புரிந்து வந்தமையால் தயா வீரன் எனப் புத்தர் உயர் பேர் பெற்ருர். சிறந்த அரச பதவியைத் துறந்து இளமையிலேயே உயர்ந்த போக சுகங்களையெல்லாம் ஒருங்கே வெறுத்து ஞானதீரனய்ச் சென்ற இவரது சரிதம் அரிய பல வீரங்களோடு மருவி மிளிர்கின்றது.

"அறிவு வறிதாய் உயிர்நிறை காலத்து
முடிதயங்கு அமரர் முறைமுறை இரப்பத்
துடித லோகம் ஒழியத் தோன்றிப்
போதி மூலம் பொருந்தி இருந்து
மாரனை வென்று வீரன் ஆகிக்
குற்றம் மூன்றும் முற்ற அறுக்கும்
வாமன் வாய்மை ஏமக் கட்டுரை." (மணிமேகலை, 30)

புத்தரைக் குறித்து வந்துள்ள இது இங்கு உய்த்து உணரத்தக்கது. மாரனை வென்ற வீரன் என்றது இவரது ஞான தீரத்தை நன்கு விளக்கி வீரத்தின் பான்மையைத் துலக்கி நின்றது.

"தாமநறுங் குழல்மழைக்கண் தளிரியலார் தம்முன்னர்க்
காமனையே முனந்தொலைத்தால் கண்ணேட்டம் யாதாம்கொல்?
(வீர சோழியம்)

பேரழகுடைய பெண்களை ஏவிப் புத்தரது ஞான நிலையைக் குலைத்தற்கு மன்மதன் பலமுறை முயன்ருன். முடியாமல் ஒழிந்தான்; எல்லாரிடமும் கண்ணேடிக் கருணை புரிகிற புண்ணிய மூர்த்தி காமனிடம் இரங்காமல் வென்று தொலைத்தார் என இவரது நேம நெறியின் தீரத்தை இது வினயமாய் உணர்த்தி

யுளது. ஞானம் தானம் கல்வி முதலிய விழுமிய நிலைகள் பலவும் வீரத்தால் ஒளி பெற்று வருவது இங்கே தெளிவுற்று நின்றது.

---

807. போராற்றல் நேர்மை பொறுமை தறுகண்மை
பேராற்றல் மானம் பெருவாய்மை—ஓராற்றும்
குன்ருமல் நிற்கும் குலவீரர் எஞ்ஞான்றும்
பொன்ருமல் நிற்பர் புகழ். (எ)

இ—ள்

போர் ஆற்றும் தீரம் பொறுமை நேர்மை வாய்மை மன வுறுதி மானம் ஆண்மை முதலிய மேன்மைகள் யாண்டும் குறையாமல் உடையவர் என்றும் அழியாத புகழை அடைந்து எவ்வழியும் ஒளி மிகுந்து உயர்ந்து திகழ்வர் என்க.

அமைதியாகவும் சுகமாகவும் வாழ விரும்புவது மனித இயல்பு ஆயினும் சமையம் நேரும் போது போராடவும் அவன் உரியவன் ஆகின்ருன். தாய் தந்தையரைப் போற்றி மனைவி மக்களைப் பேணி ஒக்கல் சுற்றங்களை ஓம்பித் தான் பிறந்த குடியை உயர்ந்த நிலையில் சிறந்து திகழச் செய்வது ஒவ்வொரு மகனுக்கும் தனி உரிமையான இனிய கடமையாம்.

முறையான சிறந்த அறிவுடையனுய் மனிதன் பிறந்திருத்தலால் துறைதோறும் அவனுடைய பொறுப்புகள் தோய்ந்து நிற்கின்றன. உற்ற வீட்டுக்கும் உரிய நாட்டுக்கும் பெற்ற அரசுக்கும் ஆள்வினை ஆற்றி ஆதரவு புரிய அவன் நேர்ந்திருக்கிருன். சமாதான காலத்தில் அமைதியாய் வாழ்ந்தாலும் தன் நாட்டின் மேல் மறுபுலத்தவர் படை எடுத்து வர மூண்டால் அவரைத் தடையற நீக்கித் தனது அரசுக்கு உதவி புரியும் கடமை ஆண் மகனுய்ப் பிறந்த எவனுக்கும் உரிய உடைமையாய் அமைந்துள்ளது. காலம் இடம் பக்கச் சூழல் அரசுமுறை ஆட்சி நிலை முதலியவற்றிற்குத் தக்கபடி ஒக்க இசைந்து ஒழுகுவதே உலக ஒழுக்கமாய் உற்றிருத்தலால் அவ் வழிகளைத் தழுவி வாழ்வது மனிதனுக்கு விழுமிய கடமையாய் யாண்டும் மேவி வந்துளது.

தன் பொறுப்பையும் உறுப்பையும் குறிப்போடு கூர்ந்து செய்து வருபவன் யாண்டும் சிறப்பெய்தி வருகிருன். தங்கள்

கடமையை ஒவ்வொருவரும் ஓர்ந்து செய்து வந்தால் அந்த மனித சமுதாயம் மருவியுள்ள நாடு பெரு மகிமையுடையதாய்ப் பெருகி விளங்கும். உள்ளப் பண்பாடும் உணர்ச்சியும் உடையவர் உரிய கடமைகளைத் தாமாகவே உவந்து செய்கின்றார். ஆடவர் போலவே மகளிரும் உரிமையோடு கருதிச் செய்யவுரியது கடன் என வந்து வாழ்வின் நிலைமையைத் துலக்கியது.

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே. (புறம், 312)

வீரக் குடியில் பிறந்த ஒரு தாய் இவ்வாறு கூறியிருக்கிறாள்.

உரிய கடப்பாடுகளைக் காட்டி வந்துள்ள இப் பாட்டு அரிய பல உண்மைகளை உணர்த்தி நிற்கிறது. அந்தக் காலத்து நிலைகளும் அரசு முறைகளும் மக்களுடைய உறுதி ஊக்கங்களும் இதனால் அறிய வந்தன. இந்தக் காலத்துத் தாய்மார் இப்படி வீரப்பாடுகளை ஆர்வத்தோடு கூற மாட்டார். என் பிள்ளை நல்ல உத்தியோகம் பார்த்து எங்களுக்குச் சோறு போட வேண்டும் என்றே கூற நேர்வர். காலநிலை வாழ்க்கை வகையை வரைந்து காட்டி நாட்டின் தகைமையை விளக்குகின்றது.

குடிகளிடம் பேரன்பு புரிந்து அவரை அரசன் நன்கு ஆதரித்து வந்தமையால் போரில் அவனுக்கு உதவியாகத் தம் ஆருயிரையும் அவர் உவந்து வழங்க நேர்ந்தார். தேச வுணர்ச்சி இராச விசுவாசம் மான வீரம் இந் நாட்டு மக்களிடம் மருவியிருந்துள்ள நிலைகளைப் பழம்பாட்டுகள் நேரே காட்டி நிற்கின்றன.

ஒரு வீர மகன் போரில் மூண்டு பொருது மாண்டு போனான். அவனுடைய உடல் முழுதும் பாணங்கள் ஊடுருவி நின்றன; தலை வாளால் துணிபட்டுப் போயது; வாய் கண் மூக்கு எங்கும் அம்புகள் தங்கின. அந்த நிலையில் மடிந்து கிடந்த மகனை அவன் தாய் வந்து கண்டாள் "ஐயோ மகனே! அடையாளம் தெரிய வில்லையே!" என்று அழுது மறுகினாள். அந்த அன்னை கூறிய இன்னல் உரைகளை அயலே காண வருகிறோம்.

எற்கண்டு அறிகோ? எற்கண்டு அறிகோ?
என்மகன் ஆதல் எற்கண்டு அறிகோ?
கண்ணே கணைமூழ் கினவே; தலையே
வண்ண மாலை வாள்விடக் குறைந்தன;
வாயே, பொருநனைப் பகழி மூழ்கலின் புலால் வழிந்து
ஆவ நாழிகை அம்புசெறித் தற்றே;
நெஞ்சே வெஞ்சரம் கடந்தன; குறங்கே
நிறம் கரந்து பல்சரம் நிறைந்தன; அதனால்
அவிழ்பூ வம்பணைக் கிடந்த காளை
கவிழ்பூங் கழற்றிண் காய்போன் றனனே.” (தகடூர்)

இந்தக் கவியைக் கண் ஊன்றிக் காணுங்கள். போரில் இறந்த ஒரு அதிசய தீரனையும், அவனைப்பெற்ற அருமைத் தாயையும் வியந்து நோக்கி நாம் இரங்கி நிற்கின்றோம். போரில் சாவதை வீரர்கள் ஆர்வமாய்க் கொள்ளுகின்றனர். அந்த வீர மக்களைப் பெற்ற தாயரும் அதனை மதித்து மகிழ்ந்து நிற்கின்றார்.

ஒரு வீரமகன் போரில் தீரமாய்ப் பொருது யானைகளோடு போராடினன்; கையில் இருந்த வேல் ஒழிந்து போயது; வேறு ஆயுதம் இல்லாமையால் மாறி வந்தான்; அவனைத் தாய் கண்டாள்; தன் மகன் மீண்டு வந்தது நீண்ட பழி என நெடிது கவன்றாள். அவள் கவலையோடு கூறியன அடியில் வருவன.

வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோலா அதனகத்து உன் ஈன்றனனே
பொருந்தா மன்னர் அருஞ்சம முருக்கி
அக்களத்து ஒழிதல் செல்லாய் மிக்க
புகர்முகக் குஞ்சரம் எறிந்த எஃகம்
அதன்முகத்து ஒழிய நீபோந்தனையே
எம்மில் செய்யா அரும்பழி செய்த
கல்லாக் காளைநின் ஈன்ற வயிறே. (தகடூர்)

போரில் மாளாமல் மகன் மாறி வந்தது தன் வீரக்குடிக்கு வெய்யபழியாயது என அத்தாய் வருந்தி நொந்திருக்கும் நிலையை இதில் அறிந்து கொள்கிறோம். பிள்ளைப் பாசத்தையும் கடந்து வீரம் உள்ளத்தைக் கவர்ந்துள்ளது. பெண்டிரும் வீரத்தைப் பெருமையாப் பேணி வந்திருப்பது கருதியுணர வந்தது. வீரநாடு என இப் பாரதம் பாரறிய நின்றதை நேரேபார்த்து மகிழ்கிறோம்.

808. ஊனழிய நேர்ந்தாலும் உள்ளழியார் எவ்வழியும்
கோனலமே நாடிக் குறிக்கொள்வார்—மானநலம்
குன்ற வருவ குறியார் குலவீரர்
வென்றி விழைவார் வினை. (அ)

இ—ள்

சிறந்த குல வீரர் உடல் அழிய நேர்ந்தாலும் உள்ளம் கலங்கார்; எவ்வழியும் தம் அரசனுக்கு நன்மைகளையே நாடி நிற்பர்; மான நலங்களை மகிமையோடு பேணி வருவர்; ஈனங்களை எண்ணார்; என்றும் வெற்றியே விழைந்து விளங்குவர் என்க.

புனித நிலைகள் தனி வீரங்கள் ஆகின்றன.

உண்மையான வீரக் குடியில் பிறந்தவர் எவ்வழியும் திண்மையாளராய்ச் சிறந்து திகழ்கின்றார். நேர்மையும் மானமும் அவரிடம் சீர்மையாய் நிலைத்திருத்தலால் கீழ்மை யாதும் நேராமல் யாண்டும் மேன்மையாகவே விளங்கி நிற்கின்றார். உயர்நிலைகள் யாவும் உயர்ந்த நீர்மைகளால் அமைந்து வருகின்றன. நல்ல பண்புகளால் உள்ளம் உயர்ந்த போது அந்த மனிதனை எல்லாரும் உவந்து போற்றுகின்றார். அவனுடைய பெயரும் புகழும் உலகத்தில் ஓங்கி எங்கும் ஒளி வீசி உலாவுகின்றன.

ஈன்ற தாய் தந்தையர் தனக்கு உரிமையா இட்ட பெயரை உலகம் உவந்து பேசும்படி எந்த மகன் செய்து வருகிறானோ அந்த மகனே மகான் ஆகின்றான்; அவன் தோற்றமே ஏற்றம் பெறுகின்றது; அவனே தோன்றல் என்னும் ஆன்ற மேன்மையை அடைந்து நிற்கின்றான். அங்ஙனம் அடையாதவன் தோற்றம் கடையாகின்றது. தோன்றலாய்த் தோன்றாதவன் தோன்றாமல் தொலைவதே நல்லது என்று தேவர் உள்ளம் வருந்தி உரைத்திருத்தலால் பிறந்த மனிதன் பெரிய மகிமையோடு பெருகி வர வேண்டும் என அவர் உருகி விழைந்துள்ளமை தெரிய வந்தது.

வீரம் கொடை ஞானங்களைத் தழுவி நின்றவரே விழுமிய மேலோராய் விளங்கியுள்ளனர். அவருடைய உருவங்கள் மறைந்து போனாலும் பெயர்களை விழைந்து கூறி மாந்தர் மகிழ்ந்து வருகின்றனர். வழி முறையே வழங்கி வருதலால் அவை யாதும் அழியாமல் ஒளிவீசி என்றும் விளங்கி நிற்கின்றன. தோன்றிய யாவும் நிலையின்றி அழிகின்ற உலகிலே ஆன்றமே

லோர் பெயர் யாண்டும் அழிவின்றி நிலைத்து நிற்பது அதிசய வியப்பை விளைத்து வருகிறது. சத்து நித்தியமாய் நிலவுகிறது.

"Strong towers decay,
But a great name shall never pass away." (Benjamin)

"வலிய நெடிய கோபுரங்கள் அழிந்து போகின்றன; பெரியோர் பெயர் என்றும் அழியாமல் உள்ளது" என்னும் இது இங்கே அறிய வுரியது. புகழ் பெற்ற பெயர் உயர்வுற்றுளது.

இவ்வாறு நிலையான பேராளரே தலையான சீராளராய் நிலவுகின்றனர். சிறந்த பேர் பிறந்த பேறாய் நின்றது. அரிய காரியங்களை ஆற்றுவோரே உரிய பேர்களையும் பெரிய சீர்களையும் அடைந்து உலகம் போற்ற ஒளி மிகுந்து நிற்கின்றனர்.

நாகன் என்பவன் சிறந்த போர் வீரன். உயர்ந்த குண நலங்கள் அமைந்தவன். பாண்டிய மன்னனிடம் படைத் தலைவனாயிருந்தான். அவ்வேந்தன் பால் பேரன்புடையவன்; எவ்வழியும் செவ்வியனாய் யாண்டும் மாறாமல் அம்மன்னனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தான். இவனுடைய வீரம் நேர்மை ஈகை முதலிய நீர்மைகளை வியந்து யாவரும் புகழ்ந்தனர். வடநெடுந்தத்தனார் என்னும் சங்கப் புலவர் இவனை உவந்து பாடினார். குணநலங்கள் மணந்த அப்பாடல் அயலே வருகிறது.

ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழ்ந்தஎன் இரவல் மண்டை
மலர்ப்போர் யார்? என வினவலின் மலைந்தோர்
விசிபிணி முரசமொடு மண்பல தந்த
திருவீழ் நுண்பூண் பாண்டியன் மறவன்
படைவேண்டுவழி வாள் உதவியும்
வினைவேண்டுவழி அறிவு உதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து
அசைநுகம் படாஅ ஆண்டகை உள்ளத்துத்
தோலா நல்இசை நாலை கிழவன்
பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்
திருந்துவேல் நாகற் கூறினர் பலரே. (புறம், 179)

இவனுடைய அறிவு வீரம் கொடை நடை முதலிய நிலைகளை இதனால் அறிந்து கொள்ளுகிறோம். தன் அரசனுக்கு நன்

மையை நாடி யாண்டும் உண்மை யாளனாய் ஒழுகி வன்மையான பகைவரைப் பொருது தொலைத்து யாவருக்கும் உதவி புரிந்து வந்தமையால் இவனுடைய பேரும் சீரும் பாரெங்கும் பரந்து நின்றன. இனிய உதவி நிலை பெரிய புகழாய் வருகிறது.

குன்ற வருவ குறியார் என்றது குல வீரர்களுடைய குறி தெரிய வந்தது. "குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர்" (குறள் 954)என்றார் தேவர். சிறந்த குடியில் பிறந்து உயர்ந்த படிகளில் பழகி வருபவர் இழிந்த நிலைகளை நாணி ஒதுங்குவர் ஆதலால் அவர் யாண்டும் விழுமியோராய் விளங்கி வருகின்றார். ஈனங்களை நாணுவோரே மான வீரராய் மாண் புறுகின்றனர்.

The more things a man is ashamed of, the more respectable he is. (Bernard Shaw)

"இழிந்த கருமங்களை எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவன் நாணுகின்றானே அவ்வளவுக்கு அவ்வளவு அவன் உயர்ந்த மதிப்பை அடைகிறான்" என்னும் இது இங்கே சிந்திக்கத் தக்கது.

புனித மான நல்ல பான்மைகள் மனிதனை மேன்மை ஆக்கித் தனி நிலையில் உயர்த்து கின்றன. இனிய குண நீர்மைகள் தோய்ந்த போது அந்த உள்ளத்தில் தீரமும் வீரமும் சேர்ந்து வளர்கின்றன. தூய்மைமருவிய அளவுமேன்மைகள்விரிகின்றன.

நெஞ்சம் சுத்த முடையவன் யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை; எல்லா ஆற்றல்களும் அவனிடம் தஞ்சமா வந்து சேர்கின்றன. இழிவு படியாமல் இருந்து வருபவன் விழுமிய வீரனாய் விளங்கி வருகிறான். உள்ளம் தெளிந்து உயர் வீரன் ஆகுக.

---

809. கொல்லத் துணிந்து கொலைஞர்கை வாளேந்தி
ஒல்லென்று வந்தும் உளம்கலங்கான்—சொல்லொன்று
கூறிநின்றான் போசன் குலவீரர் அஞ்சுவரோ
சீறிவெங் கூற்றுறினும் சென்று. (கூ)

இ—ள்

கூற்றுவன் கொதித்து வந்தாலும் உயர்ந்த குல வீரர் உள்ளம் அஞ்சார்; தன்னைக் கொல்லத் துணிந்து கொடிய வாள்க

ளோடு சூழ்ந்து நின்ற கொலையாளிகளைக் கண்டும் போசன் யாதும் அஞ்சாமல் அவரை நோக்கி நீதிமொழி கூறினன் என்க.

அஞ்சாமையும் நெஞ்சத் துணிவும் அருந்திறலாண்மையும் வீரத்தின் விளைவுகளாய் விளங்கி நிற்கின்றன. அச்சம் மனிதனைக் கொச்சை ஆக்குகிறது; அஞ்சாமை அவனை உச்ச நிலையில் உயர்த்தியருளுகிறது. ஒச்சங்கள் ஒழிய உச்சங்கள் விளைகின்றன.

உள்ளத்தில் குற்றம் உடையவரே அச்சமும் திகிலும் அடைகின்றனர். கள்ளம் கரவுகள் எள்ளல் இழிவுகளில் தாழ்த்துமே அன்றி ஏற்றம் தரா; கள்ளரிடம் சில சமையம் காணப்படுகிற துணிவு துணிவாகாது. புலி கடுவாய் ஓநாய் முதலிய காட்டு மிருகங்களிடம் தோன்றுகிற திகிலான மூர்க்கம் போல் அவரிடம் கோரக் கொடுமை தோன்றுகிறது. உள்ளம் பழுதாய் இழிந்த பொழுது உயிர்ச்சத்தி ஒழிந்து போகிறது; போகவே விலங்குகள் போல் எவ்வழியும் அவர் கலங்கி உழலுகின்றனர். பொல்லாத புலைத்துடுக்கை வீரம் என்று கூறலாகாது.

நல்ல தன்மைகளிலிருந்து நேர்மையாய்த் தழைத்து வருகிற உயர்ந்த உள்ளத்துணிவே வீரமாம். தரும நீதிகள் மருவி வரக் கருமம் புரிந்து வருவது ஆதலால் வீரம் தெய்வீக நீர்மையாய் மேவி நின்றது. சீரிய வீரம் தேவனாய்த் திகழ்கின்றது.

வீரனை விடம் உண்டனை விண்ணவர்
தீரனைத் திருவண்ணா மலையனை
ஊரனை உணரார் புரம் மூன்றுஎய்த
ஆரனை அடியேன் மறந்து உய்வனோ? (தேவாரம்)

சிவபெருமானை வீரன் என்று அப்பர் இவ்வாறு குறித்துள்ளார்.

பேராசை எனும் பிணியிற் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் படவேல் எறியும்
சூரா! சுரலோக துரந்தரனே. (கந்தர் அநுபூதி)

முருகப் பெருமானை வீரா! என்று அருணகிரிநாதர் இங்ஙனம் ஆர்வமோடு அழைத்திருக்கிறார். "எமனே! வா என் கிட்டே; சத்திவாள் கொண்டு உன்னை வெட்டி வீழ்த்துவேன்" என்று எமனோடு இவர் வீரவாதம் கூறியிருத்தலால் இவரது ஞான தீரம் தெரிய வந்தது. வீரம் வர வெற்றி விளைகின்றது.

தண்டா யுதமும் திரிசூலமும் விழத் தாக்கி உன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாயடா அந்தகா! வந்துபார் சற்றென் கைக்குஎட்டவே.

பட்டிக் கடாவில் வரும் அந்தகா! உனைப் பார்அறிய
வெட்டிப் புறங்கண்டலாது விடேன் வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருத செவ்வேல் பெருமாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்படடா சத்திவாள் என்றன் கையதுவே.

(கந்தர் அலங்காரம், 25, 64)

வீர மூர்த்தியான முருகக் கடவுளை உபாசித்து வந்துள்ள மையால் அருணகிரியார் நேரே கூற்றுவனையும் போருக்கு அறை கூவி இவ்வாறு வீராவேசமாய் விருது கூறி வீறுடன் நின்றார்.

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்---வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. (நக்கீரர்)

செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
குன்றுக் கொற்றத்துக் குறிஞ்சிக் கிழவ!
போர் மிகு பொருந! (திருமுருகாற்றுப்படை)

முருகநாதனை நக்கீரர் இவ்வாறு வீரப் பேரால் துதித்திருக் கிறார். வீரம் எவ்வளவு மகிமையுடையது என்பதை இவற்றால் நன்கு உணர்ந்து கொள்ளுகிறோம். தெய்வ பத்தியும் சித்த சுத்தி யும் அற்புத சத்திகளை அருளுகின்றன; அருளவே அவர் யாருக் கும் அஞ்சாமல் ஆண்டவன் போலவே நீண்ட மேன்மையில் நிலவி நிற்கின்றார்.

"நாமார்க்கும குடிஅல்லோம்; நமனை அஞ்சோம்;
அஞ்சுவதும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை."

திருநாவுக்கரசர் இவ்வாறு உரைத்துள்ளார். பரமவீரனான இறை வனைப் பரவியுள்ளமையால் இவ்வளவு தீரமாய் வீர வசனங்களை அவர் பேச நேர்ந்தார். ஞான சீலமும் தரும நீர்மையும் மருவிய போது அங்கே அதிசயமான வீர ஒளி நேரேவீசி எழுகின்றது.

போசன் என்பவன் மாளவ தேசத்து மன்னன் மகன். மதிநலமுடையவன்; இளமையிலேயே தந்தை இறந்து போன

மையால் சிறிய தந்தை அரசைப் பார்த்து வந்தான்; இவன் கலை பயின்று வருங்கால் வயது பதினறு தொடங்கியது; பருவம் நிரம்பினுல் இக் குலமகன் பட்டத்துக்கு வந்து விடுவான் என்று அக் கொடியவன் கெட்ட எண்ணத்தோடு கேடு சூழ்ந்தான். இவனைக் கொன்று விடும்படி சதி புரிந்தான்; பெரும் பொருள் வருவதை நினைந்து கொலைஞர் நால்வர் இசைந்தார். வேட்டைக் குச் செல்வதாக உல்லாச விநோதமா இரதத்தில் ஏற்றி இவனைக் காட்டுக்கு அழைத்துப் போனுர். காட்சிகள் பல கண்டு வந்தான்; மாலை நெருங்கியது; ஒரு சோலையிடையே கொலைசெய்ய மூண்டார். அந் நிலையை உணர்ந்த இவன் யாதும் அஞ்சாமல் அவரை நேரே நோக்கினுன். "என் சிறிய தந்தை சொல்லியபடியே நீங்கள் என்னைக் கொல்லலாம்; ஆனுல் அவருடைய வாழ்வு நிலையாகுமா? புலையான பழி சுமந்து தொலையாத துயரடைய நேருமே! என்று வருந்துகிறேன்" என இங்ஙனம் மொழிந்து உறுதியொடு ஒரு கவியும் பாடினுன். அது அயலே வருகிறது.

மனுமுதலோர் பலகோடி மன்னர்வந்துஇம்
 மண் ஆண்டு மாண்டே போனுர்;
இனிதாக ஒருவரும்இங் கிருந்ததில்லை;
 எந்தைமட்டும் இருப்பார் ஆனுல்,
மனமார எனதுயிரை வடிவாளுக்கு
 இரையிடுங்கள் மகிழ்ந்து நானும்
தனியாக இறக்கின்றேன் தளராமல்
 எறிமின்என்று சாற்றி நின்றுன். (1)

கொலைபுரிய மூண்டுநின்ற கொடியவர்கள்
 குலமகன்வாய் மொழியைக் கேட்டு
நிலைகுலைந்து நெஞ்சுருகி நெடியவாள்
 அயல்வீசி நேரே ஊர்போய்த்
தலைவனிடம் நிலைமையெலாம் தவருமல்
 உரைத்து நின்றுர் சதிபுரிந்த
புலையவனும் ஓடிவந்து புதல்வனடி
 வீழ்ந்தழுது புகல் அடைந்தான். (போசம்) (2)

நேர்ந்துள்ள நிலைகளை நேரே கண்டு ஈண்டு நெஞ்சம் வியந்து நிற்கிறேம். கொலை செய்ய மூண்டு கொடிய வாள்களோடு

சூழ்ந்த போதும் இக் குலமகன் யாதும் அஞ்சாமல் நெஞ்சம் துணிந்து நேரே பேசி யிருக்கிறன். இவனது திடதைரியம் கொலைஞரையும் வசப்படுத்தியது; கொடிய சதிகாரனையும் குணப்படுத்தியது. மனவுறுதி மனிதனை அதிசய நிலையில் உயர்த்துகிறது. மனோதிடத்தை தைரிய லட்சுமி என்று முன்னோர் குறித்துள்ளமையால் உயிர்க்கு அது புரியும் உறுதி நலனை உணரலாகும். எதை இழந்தாலும் தைரியத்தை இழக்கலாகாது.

"Wealth lost, something lost; honour lost, much lost;
Courage lost, all lost." (Goethe)

"செல்வம் இழந்தால் சிறிது இழந்ததாம்; மானம் இழந்தால் பெரிதும் இழந்ததாம்; தைரியம் இழந்தால் எல்லாம் இழந்ததாம்." என கேதே என்னும் ஜெர்மன் தேசத்துப் பெரியார் இங்ஙனம் கூறியிருக்கிறர். உறுதியானதைரியம்உய்தி தருகிறது.

---

810. இன்றுபோய் நாளைவா என்று ரகுராமன்
அன்று மொழிந்த அருள்மொழியை—என்றுமே
வீர வுலகம் வியந்து புகழ்ந்துவரும்
தீர நிலையைத் தெளிந்து. (ம)

இ—ள்

தன்னோடு போராடித் தோல்வி அடைந்து நின்ற இராவணனை நோக்கி ஐயா! படைகளை இழந்து மெலிந்து போனாய்! இன்று போய்ப் போர்க்கு நாளை வா! என்று இராமன் அருள் புரிந்து மொழிந்த அந்தப் பெருந்தகைமையை நினைந்து வீர வுலகம் இன்றும் வியந்து புகழ்ந்து உவந்து வருகின்றது என்க.

வீரம் என்று கூறியவுடனே அது போர் புரியும் இயல்பினது; இமிசை நிறைந்தது; கோரமான கொடிய கொலைகள் பல நேர நேர்வது என யாரும் எண்ண நேர்வர். அவ்வாறு எண்ணினும் வீரத்தை எவரும் வியந்து போற்றி நயந்து வருகின்றர்.

ஊழிக் காலத்தில் அகில வுலகங்களையும் அழித்து ஒழிக்க வல்ல வீரம் உருத்திர மூர்த்தியிடம் உள்ளது. பொல்லாரைத் தொலைத்து நீக்கி நல்லோரைப் பாதுகாக்கும் வீரம் திருமாலிடம் மருவியிருக்கிறது. உயிர்களை முறையே படைத்து விடும் திறம்

பிரமாவிடம் அமைந்துளது. அரிய கருமங்களைச் செய்து முடிக்கும் உறுதி உயர்ந்த வீரத்தின் பகுதியாய் விளைந்து வருகின்றது.

புலன் ஐந்தும் வென்ருன்தன் வீரமே வீரம். (ஔவையார்)

என்றது அந்த வெற்றி நிலையை உய்த்துணர வந்தது. வீரத்தை மேலோர் எவ்வாறு கருதியுள்ளனர் என்பதைக் காவியங்கள் ஓவியங்களாய்க் காட்டி நிற்கின்றன. கருத்துக்கள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. தருமமும் கருமமும் வீரத்தால் வருகின்றன.

களைகளைக் களைந்து பயிர்களை வளர்ப்பது போல் புன்மைகளை நீக்கி நன்மைகளைக் காக்க நேர்ந்த அரசனுக்கு உறுதியூக்கமாய் வீரம் உதவுகின்றது. தரும நீதிகளைத் திடமாய்க் காத்து வரும் கருமமே வீரம் என வெளியே தெளிவாய் விளங்கி யுள்ளது.

வீரம்.

அறங்கெடாமல்நின்று அடலமர் புரிவதே வீரம்;
மறந்தும் புன்மையும் வஞ்சமும் மருவிடா ததுதான்;
சிறந்த போரிடை இறந்தவர் தேவராய்ச் சிறந்து
பிறந்த பேறெலாம் பெற்றவ ராய்நலம் பெறுவார். (1)

வீர நிலை.

வீரம் உள்ளவர் தருமமும் மெய்ம்மையும் மேவி
ஈரம் உள்ளவ ராயிதம் செய்குவர்; வீரம்
கோர வன்குணம் அன்று; அது தெய்வவான் குணமே;
சீர்இராமனை, விசயனை நினைந்துண்மை தெளிமின்! (2)

வீர மேன்மை.

உலகில் உள்ளநல் உயிர்த்தொகை எவற்றினும் உயர்ந்து
திலக மாய்நின்று தேசொடு தெவ்வரை அடக்கி
அலகில் சீருடன் ஆளுறும் அரசனுக்கு உயிராய்
நிலவி யுள்ளநன் னீர்மையே வீரம்என்று அறிக. (3)
(வீரபாண்டியம்)

வீரத்தின் நிலைமை தலைமை நீர்மை சீர்மைகளை இவை நன்கு உணர்த்தி யுள்ளன. பொருள் நயங்களைக் கூர்மையா ஓர்ந்து கருமவீரங்களின் மருமங்களைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

உலகநலம் கருதியே வீரர் நேரே ஒளி புரிந்து வருகிறது.

இரக்கம் இன்றி யாண்டும் வலிந்து இடையூறுகள் புரிந்து வந்த அரக்கர் இனத்தை அடக்கி ஒடுக்க வீரவேந்தனாய் இராமன் தோன்றினான். இலங்கை வேந்தன் செய்த மாயவஞ்சனை இத் தூயநெஞ்சனுக்கு மிகுந்த கோபத்தை மூட்டியது. தம்பியோடு வானரங்கள் துணையா இலங்கை புகுந்து வளைந்தான். நீதிமுறைப் படி முதலில் அங்கதனைத் தூது விடுத்தான்; யாதும் இசையா மையால் போர் மூண்டது; அரக்கர் திரள்கள் மாண்டன; இறு தியில் இராவணன் உறிதியாய் எதிர்ந்து போராடினான். இவ் வீரன் எதிரே யாவும் இழந்து படுதோல்வி அடைந்து பரிந்து நின்றான். அவனது நிலைமையை நோக்கி இக்குல வீரன் இரங்கி னான். பொருள் பொதிந்த மொழிகளை அருள்சுரந்து மொழிந் தான்: "ஐயா! உன்னோடு வந்த சேனைகள் யாவும் அடியோடு நாசமாய்ப் போயின; பிரசண்ட மாருதத்தின் எதிரே அகப் பட்ட செத்தைகளைப் போல் எல்லாம் செத்து ஒழிய நீ ஒற்றை ஆளாய்த் தனியே நிற்கின்றாய்; இன்று உன் ஊருக்குப் போயி ருந்து தேகத்தை நன்றாகத் தேற்றிக் கொண்டு உனக்கு வேண் டிய பெரிய பல சேனைகளோடு மீண்டு வந்து நாளை என்னோடு போராடலாம்; இந்த வேளை உனக்குச் சரியில்லை; தோல்வியை நினைந்து வருந்தி நில்லாதே; விரைந்து போ! நாளை வா!" என இவ் வீரக்குரிசில் இவ்வாறு வெற்றி வீறோடு கூறி விடுத்தான்.

இது எவ்வளவு பெருந்தன்மை! எத்துணை உத்தம வீரம்! உய்த்துணர வேண்டும். அமரர் முதல் யாரும் வெல்ல முடியாத பொல்லாத இலங்கை வேந்தன் எல்லாப் படைகளையும் இழந்து நின்றான். யாண்டும் தோல்வி கண்டு அறியாதவன் ஈண்டுத் தோல் வியடைந்தான்; சமையம் வாய்த்தது என்று உடனே கொன்று வீழ்த்தாமல் இவ் வென்றி வீரன் நன்று கூறி அவனைத் தேற்றி அனுப்பினான். அந்த அருமைப் பண்பை உலகம் போற்றுகிறது.

வேளைமிக வாய்த்ததென்று வீழ்த்தாமல் மேவலனை
நாளைவா என்றருளி நல்கினான்---தோளையே
இன்றுணையாக் கொண்ட இராமன் கொடைவீரம்
என்றுமுல கேத்தும் இசைந்து.

அன்று முதல் இன்று வரை தோன்றியுள்ள வீரர் யாவரும் இவ் வீர வள்ளல் எதிரியிடம் புரிந்துள்ள அரிய அதிசய

நீர்மையை வியந்து துதிசெய்து வருகின்றனர். உத்தம வீரனிடம் உயர்ந்த பல பண்பாடுகள் உன்னத நிலையில் ஒளிபெற்றுள்ளன.

பேராண்மை என்ப தறுகண்;ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு. (குறள், 773)

“எதிரிகளோடு கடுமையாய்ப் போராடுவதே வீரனுக்கு உயர்ந்த பேராண்மையாம்; அவ்வாறு போராடுங்கால் அவர்க்கு மெலிவோ தாழ்வோ நேர்ந்ததானல் உடனே தன் போரை நிறுத்தி ஆதரவாய் அவரைத் தேற்றிவிடின் அது தன் வீரத்திற்குச் சிறந்த ஏற்றமாம்” எனச் சுத்த வீரத்தின் உத்தம நீர்மையைத்தேவர் இவ்வாறு குறித்திருக்கிரூர். ஊராண்மை = உள்ளம் பரிந்து உதவிபுரியும் தன்மை. அபாயகாலத்தில் உபாயமாய் உபகாரம் செய்யும் இனிய நீர்மை ஊராண்மை என வந்தது. எஃகு = கூர்மை. உனது வீரம் ஆகிய வாள் கூர்மை மிகுந்து யாண்டும் எளிதே வெற்றி பெற வேண்டுமானல் ஆனவரையும் எதிரிக்கு ஆதரவு செய் என்னும் ஞானபோதனை இங்கே மோனமாய் அமைந்துள்ளது சுத்த வீரம் உத்தம நிலையமாகின்றது.

இராமனுடைய பேராண்மையையும் ஊராண்மையையும் ஈண்டு ஒருங்கே நோக்கி நாம் உள்ளம் உவந்து கொள்ளுகின்ரேம். அரிய பல குண நீர்மைகளும் பெரிய தீரமும் இவ் வீரனிடம் உரிமையாய் மருவியுள்ளன. கொடுமை அடியோடு ஒழியவும் நன்மை குடியேறி வளரவுமே இக் கோமகன் கடுமையாய் நிருதரைக்கடியநேர்ந்தான். நேர்ந்தநிலையிலும் நீர்மைகள்நிலவின.

இராச தர்மம்.

கொலையிலே கொடியவரைக் கொன்ருெழித்தல்
பைங்கூழ்க்குக் களைகளைந்து
நிலையிலே அறைதவளர்க்கும் நீர்மைஎன
அரசுக்கு நேர்மை யாகத்
தலையிலே அமைந்திருக்கும் தனிநீதி
தனையுணர்ந்து தறுகணேடு
புலையிலே புகுவாரை அடியோடு
போக்காரேல் பூமி என்னும்? (1)

## இராம நீதி.

*நீதிக்கு நிலையமாய் நிறையருளுக்கு*
*உறைவிடமாய் நேர்மை வாய்மை*
*போதிக்கும் தருமகுண புனிதனும்*
*ரகுராமன் போர்வில் வாங்கிப்*
*பேதிக்கும் பொல்லாத அரக்கர்குலம்*
*இல்லாமல் பேர்த்து எறிந்தான்*
*மாதிக்கும் புகழ்கின்ற மகிமையொடு*
*நின்றுள்ளான் மன்னர் ஏறே.* (2)

(இந்தியத்தாய் நிலை)

தீயோரைத் தீர்த்து நல்லோரைக் காத்திருத்தலால் வீர வள்ளல் என இராமன் விழுமிய புகழோடு விளங்கி யுள்ளான். வீரமும் கொடையும் மன்னரை மகிமைப்படுத்தி வருகின்றன.

*உயிர்போற் றலையே செருவத் தானே;*
*கொடைபோற் றலையே இரவலர் நடுவண்;*
*பெரியோர்ப் பேணிச் சிறியோரை அளித்தி!*
*நின்வயின் பிரிந்த நல்லிசை கனவினும்*
5 *பிறர்நசை அறியா வயங்குசெந் நாவிற்*
*படியோர்த் தேய்த்த ஆண்மைத் தொடியோர்*
*தோளிடைக் குழைந்த கோதை மார்ப!*
*கடவுள் அயிரையின் நிலைஇக்*
9 *கேடில வாக பெருமநின் புகழே.* (பதிற்றுப்பத்து, 79)

சேரல் இரும்பொறை என்னும் மன்னனுடைய வீரம் கொடைமுதலிய நீர்மைகளைக் குறித்து இது விளக்கியிருக்கிறது. அரிசில்கிழார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார். கவியின் பொருள் நிலைகளைக் கருதியுணர்ந்து உறுதி காணுக.

வேந்து முறையில் வீரம் ஏந்திய சீராய் இசைந்துள்ளது.

உயர்ந்த அரசர்கள் பரம்பரையாய் ஒளி புரிந்து வந்துள்ளமையால் சிறந்த வீரர்கள் தோன்றி அருந்திறல்களை ஆற்றியுள்ளனர். இந்த நாட்டு வீரர்களுடைய போராற்றல்களைக் குறித்து எந்த நாட்டவரும் வியந்திருக்கின்றனர். பெரிய அறிஞரும் அரிய தளபதியும் ஆன சர் சிரல் என்பவர் எழுதியுள்ள

நூலில் இந்தியரின் வீரம் அதிசயமுடையது என மிகவும் வியந்து புகழ்ந்து வரைந்துள்ளார். ஒன்று அயலே வருகின்றது.

"The Indian army has a fine record for gallantry and it is a great fighting engine."

"இந்தியப் படை வீரத்தில் உயர்ந்தது; போராடலில் சிறந்த வல்லமை யுடையது" என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது. அந்நிய நாட்டாரும் இந்நாட்டு வீரரைப் போற்றுகின்றார்.

ஜெர்மன் சக்கரவர்த்தியான கெய்சர் "இந்தியர் சிறந்த போர் வீரர்" எனத் தனது அரசவையில் ஒருமுறை வியந்து பேசியிருக்கிறார். யாரும் புகழ வீரநாடாய் இது வீறுகொண்டுள்ளது.

அகில வுலகங்களிலும் தலைசிறந்த வீரனாய் இராமன் நிலவி நிற்கிறான். இவ் வீர வள்ளலின் அருந்திறலும் பெருந்தகைமையும் அருள்நீர்மையும் எவரும் யாண்டும் துதிசெய்துவர என்றும் ஒளிபுரிந்து வருகின்றன. உத்தம வீரன் உயர்ந்து திகழ்கின்றான்.

வீரன் கேண்மை கூர்அம்பு ஆகும். (கொன்றைவேந்தன்)

என்று ஔவையார் இவ்வாறு கூறியிருப்பது வீரத்தின் மேன்மையை வியந்து சிந்திக்கச் செய்கிறது. நாட்டைப் பாதுகாக்கும் ஆட்சிக்கு வீரர் உயிராதாரமாயுள்ளமையால் அவரது உயர்நிலை உணரவந்தது. வீரம் பேணி வியன் புகழ் பூணுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வீரம் அரசுக்கு உரிமையான உறுதி.
அரிய வினைகளை ஆற்ற வல்லது.
பெரிய மேன்மைகள் பேணி யருள்வது.
அதிசய ஆற்றல்கள் அமைந்தது.
வீரம் உடையான் வியன் புகழ் அடைவான்.
போர் வீரமே புகழ் வீரமாம்.
நல்ல வீரரை எல்லாரும் புகழ்வார்.
நாட்டுக்கு வெற்றியை அவர் நாடி வருவார்.
கூற்றுவன் நேரினும் ஆற்றல் குறையார்.
மாற்றான்பாலும் மனம் இரங்கி யருள்வார்.

அக-வது வீரம் முற்றிற்று.

---

# எண்பத்திரண்டாம் அதிகாரம்.

## கொடை

அஃதாவது தனக்கு உரிய பொருள்களைப் பிறர்க்கு உவந்து கொடுக்கும் உபகார நீர்மை. உள்ளத் திண்மைபோல் வண்மையும் அரசனுக்கு இயல்பான உயர்ந்த தன்மை ஆதலால் அந்த உண்மை தெரிய வீரத்தின்பின் இது வைக்கப்பட்டது.

811. ஈகை இயல்பே இருமையும் இன்பமாய்
வாகை புரிந்து வருதலால்—ஈகையான்
எவ்வழியும் மேன்மையே எய்தி மகிழ்கின்றான்
செவ்வழிநேர் கண்டு தெளிந்து. (க)

இ—ள்

ஈகைக் குணம் இம்மையும் மறுமையும் இன்பமாய் நன்மை புரிந்து வருகிறது; ஆகவே ஈகையாளன் எவ்வழியும் செவ்விய மேன்மைகளை அடைந்து சிறந்து மகிழ்ந்து உயர்ந்து திகழ்கின்றான்; இந்த உண்மையை உணர்ந்து உவந்து கொடுத்து உயர்க.

இனிய இயல்புகள் இனிது அமைந்தபோதுதான் மனிதன் தனி மகிமையாய் உயர்ந்து வருகிறான். குண நீர்மைகளுள் ஈகை உயர்தரமுடையது. ஈதல், தருதல், கொடுத்தல் என்னும் தொழில் அடிகள் உபகாரநிலைகளை உரிமையா உணர்த்தியுள்ளன.

பிறவுயிர்கள் இன்புற உதவி புரிகிறவன் தன் உயிர்க்குப் பெரிய இன்பங்களை ஆக்கிக் கொள்கிறான். அந்த அதிசய ஆக்கத்தை ஈகை இனிது விளைத்து வருகிறது; வரவே அது ஆன்ம அமுதமாய், அரிய மகிமையாய், யாண்டும் பெரிய மேன்மையாய் மருவி நின்று பேரின்ப நிலைகளை நேரே அருளுகின்றது.

தலைமையான அரசனுக்கு அந்நிலைமையை நன்கு நிலைபெறச் செய்வது ஈகை ஆதலால் அது அரசுக்கு இனிய கடமையாய் இயல் உரிமையாய் இசைந்து நின்றது. வீரமும் ஈகையும் வேந்தனுக்கு வாகையும் ஓகையும் வழங்கி வருகின்றன. அரசுக்கு உரிய குண நலங்களைக் கூறி வரும்பொழுது அஞ்சாமை, ஈகை என வீரத்தையும் கொடையையும் தேவர் சேர

வைத்திருப்பது சிந்திக்கத்தக்கது. இராசகம்பீரமான நீர்மைகள் யாண்டும் உயர்ந்த சீர்மைகளாய்ச் சிறந்து திகழ்கின்றன.

உள்ளத்திண்மை ஒருவனை வீரன் என உயர்த்துகிறது.

உதவியான கொடை வள்ளல் என விளக்குகிறது.

வீரன், வள்ளல் என வியன் பெயர் பெற்றவன் மனித சமுதாயத்துள் தனி நிலையில் உயர்ந்து என்றும் இனியனாய் விளங்குகிறான். பேடி, உலோபி எனப் பிழைபடின் அவன் இழிவாய்க் கழிந்து ஒழிகிறான். இயல்பு குன்ற உயர்வு பொன்றும்.

வள்ளல் என்னும் பெயரைக் கேட்டால் எல்லாரும் உள்ளம் உவந்து கொள்ளுகின்றார்; அதற்கு மாறாக உலோபி என்று கூறினால் எவரும் அருவருத்து வெறுத்து இகழ்கின்றார்.

கொடைக்குணம் மனிதனைத் தெய்வம் ஆக்குகிறது. இந் நீர்மை இல்லாதவன் சீர்மையிழந்து சிறுமையாய் இழிகிறான். நல்ல தன்மை ஒருவிய அளவு பொல்லாத புன்மை மருவிப் புலைப் படுத்துகிறது. இழி புலைகள் நீங்கி ஒளிபெற வேண்டுமானால் உபகார நீர்மை ஓங்கி வர வேண்டும் அதுவரின் அதிசய மேன்மைகள் வருகின்றன. ஈகை இருமையும் பெருமை தருகின்றது.

"ஈவானே தெய்வம்" (ஒளவையார்)

என்றதனால் ஈகையின் மகிமையை இனிது தெளிந்து கொள்ளலாம். கொடுப்பது தருமமாய் உயிரை உயர்த்துகிறது.

உருவத்தில் மனிதன் ஆயினும் கொடையாளி உயர்வான தெய்வத்தின் நிலைமையை அடைந்து நிற்கிறான்; பொன்னும் பொருளும் உதவி மன்னுயிரைப் பேணி வருபவன் பொன்னுயிராய்ப் பொலிந்து இன்னுயிர் முதல்வனாய் இனிதுதிகழ்கின்றான்.

மின்னும் தமனியமும் வெற்றிரும்பும் ஓர் இனமாப்
பொன்னின் பெயர்படைத்தால் போலாதே---கொன்னே
ஒளிப்பாரும் மக்களாய் ஒல்லுவது ஆங்கே
அளிப்பாரும் மக்களா மாறு. (பெரும்பொருள்)

கொடுப்பவன் தங்கம்; கொடாதவன் இரும்பு என இது குறித்திருக்கிறது. குறிப்பு கூர்ந்துணர வந்தது. தமனியம் = பொன். இரும்புக்குக் கரும்பொன் என்று ஒரு பெயர் உண்டு.

ஏழைகளுக்கு உளம் இரங்கிக் கொடுக்கும் கொடையாளியும், அங்ஙனம் கொடாத உலோபியும் உருவத்தில் ஒரு நிகராய் மனிதர் எனத் தோன்றினும் முன்னவன் பொன்போல் உயர்ந்தவன்; பின்னவன் இரும்புபோல் தாழ்ந்தவன் என்க. கரும்பொன் காக்காப்பொன் போல் இழிந்து போகாமல் செம்பொன்போல் உயர்ந்து கொள்ள வேண்டும். அந்த உயர்வு கொடையால் வரும் ஆதலால் அதனை யுடையனாய் உயர்க என்பது ஈண்டு உணர வந்தது. தருவது தருமமாய் வருகிறது.

பசி வறுமை முதலிய துயர்களை நீக்கி உயிர்களை மகிழ்வித்தலால் கொடை புகழையும் புண்ணியத்தையும் விளைத்து அருளுகின்றது. கொடையாளியை யாவரும் வாயார வாழ்த்துகின்றார்; மாந்தர் மகிழ்ச்சி ஏந்திய புண்ணியமாய் வருகிறது; ஆகவே ஈகையாளன் இம்மையில் இசையும், மறுமையில் மகிமையும் ஒருங்கே பெறுகின்றான். கொடை அரியமேன்மைகளை அருளும்.

இல்லா இடத்தும் இயைந்த அளவினால்
உள்ள இடம்போல் பெரிதுவந்து---மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு. (நாலடியார், *91*)

மிகுந்த பொருள் இல்லையானாலும் தன்னால் இயன்ற அளவு பிறர்க்கு உதவுகின்ற இயல்புடையானுக்குச் சுவர்க்கம் உறவுரிமையாம் என இது உணர்த்தியுள்ளது. எளியவர்க்கு இதம் புரிய இங்கே தன் வீட்டைத் திறந்து வைத்திருப்பவனுக்கு அங்கே பேரின்ப வீடு திறந்திருக்கிறது. கொடையால் மானவன் வானவன் ஆகிறான். கொடுத்து வைத்த புண்ணியவான் என நாட்டில் வழங்கிவரும் முதுமொழி கொடையால் அடையும் இன்ப நிலையை எடுத்துக் காட்டி நன்கு விளக்கியுள்ளது.

கடைநின் றவர்உறு கண்கண்டு இரங்கி
உடையதாம் ஆற்றலின் உண்டி கொடுத்தோர்
படைகெழு தானையர் பல்களி யானைக்
குடைகெழு வேந்தர்கள் ஆகுவர் கோவே!

(சூளாமணி, துறவு, *158*)

பசியால் வருந்தி வந்தவர்க்கு இரங்கி உண்டி கொடுத்தோர் அந்தப் புண்ணியத்தால் மறுபிறப்பில் உயர்ந்த அரசராய்

அவர் சிறந்து விளங்குவர் என இது உணர்த்தியுள்ளது. தன்னைத் தழுவி நின்றவனைக் கொடை எழுமையும் இன்புறச் செய்கிறது. கொடுப்பவனுக்கே கடவுள் எல்லாம் கொடுக்கின்றார்.

கொடையே எவர்க்கும் எப்பேறும்
    கொடுக்கும்; நெறியிற் பிறழாத
கொடையே யாரும் தன்வழியின்
    ஒழுகச் செய்யும்; குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும்;
    குலவும் பூதம் அனைத்தினையும்
கொடையே புரக்கும் என்றுள்ளம்
    கொள்ளப் புகன்றான் கவுதமனே. (காஞ்சிப்புராணம்)

எல்லா இன்ப நலங்களும் கொடையால் உளவாம் என இது குறித்துளது. தரும விளைவுகளை உடையது ஆதலால் கொடை அரிய பல மகிமைகளை அருளுகின்றது. எண்ணரிய மேன்மைகள் புண்ணியத்தால் விளைகின்றன. அந்தப் புண்ணியம் கொடையால் கண்ணியமாய் விளைந்து வருகின்றது.

Generosity is a virtue of a very different complexion.
[Goldsmith]

"தயாளமான கொடை பல சீர்கள் மருவிய தருமமாயுளது" என்னும் இது இங்கே அறிய வுரியது. தருபவன் தருமவானுய இருமையும் பெருமை பெறுகிறான். கொடையால் புகழ் ஒளி பரவுகிறது; புண்ணியம் பெருகுகிறது; எண்ணிய இன்ப நலங்கள் எவ்வழியும் வருகின்றன. ஈந்து பழகி இனிது வாழுக.

---

812. நீரலைபோல் தோன்றி நிலையாத இவ்வுலகில்
ஓரிரண் டொண்குணமே ஓங்கிநிற்கும்—தேரிலவை
வீரம் கொடையாம்; விழைந்திவற்றை மேவாதார்
பேரிழந்தார் ஆவர் பிறழ்ந்து. (உ)

இ—ள்

கடலில் எழுகின்ற அலைகள் போல் உடல்கள் தோன்றி யாவும் விரைந்து மறைந்து போகிற இந்த உலகத்தில் வீரம், கொடை என்னும் இரண்டு நீர்மைகள்தான் நிலைத்து நிற்கின்றன; இவற்றைத் தழுவி நின்றார் விழுமிய புகழோடு விளங்கி நிற்கின்றார்; தழுவாதவர் வழுவாய் ஒழிந்து போகின்றார் என்க.

ஒன்றும் நிலையில்லாத இவ் வுலகத்தில் என்றும் நிலையாய் நிலைத்து நிற்பது புகழே. அது அரிய செயல்களாலும் பெரிய இயல்புகளாலும் உரியதாய் வருகிறது. கல்வி சீலம் ஞானம் வீரம் முதலியவற்றால் புகழை அடையலாம் ஆயினும் கொடையால் அடைவதே உயர்தரம் உடையதாய் ஒளி வீசி எழுகிறது.

"புரிகின்ற கொடைவழியே புகழ்வெளியாய் எவ்வழியும்
விரிகின்ற ஒளிவிசி வியனோடு விளங்குமால்."

புகழ் விளையும் வழியை இது தெளிவாக விளக்கியுள்ளது.

ஈவார்மேல் நிற்கும் புகழ். (குறள், 232) என்றார் தேவர்.

எளியவர்க்கு அளிசெய்து உதவும் ஈகையாளரிடமே புகழ் ஒளிசெய்து ஓங்கி நிற்கும் என்றதனால் கொடைக்கும் புகழுக்கும் உள்ள உறவுரிமை புலனாய் நின்றது. புகழின் தாயாயுள்ள இத்தகைய கொடையை யுடையவரே எத்தகைய நிலையிலும் நிலைபெற்ற கீர்த்தியாளராய் உலகில் நிலவி நிற்கின்றார்.

ஆய் என்பவன் குறுநில மன்னன்; பாண்டி நாட்டின் தென்பகுதியில் இருந்தவன்; சிறந்த கொடையாளி; இவனது ஈகைநிலையை வியந்து அக்காலத்திலிருந்த சங்கப் புலவர் பலரும் புகழ்ந்திருக்கின்றனர். அவருள் ஏணிச்சேரி முடமோசியார் என்பவர் இவனை நேரே காண வந்தார்; கண்டார்; வந்தவர் எவரையும் உவந்து உபசரித்து இவன் உதவிபுரிகிற நிலைமையையும் நீர்மையையும் நோக்கி நெஞ்சம் மகிழ்ந்தார். "தாய் அன்பு புரிகிற ஆயே! நீ உலக சோதியாய் விளங்குவாய்!" என்று இவனை விழைந்து புகழ்ந்தார். அப்பொழுது வானத்தை அண்ணாந்து நோக்கிச் சூரியனைப் பார்த்து இச் சீரியனை வார்த்து ஒருபாட்டுப் பாடினார். அதன் ஒரு பகுதி அயலே வருகிறது.

விருந்திறை நல்கும் நாடன் எங்கோன்
கழல்தொடி ஆஅய் அண்டிரன் போல
வண்மையும் உடையையோ ஞாயிறு!
கொன்விளங் குதியால் விசும்பி னானே." (மோசியார்)

"ஓ சூரியா! நீ உயர்ந்த ஆகாயத்தில் வீணே ஒளிவீசி உலாவுகின்றாயே அன்றி எங்கள் ஆயைப்போல் தாயன்போடு விருந்தினரைப் புரந்தருளி வருந்தி வந்தவர்க்கு எதையும் வாரிக்கொ

டுக்கும் வண்மை உன்னிடம் இல்லையே; நீ வெயிலைப்பரப்பிச்சுடுகின்றாய்; இவன் கொடையைப் பரப்பி எல்லார் உள்ளங்களையும் குளிரச் செய்கின்றான்; நீ பகலில் மாத்திரம் ஒளி செய்கின்றாய்; இவன் இரவு பகல் என்றும் புகழ் ஒளி வீசிப் பொலிந்து விளங்குகிறான்." எனப் புலவர் உள்ளம் கனிந்து கூறியுள்ளமையால் இவனது இனிய நீர்மைகளையும் ஈகையின் சீர்மைகளையும் நாம் நேரே உணர்ந்து உவந்து நெஞ்சம் தெளிந்து கொள்கின்றோம்.

பொருள் நிறைந்திருந்தாலும் ஈகை இல்லையானால் அந்தச் செல்வன் எள்ளி இகழப்படுகிறான்; இயன்ற அளவு கொடுத்து வருபவனை உலகம் உவந்து புகழ்ந்து வருகிறது; கொடையாளியைப் பகைவனும் மதித்துப் போற்றுகிறான். கொடுப்பது அரிய செயல் ஆதலால் அதனை யுடையவன் அதிசய மேன்மையை அடைந்து கொள்கிறான். அருமை யாண்டும் பெருமை தரும்.

அயலார் வாழச் செயல் புரிபவன் உயர் மனிதன் ஆகின்றான். தன்னலமே கருதித் தன்பாடே நோக்கித் தன் வயிற்றையே நிரப்பித் தன்னையே நயந்து வியந்து எவ்வழியும் சுய நோக்கமாய் மயல் மண்டி யுழலுகிற மனித சமுதாயத்துள் பிறர்நலம் கருதிப் பிறர்க்கு இரங்கி உதவுவது அரியபெருமையாய் வந்தது.

பொருளில் பெருமோகம் கொண்டு மருள்மண்டி நிற்பவர் யாதும் ஈயாமல் இருள்மூடி இழிந்து கழிகின்றார்: பொருளின் நிலைமையை உணர்ந்தவர் அருள் புரிந்து உதவித் தெருள் நிறைந்து தேசு மிகுந்து திகழ்கின்றார். ஈகையால் இகமும் பரமும் இன்பமாகிறது. இருமையும் இனிமையா ஈதல்எய்துமே என்பதுமறிக.

சாதல்வந்து அடுத்த காலும் தனக்கொரு சாதல் இன்றிப்
பூதலம் இறக்கும் காறும் புகழுடம்பு இருக்கும்; அந்தக்
கோதறு புகழின் யாக்கை கொடையினால் செல்வம் கூர
வாழ்தலை யுடையார் அன்றே வானமும் வணங்கு நீரார்.

(விநாயக புராணம்)

கொடையினால் உளவாகும் மகிமை மாண்புகளை இதனால் உணர்ந்து கொள்கிறோம். தன் உயிர்க்கு ஊதியமான உறுதி நலங்களைப் பருவம் உள்ள பொழுதே செய்து கொள்பவர் பிறந்த பிறவியின் பயனை விரைந்து பெற்றவராகின்றார்; அங்ஙனம் பெறாதவர் பேதைகளாய் இழிந்து ஒழிந்து போகின்றார்.

பிறர்க்கு இதமா உதவுவது புண்ணியமாய் வந்து தன் உயிர்க்கு உறுதியாய் நன்மை புரிகிறது; அந்த உபகார நீர்மையை இழந்தவன் தனக்கே அபகாரம் செய்தவனுகிறான். ஈதல் உயிர்க்கு ஊதியம் எனத் தேவர் கூறியது பொருள் பொதிந்த அருள் மொழி. இரக்கமும் ஈகையும் இல்லையானல் அந்த மனித வாழ்க்கை அரக்கத் தன்மையாய் இழிந்து அவலமடைந்து கழிகிறது.

சாகைக்கும் மீண்டு பிறக்கைக்கும் அன்றித் தளர்ந்தவர்க்கு ஒன்று
ஈகைக்கு எனைவிதித் தாயிலையே இலங்கா புரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே.

(கந்தர் அலங்காரம் 54)

தளர்ந்தவர்க்கு ஈவது உயர்ந்த பிறவிப்பேறு என்று அருணகிரிநாதர் ஆவலோடு மறுகி உருகி ஆண்டவனிடம் இவ்வாறு வேண்டியிருக்கிறார். கொடுப்பதால் புகழ் வருகிறது; புண்ணியம் விளைகிறது; உயிர் உயர்கதி அடைகிறது; ஆகையால் கோடை ஆவித்துணையாய் அதிசய இன்பமாய்க் கருத வந்தது.

இகத்தில் நன்கொடைப்பெருமையைஅறிந்துளோர் இல்என்று
அகத்தின் நாமமும் உரைசெயார்; அவர் அரிதாகத்
தொகுத்த ஓர்பொருள் நல்குவர் என்பதுஎன் துணிந்து
மிகுத்த ஆவியும் கொடுப்பரால் வேண்டுமுன் விரும்பி.

(திருக்கூவப் புராணம்)

கொடை இருமையும் இன்பம் தரும் பெருமையுடையது ஆதலால்அதன் மகிமையை உணர்ந்தவர் இல்லை என்ற சொல்லை மறந்தும் சொல்லார்; ஈட்டிய பொருளை மாத்திரமா? இனிய உயிரையும் அவர் கொடுக்கத் துணிவர் என இது குறித்துள்ளது. வீட்டுக்கு இல் என்று ஒரு பெயர் உண்டு; நல்ல கொடையாளிகள் அந்தப் பேரைக் கூடச் சொல்ல அஞ்சுவர் என உரைத்திருப்பது ஓர்ந்து சிந்திக்க வுரியது. யாதும் இல்லை என்று வருவோர்க்கு எல்லாம் உண்டு என்று உள்ளம் உவந்து கொடுப்பது உயர்ந்த வள்ளல்களின் இயல்பு; பழகி வந்துள்ள அந்த நல்ல பழக்கத்தால் இல்லை என்னும் பொல்லாத சொல்லை அவரது இனிய வாய் சொல்லாது; யாண்டும் இதமே சொல்லும் என்க.

எவ்வழியும் கொடுத்துப் பழகுக; அது உனக்குச் செவ்விய புகழைக் கொடுத்துத் திவ்விய பதவியையும் உதவியருளும்.

---

813. கோடிக்கு ஒருவன் கொடைக்கென்ன ஒளவைமுன்
பாடி யிருக்கும் படியினால்—நாடிக்
கொடுத்தான் மனுவின் குலதெய்வம் ஆகி
எடுத்தான் பெரும்பேர் இவண். (ங)

இ—ள்

கோடிக் கணக்கான மக்களுள் ஒருவனே கொடையாளியாய் வரமுடியும் என ஒளவையார் பாடியிருத்தலால் கொடையின் அருமை தெளிவாய் நின்றது; அத்தகைய கொடையையுடையவன் மனிதருள் தெய்வமாய் மகிமை பெறுகிறான் என்க.

ஈகை இனியது; புகழ் புண்ணியங்களை யுடையது; அரிய மேன்மைகளையும் பெரிய இன்ப நலங்களையும் அருளுவது என இன்னவாறு உன்னத நிலையில் ஒளி செய்திருந்தாலும் கொடையை யாரும் எளிதா அடைய முடியாது. அதனை உரிமையாய்த் தழுவி வருபவர் மிகவும் அருமையாகவே உள்ளனர்.

உயிர் வாழ்க்கைக்குப் பொருள் அவசியம் தேவையாயிருத்தலால் மனிதன் எவ்வழியும் அதனை ஆவலோடு தேடுகிறான். அது பெருகி வரும்போது அதன்பேல் ஆசையும் மோகமும் கூடவே மருவி வருகின்றன. வரவே அதனை இறுகப் பற்றி யாதும் வெளிவிடாமல் பழியோடு படிந்து கிடக்கின்றான்.

பொருளாசையால் இவ்வாறு மருள் மண்டி உழலுகிற இருளுலகத்திலே அருள் கூர்ந்து தெருளோடு பிறர்க்கு உதவி செய்வார் மிகவும் அரியர். ஏதேனும் ஓர் உதவியை நாடி யாரேனும் தன்பால் வந்தால் எந்த மனிதனும் சிந்தை கவல நேர்கின்றான்; வந்தவனை அவமதிப்பாக நடத்துகிறான்; நிந்தை மொழிகளை நேரே கூறுகிறான்; வேறே குறிப்பால் இகழுகிறான்.

> "நூற்றுவரில் தோன்றும் தறுகண்ணர்; ஆயிரவர்
> ஆற்றுளித் தொக்க அவையகத்து மாற்றமொன்று
> ஆற்றக் கொடுக்கும் மகன்தோன்றும்; தேற்றப்
> பரப்புநீர் வையகம் தேரினும் இல்லை
> இரப்பாரை எள்ளா மகன்." (தகடூர்)

நூறு பேருள் ஒரு வீரனைக் காணலாம்; ஆயிரம் பேருள் ஒரு புலவனைக் காணலாம்; ஏழைகளை எள்ளி இகழாமல் உள்ளம் உவந்து கொடுக்கும் கொடையாளியை உலகமுழுவதும் தேடினும் காணமுடியாது என இது காட்டியுள்ளது.

இரவலரை எள்ளாமல் இனிய மொழி கூறி ஈயும் வள்ளல் எங்கும் இல்லை என்று முடிவு கூறிய இக்கவியை ஔவையார் பார்த்தார்; மனிதஇனத்தை அடியோடு மடமைக் கொடுமையில் தள்ளிவிட அந்தக் கிழவிக்கு மனம் இசையவில்லை; ஆகவே இதனைத் தழுவி ஒரு பாட்டுப் பாடினாள். அது அயலே வருகிறது.

"ஆர்த்தசபை நூற்றொருவர்; ஆயிரத்தொன் றாம்புலவர்;
வார்த்தை பதினாயிரத்துஒருவர்;---பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே! தாதாகோடிக்கு ஒருவர்
உண்டாயின் உண்டென்றறு." (ஔவையார்)

கோடிமக்களுள் கொடையாளி ஒருவன் இருக்கலாம் என அருமை தோன்ற இங்ஙனம் ஐயமாய்க் குறித்திருக்கின்றார்.

சதேஷு ஜாயதே சூர ஸஹஸ்ரேஷுச பண்டித:
வக்தா சதஸஹஸ்ரேஷு தாதா பவதிவா நவா.

சூரன் நூற்றில் ஒருவன்; பண்டிதன் ஆயிரத்தில் ஒருவன்; நல்ல பேச்சாளி நூறாயிரத்தில் ஒருவன்; கொடையாளி இருக்கிறானோ இல்லையோ தெரியாது என இச்சுலோகம் குறித்திருக்கிறது. தருகிறவன் தாதா எனத் தகுதியான பேர் பெற்றான். கொடுப்பது அரிய செயல்; கொடை மிகவும் அருமையானது; அதிசயமுடையது என்பது இங்கே நன்கு தெரிய வந்தது.

தனது சுகத்தையே கருதித் தன்னலமே எவ்வழியும் பெரிதும் எண்ணிவருவது மனித இயல்பாய் மருவியுள்ளது. இத்தகைய மனித இனத்தில் பிறர்க்கு இதமாய் இரங்கி ஈபவன் உத்தம நிலையனாய் உயர்ந்து ஒளிமிகுந்து விளங்குகின்றான்.

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள. (குறள்,223)

இல்லை என்னும் இளிவைச் சொல்லாமல் உள்ளம் உவந்து கொடுக்கும் தன்மை உயர்ந்த குல மகனிடத்தேதான் உண்டு என இது உணர்த்தியுளது. ஈகை இருக்கும் நிலையையும் ஈயாமை

உள்ள புலையையும் இங்கே ஒருங்கே உணர்ந்து கொள்கிறோம். கொடுப்பவன் குலமகனாய் உயர்ந்தான்; கொடாதவன் இழி மகனாய்த் தாழ்ந்தான். இழிவு நேராமல் ஈந்த அளவு அவன் விழுமியோனாய் உயர்ந்து மேலே விளங்கி வருகிறான்.

"இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்
நல்லது வெஃகி வினைசெய்வார்." (பரிபாடல்,10)

வறியவர் வாய்திறந்து கேளா முன்னமே அவரது நிலைமை யைஉணர்ந்து விரைந்து விழைந்து உதவி புரிவார் என உயர்ந்த மேன்மக்களுடைய நீர்மையை இது உணர்த்தியுள்ளது. இவ் வாறு உதவுகின்றவரை உலகம் எவ்வாறு உவந்து புகழ்ந்து வரும்? இதனை ஈண்டு உணர்ந்து கொள்ள வேண்டும். எளி யவர்க்கு இரங்கி ஈபவர் விழுமிய மேலோராய் ஒளிமிகுந்து வருகிறார். உபகார நீர்மை உயர் மகிமையாய் மிளிர்கிறது.

தான் ஈட்டியபொருளை நீட்டிஉதவுகிறவன் நீண்ட புகழை அடைந்து கொள்கிறான்; நிலையான அக்கீர்த்தி தலையான வரையே சார்ந்துநிலவுகிறது. இட்டுவாழ்வதேஇனியவாழ்வாம்.

அட்டுநீர் அருவிக் குன்றத்து அல்லது வயிரம் தோன்றா;
குட்டநீர்க் குளத்தின் அல்லால் குப்பைமேல் குவளை பூவா;
விட்டுநீர் வினவிக் கேள்மின் விழுத்தகை யவர்கள் அல்லால்
பட்டது பகுத்துண்பார் இப் பார்மிசை இல்லை கண்டீர்! (1)

கருங்கடல் பிறப்பின் அல்லால் வலம்புரி காணுங் காலைப்
பெருங்குளத்து என்றும் தோன்றா பிறைநுதற் பிணையனீரே!
அருங்கொடைத் தானம் ஆய்ந்த அருந்தவம் தெரியின் மண்மேல்
மருங்குடை யவர்கட்கு அல்லால் மற்றையர்க்கு ஆவதுஉண்டே? (2)
[சீவக சிந்தாமணி]

பகுத்து உண்டலும், கொடையும் தோன்றுகின்ற இடங் களை இவை நயமாக் காட்டியுள்ளன. கவிகளைக் கருதியுணர்ந்து சுவைகளை நுகர்ந்து கொள்ளவேண்டும். அருவிபாய்கிற பெரிய மலைகளிலேதான் அரிய வயிரங்கள் தோன்றும்; நீர் நிறைந்த ஏரி யிலேதான் சீரிய குவளை மலர்கள் பூக்கும்; கருங்கடலிலேதான் வலம்புரிச் சங்குகள் பிறக்கும்; அதுபோல் கொடையும் தவமும் உயர்ந்த குல மக்களிடையேதான் நலமான நிலையில் உளவாம் எனச் சீவக மன்னன் இவ்வாறு கூறியுள்ளான்.

"Generosity is the part of a soul raised above the vulgar."
(Goldsmith)

"உதாரமான கொடை மேலான உயிரின்பாகமாயுள்ளது." என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணரவுரியது. ஈகை விழுமியோரிடமே செழுமியுளது என்பதை இதுவும் தெளிவாக்கிநின்றது. கொடையாளி உயர்ந்த மலையாய் ஓங்கி நிற்கிறான்; கொடாத உலோபி இழிந்த குப்பையாய்த் தாழ்ந்து கிடக்கிறான். கழிகுப்பையாய் ஒழியாமல் ஒளிபெற்று உயருக.

கொடுத்தவன் அப்பன்; கொடாதவன் சப்பன்.

என்பது இந்நாட்டில் வழங்கி வரும் பழமொழி. கொடையாளியின் உயர்வையும், கொடாத உலோபியின் இழிவையும் விழி தெரிய இது நேரே விளக்கித் தெளிவாக் காட்டியுளது.

கொடையால் மனிதன் தேவன் ஆய் மகிமை பெறுகிறான். அந்த அதிசய நீர்மையோடு ஆனவரையும் பழகி மேன்மை அடைக. எளியவர்க்கு இரங்கியருள்; ஒளியும் இன்பமும் வரும்.

---

814. கொடுத்து மகிழாக் குடிகேடர் பிச்சை
எடுத்து வருந்தி இழிவார்—கொடுத்துவந்த
பேராளர் எங்கும் பெருமை மிகப்பெற்றுப்
பாராளு வார்பின் பதிந்து. (௪)

இ—ள்

பிறர்க்கு இதமாய்க் கொடுத்து மகிழாதவர் குடிகேடராயிழிந்து பிச்சை எடுத்து வருந்தி உழல நேர்கின்றார்; கொடுத்து வந்தவர் உயர்ந்த கீர்த்தியை அடைந்து மிகுந்த இன்ப நலங்கள் நிறைந்து சிறந்த அரசராய் உலகத்தை ஆளுவார் என்க.

இன்பத்தையும் புகழையும் மனிதன் யாண்டும் ஆவலோடு விரும்புகிறான்; ஆனால் அவற்றை அடையவுரிய வழியை அறவே மறந்து விழி கண் குருடனாய் விலகி உழல்கின்றான். மாடு ஆடு முதலிய இழிந்த பிறவிகளில் கழிந்து போகாமல் உயர்ந்த மனிதப்பிறவியை அடைந்திருந்தும் தகுந்த கடமைகளைச் செய்து மேலும் மேலான நிலைகளை அடையாமல் வீணே விளிந்து போவது வெய்ய மடமையாய் விரிந்து நிற்கிறது. தன் நிலைமை

யையும் தலைமையையும் ஊன்றி உணராமையால் மானுடன் ஈனமா யிழிந்து ஊனமாய் ஒழிந்து போகிறான்.

கருமமும் தருமமும் உடலும் உயிருமாய் மருவியுள்ளன. முன்னது பொருள் முதலிய நலங்களை வளர்த்து வெளியே பெருமைப் படுத்துகிறது; பின்னது அருள் ஈகைகளாய் மருவி உள்ளே உயிரை மகிமைப் படுத்துகிறது. ஈதல் அறம் என்றதனால் அதன் உரமும் உறுதியும் உணரலாகும். புண்ணியமே எண்ணிய யாவும் உதவி மனிதனைக் கண்ணிய நிலையில் உயர்த்துகிறது. அந்தப்புண்ணியம் கொடையிலிருந்து விளைந்து வருகிறது. ஆகவே அதனையுடையவன் உயர்ந்து உய்தி பெறுகிறான்.

என்னானும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால்
பின்னாவது என்று பிடித்திரா---முன்னே
கொடுத்தார் உயப்போவர் கோடில்தீக் கூற்றம்
தொடுத்தாறு செல்லும் சுரம். [நாலடியார், 5]

ஏதாவது ஒரு பொருள் கையில்கிடைத்தால் அதனை உடனே ஏழைகளுக்குக் கொடுத்து உதவுங்கள்; அந்த உதவி எமபயத்தை நீக்கி உங்களை இன்பவுலகத்தில் கொண்டு போய் இனிது சேர்க்கும் என மனித சமுதாயத்துக்கு ஒரு ஞான போதனையை முனிவர் ஒருவர் இவ்வாறு போதித் துள்ளார். கொடையால் விளையும் நலங்கள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன.

பிறர்க்குச் சிறிது உபகாரம் செய்யும் போது அந்தமனிதன் தனக்கே பெரிய இன்பத்தைச் செய்தவனாகிறான். இயன்ற அளவு சமுதாயத்திற்கு இதம்செய்கிறவன் உயர்ந்து வருகிறான். அயல் உவந்து வாழச் செயல்புரிந்து வருவது உயர் பெருந்தகைமையாய் ஒளிவீசி எவ்வழியும் இனிது மிளிர்கிறது.

தனக்கு என்று ஒன்றானும் உள்ளான்;
பிறர்க்கே உறுதிக்கு உழந்தான். [குண்டலகேசி]

இது கடவுள் வாழ்த்தாக வந்துள்ளது. சீவ கோடிகளுக்கு இதம்செய்வது தேவநீர்மையாய்ச் சிறந்து திகழ்கிறது.

தனக்குஎன வாழாப் பிறர்க்கு உரியாளன். [மணிமேகலை,5]

தனக்குஎன்று ஒன்றானும் உள்ளான்;
பிறர்க்கே உறுதி சூழ்ந்தான். [வீர சோழியம்]

தனக்குள்ள வாழாப் பிறர்க்குரியாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை. (அகம் 54)

அரிய பெரிய உபகாரசீலர்களைக் குறித்து வந்துள்ள இவை கூர்ந்து சிந்திக்கத்தக்கன. சன சமுதாயத்துக்கு உதவி புரிவது உயர்ந்த மனிதப் பண்பாடாய் ஒளிபுரிந்து சிறந்த சீர்மையோடு வந்துள்ளமையை இங்கே உணர்ந்து கொள்ளுகிறோம்.

"Man was formed for society." (Blackstone)

"சமுதாயத்துக்காகவே மனிதன் உருவாகியுள்ளான்" என்னும் இது ஈண்டு அறியவுரியது. குண நீர்மைகள் மனிதனை மணம் பெறச் செய்கின்றன. கருணையும் இதமும் ஈகையில் கலந்திருத்தலால் கொடையாளி உயர் நிலைகளை அடைய நேர்ந்தான். இம்மையில் புகழும் மறுமையில் இன்பமும் எம்மையும் அவனுக்குத் தனி உரிமையாய் நின்றன.

கொடாத உலோபி பழியும் பாவமும் அடைந்து இருமையிலும் சிறுமையாய் இழிந்து போகிறான். தான் நல்ல சுகங்களை அநுபவியாமலும், பிறர்க்கு யாதும் உதவாமலும் பொருளை மருளோடு பற்றி மடிந்து போதலால் உலோபியின் வாழ்வு பாழாய்த் தாழ்ந்து பழிபடிந்து இழி துயரோடு ஒழிகின்றது.

"O cursed lust of gold! when, for thy sake,
The fool throws up his interest in both worlds,
First starved in this, then damned in that to come."
(Blair Robert)

"ஓ பொல்லாத பொன்னாசையே! உனக்காகத் தனது இருமை இன்பங்களையும் மூடன் இழந்து விடுகின்றான்; முதலில் இங்கே பட்டினி கிடக்கிறான்; பின்பு மறுமையில் இழிவுறுகிறான்" என உலோபியின் பரிதாப நிலையைக் குறித்து ப்ளேர் என்பவர் இவ்வாறு அதிசயினமாக் கூறியிருக்கிறார்.

கையில் பெரும் பொருள் இருந்தாலும் உலோபி வறுமையாய்ச் சிறுமையடைகிறான். பழியும் பாவமும் எவ்வழியும் அவனைத் தொடர்ந்து படர்ந்து தோய்ந்து கொள்ளுகின்றன.

இராமன் சுவேலமலை மேல் நின்று இலங்காபுரியின் அழகிய காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து வரும்போது சோலைகளிடை

யே நீல மணிகளால் செய்திருந்த செய்குன்றுகளைப் பார்த்தான். நெடுமையாய் நிமிர்ந்து நின்ற அவற்றின் நிலைகளை நோக்கிய இராமன் இலக்குவனுக்கு இலக்கோடு சுட்டிக் காட்டினான்.

காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே! கற்ற
தேவர்தம் தச்சன் நீலக் காசினால் திருந்தச் செய்த
ஈவது தெரியா உள்ளத்து இராக்கதர் ஈட்டி வைத்த
பாவ பண்டாரம் அன்ன செய்குன்றம் பலவும் பாராய்!

(இராமா, இலங்கை காண், 45)

தன் அருமைத் தம்பியிடம் இராமன் உரிமையுடன் உரையாடியிருக்கும் அழகை ஊன்றி நோக்கி உவந்து நிற்கிறோம். அழகிய நீல இரத்தினங்களால் எழிலாகச் செய்து வைத்துள்ள குன்றுகள் ஒளி வீசி நின்றாலும் அவை பாவம் படிந்தன ஆதலால் விரைந்து அழிந்து படும் என மருமமா விளக்கியருளினான். ஈவது தெரியா வுள்ளத்து இராக்கதர் என்றது அரக்கரது இரக்கமின்மையையும் கொடுமையையும் கூர்ந்துணர வந்தது. ஈவு இரக்கமில்லாதவர் என இழி தீமைகளை விழிதெரிய விரித்தான். ஈகையை இழந்தபோது மனிதன் எவ்வளவு இழிந்து படுகிறான் என்பது இங்கே செவ்வையாய்த் தெளிந்து கொள்ள நேர்ந்தது.

---

815. ஈதலுறு கையே இறைகோல் இனிதேந்தி
ஓதநீர் சூழுலகை ஓம்புமால்—ஈதலிலா
வன்கை மிடிவாய் மடிந்து தொழுதேற்றுப்
புன்கையாய்த் தேய்ந்திழிந்து போம். (ரு)

இ—ள்

ஈகை புரிந்து வந்த கை செங்கோலை ஏந்தித் தலைமையாய் நின்று அலைசூழ் உலகை நலமாகக் காத்து வரும்; ஈயாத வன்கை இழிந்த வறுமையில் அழுந்தி எவரையும் தொழுது இரந்து எவ்வழியும் தாழ்வாய்க் கழிந்து ஒழிந்து போம் என்க.

உயர்ந்த இன்ப நிலையும், இழிந்த துன்ப வகையும் மன்பதையை மருவி வருகின்றன; அவ் வரவுக்கு உரிய உறவை இது உணர்த்தியுள்ளது. உயர்வு இழிவுகள் அவரவர் வினைகளின் வழியே விளைந்து யாண்டும் தவறாமல் தொடர்ந்து வருகின்றன.

மனிதன் புண்ணியத்தால் உயர்ந்து வருகிறான்; பாவத்தால் தாழ்ந்து போகிறான். புனித நினைவுகளும் இனிய செயல்களும் தருமமாய் வருதலால் அவற்றையுடையவன் பெருமை பெறுகிறான்; அவ்வாறு இல்லாதவன் எவ்வாறேனும் சிறுமையுறுகிறான்.

ஒத்த மனிதருள் சிலர் செல்வம் கல்வி முதலிய வசதிகள் வாய்ந்து சுகமாய் வாழ்வதையும், பலர் வறுமை மடமை முதலிய சிறுமைகள் தோய்ந்து துக்கமாய் அலமந்து உழல்வதையும் உலகத்தில் நேரே காணுகின்றோம். இதற்குக் காரணம் என்ன? முன்னே நல்ல வினைகளைச் செய்தவர் நலமாய் வாழுகின்றார்; அங்ஙனம் செய்யாதவர் எங்கும் அவலமாய்த் தாழுகின்றார்.

நல்ல கருமங்களுள் கோடை உயர்ந்த தருமமாய் விளைந்து வருகிறது. பிறவுயிர்கள் இன்புற அது இதம் புரிந்து வருதலால் அதனைச் செய்தவன் எவ்வழியும் இன்பங்களை அனுபவிக்க நேர்கின்றான். செய்த பலன் செய்தார்க்கு என்பது பழமொழி. கருமத்தின் விளைவுகளை இது உரிமையோடு மருமமாய்க் காட்டியுள்ளது.

பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது. (குறள், 227)

தனக்குக் கிடைத்த உணவை அயலார்க்கும் பகுந்து கொடுத்து உண்ணும் இயல்புடையானைப் பசி என்னும் தீய நோய் யாதும் அணுகாது எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பிறர் பசியை நீக்குபவன் பெரிய பாக்கியவானாய் என்றும் பசியின்றி யாண்டும் இன்ப வாழ்வு வாழ நேர்ந்தான்.

பசிப்பிணி என்னும் பாவியது தீர்த்தோர்
இசைச்சொல் அளவைக்கு என்நா நிமிராது;
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உயிர்க்கொடை பூண்ட உரவோய்! (மணிமேகலை)

ஏழைகளின் பசியைத் தீர்ப்பவனுடைய கீர்த்தி அளவிடலரியது; உண்டி கொடுப்பவன் உயிரைக் கொடுத்தவனாகிறான்; ஆகவே அவனது உதவி உயிர்க் கோடை ஆய் ஒளிபெற்று உயர்ந்துள்ளது என்னும் இது ஈண்டு உணர்ந்துகொள்ளவுரியது.

அற்றார் அழிபசி தீர்ப்பதே ஒருவன் அருமையாய்ப் பெற்ற பொருளைப் பத்திரமா வைத்தற்குத் தக்க இடம் என அழியாத

ஒரு நிதி நிலையத்தை விழி தெரிய நாயனர் விளக்கியுள்ளார். அழியும் பொருளை அழியாமல் பாதுகாத்தற்கு வழிகாட்டியிருப் பது விழுமிய காட்சியாய் வெளியறிய நின்றது.

நரம்பொலி பரந்த கோயில் நன்னுதல் மகளிர் தூவும்
பெரும்பலிச் சோற்றின் ஈதல் பெரிதரி தாகும் ஏனும்
சுரும்பொலி கோதையார்தம் மனைவயின் தூண்தொறுஊட்டும்
அரும்பலி அனைத்தும் ஈயின் அது பொருட் குன்று கண்டீர்.
(சீவக சிந்தாமணி)

அதிகம் கொடுப்பது அரிது; ஆயினும் சிறிது உணவு எவ ரும் கொடுக்கலாம்; அவ்வாறு கொடுக்கும் சிறுசோறு பெரிய மேரு மலையாய் அரிய மகிமைகளை அருளும் என இது குறித் துள்ளது. குறிப்பைக் கூர்ந்து உணர வேண்டும். பொருட் குன்று=பொன்மலை. ஈகை மகாமேரு போல் மகிமை புரிகிறது.

பிறவுயிர்கள் இன்புற முன்பு ஈந்து வந்தவன் பின்பு தன் உயிர் மாண்புற வேந்தனாய் விளங்கி வருகின்றான்; வரவே கோடை பிறவிக் குணமாய் அவனிடம் மருவியிருக்கிறது. தன் பிறப்பின் சிறப்பான கடமையாக அரசன் கொடையைப் பேணி வருதலால் இறைமாட்சியுள் அது உயர்வாய் இடம் பெற்று நின்றது. கோலும் குடையும் கொடையால் உயர்கின்றன.

கொடையளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
உடையானும் வேந்தர்க்கு ஒளி. (குறள், 390)

ஈகை இரக்கம் நேர்மையான நீதிமுறை குடிகளைப் பேணு தல் ஆகிய இந் நான்கு நீர்மைகளும் சீர்மையாக வுடையவன் உலக வேந்தர்கள் எவரினும் உயர்ந்த மன்னனாய் ஒளி மிகுந்து விளங்குவன் என இது உணர்த்தியுள்ளது. இதில் கொடையைத் தலைமையாக வைத்திருத்தலால் அதனோடு அரசனுக்கு உள்ள தொடர்பும் உரிமையும் தெரியலாகும். குலக் கடமையாய்க் கோனுக்குக் கொடை அமைந்துள்ளமையால் கோடைக் கடன் என அவனுடைய உண்மை நிலையை அது உணர்த்த நேர்ந்தது.

“படைக்கலக் கரணம் பல்வகை பயிற்றிக்
கொடைக்கடம் பூண்ட கொள்கையன் ஆகிக்
குறைவில் செல்வமொடு குமார காலம்
நிறையுற வுய்த்து நீர்மையின் வழாஅ

ஏமம் சான்ற இந்நில வரைப்பில்
காமன் இவன்எனக் கண்டோர் காமுற."

(பெருங்கதை 5-8)

நரவாண தத்தன் என்னும் மன்னனைக் குறித்து வந்துள்ள இது ஈண்டு உன்னியுணரவுரியது. சிறப்புகள் சிந்திக்க நின்றன.

கோடைக்கடம் பூண்ட கோள்கையன் எனக் குறித்திருத்தலால் அவனது ஈகையின் இயல்பு இனிது தெரிய வந்தது.

"ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்" (இராமாயணம்)

தசரதன் ஈந்து வந்த நிலையை இது உணர்த்தியுள்ளது.

"மங்குலின் எழுமடங்கு உதவும் வண்கையான்" (நைடதம்)

நள மன்னனுடைய கொடையை இது குறித்திருக்கிறது.

"எமர்க்கும் பிறர்க்கும் யாவர் ஆயினும்
பரிசில் மாக்கள் வல்லார் ஆயினும்
கொடைக்கடன் அமர்ந்த கோடா நெஞ்சினன்
மன்னுயிர் அழிய யாண்டுபல மாறித்
தண்ணியல் எழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர ஈயலன்
வயிறுமா சிலீயர் அவன் ஈன்ற தாயே."

(பதிற்றுப்பத்து)

சேரலாதன் என்னும் மன்னனது ஈதல் இயல்பை இது குறித்து வந்துள்ள குறிப்பு கூர்ந்து சிந்திக்கத் தக்கது. கோடைக் கடன் அமர்ந்த கோடா நெஞ்சினன் என்றதனால் கொடையைத் தனது உரிமையான கடமையாக அவன் கருதி வந்துள்ளமை காண வந்தது. இன்னவாறு கொடுத்து வந்தமையால் குல மன்னர் நிலையான புகழோடு உலகின் தலைமையில் நிலைத்து நின்றனர்.

ஈந்தவர் உயர்ந்த வேந்தராய் ஒளி மிகுந்து விளங்குகின்றார். ஈயாதவர் யாண்டும் இழிந்தவராய்த் தாழ்ந்து உழலுகின்றார்.

மாசித்திங்கள் மாசின சின்னத் துணி முள்ளின்
ஊசித்துன்ன மூசிய ஆடை யுடையாகப்
பேசிப் பாவாய்! பிச்சைஎனக் கையகல் ஏந்திக்
கூசிக்கூசி நிற்பர் கொடுத்துண்டு அறியாதார்.

(சீவக சிந்தாமணி)

அழுக்கு நிறைந்த கந்தையை அரையில் உடுத்திக் கையிலே ஓட்டை ஏந்தி அம்மா! பிச்சை என்று தெருவில் நின்று அலமருகின்றவர் யார் தெரியுமா? முன்பிறப்பில் பிறர்க்கு அன்னம் கொடாதவரே இன்னவாறு ஈனமாய் இன்னலடைய நேர்ந்தார் என இது குறித்துள்ளது. உதவியிலே ஒழியவே பதவிகள் ஒழிந்தன.

ஈகின்ற கை புண்ணியம் உடையதாய்க் கண்ணியம் பெறுகின்றது; ஈயாத கை இழிவுடையதாய்ப் பழி அடைகின்றது.

நற்றேரு ரணவீதி நண்ணுவல்லைக் காளத்தி
கற்றோர் தமக்களிக்கும் கையேகை---மற்றோர்கை
வேங்கை அலகைமுகை வேட்கை பலகைநகை
காங்கை அழுகைவிழு கை. (சொக்கநாதர்)

ஈகையால் உயர்ந்த காளத்தி வள்ளலுடைய கையை உவந்து புகழ்ந்து ஈயாத உலோபிகள்கையை இது இகழ்ந்துளது.

நேசித்து வந்த கவிராசர் தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்கும் நின்கைப் பொருளே பொருள்மற்றப் புல்லர்பொருள்
வேசிக்கும் சந்து நடப்பார்க்கும் வேசிக்கு வேலைசெய்யும்
தாசிக்கும் ஆகும் கண்டாய் சீதக்காதி தயாநிதியே. (1)

ஓர்தட்டிலே பொன்னும் ஓர்தட்டிலே நெல்லும் ஒக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலத்திலே தங்கள் காரியப்பேர்
ஆர்தட் டினும்தட்டு வாராம லேஅன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே. (2)

காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண் தொலைவில்பன்னூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம் அனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி இருகரமே. (3)

(படிக்காசுத்தம்பிரான்)

சீதக்காதியின் ஈகை நிலையை உலகம் உணர்ந்து தெளிய இவ்வாறு உள்ளம் உவந்து படிக்காசர் நன்கு விளக்கியிருக்கிறார்.

இரவ லாளரே பெருந்திரு வுறுக
அரவுமிழ் மணியும் அலைகடல் அமிர்தும்
திங்கட் குழவியும் சிங்கப் பறழும்
குதிரை மருப்பும் முதிர்சுவைச் சுரபியும்
ஈகென மொழியினும் இல்என மொழியான்

சடையனை அயன்றைத் தலைவனை நீர்போய்
உடையது கேண்மின் உறுதியுள்ளோரே. (புகழேந்தி)

சடைய வள்ளலின் கொடைத் திறத்தை இது குறித்திருக்கிறது. எதைக் கேட்டாலும் இல்லை என்னுமல் ஈய வல்லவன் என்னும் இதனால் அவரது வண்மையும் திண்மையும் வாய்மையும் உணர வந்தன. ஈகையாளன் இருமையும் இனிது ஆளுகிறான்.

கொடுத்து வருகிற கொடை புண்ணியத்தைக் கொடுத்தருளுகிறது; ஆகவே அதனை யுடையவன் உயர் நிலையை அடைந்து கொள்கிறான்; கொடாதவன் யாதொரு பலனும் இலனாய் இழிந்து போதலால் உயிரின் ஊதியத்தைமுழுதும் அவன் இழந்தவனாகிறான்.

உயிர்களுக்கு உதவி புரியின் உயிர்க்கு உயிரான பரமன் உவகையுறுகிறான்; ஆதலால் ஈகையாளன் ஈசன் அருளை அடைந்து கொள்கிறான்; ஈயாதவன் அதனை இழந்து இழிகிறான்.

இரப்பவர்க்கு ஈய வைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக்கு அருளும் வைத்தார் ஐயன் ஐயாற னாரே.
(தேவாரம்)

ஈகின்றவர் தெய்வத் திருவருளையடைந்து பேரின்ப நிலைக்குச் செல்கின்றார்; ஈயாதவர் இழி நிலைக்குப் போகின்றார் என அப்பர் இப்படிக் குறித்திருக்கிறார். கரப்பவர்க்கு நரகம் என்றதனால் உலோபத்தின்வினைவும் உலோபியின் துயரமும் அறியவந்தன.

சீவ இதம் தேவ பதமாய்த் திகழ்கிறது. பிறவுயிர்களுக்கு உபகாரம் செய்து வருகிறவன் உயர் கதியாய் உய்தி பெறுகிறான். பகுத்தறிவுடைய மனிதப் பிறவிக்குப் பயன் பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்பி எவ்வழியும் நல்லவனாய் வாழுவதேயாம்.

"God divided man into men, that they might help each other (Seneca)

ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து கொள்ளவே மனிதருக்குள் மனிதனைக் கடவுள் வகுத்தருளினார் என்னும் இது இங்கே அறிய வுரியது. பிறவுயிர்கள்பால் இதம் புரிவது உயர் அறமாய் ஒளிமிகுந்து உறுதிநலங்கள் சுரந்து உய்தி புரிந்து வருகிறது.

816. குற்றங்கள் கோடி யுறினும் கொடைஒன்று
முற்றி ஒருவன்பால் மூண்டுநின்ருல்—மற்றவெலாம்
எல்லோனைக் கண்ட இருள்போல் இரிந்தொழியும்
நல்லோன் அவனேகாண் நன்கு. (சு)

இ—ள்

ஒருவனிடம் குற்றங்கள் கோடி யிருந்தாலும் கொடை ஒன்றை அவன் பேணி நின்ருல் அக்குறைகள் எல்லாம் மறைந்து சிறந்த குணவாளுய் உயர்ந்து திகழ்வான்; ஆதவன் எதிரே இருள்போல் ஈதல் எதிரே இளிவுகள் ஒழிந்து போம் என்க.

ஈகை எவ்வகையும் செவ்வையாய் ஓகையே புரிகிறது

கொடை அரிய பெரிய இனிமையுடையது; அதனையுடையவர் எவ்வழியும் புகழையே அடைகின்ருர். பிழைகளையும் குறைகளையும் உலகம் வெறுக்குமாயினும் கொடையாளியிடம் அவற்றை எவரும் மறந்து விடுகின்றனர். மாசுகளை யெல்லாம் மறைத்து மணத்தையே விரித்தலால் கொடை உயர்ந்த குணமாய்த் தேசு வீசியுள்ளது. தாதா மாதா என்பது வேதமொழி.

குற்றம் என்றது காமம் கோபம் செருக்கு முதலிய சிறுமைகளை. மனிதனது பெருமையைக் குறுகச் செய்து சிறுமைப் படுத்துவது எதுவோ அது குற்றம் என வந்தது. சார்ந்த அழுக்கால் உடம்பு அசுத்தமாம்; சேர்ந்த குற்றத்தால் உயிர் ஊனமாம். மாசுபடிய மணியின் தேசு மழுங்குதல் போல்ஆசு படிய ஆன்ம ஒளி அழுங்குகின்றது. உயிரைப் பழுதுபடுத்தும் பிழைகள் பல வழிகளில் மருவி வருதலால் அவற்றிற்கு உரிமையான பெயர்கள் பல படிய நேர்ந்தன. சில அயலே வருகின்றன.

"கரிசும் தவறும் கறையும் களங்கமும்
மாசும் வசையும் மறுவும் வடுவும்
ஆசும் புகரும் அரிலும் களையும்
ஏசும் பழியும் போக்கும் ஏதமும்
நறையும் வண்டும் கடவையும் நவையும்
மிறையும் பிழையும் விடலும் கரிலும்
தோமும் தப்பும் துகளும் புரையும்
கோதும் செயிரும் மையும் குற்றம்." (பிங்கலந்தை)

குற்றத்தின் பெயர்களாய் இங்கே முப்பத்தொன்று வந்துள்ளன. யாவும் காரணக் குறிப்பாய் அமைந்தன. ஒரு பொருளைக் குறித்து மூல காரணங்களோடு பல பெயர்கள் வந்திருப்பது ஆய்ந்து சிந்திக்கத்தக்கது. நம்மக்களுடைய சிந்தனை நிலைகள் சிதைந்து போயின. நிந்தனைகள் நிமிர்ந்து வந்துள்ளன.

தமிழ் மொழியை ஆவலோடு ஆழ்ந்து கல்லாமலும், ஆதரித்துப் போற்றாமலும் தன்னை ஒரு தமிழன் என்று சொல்லிக் கொள்ளுவது புல்லிய புன்மையாம். தமிழை அடைபுணர்த்தி வள்ளல், வேள் என இந்நாளில் வெளியே சிலர் பிலுக்கித்திரிவது இளிவான எள்ளல்களையே விளக்கி யுள்ளது. வீணான வெளிப் பகட்டுகள் இளிப்படைந்து யாண்டும் இழிந்து ஒழிந்து போம்.

உண்மையான தன்மைகளை ஓர்ந்து தேர்ந்த போது தான் நாடு செம்மையாய் நேர்ந்து செழித்து விளங்கும். நல்ல நீர்மைகளால் உள்ளம் உயர்ந்துவரின் அந்த மாந்தரை வையம் ஏந்தி மகிழ்கிறது. இனிய ஈகை தனிமகிமையாய் மிளிர்கிறது.

உள்ளி உள்ளவெல்லாம் உவந்து ஈயும்அவ்
வள்ளியோரின் வழங்கின மேகமே. (இராமாயணம்)

உண்மையான வள்ளல்களை இது உணர்த்தியுள்ளது.

உள்ளி என்றது உள்ளத்தில் ஊன்றி உணர்ந்து உதவுகிற அந்நிலையை உணர்த்தி நின்றது. உள்ளுதல் = நினைத்தல். எதை நினைப்பது? ஈட்டிய பொருள்நிலை, ஈகின்ற தன்நிலை, ஆகின்ற அறநிலை, அமைகின்ற அருள்நிலை முதலிய பல நிலைகளையும் ஆராய்ந்து எண்ணுதல் ஈதலுக்கு ஏதுவாய் வருதலால் அவ்வுள்ளல்கள் யாவும் உள்ளி என்னும் ஒரு சொல்லால் உணரவந்தது.

பொருள் அனுபவிப்பதால் தேய்கிறது; அனுபவியாமல் வைத்திருந்தால் மாய்கின்றது; ஒரு வேளை மாயாமல் அது மருவியிருந்தாலும் அதனை யுடையவன் மாய்ந்து போகின்றான்; போகவே அது அயலாரிடம் ஓடிப் போகின்றது. பொருள் எவ்வழியும் அழியும் இயல்பினது; அது அழியுமுன்னரே நல்ல வழியில் பயன் படுத்துபவர் நலம் பல காண்கின்றார். நிலையில்லாத பொருளால் நிலையுள்ளதைச் செய்து கொள்ளுகின்றவர் நிலையான புகழையும் தலையான இன்பத்தையும் நேரே அடைந்து மகிழ்கின்றார். தருபவன் தருமனாய்த் தருநிழல் உறுகின்றான்.

பிறந்த போது மனிதன் இங்கே யாதும் கொண்டு வரவில்லை; இறந்துதொலையும் போதும் எதையும்கொண்டு போகமுடியாது. இடையே சேர்ந்த பொருளை அனுபவிக்க நேர்ந்துள்ளான்; ஐம் புலன்களும் ஆரத்துய்ப்பதால் உடல் கொழுத்து வளருமே அன்றி உயிர் செழித்து வளராது; அருள் சுரந்து பிறர்க்குப் பொருள் உதவினல் அது புண்ணியமாய் வருகிறது; அதனல் கண்ணியங்கள் மிகுந்து உயிர் உயர் கதியை அடைகிறது.

உபகாரமான கொடை உயிர்களை உவகையுறச் செய்தலால் கொடையாளியை உலகம் உவந்து போற்றுகிறது. குணங்கள் பல நிறைந்திருந்தாலும் கொடாதவனை ஈயாத உலோபி என்று எள்ளி இகழ்ந்து தள்ளுகின்றது. "உலோபம் அளப்பரும் குணங்களை அழிக்கும்." எனக் கோசிக முனிவர் கூறியிருத்த லால் அதன் நீச நிலையை நேரே தெரிந்து கொள்ளுகிறோம்.

உத்தம குணங்கள் எல்லாம் உலோபத்தால் ஒழிந்து போதல் போல் குற்றங்கள் யாவும் கொடையால் மறைந்து போகின்றன. இனிய அமுதாய் ஈகை இன்பம் தருகின்றது.

இடியோ டுறுமல் இசைந்தும் மழையைப்
படியோர் உவந்து பணிவார்---கொடிய
குறையுடைய ரேனும் கொடைஒன் றுறினே
நிறையுடைய ராவர் நிலைத்து.

கொடிய இடி குமுறல்கள் இருந்தாலும் மழையை உலகம் உவந்து புகழ்ந்து கொள்ளுதல் போல் சில குறைகள் இருந்தாலும் கொடையாளியை எவரும்மகிழ்ந்து போற்றுவர் என்பதை இதனல் உணர்ந்து கொடையின் உயர்வைத் தெளிகின்றோம்.

தாழைமுள் பாம்போடு தானுறினும் அப்பூவைச்
சூழ்மணத்தால் சென்னிமிசைச் சூடுப; ஈகையினன்
கீழ்குலத்தான் தீயார்க் கெழுமியான் ஆயினும்சீர்
சூழ்தலான் வையம் தொழும். (இன்னிசை)

முள் பாம்புகளோடு கூடி நின்றாலும் தாழம்பூவை யாவரும் உவந்து தலையில் சூடுவர்; கீழான தீயவர்களோடு சேர்ந்திருந்தாலும் ஈகையாளனை வையம் புகழ்ந்து தொழும் என இது உணர்த்தி யுள்ளது. உவமை நயம் ஊன்றி உணரத்தக்கது.

மனிதனுடைய குற்றம் குறைகளை மறைத்து அவனை மிக வும் மகிமைப் படுத்தியருளும் ஆற்றல் கொடைக்கு அமைந்தி ருப்பது அதிசய வியப்பாயுள்ளது. தன் உயிர்க்கு இனிய பொருளைப் பிறவுயிர்கள் இன்புற உதவுகின்றான் ஆதலால் அந்த அரிய தியாகம் பெரிய மேன்மையாய் உயர்ந்து ஒளிவீசிவந்தது.

"Money is blood and life to mortals" (Antphanes)

"பொருள் மக்களுக்கு உதிரமும் உயிருமாயுள்ளது" என் னும் இது இங்கே உணர வுரியது. இத்தகைய அருமைப் பொ ருளை வள்ளல் வாரி வழங்குவதால் அந்த வண்மை அவனைத் தேவன் ஆக்கியருளுகிறது. கொடையைச் சூரியனோடு நேர் வைத்தது புகழ் ஒளி வீசும் பொலிவு கருதி. கொடுத்து வாழுக.

---

817. பேடியரும் வீரர் பெயரா திறந்தக்கால்
ஓடினரேல் வீரருமோர் பேடியரே—கோடி
இருப்பினும் ஈவில்லார் இல்லாரே என்றும்
இருப்பவரே ஈவார் இவண். (எ)

இ—ள்

மீண்டு திரும்பாமல் போரில் மூண்டு இறந்தால் பேடிய ரும் வீரராய் விளங்கி நிற்கின்றார்; புறங்காட்டி ஓடினால் வீரரும் பேடிகளாயிழிந்து படுகின்றார்; கோடி பொருள் இருந்தாலும் ஈதல் இல்லார் யாதும் இல்லாதவரா யிழிகின்றார்; ஈபவர் எல் லாம் உடையராய் யாண்டும் உயர்ந்து திகழ்கின்றார் என்க.

செய்யும் செயல்களைக் கொண்டே மனிதனை வையம் அறிந்து வருகிறது. பேச்சும் செயலும் ஒருவனை நிறைதூக்கிக் காட்டும் ஆயினும் முன்னதினும் பின்னதே உண்மையான கருவியாம். சிலர் ஆரவாரமாய்ப் பேசுவர்; அவருடைய பேச் சைக் கேட்டபோது அவரைப் பெரிய கரும வீரர் என்று பிறர் கருத நேர்வர்; காரியம் நேரும் போது யாதும் செய்யாமல் அயலே அவர் ஒதுங்கி விடுவர். காரியவாதிகள் வீரியம் பேசார்.

"பெரும் பேச்சு வெறும் வீச்சு" என்பது பழமொழி.

பகட்டான வார்த்தைகளைக் கொண்டு மனிதனை மதிப்பது மடமையாம் என இது காட்டியுள்ளது. அறிவு நலம் சுரந்து

கருமமே கண்ணுயிருப்பவர் வீணுக எதையும் விரித்துப் பேச மாட்டார். செயல் விளைந்து வரச் சீர்த்தி விரிந்து வருகிறது.

சொல் சுருங்கிப் பயனேடு வரும்பொழுது அந்த மனிதன் நயனுடையனுய் உயர்ந்து வருகிருன். உள்ளப்பண்பை உரை உணர்த்தி வருகிறது. நீர்மையான மொழியாளன் சீர்மையாள ஞய்ச் சிறந்து திகழ்கின்ருன். வாய்வளர நோய் வளருகின்றது.

"Men of few words are the best men" (Shakespeare)

"சுருங்கிய சொல்லாளர் சிறந்த மனிதராகின்ருர்" என் னும் இது இங்கே அறிய வுரியது. வீண் வார்த்தை பேசாமல் சாரமாய்க் காரியம் செய்பவனே யாண்டும் சதுரன் ஆகின்ருன்.

ஒரு ஊரில் வாலையன் என்று ஒரு சிறுவன் இருந்தான். யாரிடமும் அதிகம் பேசாமல் அமைதியாய் ஒதுங்கி வாழ்ந்தான். அவனை யாரும் மதிக்க வில்லை. அதே நகரில் காலிங்கன் என்னும் வாலிபன் மிகவும் ஆடம்பரமாய் வாழ்ந்து வந்தான்; சிலம்பம் கத்தி வீச்சு முதலிய படைக் கலங்களைப் பழகிப் பெரிய பலசா லியாய் விளங்கி யிருந்தான். போர் வீரங்களைக் குறித்து ஆரவார மாய் அவன் பேசுவது வழக்கம் ஆதலால் யாவரும் அவனைப் பெரிய சுத்த வீரன் என்று புகழ்ந்து மிகவும் போற்றி வந்தார்.

நாட்டில் போர் மூண்டது. அரசனுக்கு உதவியாக ஊர்கள் தோறுமிருந்து வாலிபர்கள் போருக்குப் போனுர்கள். அந்தப் படையில் மேலே குறித்த இருவரும் சேர்ந்து சென்ருர். சமர் கடுமையாய் மூண்டது. இருதிறப்படைகளும் கைகலந்து பொரு தன; அதில் வாலையன் முனைந்து பொருது எதிரிகள் பலரை வென்று சில யானைகளையும் எறிந்து கொன்று முடிவில் இறந் தான்; காலிங்கன் சில காயங்களோடு உயிர் தப்பி வெளியே ஓடிப் போனுன். செருமுகத்தில் மாண்டு மடிந்த அந்த வீர மகனைப் பெற்றதாய் மிகவும் வயது முதிர்ந்த கிழவி; தன் மகன் போரில் இறந்து பட்டதை அறிந்ததும் அவள் கண்ணீர் சொரிந்து கரைந்து அழுதாள். தனது மகனுடைய போர் வீரத்தை வியந்து ஊரும் உலகமும் புகழ்ந்து பேசுவதைக் கேட்டு உள்ளம் உவந்தாள் ஆயினும் பிள்ளைப் பாசத்தால் பேதுற்று மறுகினுள். அரசன் அவளைத் தனது அரண்மனைக்கு அழைத்து

ஆதரவு செய்து ஆற்றித் தேற்றினன். வீர மகனைப் பெற்றவள் வியன்பேர்பெற்றாள் சரிதநிகழ்ச்சியை அயலேகாணவருகிறோம்.

"மீன்உண் கொக்கின் தூவி அன்ன
வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறுஎறிந்து பட்டனன் என்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்
நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே." (புறம்)

கொக்கின் தூவி போல் வெள்ளையாய் நரைத்த கூந்தலையுடைய அக்கிழவி தன்மகன் இறந்தமைக்குமறுகி அழுதவகையும், அவன் போரில் வீர வெற்றியோடு மாண்டதை நினைந்து மகிழ்ந்த நிலையும், அரிய வீரமும் இதனால் நேரே தெரிய வந்தன.

வீரன் போல் ஆரவாரமாய்ப் பிலுக்கி நின்றவன் போரில் ஓடிப் போனமையால் பேடி என்று இகழப்பட்டான்; யாதொரு ஆடம்பரமுமின்றி அமைதியாயிருந்தவன் அமரில் அதிசயமாய் மாண்டமையால் வெற்றி வீரன் என வியன் பெயர் பெற்றான். வீர வாலையன் என ஒருகல்லில் எழுதி நல்ல ஒருஇடத்தில் நட்டி ஊரார் யாவரும் அவனை உரிமையோடு வழிபட்டு வரலாயினர்.

ஒருவனிடம் பெரும் பொருள் நிறைந்திருந்தாலும் அவன் ஈயாத உலோபியாயின் யாதும் இல்லாத ஏழையினும் இழிவா எள்ளி இகழப்படுகின்றான். ஈகையாளனை எவ்வழியும் உலகம் ஏத்திவருகிறது. உபகாரி உயர் மகிமையாய் ஒளிபெறுகின்றான்.

எறிநீர்ப் பெருங்கடல் எய்தி இருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்று ஊறல்பார்த் துண்பர்
மறுமை அறியாதார் ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. (நாலடியார்)

கடல் நீர் போல் செல்வம் பெருகியிருந்தாலும் உலோபி யாதும் உதவான் ஆதலால் அவன் கடையாயிழிந்து படுவன்; ஈகையாளன் வறுமையுறினும் ஊற்று நீர் போல் எவர்க்கும் இனிது உதவுவன்; ஆகவே அவனை உலகம் போற்றி வாழ்த்தி வரும் என இது உணர்த்தியுளது. ஈகை யுடையான் சீவ கோடிகளுக்கு இனிய அமுதமாய் இதம்புரிகிறான்; ஈயாதவன் ஈனமாயிழிந்து கழிகிறான் என்பது இங்கே தெளிய நேர்ந்தது.

ஈவாரே என்றும் இருப்பவர் என்றது கொடையாளிகள் சிரஞ்சீவிகளாய்ப் புகழ்ஓங்கி நிலைத்து நிற்கும் நிலைதெரியவந்தது.

பாரி ததீசி பலிகன்னன் ஆதியோர்
ஓரின் இணையில் வணிகம் உஞற்றினர்
நீரின் எழுத்தேர் நிலையாப் பொருள்கொடுஇப்
பேரா நிலைப்புகழ் பெற்று (இன்னிசை)

மாவலி, கன்னன், ததீசி, பாரி முதலாயினோர் கொடையால் நிலைபெற்ற புகழோடு நிலவி நிற்கும் நிலையை இது சுவையாய் விளக்கியுள்ளது. நிலையாத பொருளைக் கொடுத்து என்றும் நிலையான புகழைப் பெற்றுக் கொண்டார் ஆதலால் யாரும் இணையில்லாத அதிசய வணிகர் என இவ்வாறு கவி துதிசெய்து கூறினர். தந்தவன் தரணி ஆள வந்தவன் என்க.

பிறர்க்கு உரிமையோடு உதவிபுரிவதால் உனக்குப் புகழும் புண்ணியமும் வருகின்றன; இம்மையும் மறுமையும் பெருமை ஆகின்றன; ஆதலால் ஈதலை இனிது பேணிஇசையும் இன்பமும் பெறுக. மன்னுயிர்க்கு இதம் செய்து வாழ்வதே மகிமையாம்.

---

818. வாரி கடந்து வருந்தித் தொகுத்தெவர்க்கும்
மாரிஎன நின்று மனமிரங்கிப்—பாரிலென்றும்
ஈந்துவந்தார் அன்றே இருமையிலும் பேரின்பம்
சேர்ந்துவந்தார் ஆவர் சிறந்து. (அ)

இ—ள்

கடல் கடந்து சென்று உடல் வருந்தி உழைத்துப் பொருளைத் தொகுத்து எவர்க்கும் உளம் இரங்கி மாரிபோல் ஈந்து வந்தவரே உலகில் உயர்ந்து நின்றார்; இம்மை மறுமை என்னும் இருமையிலும் பேரின்பமுடையராய் அவர் பெருகி யுள்ளார்.

அரிதின் முயன்று அரும்பொருள் ஈட்டிப் பெரிதும் ஈந்து பெரும் புகழ் நாட்டிப் பேரின்பம் காணுக என இது காட்டியுளது. சிறந்த பிறவி பெற்ற பயன் சீவர்களுக்கு இரங்குவதே.

உலக வாழ்வு பொருளால் நடந்து வருதலால் அதனை யாவரும் ஆவலோடு தேட நேர்ந்தனர். தேடுகின்ற வழிகளும் துறைகளும் பாடுகளும் பலவாய் விரிந்தன. பிறந்த நாட்டில் பெரும்

பொருளை ஈட்ட இயலவில்லையானால் அயல் நாடுகளை நோக்கித் தேட்டாளர் திரண்டு செல்வது இயல்பாய் அமைந்தது.

அவ்வாறு செல்லுங்கால் இடையே தடையாயுள்ள காடு மலை கடல்களைக் கடந்து போக நேர்ண்டார். கலம் ஏறிக் கடல் கடப்பது பொருள் நாட்டம் உடையார்க்குத் தலைமையாயுள்ளமையால் வாரி கடந்து என்பது முதன்மையாய் வந்தது.

பல நதிகளிலுமிருந்து வந்து பாய்கின்ற நீர்களை யெல்லாம் வாரி வைத்துக் கொண்டு ஆழ்ந்து பரந்து நீண்டு நிறைந்துள்ளமையால் கடலுக்கு வாரி என்று ஒரு பெயரும் வந்தது. பொருள் வாரி வர இருள் வாரி ஏறினான் என ஈட்டம் கருதிக் கப்பல் ஏறிப் போன ஒருவனைக் குறித்து இப்படி உரைத்திருக்கின்றார். இருள் வாரி=கருங்கடல். திரைவரை நீந்தல் பொருளை ஓர்ந்தே.

"திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்று ஔவையார் இவ்வாறு வருவாய்க்குத் துறைவாய் கூறியிருத்தலால் பொருள் ஈட்டத்துக்கும் கடல் ஓட்டத்துக்கும் உள்ள உறவுரிமை உணரலாகும். செழித்த நாட்டை நோக்கிச்செல்வம்ஈட்டச்செல்கிறார்.

பிரிய முடியாத பிரிய மனைவியையும் பிரிந்து பொருளை நாடி மனிதன் அயலே போதலால் அதன் மேலுள்ள ஆசையும் பாசமும் அறிய வந்தன. பெண்ணினும் பொன்மேல் ஆவலாயது.

புதிதாய் மணம் புரிந்த ஒரு மணமகன் தனது அருமை மனைவியோடு உரிமையாய் உரையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது பொருளின் பெருமையைக் குறித்துப் புகழ்ந்து பேச நேர்ந்தது. வாரி கடந்து போபவர் பொருளை வாரி வருகின்றார் என்று உல்லாச விநோதமாக் கூறினான். அவ்வுரையைக் கேட்டதும் தனது நாயகன் தன்னைத் தனியே விட்டுப் பிரிந்து போய் விடுவாரோ? என்று அவள் மறுகி மயங்கினாள். அவளது மயக்கத்தை நீக்கி அவன் ஆற்றித் தேற்றினான். அந்த இனிய நிகழ்ச்சியை அயலே வரும் கவி சுவையாய்க் காட்டியுள்ளது.

திரைகடல் ஓடித் திரவியம் தேடென்று செப்பும் ஔவை
உரைபழு தன்றெனச் சோர்ந்தாள் கழுக்குன் றத்து ஓர் மடமான்
அரைபனி நீர்ச்சந் தனம்கொண்டு பாங்கியர் ஆற்றியபின்

இரைகடல் போய்வர எத்தனை நாள் என்று எழுந்தனளே.
(திருக்கழுக்குன்றக் கோவை)

கடல் கடந்து போயேனும் திரவியம் தேடுவது நல்லது என்று காதலன் சொல்லவே "இவரும் பிரிந்து போவாரோ?" என்று காதலி பரிந்து வீழ்ந்தாள்; தோழியர் தேற்றவே எழுந்தாள்; கடல் போய் மீண்டு வர இத்தனை நாளா? என்று பேராவலோடு கணவனைத் தழுவிக் கொண்டாள். உழுவலன்பை விழுமிய நிலையில் விளக்கியுள்ள இது பொருள் நிலையையும் நயமா உணர்த்தியுளது. மனித வாழ்வின் மருமங்கள் தெரிய வந்தன.

இனிய மனைவியையும் பிரிந்துபோய் வருந்தி நின்று பொருளைத் தேடுவது அறமும் புகழும் இன்பமும் அதனால் அடையலாம் என்று கருதியே. வளங்கொளப் போவது உளங்கொள வந்தது.

தாங்கள் மாத்திரம் சுகமாய் அனுபவிக்க வேண்டும் என்று மேலோர் கருதார்; பிறர்க்கு உபகரிப்பதையே முதன்மையா எண்ணுவர். உபகார நீர்மை உயர் பெருந்தகைமையாய் ஒளி மிகுந்து மிளிர்கிறது. சுயநலம் இயல்பாகவே மனிதனோடு மருவியுளது; அதனைக் கடந்து அயலார்க்கு உதவி செய்ய நேர்ந்த போது அவன் உயர்ந்தவனாய் விளங்கி ஒளிமிகப்பெறுகின்றான்.

தன்னைச் சூழ்ந்துள்ள மன்னுயிர்கள் பால் எவன் அன்பும் ஆதரவும் புரிந்து வருகிறானோ அந்த மனிதனுடைய வாழ்வு பண்பும் பயனும் சுரந்து உயர்ந்து வருகிறது. பிறர் இன்புற அன்பு புரிவது பெரு மேன்மையாய்ப் பெருகி எழுகிறது. உள்ளம் கனிந்த உபகார நிலை உம்பரையும் இம்பரையும் ஒருங்கே இன்புறச் செய்கிறது அந்தப் பெருந்தகையால் உலகம் உயர்கிறது.

"உண்டால் அம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே." (புறம், 182)

சிறந்த பண்பாடுகள் நிறைந்த உயர்ந்த மேலோர்களின் நிலையை இது உணர்த்தியுள்ளது. எவ்வழியும் செவ்வையான இனிய நீர்மைகளோடு வாழ வேண்டும் என மனித சமுதாயத்துக்கு ஒரு போதனையை இளம்பெருவழுதி என்னும் மன்னன் இன்னவாறு உளம் கனிந்து நன்னயமாய் வரைந்து மொழிந்துள்ளான்.

அரிய தெய்வ அமுதம் பெறினும் நீ தனியே உண்ணாதே; பிறர்க்குப் பகுந்து கொடு; முனிவு இன்றி இனியனாய் நில்; பிறரது துயரை நீக்க ஆனவரையும் அவர்க்கு உதவி செய்; புகழை விரைந்து தேடு; பழியை இகழ்ந்து விடு; அயர்வு நீங்கி உயர்வில் ஓங்குக; தனக்கு என்று குறுகிய நோக்கோடு முயலாமல் பிறர் நலமுறப் பேணி முயன்று பெருகி வாழ்; இவ்வாறு வாழின் நீ புண்ணிய மூர்த்தியாய்ப் பொலிந்து விண்ணும் மண்ணும் வியந்து போற்ற விளங்குவாய்! என்று விளக்கியிருக்கும் இக் கவியின் சுவையைக் கருதியுணர்ந்து உளங்கொண்டு நுகர்ந்து உறுதியோடு ஒழுகிவரின் விழுமிய மேன்மைகள் செழுமி வரும்.

வானம் கைம்மாறு கருதாமல் உலகிற்கு மழையைப் பொழிகிறது; அதுபோல் உதவி புரிபவர் வானவராய் உயர்ந்து திகழ்கின்றார். செய்யும் இதம் தெய்வ அமுதமாய் உய்தி புரிகிறது.

ஈகையால் உயிர்கள் உவகையுறுகின்றன; சீவர்களுடைய அந்த உள்ளக் களிப்பு தருமமாய்ப் பெருகி ஈந்தவனை நோக்கி வருகின்றன; வரவே இருமையினும் இன்பமூர்த்தியாய் அவன் மருவி மகிழ்கின்றான். அரிய சுகம் இனிய உதவியில் விளைகிறது.

ஈந்து வந்தார் பேரின்பம் சேர்ந்து உவந்தார் என்றது ஈகையால் விளையும் மகிமை மாண்புகளையும் இன்ப நிலைகளையும் ஒருங்கே ஓர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது. பிறர் உவந்து வர ஓம்பி வருபவன் உயர்ந்த பதவியை விரைந்து அடைந்து கொள்கிறான். துயர் நீங்க உதவுதலால் உயிர் ஓங்கி உயர்கிறது.

இரங்கி உதவின் இமையோர் இறங்கி
வரம்பெற வைப்பர் வளமாய்---உரம்பெற்றும்
ஈயா தொழியின் இருமை எதிரிழந்து
பேயா யிழிவர் பிறழ்ந்து.

கருணையோடு உயிர்களைப் பேணிச் சாதுக்களுக்கு உண்டி கொடுத்து வரின் அந்த உபகாரியைத் தேவர்கள் கண்டு மகிழ்

கின்றார்; சுவர்க்கத்தின் கதவு அவர்க்கு நன்கு திறந்திருக்கிறது.

உள்ளம் இரங்கி உயிர்களை ஒப்பி உதவி புரிந்து பெருந்தன்மையோடு வாழுக; அந்த வாழ்வு புகழும் புண்ணியமும் பொலிந்து உனக்குப் பேரின்ப வெள்ளமாய் விளைந்து வரும்.

---

819. இரந்துவந்தார்க் கேதேனும் இன்சொல்லோடு ஈக
கரந்தொழிதல் அந்தோ கறையாம்—புரந்தருளும்
மாதவனும் மண்ணிரந்தான் மாவலியன் றெண்ணியதென்
ஈதலதைச் செய்க இனிது. (கூ)

இ—ள்

உன்பால் இரந்து வந்தவர்க்கு அன்போடு இன்சொல்ஆடி ஏதேனும் கொடுத்து அருளுக; கொடாமல் மறுத்தால் அது கொடிய பழியாம்; எல்லா வுயிர்களையும் பாதுகாத்து வருகிற திருமாலும் மாவலியிடம் வந்து யாசித்து நின்றான்; அந்த நிலையை உணர்ந்து யாருக்கும் உவந்து உதவி உயர்ந்து கொள்ளுக. தருவது எதுவோ அது உயர்வாய் உன்பால் வருவது என்க.

அந்தோ! என்றது கரத்தலின் கொடுமையை உணர்த்தியது.

இனிய போகங்களை நுகர்ந்து சுகமாய் வாழ வேண்டும் என்றே மனிதன் பொருளை ஈட்டுகிறான். அவ்வாறு ஈட்டிய பொருளைத் தன் அளவில் வைத்துக் கொள்பவன் சின்னவனாயிழிகின்றான்; உலோபி வன்கண்ணன் என்று பிறரால் பழிக்கப்படுகின்றான். நல்ல வழியில் பயன்படாமையால் அவனுடைய செல்வமும் பொல்லாத பழியில் எள்ளி இகழப் படுகிறது.

அற்றார்க்குஒன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. (குறள், 1007)

வறியவர்க்குக் கொடாதவனது செல்வம் அழகிய மங்கை மணமாகாமல் தனியே தனித்திருந்து வீணே மூத்து விளிந்தது போலாம் எனத் தேவர் இங்ஙனம் குறித்துள்ளார். உலோபி பொருள் அனைதையான ஒரு குமரிக்கு உவமையாய் வந்தது. தருணமங்கையை உரிய பருவத்தில் ஒருவனுக்கு மணம் முடித்துத் தந்தால் இருவரும் ஒருங்கே இன்புறுகின்றனர்; மக்கட்பேறும் உண்டாகிறது; பெற்ற பொருளைப் பாத்திரம் அறிந்து வறி

யவருக்கு உரிமையோடு கொடுத்தால் அவர் மகிழ்ந்து கொள்கின்றார்; பொருளும் பணபாய்ப் பயன் அடைகிறது; கொடுத்தவனுக்குப் புண்ணியமும் உண்டாகிறது. ஆகவே ஈகையின் இன்ப நலங்கள் இங்கே நன்கு தெளிவாகின்றன; ஈயாத உலோபி இவ்வளவு பலன்களையும் ஒருங்கே இழந்து விடுகிறான். பொருளை அழகிய குமரியோடு ஒப்புக் கூறி வைத்துள்ள இதில் மருமமாய் மருவி யிருக்கும் அரிய நுட்பங்களை உய்த்துணர்க.

பொருளால் அடைய வுரிய பயன் இரண்டு; அவை எவை? அனுபவித்தல், ஈதல். முன்னது உடலை வளர்த்து ஊனமாய் ஒழிகிறது; பின்னது உயிரை வளர்த்து ஒளி செய்து வருகிறது. தன்னலம் பேணித் தானே உண்ணுகிறவன் பேரும் சீரும் இழந்து விரைந்து மறைந்து போகிறான்; பிறர்க்கு உதவுகிற உபகாரி பெரும் புகழோடு உயர்ந்து சிறந்து விளங்குகிறான்.

கொடையினாலேயே மனிதனுடைய தரமும் மதிப்பும் நன்கு தெரியவருகின்றன. தான் உண்ணுமுன் அயலுக்கு ஊட்ட விரும்புகிறவன் உயர் குல மனிதனாய் ஒளி பெற்று நிற்கிறான். செயல் இதமாய் வரச் சீர்மை நலமாய் வருகிறது.

பகுந்து உண்ணும் இயல்பினால் காக்கையும் உயர்ந்தது; அங்ஙனம் உண்ணாத சிறுமையால் நாய் எள்ளி இகழப்பட்டது. பறவையும் விலங்கும் ஈகை ஈயாமைகளின் உயர்வு இழிவுகளை முறையே உணர்த்தி மனித இனத்துக்கு மதி யூட்டி யுள்ளன.

பகுந்துஉண்ணும் பான்மையால் காக்கையை ஞாலம்
மிகுந்த மகிழ்வோடு பேணும்---இகந்தயலை
எள்ளி விழுங்கும் இயல்பினால் நாய்எங்கும்
எள்ளல் அடைந்த திழிந்து.

கரவாமல் கரைந்து உண்ணும் நீர்மையால் காக்கையை உவந்து அழைத்து முன்னதாக அதற்கு உலகம் உணவு ஊட்டுகிறது; இதனை உணர்ந்தாவது பகுத்தறிவுடைய மனிதன் பகுத்து உண்ண வேண்டும். அவ் வுணவு தெய்வ மணமாம்.

பண்புபல பெற்றுமினம் பேணாப் பரிசின்நாய்
புண்படூஉம்; காக்கைபல பொல்லாக் குணம்பெற்றும்
உண்ப விளித்துதவும் ஆற்றின் உயர்வுறூஉம
எண்பெறார் பாத்தூண் இலார். (இன்னிசை யிருநூறு)

ஈயாதவர் இழிவுறுவர் என்பதை நாய்வாழ்வு நன்கு விளக்கியுள்ளது. தாம் உண்ணுவதை விடப் பிறர்க்கு ஊட்டுவதையே மேலாக எண்ணி மேலோர் பொருள் ஈட்ட முயல்வர்.

இல்என இரந்தோர்க்குஒன்று ஈயாமை இழிவுஎனக்
கல்இறந்து செயல் சூழ்ந்த பொருள். (கலித்தொகை, 2)

காடு மலைகளைக் கடந்து போய் வருந்திப் பொருள் ஈட்டி வருவது எளியவர்க்கு ஈயவேயாம் என ஒரு குலமகன் கருதியிருப்பதை இது காட்டியுள்ளது பிறர்க்கு உதவி புரிய எண்ணுகிறவன் புண்ணிய நீரனாய்ப் பொலிந்து உயர்ந்து திகழ்கிறான்.

சிறந்த புகழையும் உயர்ந்த இன்பத்தையும் ஈகை தந்தருளுதலால் அதனை மேலோர் சாலவும் உவந்து புகழ்ந்து வருகின்றார்.

மாவலி பெரிய கொடை வள்ளல். பிரகலாதன் பேரன். உயர்ந்த சக்கரவர்த்தியாய் உலகம் முழுவதையும் ஒருங்கே ஆண்டு வந்தான்; இவனுடைய ஈகை நிலையை வியந்து திருமால் ஒரு வாமனனாய் வந்து இவனிடம் மூவடி மண் தானம் கேட்டான். இவன் உவந்து தந்தான்; அவ்வாறு தருங்கால் மந்திரியும் குருவுமாயிருந்த சுக்கிராச்சாரியார் தடுத்தார். "அரசர் பெரும! வந்துள்ளவன் திருமால்; வானவர்க்காகத் தானம் கேட்க வந்திருக்கிறான்; தந்திரமாய் வஞ்சனை புரிய வந்திருத்தலால் நீ யாதும் தரவே கூடாது" என்று தடுத்து நிறுத்தினார். அடுத்து நின்று அவர் தடுத்தபோது இவன் அவரைக் கடுத்து மொழிந்து கருதியபடியே கொடுத்து மகிழ்ந்தான். உள்ளம் துணிந்து இவன் உரைத்த மொழிகளைக் கேட்டு மாலும் மகிழ்ச்சி மீக்கூர்ந்தார்.

வெள்ளியை ஆதல் விளம்பினை மேலோர்
வள்ளியர் ஆக வளங்குவ தல்லால்
எள்ளுவ என்சில? இன்னுயிர் ஏனும்
கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்றால். (இராமாயணம்)

கொடையில் மாவலி மன்னன் கொண்டுள்ள பிரியமும் உறுதியும் இவ்வுரைகளால் நன்கு தெரியலாம். இன் உயிர் ஏனும் கொடுப்பது நன்று; கொள்ளுதல் தீது என்றதனால் இவனுடைய வண்மையும் திண்மையும் உண்மையும் உணர வந்தன. தன் கொடையால் என்றும் அழியாத புகழையும் அதிசய ஆனந்த

நிலையையும் இவன் அடைந்து நின்ருன். கொடையாளியிடம் தெய்வமும் நேரே வருகிறது; அவன் எதிரே தாழ்ந்து நிற்கிறது என்பதை இவன் சரிதம் ஓர்ந்து உணர்ந்து கொள்ளச் செய்தது.

ஈந்து உயர்ந்து இருமையும் பெருமையாய் இன்பம் பெறுக.

---

820. தன்னலமே நாடித் தவிப்போன் உயிர்க்குரிய
இன்னலங்கள் யாவும் எதிரிழந்தான்—மன்னலமே
பேணி அருள்புரிவோன் பேரின்ப முத்தியைக்
காணியாக் கண்டான் கனிந்து. (ம)

இ—ள்

தனது சுயநலமே கருதி உழல்பவன் உயிருக்கு உரிய உயர் நலங்களையெல்லாம் ஒருங்கே இழந்தான்; பிறருடைய நலங்களை நாடி உணர்ந்து பேணி உதவுபவன் நீடிய புகழோடு நிறைந்த பேரின்ப முத்தியை நேரே காணியாக் கொண்டான் என்க

இரக்கம் என்பது குணநலங்களுள் தலை சிறந்தது; அதனை யுடைய மனிதன் எவ்வுயிர்க்கும் இரங்குகிருன்; எதனையும் பிறர்க்கு உதவ நேர்கின்ருன். அந்த இனிய நீர்மையில்லாதவன் கொடிய கல் நெஞ்சன் ஆகின்ருன்; ஆகவே யாதும் உதவாமல் அவகேடனுய் நிற்கின்ருன். பிறவுயிர்களின் துயரங்களைக் கண்டால் உள்ளம் கரைந்து உருகின் அந்த உயிர் பேரின்ப வெள்ளத்தை அடைய வுரியதாகின்றது. சீவர்களுக்கு இரங்கி வரும் அளவு மனிதன் தேவனுய்ச் சிறந்து வருகிருன்.

"Mercifulness makes us equal to the gods" (Claudian)

"இரக்கம் நம்மைத் தெய்வங்களுச்கு நேராக்குகின்றன" என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது.

தண்ணளி புண்ணியங்களைப் புரிதலால் அதனை யுடையவர் விண்ணவராய் விளங்கி வருகின்ருர். இரக்கம் ஈகைக்கும், இரங்காமை ஈயாமைக்கும் ஏதுவாய் நின்றன. இரக்கமுடைய வர் யாதும் இலராயினும் ஆனவரையும் உபகாரம் செய்கின்ருர்; பொருள் நிறைய இருந்தாலும் இரக்கம் இல்லாதவர் யாதும் ஈயாமல் இழிந்து நிற்கின்ருர். கடிய நெஞ்சு கொடிய நஞ்சாம்.

அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (குறள், 72)

ஈயாதவரது இயல்பையும் ஈகின்றவரது உயர்வையும் இது ஒருங்கே காட்டியுள்ளது. ஒரு புருவுக்காகச் சிபி மன்னன் உடம்பை அறுத்துக் கொடுத்தான். முதுகின் எலும்போடு ததீசி உயிரையும் கொடுத்தார். தன்பால் வந்து இந்திரன் என்னை வேண்டிய பொழுது அன்புடைய இம் முனிவர் கூறிய இனிய மொழிகள் அரிய பொருளுடையன; பெரிய உணர்வு நலங்கள் நிறைந்தன; யாவரும் அறிய வுரியன; அயலே வருகின்றன.

ததீசி உரைத்தது.

நாய்நமது என நரிநமது எனப் பிதா
தாய்நமது என நமன் தனது எனப் பிணி
பேய் நமது என மனம்மதிக்கும் பெற்றிபோல்
ஆய்நமது எனப்படும் யாக்கை யாரதே? (1)

விடம்பயில் எயிற்றர வுரியும் வீ றுழை
குடம் பையும் தான் எனுங் கொள்கைத் தேகொலாம்
நடம்பயில் கூத்தரின் நடிக்கும் ஐவர் வாழ்
உடம்பையும் யான்என உரைக்கற் பாலதோ? (2)

நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்த யாவரும்திரு வடைய யாக்கையைக்
கொடுத்து ஐயா அறம்புகழ் கொள்வனே எனின்
எடுத்த யாக்கையின் பயன் இதனின் யாவதே. (3)

(திருவிளையாடல்)

உடம்பு எடுத்த பயன் பிறர்க்கு உதவி புரிவதே; அறமும் புகழும் அழியா இன்பமும் அதனால் உளவாகின்றன என முனிவர் மொழியால் இங்கே தெளிவாய் அறிந்து கொள்கிறோம்.

தன் நலமே கருதி உண்டு களித்து உடலைக் கொழுக்கச் செய்து வருபவன் உயிர்க்கு ஒரு பயனும் காணுமல் ஊனமாய் ஒழிந்து போகின்றான்; வளர்த்து வந்த உடல் சுடலைத் தீயில் எரிந்து பிடி சாம்பலாய்க் கடிது மறைகிறது; ஈயாமல் ஈட்டி வைத்த பொருள் அயலாரிடம் சிக்கி மயலாய் மறைந்து போகிறது. போக்கை நோக்கி உணர்பவர் புலைநீங்கி உயர்கின்றார்.

வாழ்வின் நிலைமையை ஊன்றி உணர்ந்து இயன்றவரையும் பிறர்க்கு மனிதன் உதவிவரின் அது அவன் உயிர்க்கு உறுதியாய் ஒளியையும் இன்பத்தையும் ஒருங்கேயருளி உய்தி புரிகிறது. சிறிது சோறு கொடுத்தவனுக்கும் பெரிய பேறு கொடுத்து வருதலால் கொடை அரிய தெய்வத் திருவாய் மருவி நின்றது. அதன் மகிமை தெரிந்தவர் எவ்வழியும் அதனை உரிமையோடு பேணி வருகின்றார். உதவி புரிவது உத்தம நிலையாய் ஒளிபுரிகிறது.

கருணை வள்ளலான புத்தர் உயிர்களுக்கு இரங்கி உதவியருளும் கொடையை வியந்து இந்திரன் ஒருமுறை மாறுவேடமாய் அவரிடம் நேரே வந்தான். "ஐயனே! உங்கள் கண்கள் இரண்டும் எனக்கு வேண்டும்" என்றான். உடனே தோண்டிக் கொடுத்தார். "ஞானக் கண்ணை யாவருக்கும் உதவி உய்வித்தருளுகிற தெய்வக் கொடை வள்ளலே! எனக்கு இந்த ஊனக்கண்ணையும் கொடுத்தருளினீர்! உமது வள்ளன்மையை உள்ளுந்தோறும் என் உள்ளம் உருகுகிறது" என்று தேவர்கோன் உவந்து தொழுது வான்வழியே மறைந்து போனான்; இவர்கண் ஒளி பெற்று மீண்டும் சீவர்களுக்கு ஆதரவு செய்து வந்தார்.

விண்ணவர் நாயகன் வேண்டக்
கண்ணினிது அளித்த காதற்
புண்ணியன் இருந்த போதி
நண்ணிட நோய்நலி யாவே. (வீரசோழியம்)

விண்ணவர் கோனுக்குக் கண் கொடுத்ததை இது காட்டியுளது. உயிரின் ஒளியான விழியும் அளித்தது வியத்தகு கொடையாம்.

கண்கொடுத்தான் தடிகொடுத்தான்
கயப்புலிக்குத் தற்கொடுத்தான்
பெண்கொடுத்தான் உடம்பினையும்
பிளந்திட்டுப் பிறர்க்கு ஈந்தான்
மண்கொடுத்தான் மகக் கொடுத்தான்
மன்னுந்தற் சேர்ந்தார்க்கு
விண்கொடுத்தான் அவன்கொடுத்த
விரித்துரைப்பன் கேள் என்றான்.

புத்த பெருமான் கொடுத்துள்ள கொடைகளையும் நிலைகளை

யும் இதனால் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். அருளுடையார் செயல்கள் அதிசயங்களாகின்றன. சரிதங்கள் கருத வுரியன.

மிக்கதனங் களைமாரி மூன்றும்பெய்யும்
  வெங்களிற்றை மிகுசிந்தா மணியை மேனி
ஒக்கவரிந்து ஒருகூற்றை இரண்டுகண்ணை
  ஒளிதிகழும் திருமுடியை உடம்பில் ஊனை
எக்கிவிழும் குருதிதனை அரசுதன்னை
  இன்னுயிர்போல் தேவியையான் றெடுத்த செல்வ
மக்களைவந்து இரந்தவர்க்கு மகிழ்ந்தே ஈயும்
  வானவர்தாம் உறைந்தபதி மானூரே.
(புத்ததானம்)

இவ்வாறான ஈகையும் இரக்கமும் எல்லாருக்கும் அமைதல் அரிது; பல்லாயிரம் கோடி மக்களுள்ளும் உண்மையான ஒரு நல்ல கொடையாளியைக் காண முடியாது. எல்லாம் வல்ல கடவுளே எவ்வுயிரையும் ஆதரிக்கும் பெரிய கொடை வள்ளல்.

தாம் செய்த வினைப்பயன்களை அனுபவிக்கவே மாந்தர் இங்கே பல்வேறு நிலைகளில் பிறந்திருக்கின்றனர். சிலர் பெரிய செல்வர்களாய் உயர்ந்த மாளிகைகளில் உல்லாசமாய் வாழ்ந்து வருகின்றனர்; வேறு சிலர் நடுத்தரமாய் வாழுகின்றனர்; பின்னும் சிலர் சிறு குடிசைகளில் வசிக்கின்றனர்; பலர் இருக்க வீடின்றி உடுக்க உடையின்றி உண்ண வுணவின்றி எவ்வழியும் தவித்து உழலுகின்றனர். சிலர் சுகித்துக் களிக்கப் பலர் பசித்துப் பதைக்கக் காரணம் என்ன? என்று கருதி ஆராயும்போது அவரவர் செய்த வினைப்பயன்களே என விடைகள் வெளி வருகின்றன. மனித வாழ்வுகள் அரிய மருமங்களாயுள்ளன.

அகத்தாரே வாழ்வாரென்று அண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி இருப்பரே மேலைத்
தவத்தால் தவஞ்செய்யா தார். (நாலடியார், 31)

தெரு வாசலில் நின்று அம்மா சோறு என்று அலமந்து நிற்பவர் முன்னம் நன்மை யாதும் செய்யாத தீவினையாளரே என இது குறித்திருக்கிறது. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

"மண்ணால் சட்டி கரத்து ஏந்தி மறநாய் கவ்வும் காலினராய்
அண்ணாந்து ஏங்கி இருப்பாரை அறிந்தோம் அறிந்தோம் அம்மம்மா
பண்ணார் மொழியார் பாலடிசில் பைம்பொற் கலத்தில் பரிந்தூட்ட
உண்ணா நின்ற போதார்க்கும் உதவா மாந்தர் இவர் தாமே."
(விவேக சிந்தாமணி)

மண்சட்டியைக் கையில் ஏந்திக் கஞ்சிக்கு ஏங்கித் தெருவில் கூவித்திரிவார் யார் தெரியுமா? சுவையான பாலமுதைத் தங்கக் கிண்ணத்தில் வைத்து மங்கையர் கொஞ்சி ஊட்ட உண்டு வந்தவரே; அவ்வாறு உண்ணும் போது ஏழைகளுக்கு இரங்கி உதவாத பாவத்தால் இவ்வாறு இழிந்து பிச்சை எடுக்க நேர்ந்தார் என இது விளக்கியுள்ளது. ஈயாமையால் நேரும் இழி பிறவிகளையும் பழி துயரங்களையும் இவற்றால் உணர்ந்து கொள்ளுகிறோம். தம் அரிய உயிர்க்கு உரிய ஊதியமான ஈதலை இழந்து மனிதர் பேதைகளாய் இழிந்து போவது பெரிய பரிதாபமாகிறது. செய்த உபகாரமே சிவனைத் தெய்வமாக்குகிறது.

அரசர் சிறந்த மேதைகள் ஆதலால்எவ்வழியும்கொடையை அவர் உவந்து பேணி வருகின்றார். வீரம் போல் கொடையும் வேந்தரிடம் மேன்மையாய் விளங்கி மிகவும் உயர்ந்து நிற்கிறது.

தன் நாட்டில் ஏழைகள் யாரும் இல்லாமையால் கொடுத்து மகிழ முடியவில்லையே என்று மறுகியிருந்த சேரமன்னன் ஒரு நாள் தனது தேரை அனுப்பி அயலிடங்களிலிருந்து இரவலர்களைக் கொண்டு வந்து உயர்ந்த உண்டி முதலியன ஊட்டி மிகுந்த பொருளும் கொடுத்துத் தகுந்த உபசாரத்தோடு அனுப்பினான்.

"வாரார் ஆயினும் இரவலர் வேண்டித்
தேரில் தந்துஅவர்க்கு ஆர்பதன் நல்கும்
நசைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்."
(பதிற்றுப்பத்து)

கொடுப்பதில் இம்மன்னன்கொண்டுள்ள ஆவலை இதனால் அறிந்து கொள்கிறோம். இரவலர் இலரேல் புரவலருக்கு மதிப்பு இல்லை.

பொன்றும் பொருளைச் சிறிது வாங்கிக் கொண்டு என்றும் பொன்றாத பெரும்புகழைக் கொடுத்தலால் இரப்போரே சிறப்பான கொடையாளிகளாய் யாண்டும் உயர்ந்துள்ளனர்.

பரப்புநீர் வையகத்துப் பல்லுயிர்கட் கெல்லாம்
இரப்பாரில் வள்ளல்களும் இல்லை—இரப்பவர்
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
தம்மைத் தலைப்படுத்த லால். (அறநெறிச்சாரம், 220)

கொடுப்போரையே வள்ளல் என உலகம் சொல்லி வருகிறது; கொள்வோரே உண்மையான நல்ல வள்ளல்கள்; அது எவ்வாறு? எனின், தமக்குச் சிறிது உபகாரம் செய்தவர்க்கு இம்மையிலே நிலையான புகழையும் மறுமையிலே தலையான கதியையும் கொடுத்தலால் என்க. முனைப் பாடியார் என்னும் முனிவர் இரப்பாரின் ஈகை நிலையைக் குறித்து இப்படி வியப்பாக விளக்கியிருக்கிறார். வறிய இரவலரைப் பெரிய புரவலர் என்றது உரிய உண்மையை உணரவந்தது. அல்லலான செல்வர்க்கு நல்லகீர்த்தியையும் இன்பங்களையும் நல்குதலால் அவரது உபகார நிலை உயர்தரமாயது.

இரப்போரைக் கண்டால் எள்ளி இகழாதே; உனக்குப் புகழும் புண்ணியமும் கொடுக்க வந்த வள்ளல்கள் என்று எண்ணி அவருக்கு எவ்வழியும் ஈந்தருள் எனத் தன் மகனை நோக்கி ஒரு மன்னன் முன்னம் சொன்னதும் ஈண்டு எண்ணியுணரவுரியது. உண்மை தெளிய நன்மை நன்கு விளைகிறது.

இல்லைஎன வந்தவருக் கீந்தருளென் றுன்னிடம்நான்
சொல்லவில்லை ஒன்றுதான் சொல்லுகின்றேன்—நல்லவனாய்
உன்னுயிரை இன்பமுற ஓம்புவதே எவ்வழியும்
மன்னுயிரை ஓம்பல் மதி

பிற வுயிர்களுக்கு ஆதரவாய் உதவி செய்கிறவன் தன் உயிர்க்கே மருமமாய் இன்பம் செய்தவனாகிறான் என இது வினயமாயுணர்த்தியுள்ளது. சொல்லின் சுவையையும் பொருள் நயங்களையும் உள்ளம் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

The man who ignores self in a ministry of mercy discovers life indeed. (living)

தன்னை மறந்து பிறர்க்கு இரங்கி உதவுகிற மனிதன் தான் உண்மையான உயிர் வாழ்வைக் காணுகிறான் என்னும் இது இங்கே காணவுரியது. அருள் சுரந்த உதவி அரிய சுகமாகிறது.

எளியவர்க்கு அளி செய்து கொடு! அதனால் ஒளியும் இன்

பமும் உனக்கு ஒருங்கே உளவாம். கொடுப்பதால் கோடி நலங்கள் ஓடி வருதலால் கொடை இன்பமடையாயுளது.

"We enjoy thoroughly only the pleasure that we give" (Dumas)

கொடுப்பதிலேதான் பூரணமான இன்பத்தை நாம் அனுபவிக்கிறோம் என டூமாஸ் என்னும் அறிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். உண்பது உடலுக்கே; உதவுவது உயிர்க்கே உரமாம்.

"Be charitable before wealth makes thee covetous." (Browne)

பொருள் ஆசை உன்னை மருளன் ஆக்கு முன்னமே அருளோடு கொடு என்னும் இது உபகார நிலையை விநயமாய் நன்கு உணர்த்தியுள்ளது. உயிர்க்கு உய்தி தருவது உணர வந்தது.

Beneficence is a duty. (Kant)

பிறர்க்கு உபகாரம் செய்வது மனிதனது கடமையாயுளது என காண்ட் என்னும் ஜெர்மன் தேசத்துப் பெரியார் உதவியின் சீரிய நிலையை இவ்வாறு பரிவோடு கூறியுள்ளார்.

தாம் செய்த வினைகளின் பயன்களையே சீவர்கள் ஈண்டு எய்த வருகின்றனர். அவ்வரவில் சிலர் செல்வராகவும் பலர் வறியராகவும் நேர்கின்றனர்; நேரவே ஈதலும் இரத்தலும் மனிதசமுதாயத்தில் இயல்பான உரிமையாய் மருவி வரலாயின.

தானமால் களிறும் மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக;
நலம்பா டின்றி நாண்துறந்து ஒரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர் ஏற்க;
புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும் இவ்வுலகு உடைத்தே;
அதா அன்று
ஒருகா லத்தில் உருவமற்று ஒன்றே
இடப்பால் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பால் இரத்தல் மாநிலத் தின்றே
விண்தொட நிவந்த வியன்துகில் கொடிகள்
மண்டலம் போழ்ந்து மதியகடு உடைப்ப
வாணிலா அமுதம் வழங்கிஅக் கொடிகள்
வேனிலிற் பயின்ற வெப்பமது ஆற்றுபு
கொடியார் எத்துணைக் கொடுமை செய்யினும்

15. மதியார் செய்திடும் உதவியை உணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்
கடிநகர் வைப்பினில் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிதே.
(திருவாரூர் நான்மணிமாலை 9)

இந்தப் பாசுரத்தைக் கருதிக் கவனியுங்கள். உமாபதியின் சீர்மை நீர்மைகளை இது நேர்மையா உணர்த்தி யிருக்கிறது. அர்த்தநாரீசுரன் என அமைந்திருக்கும் அந்த ஒரே திருவுருவில் ஈதலும் இரத்தலும் இசைந்திருத்தலை அதிசய விசித்திரமாய் விளக்கியுள்ள இதில் அரியபல உண்மைகள் விளங்கியிருக்கின்றன.

இடப்புறம் அம்மை அறம் புரிகிருள்; வலப்புறம் ஐயன் இரத்தலைச் செய்கிருன். தாய்போல் இரங்கித் தருமம் செய்யுங்கள்; இல்லையேல் என்போல் இறங்கிக் கருமம் செய்ய நேரும் என்று உயிரினங்களுக்கு இறைவன் காட்டுவது போல் அக் காட்சி மாட்சியடைந்துள்ளது. உண்மை உய்த்துணர வுற்றது.

கோடியார் எத்துணைக் கோடுமை செய்யினும், இனிய மதியார் எவ்வழியும் இதமே செய்வர் என உரைத்திருக்கும் நயம் ஊன்றி நோக்கி உபகார நிலைகளை ஓர்ந்து கொள்ள வந்தது.

உதவி செய்பவர் உத்தமராய் உயர்ந்து வருகிருர்.

கொடை இவ்வாறு மகிமை யுடையதாயிருந்தாலும் கொள்வது யாண்டும் இளிவேயாம். கொடுப்பது எவ்வளவு உயர்வோ அவ்வளவு தாழ்வு எடுப்பதில் உள்ளது. கொடுத்துப் பழக வேண்டும்; எடுத்துப் பழக லாகாது. ஈந்து இன்பம் உறுக.

நல்லாறு எனினும் கொளல் தீது; மேல்உலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. (குறள், 222)

கொள்வது நல்லது; அதனல் உனக்குப்பேரின்ப வீடு கிடைக்கும் என்று யாரேனும் சொன்னலும் நீ யாரிடமும் வாங்காதே; ஈதல் தீது; அதனல் மேல் உலகம் கிடையாது; நரகம் தான் சேருவாய் என்று கூறினலும் நீ அஞ்சாமல் யாருக்கும் துணிந்து கொடு என வள்ளுவப் பெருந்தகை இங்ஙனம்மொழிந்துள்ளார். இந்த உறுதி மொழியைக் கருதியுணர்ந்து எவ்வழியும் உதவி புரிந்து இனிது ஒழுகி வரின் வாழ்வு புனிதமாய்க் கெழுமி வரும்.

வறுமை நேர்ந்தால் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்து பசியைப் போக்கு; யாரிடமும் எதையும் கேளாதே; உழைத்து வாழ்வதே எவ்வழியும் உத்தமம். உழையாமல் ஒதுங்கிப் பிழை யாக இரவில் புகின் அது பழியாகவே முடியும். பிறர் வலிந்து வந்து கொடுத்தாலும் வாங்காதே; அவ்வாறு ஏலாது நிற்பின் மேலான நிலையை நீ விரைந்து அடைந்து உயர்ந்து திகழ்வாய்.

கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன் எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று. (புறம், 204)

ஈவது நன்று; ஈயாமை தீது. (சிறு பஞ்ச மூலம், 101)

கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்று. (இராமா வேள்வி 29)

இவை இங்கே சிந்திக்கத்தக்கன. கொடுப்பது நல்லது; அத னல் பெருமையும் இன்பமும் பெருகி வரும் ஆதலால் அதனையே மருவி வாழுக. கொள்ளுவது இழிவு; அதனை எள்ளி விலகுக.

" To give should be our pleasure, but to receive, our shame."
(Goldsmith)

"கொடுப்பதை நாம் இன்பமாக் கொள்ள வேண்டும்; கொள்வதை வெட்கித் தள்ள வேண்டும்" என்னும் இது இங்கே நன்கு உணரத்தக்கது. மனித சமுதாயத்தில் நல்லது பெருகி வர வும், அல்லது அருகி மறையவுமே பெரியோர் கருதிவருகின்றனர்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கொடை இருமையும் பெருமை தரும்.
அரசனுக்கு அது அதிசய மகிமையாம்.
கோடியில் ஒருவன் கொடையாளி ஆகிருன்.
கொடையால் புகழும் புண்ணியமும் உளவாம்.
கொடுத்து வந்த கையே கோல்ஏந்தி ஆளுகிறது.
கொடையாளியை உலகம் உவந்து போற்றுகிறது.
கொடுப்பவன் வீரன்; கொடாதவன் பேடி.
பொருளைக் கொடுப்பவன் புகழ் இன்பங்களை அடைகிருன்.
கொடாதவன் பழிதுயரங்களில் படிகின்ருன்.
கொடையாளன் புகழோடு உயர்கதி பெறுகிருன்.

அஉ-வது கொடை முற்றிற்று.

# எண்பத்து மூன்றும் அதிகாரம்.

## நீ தி.

அஃதாவது நெறிமுறையான நியாய நிலை. ஈகைபோல் நீதியும் அரசனுக்குத் தனி உரிமையான தருமம் ஆதலால் கொடையின் பின் இது வைக்கப்பட்டது. சமுதாயத்துக்கு ஆதரவாய் இதம் புரிந்து வருதலால் கொடையும் நீதியும் கோனுக்குக் குடையும் முடியும் போல் எழில்சுரந்து ஒளிமிகுந்துள்ளன.

821. மக்கள் அமைதியாய் வாழ்ந்துவர மன்னவன்
தக்க துணையாகச் சார்ந்துள்ளான்—ஒக்கவே
நீதி வரம்பு நெறிமுறையாய் நேர்ந்துளதால்
ஓதி ஒழுக உயர்ந்து (க)

இ—ள்

தன் நாட்டில் உள்ள குடிசனங்கள் எவ்வழியும் அமைதியாய் வாழ்ந்துவர அரசன் ஆதரவாய்த் தோய்ந்துள்ளான்; தலைமையான அந்த ஆதரவு நீதி வரம்போடு நெறிமுறையே நேர்ந்துள்ளது; அதன் நேர்மையைக் கூர்மையா உணர்ந்து சீர்மையுடன் ஒழுகுக; அது இனிய வாழ்வாய் இன்பம் சுரந்து வரும்.

ஒழுங்கு, முறை, வரம்பு, கட்டுப்பாடு என்பன மனித வாழ்க்கை மாண்போடு நடந்து வரும் வகை நோக்கி வந்துள்ளன. மாந்தர் மதிநலம் உடையவர் ஆதலால் அவர் விதி நியமங்களோடு வாழ நேர்ந்தனர். அந்த வாழ்க்கைக்கு அரச நீதி உரிமைத் துணையாய் அமைந்தது. நாளும் வழக்கமாய் நடந்து வருகிற சீவிய ஒழுக்கு வாழ்வு எனத் தொடர்ந்து வந்தது.

செல்வம் கல்வி முதலிய வசதிகள் வாய்ந்திருந்தாலும் நீதி ஒழுங்கு இல்லையானல் அந்த மனித வாழ்வு இனிமையாய் இராது. கொடுமைகள் மலிந்து மடமைகள் மிகுந்து கடுமைகளே நிறைந்திருக்கும். மன்னன் நீதி புரிய வில்லையானல் மக்கள் அங்கே தீது புரிந்து எங்கும் தீயராய்த் திமிர்ந்து திரிவர்.

வீதி ஒழுங்கே அன்றி நீதி ஒழுங்கு இல்லை எனப் புதுச்சேரியைக் குறித்து ஆங்கிலேயர் இப்படிச் சொல்லுவது வழக்கம். பிரெஞ்சு தேசத்தார் ஆட்சியில் இருந்தமையால் அவ் வூரைப்

பற்றி ஆங்கில ஆட்சியாளர் இவ்வாறு தாழ்ச்சியான குறிப்புடன் கூற நேர்ந்தார். அதற்குச் சில காரணங்களும் இருந்தன.

நீதி பரிபாலனமுறை அரசனுடையது; அதை அவன் சரியாய்ச் செய்ய வில்லையானால் குடி சனங்கள் சுகமாய் வாழ முடியாது. திருடர் முரடர் கொடியர் முதலிய தீய குழுக்கள் யாங்கும் ஓங்கி நின்று தீங்கு புரிவர். புரியவே மக்கள் வெருவி அலமருவர். பொல்லாதார் அல்லல் புரியாவகை ஒல்லையில் அடக்கித் தொல்லையான துயரங்கள் தன் நாட்டின் எல்லையிலும் இல்லாவகை எதிரறிந்து செய்வதே நல்ல நீதி முறையாம்.

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு. (குறள்-735)

ஒரு நல்ல நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதை இது காட்டியுள்ளது. கோளர் குறும்பர் கொடியர் முதலிய பொல்லாக் கூட்டங்கள் இல்லாமல் நீக்கி நாட்டை அரசன் நன்கு பாதுகாத்த போதுதான் மாந்தர் அங்கு மன அமைதியுடன் மகிழ்ந்து வாழ்ந்து வருவர். தீது களைவதே நல்ல நீதி புரிவதாம்.

அரசன் நீதி செலுத்திவரும் அளவு நாடு செழித்து வரும். அது செழிப்பாய்த் தழைத்துவர யாவரும் யாண்டும் களித்து வாழுவர். நாட்டில் எவ்வளவுக்கு எவ்வளவு மாந்தர் உவந்து வாழுகின்றார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு அங்கே வேந்தன் உயர்ந்து திகழ்கின்றான். செல்வம் கீர்த்தி ஆற்றல் வீரம் முதலிய யாவும் நீதியினாலேயே ஏற்றமாய் நிலைத்து வருகின்றன. கொடை வீரங்களின் அடைமொழிகளை விட நீதியின் உரிமையே அரசனுக்கு மிகவும் சிறந்த மேன்மையாம்.

நீதி மன்னன் என உலகம் ஓதி வரும்படி அரசன் ஒழுகி வரின் அது அவனுக்கு அதிசயமான பெரிய மகிமையாய் வரும்.

மருக்கிளர் தாமரை வாச நாண்மலர்
நெருக்கிடு தடம்என இருந்த நீதியான்.
(இராமா, இலங்கை கேள்வி,15)

பரிமளம் கமழுகின்ற செந்தாமரை மலர்கள் பல அலர்ந்த இனிய தடாகம் போல் இராமன் இருந்தான் என இது குறித்துள்ளது. நீதியான் என்றது அவனது தரும நீர்மையும் கருமங்களின் சீர்மையும் இராசமுறைமையும் இனிது தெரிய வந்தது.

"ஆர் அருள் சுரக்கும் நீதி அறம் நிறம் கரிதோ?"
(இராமா, விபீட 137)

நீதியும் தருமமும் பசிய கோலத் திருமேனியாய் மருவியுளதோ? என இராமனை இவ்வாறு விபீடணன் கருதி உருகி யிருக்கிறான். நீதியின் உருவமாய் இராமன் நிலவியுள்ளான் என்பதை இதனால்இங்கே நன்கு உணர்ந்து நயம் தெளிந்து கொள்கிறோம்.

நீதியும் தருமமும் நிறுவ நீயிது
கோதறு குணத்தினய்! மனத்துள் கோடியால்.
(இராமா, ஆறு 5)

அரசு முறை புரியும்படி பரதனை நோக்கி முனிவர்கள் இவ்வாறு வேண்டியுள்ளனர். உரிய அரசன் இல்லாமையால் தேசம் தேசு இழந்து தியங்கியுள்ளது; மாந்தர் எங்கும் மறுகி மயங்கி நிற்கின்றனர்; ஆகலால் ஆட்சியை ஏற்றருள் என்று அந்த விரத சீலனை வேண்டி நின்றனர். நீதியும் தருமமும் நிறுவ என்றதனால் அரசு முறைமை அறிய வந்தது. மெலியரை வலியர் நலியாமலும், பெரியரைச் சிறியர் இகழாமலும், உரிமைகளைப் பிறர் கவராமலும் யாவரும் மரியாதையாக வாழ வேண்டுமானால் அங்கே அரசன் சரியாக ஆள வேண்டும் என்பது இங்கே தெரிய நேர்ந்தது. காப்பு நிலை காவலன் நீதிமுறையால் நிலைத்து வருகிறது. பாதுகாப்பின் திறம் நீதி ஆட்சியின் நிறமாயுள்ளது.

நெறிகடந்து பரந்தன நீத்தமே;
குறி அழிந்தன குங்குமத் தோள்களே;
சிறிய மங்கையர் தேயும் மருங்குலே;
வெறியவும் அவர் மென்மலர்க் கூந்தலே.
(இராமா, நாட்டு, 40)

தசரதனது ஆட்சிக் காலத்தில் கோசலா தேசம் இருந்தநிலையை இது நயமா வரைந்து காட்டியுளது. பொருள் நயங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். நெறி கடவாமலும், குறி அழியாமலும், சிறுமை சேராமலும், வெறி நேராமலும் அந்நாடு விழுமிய நிலையில் செழுமி யிருந்தது; அந் நிலையைக் கலையின் சுவைகனியக் கவிஇங்ஙனம் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

நெறி = வரம்பு, சன்மார்க்கம். குறி = குறிப்பு, அடையாளம். வெறி = வாசனை, குடிமயக்கம். நீத்தம் = வெள்ளம். நதிகளில்

வெள்ளங்கள் கரை கடந்து சென்றனவே அன்றி அங்கே நெறி கடந்தவர் வேறு யாரும் இல்லை. களங்களில் குவித்த நெல் முதலிய பொதிகளில் அடையாளம் செய்துவைப்பர்; அந்தக் குறி யாதும் குலையாமல் இருக்கும். தோள்களில் தோய்ந்த சந்தனக் குறிகள் மங்கையர் கலவியில் அழிந்தனவேயன்றி வேறு குறியழிவு கிடையாது. பெண்களின் இடைகள் தாம் சுருங்கி யிருந்தன; வேறு சிறுமைகளோ சின்னத் தனங்களோ கிடையா; கூந்தல் தான் வெறிகள் வீசின; வேறு குடிமயக் கமோ, பைத்தியமோ அந் நாட்டில் இல்லை. மழை வளம், நெல் விளைவு, அழகிய பொருள்கள், நல்ல வாசனைகள் அத் தேசத்தில் செழித்திருந்தன; விழுமிய அந் நிலைமைகளுக்குக் காரணம் வேந்தன் புரிந்த நீதிமுறையே என்பது தேர்ந்து கொள்ளவந்தது.

பெரும்பொருள் நீதிச்செங்கோல் பெருமகன் ஆக்கம்போலப்
பரந்திடம் இன்றி மேலால் படாமுலை குவிந்த; கீழால்
அரும்பொருள் நீதி கேளா அரசனிற் சுருங்கி நந்து
மருங்குல் நொந்து ஒழிய வீதி மடந்தைய ரிடங்கொண்டாரே.
(சீவக சிந்தாமணி)

தருண மங்கையரின் தனங்களையும், இடைகளையும் குறித்து வந்துள்ள இதன் அழகுகளை நுனித்து நோக்குக. நீதி மன்ன னுடைய ஆக்கம் போல் மேலே முலைகள் பணைத்து நின்றன; அரிய அந்த நீதிமுறையைக் கேளாத அரசனது நிலைமை போல் இடைகள் சுருங்கி யிருந்தன என்னும் இது நினைந்து சிந்திக்க வுரியது. நீதி வழுவாமல் ஒழுகி வரும் அளவே அரசு விழுமி தாய் விளங்கி வரும்; அது வழுவுறின் யாவும் பழுதா யிழிவுறும்.

---

822. உள்ளமே சான்றாய் ஒழுகி வரின்இன்ப
வெள்ளமே எங்கும் விரிந்துவரும்—கள்ளம்
படிந்து வரினோ படுதுயரே யாண்டும்
முடிந்து வருமால் முனைந்து. (உ)

இ—ள்

தன் மனமே சாட்சியாய் மனிதன் ஒழுகிவரின் யாண்டும் இன்பநலங்கள் பொங்கி வரும்; உள்ளத்தில் கள்ளம் படிந்தால் எள்ளல் இழிவுகளும் கொடிய துயரங்களுமே நெடிது ஓங்கி நிற்கும்; நிலைமைகளை உணர்ந்து நெஞ்சம் நேர்மையாய் வாழுக.

மனிதன் அடைகின்ற மகிமைகள் யாவும் மனத்தின் தகைமையுள் மேவியுள்ளன. மனமே சாட்சியாக எவன் ஒழுகி வருகிருனே அவன் மகானுய் வெளியே தெரிய வருகிருன். நெஞ்சம் கரியாய் வந்தது நீசங்கள் எல்லாம் கரியாய் வேந்தன என்ருர் ஒரு பெரியவர். கரி = சாட்சி. அறிகரியும் எரிகரியும் ஒருங்கேதெரியவந்தன.புனிதமனம்அதிசயநிலைகளை அருளுகிறது.

தன் உள்ளத்தின் எதிரே ஒருவன் வாழ்க்கையை நடத்த நேர்ந்தபோது கள்ளம் கபடு வஞ்சனை பொய் முதலிய நீசங்கள் யாவும் நாசமாய்ப் போகின்றன; போகவே அவன் சத்திய வான் நீதிமான் செவ்வியோன் செம்மையாளன் எனச் சிறந்து திகழ்கிருன். "மனமது செம்மையாளுல் மந்திரம் செபிக்க வேண்டாம்" என்றது அதனுல் எல்லா நன்மைகளும் எளிதே உளவாதல் கருதி. சால்புடையவர் சான்ருேர் என நின்ருர்; மனச்சான்றுடையவர் முனிவர் என முதன்மையாய் வந்தார்.

இத்தகைய புனிதர் எதிரே சட்டம் ஒழுங்கு நீதி என்பன எல்லாம் இனமாய் வந்து தலைவணங்கி நிற்கும். கள்ளம் கரவுகள் இன்றி உள்ளம் செம்மையாய் மருவிய பொழுது அங்கே பேரின்ப வெள்ளம் பெருகி வரும். அத்தகைய மனித இனம் வாழுகின்ற நாடு எத்தகைய மகிமை யுடையதாம்? எவ்வளவு உத்தமநிலையமாய்ஒளிபெறும்? இதனைஈண்டுஉய்த்துஉணரவேண்டும்.

உள்ளத்தில் கள்ளம், வாயில்பொய், செயலில் கரவு ஆகிய இப் புலைகளையே மக்கள் நிலையாகத் தழுவி நெடிது களித்துத் திரிகின்ருர்; புலையான இந்தப் பொல்லாத மாக்கள் உள்ள நாடு நல்ல நாடு ஆகுமா? கொடிய சுடு காட்டினும் இழிவான பழி காடே யாம். பிறந்தநாடு பெருநீசமடையப் பிழைகள்பெருகின.

குட்டநோய், பெருவியாதி யுடைய உருவங்களைத் தொடக் கூடாது; தொட்டால் ஒட்டுவார் ஒட்டியாய்ப் பற்றிக் கொள்ளும் என்று பலர் அஞ்சுகின்றனர். அந்த நோயரை விட நெஞ்சம் தீயரான இந்த வஞ்சகப் பாவிகள் மிகவும் அஞ்சத் தக்கவர். குட்ட நோயர் சேர்க்கையால் உடல் மட்டும் கெடும்; கெட்ட தீயர் தொடர்பால் உள்ளம் கெட்டு உணர்வு பாழாய் உயிர் நாசமாம். ஆகவே அந்த நீசத் தொடர்பு எவ்வளவு அழிதுயரம்! எத்தனை பழிகேடுகள்! என்பது இங்கே எளிது தெளிவாம்.

*தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற*
*தீயார்சொற் கேட்ப துவும்தீதே---தீயார்*
*குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு*
*இணங்கி யிருப்பதுவும் தீது.* (மூதுரை, 9)

தீயாரைக் காணவே கூடாது என்று ஒள்வையார் இவ்வாறு கூறி யிருத்தலால் அவரோடு கூடிவாழலாமா? வாழ்ந்தால் அவ் வாழ்வு எவ்வளவு பாழாம்! என்பதை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். இழி தொடர்பு கொடிய பழிகேடேயாம்.

*ஆயிரம் சொன்னாலும் அறியாத வஞ்சநெஞ்சப்*
*பேயரொடு கூடின் பிழைகாண்.* (தாயுமானவர்)

தீயாரோடு சேராதே எனத் தாயுமானவர் இவ்வாறு கூறியுள்ளார். மனமே சான்ருய் ஒழுகி வருகிற சான்ருேர் இனத்தோடு சேர்ந்திருந்தால் ஆன்ற மதிப்பும் அதிசய இன்பங்களும் உளவாம். மன நலமுடையாரை மருவின் மகிமையாம்.

மனத்தின் போக்கின் படியே மனிதன் ஆக்கப் பட்டு வருகிறுன். நல்ல நினைவுகளோடு பழகி வந்தால் அந்த மனித இனம் நலமாய் மேன்மை அடைந்து வருகிறது; தீய எண்ணங்கள் தோயின் கீழ்மையாய்த் தாழ்ந்து போகிறது. வெளியே உயர்ந்து திகழ்வதும், இழிந்து கழிவதும் உள்ளத்தின் இயல்பின் வழியே உளவாகின்றன. இனியநினைவால் இன்பநலங்கள் விளைகின்றன.

"Our thoughts are like to tiny seeds
That soon must blossom into deeds
Fragrant flowers or noxious weeds." [Anderson]

"நமது எண்ணங்கள் சிறிய விதைகள் போல் உள்ளன; விரைவில் செயல்களாய் மலர் கின்றன; அவற்றின் இயல்புக்குத் தக்கவாறு இனிய நறு மலர்களாகவும் கொடிய களைகளாகவும் வெளியே தோன்றுகின்றன" என்னும் இந்தஆங்கிலக்கவி ஈங்கு ஊன்றிஉணரவுரியது.மனிதனதுமூலநிலைசாலச்சிந்திக்கத்தக்கது.

எண்ணம் ஆகிய வித்திலிருந்தே மனிதன் முளைத்துக் கிளைத்துத் தழைத்து வருகிறுன். அதன் தன்மை அளவே அவனிடம் நன்மை தீமைகள் தெரிய நேர்கின்றன. மன நலமுடைய மேலோர் வாழுகின்ற நாடு மேலான சுவர்க்கமாய் மேன்மை

மிகுந்து விளங்கும். அவரை ஆளுகின்ற வேந்தனும் சிறந்த நீதி மானாய் உயர்ந்து நிறைந்த புகழோடு நிலைத்து விளங்குவான்.

பிசிராந்தையார் என்பவர் பெரிய புலவர்; அரிய பல குண நலங்கள் அமைந்தவர். பாண்டிய நாட்டிலே பிசிர் என்னும் ஊரில் இருந்தவர். மூவேந்தரும் இப் பாவேந்தர் பால் ஆர்வம் மீதூர்ந்து வந்தனர். அவருள் சோழ மன்னன் இவர் பால் ஆழமான அன்பு பூண்டு நின்றான். "பிசிரோன் என் உயிரோன்" என அப் பேரரசன் யாரிடமும் கூறுவது வழக்கம். நேரில் காணுதிருந்தும் நெஞ்சில் பேரன்பு பேணி யிருந்தான். முடிவில் ஒரு முறை அவனை இவர் காணச் சென்றார். அப்பொழுது இவருக்கு வயது எண்பது. மிகவும் முதியவர் ஆதலால் நரைத்த தலையரா யிருப்பர் என்று பலரும் கருதி யிருந்தனர். யாதொரு நரையுமின்றி மூப்பு நிலையும் தெரியாமல் வாலிபப் பொலிவோடு இவர் விளங்கி யிருந்ததைக் கண்டதும் அரசன் முதல் யாவரும் வியந்தனர். கிழமை நீங்கியுள்ள வளமையைச் சிலர் கிழமை யோடு நேரே கேட்டனர். அதற்கு இவர் உடனே பதில் கூறினார். புலவர் ஆதலால் பாட்டாலேயே விடை பகர்ந்தனர். சுவையான அக் கவி அரிய பல பொருள்களை மருவியது அயலே வருகிறது.

"யாண்டு பல வாக நரையில வாகுதல்
யாங்காகியர்? என வினவுதிர் ஆயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை
ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே." (பிசிராந்தையார்)

வயது அதிகம் ஆகியும் நரை யில்லாமைக்குக் காரணம் என்ன? என்று அவையோர் கேட்ட போது இவர் இவ்வாறு சுவையாகப் பதில் சொல்லி யிருக்கிறார். "எனது மனைவியும் மக்களும் நல்ல குணசாலிகள்; என் இளையரும் ஏவலரும் நான் கருதியபடியே காரியம் செயவார்; யாண்டும் யாதொரு தீதும் நேராமல் வேந்தன் இனிது பாதுகாத்தருளுவன்; உள்ளமே சான்றாய் ஒழுகி வருகிற விழுமிய சான்றோர் பலர் நான் வாழும் ஊரில் உள்ளனர்; ஆதலால் இன்னவாறு நரை திரை மூப்பு இலனாய்

நான் செழுமையோடு இருக்கின்றேன்" என்று புலவர் உரைத்துள்ள இதில் உறைந்துள்ள நயங்கள் ஊன்றி உணரத்தக்கன.

நெஞ்சம் தூயராய் நீதிநெறி தோய்ந்து ஒழுகின் நிறைந்த இன்பங்களும் சிறந்தமேன்மைகளும் நேரே செழித்து உளவாம்.

---

823. மதியுடைய மாந்தர் மகிழ்ந்தினிது வாழ
விதியுடைய நீதி விரித்தே—அதிபதியாய்
வேந்தன் விழைந்து வருகின்றான் அவ்வழியே
ஆந்துணையும் செல்க அமைந்து. (௩)

இ—ள்

நல்ல அறிவுடைய மக்கள் எவ்வழியும் செல்லமாய் உவந்து வாழ வேந்தன் விதிமுறையே நீதி புரிந்து வருகிறான்; அதிபதியான அவனுடைய விதிவழி நடந்து இனிது வாழுக என்பதாம்.

தலைமையான நிலைமையில் அரசன் நெறியே வந்துள்ளமையால் உயர்ந்த நீதி முறைகளை உணர்ந்து உயிரினங்களை நேரே பேண நேர்ந்தான். தன் செங்கோலின் கீழ் வாழுகின்றமக்கள் எவ்வழியும் செவ்வியராய் அமர்ந்து இனிது வாழ்ந்து வரச் செய்கின்றவனே சிறந்த வேந்தனாய் நன்கு விளங்கி வருகிறான்.

மனித சமுதாயம் யாண்டும் சுகமாய் வாழ்ந்து வரும்படி ஓர்ந்து செய்துள்ள திட்டமே சட்டம் என வந்தது. சட்டம் என்னும் சொல் நியாய வரம்பு, நெறிமுறை, நீதி ஒழுங்கு, திருந்திய நேர்மை, தேர்ந்த செப்பம் எனப் பல பொருள்களை உணர்த்தி வரும். செம்மையாய் வாழச் செய்வதே நீதியாம்.

குடி சனங்கள் அமைதியாகவும் சேமமாகவும் எங்கே வாழ்ந்து வருகிறார்களோ அங்கே தான் உயர்ந்த இராச நீதி உலாவி வருகிறது. அந்த ஆட்சிதான் யாண்டும் மாட்சிமையாம்.

"The good of the people is the chief law." (Cicero)

"சனங்களுடைய நன்மைதான் சிறந்த நீதியாயுள்ளது" என்னும் இது ஈண்டு நினைந்து கொள்ள வுரியது. பொதுமக்கள் எல்லாவழிகளிலும் சிறந்து நல்லவராய் இனிது வாழச் செய்யின் அதுதான் அரசனது புனிதமான உயர்ந்த நீதி ஆட்சியாம்.

சிறந்த செல்வச் செழிப்பு மாத்திரம் இருந்தால் போதாது; நல்ல குணநலங்களும் மக்களிடம் மருவியிருக்க வேண்டும்; அவை அமைந்த பொழுதுதான் அரிய பல நலங்கள் அங்கே பெருகி வரும். சால்புடைமையால் சகல வுடைமைகளும் சார்கின்றன.

கலம் சுரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம் சுரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம் சுரக்கும்; பெறுதற்கு அரியதம்
குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம். (1)

கூற்றம் இல்லைஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையின் செம்மையால்;
ஆற்றல் நல்லறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே. (இராமாயணம்)

கோசல நாட்டு மக்களுடைய குணநலங்களையும் செல்வ நிலைகளையும் வாழ்க்கை வகைகளையும் இவை சுவையாக உணர்த்தியுள்ளன. பொருள் நயங்களைக் கூர்ந்து கவனியுங்கள். ஒரு தேசமும் அதில் வாழ்ந்து வருகிற மாந்தரும் எவ்வாறு செவ்வையா யிருக்க வேண்டும் என்பதை இங்கே ஓர்ந்து உவந்து கொள்ளுகிறோம். நிலம் முதலியன பல வளங்கள் சுரந்து தந்துள்ளன; சனங்களுடைய உள்ளம் உரை செயல்கள் எல்லாம் இனிய தரும நீர்மைகள் மருவி வரப் புனித போகங்களை அவர் அனுபவித்துள்ளனர். குடிகள் இவ்வாறு இனிய சுகவாசிகளா யிருப்பது கோனின் உயர்ந்த நீதிமுறையை உணர்த்தி நின்றது.

உயிர்களின் சேமத்தையே நாடி நேம நியமமாய் அரசன் ஒழுகி வருதலால் தெய்வமும் அவனுக்குத் துணை செய்து வருகிறது. தருமவானிடம் தேவதைகள் உரிமையாய் உதவுகின்றன.

முசுகுந்த மன்னனது வீரம் கொடை நீதிகளை வியந்து இந்திரன் ஐந்து மந்திர தேவதைகளை அவனுக்கு உரிமையோடு உதவியிருந்தான். அவை புகார் என்னும் நகரில் மேவி நின்றன. அந்நாட்டில் தீயோர்கள் தோன்றினும், தீது நேரினும் அவை வெளியே தெளிவாக் காட்டி விடும். அதிசயமான அந்த நிலைகளுள் மூன்றை இங்கே முறையே காண வருகிறோம்.

சேம நிலையம்.

வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த

கண்எழுத்துப் படுத்த எண்ணுப் பலபொதி
கடைமுக வாயிலும் கருந்தாழ்க் காவலும்
உடையோர் காவலும் ஒரீஇய வாகிக்
கட்போர் உளர்எனின் கடுப்பத் தலைஏற்றிக்
கொட்பின் அல்லது கொடுத்தல் ஈயாது
உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்;

பூத சதுக்கம்.

தவமறைந்து ஒழுகும் தன்மையி லாளர்;
அவமறைந்து ஒழுகும் அலவைப் பெண்டிர்;
அறைபோகு அமைச்சர்; பிறர்மனை நயப்போர்;
பொய்க்கரி யாளர்; புறங்கூற் றாளர்; என்
கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர் எனக்
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்;

பாவை மன்றம்.

அரசுகோல் கோடினும் அறம்கூறு அவையத்து
உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்
நாவொடு நவிலாது நவைநீர் உகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமும். (சிலப்பதிகாரம், 5)

இந்த மூன்று மன்றங்களையும் ஊன்றி நோக்கி நாம் உவப்பும் வியப்பும் உறுகின்றோம். அரிய பல பண்டங்கள் அந்நகருள் எங்கும் காவலின்றிப் பொதிகளாய்க் குவிந்து கிடக்கும்; அயலிடங்களிலிருந்து புதியராய் அங்கு வருபவர் களவு செய்ய நேரின் களவாடிய பொருளைத் தலையில் சுமத்தி ஊரைச் சுற்றிச் சுற்றிவர அவரை ஒரு தெய்வம் எற்றி அடிக்கும். பொய்க்கரி புகல்வோர், புறங்கூறுவோர், பிறர் மனைவியரை விரும்புவோர், வஞ்சம் புரிவோர் முதலிய நெறிகேடரைப் பாசத்தால் பிணித்து வந்து நடுவீதியில் நின்று ஊரெல்லாம் கேட்க நெடிய ஓலமிட்டுப் பெரிய ஒரு பூதம் புடைத்துக் கொல்லும். அரசன் நீதி முறை தவறினும் அவையோர் நவை கூற நேரினும் கண்ணீர் சொரிந்து பெண்ணீர்மையோடு ஒரு பாவை அழுது காட்டும்.

இத்தகைய பாதுகாப்புகள் அந்த மன்னன் ஆட்சியில் மருவி நின்றன. தன் நாட்டில் தீமை யாதும் புகாமல் நீக்கி

மக்கள்யாவரும் இன்புற்றுவாழ அன்பு கூர்ந்து ஆட்சி புரிவதே அரசனது மாட்சியாம். அந்த வேந்தனுடைய நீதி முறைகளை ஓர்ந்து யாண்டும் நல்ல நீர்மைகள் தோய்ந்து சீர்மை யோடு மாந்தர் வாழ்ந்து வரவேண்டும். சுக வாழ்வே சுவர்க்க வாழ்வு என்பது முதுமொழி. இனிமையான அவ் வாழ்வு புனிதமான எண்ணங்களால் பொலிந்து போக நலங்கள் மலிந்து வருகிறது.

---

824. பெற்ற மகனே எனினும் பிழைபுரியின்
குற்றமறத் தண்டித்துக் கோமுறையை—எற்றும்
வழுமாமல் செய்துவரும் மன்னவனைத் தெய்வம்
நழுவாமல் காத்துவரும் நன்கு. (௪)

இ—ள்

தான் பெற்ற அருமை மகனே ஆனாலும் பிழை செய்தால் அவனை உடனே தண்டித்து அடக்கி அரசுமுறைபுரியும் விழுமிய வேந்தனைத் தெய்வம் எவ்வழியும் செவ்வையாக் காத்து வரும்; அந்த ஆட்சி அதிசய மாட்சியாய் உயர்ந்து விளங்கும் என்க.

நாடு காக்க நேர்ந்தவன் யாண்டும் நடுவு நிலைமை யோடு நீதி புரிய வேண்டும் என்பதை இது ஈண்டு உணர்த்தி யுள்ளது. உயர்ந்த மேன்மைகள் யாவும் சிறந்த செயல்களால் விளைந்து வருகின்றன. ஒருவனுடையதன்மையைக்கொண்டேநன்மைகள் அளக்கப் படுகின்றன. தனது கருமம் தருமநீதிகள் தழுவிவரின் அவன் எவனு யிருந்தாலும் உலகம் அவனை உயர் குல வேந்தனு உவந்து புகழ்ந்து யாண்டும் வியந்து கொண்டாடுகின்றது.

ககந்தன் என்பவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசு புரிந்தான். அரசுக்கு இவன் நேரான வாரிசு அல்லன்; ஆயினும் நாட்டை மிகவும் நீதிமுறையோடு பாதுகாத்து வந்தான். இராச தானியான அந்த நகரம் இவனுடைய பெயர் உரிமை யோடு காகந்தி என வழங்க நேர்ந்தது. இவனது ஆட்சித் திறம் மாட்சி மிகுந்து நின்றது. குற்றம் குறைகள் யாண்டும் யாரிடமும் நேராதவாறு ஓர்ந்து இவன் ஆண்டு வந்தமையால் உயர் புகழ் நீண்டு வந்தது. அவ்வாறு வருங்கால் மருதி என்னும் ஒரு தருண மங்கையை இவனுடைய மகன் காதலித்தான்; சமையம் பார்த்

திருந்து தனியே அவளைச் சந்தித்துக் கலவிக்கு அழைத்தான். அவள் கலங்கி வருந்தி அயலே ஒதுங்கி விரைந்து பூத சதுக்கம் புகுந்து தெய்வ சந்நிதியில் நின்று அழுது முறையிட்டாள். நீதி முறை செய்கிற அந்தத் தேவதை நேரே தோன்றி "நீ நல்ல பதிவிரதைதான்; ஆனாலும் உன்னிடம் சில குறைகள் உள்ளன; நாடகம், கூத்து முதலிய போலிக் காட்சிகளைக் காண விழைந்தமையால் உயர்ந்த உத்தம பத்தினிகளுக்கு உரிய சிறந்த மகிமை குறைந்து போயது; ஆதலால் நான் யாதும் செய்ய முடியாது; காம இச்சையால் உன்பால் பிழை செய்தவனை இவ்வூர் அரசன் தண்டிப்பான்; நீ நெஞ்சம் திருந்தி நேர்மையாய் வாழுக" எனக் கூறி விடுத்தது. அந்தத் தெய்வம் கூறியபடியே ககந்தன் நீதி விசாரணை செய்தான். தீது புரிந்தமை தெரிந்தது; உடனே தன் மகனுக்கு மரணதண்டனை விதித்தான். பெண்ணின் கற்பு உயிரினும் சிறந்தது; அதனை நீ அழிக்க முயன்றாய்; ஆதலால் நீ அழிந்து ஒழிய வேண்டும்" என்று தீர்ப்புக் கூறி அவனைக் கொன்று தொலைத்தான். அயலே வருவது இங்கு அறிய வுரியது.

பார்ப்பனி மருதியைப் பாங்கோர் இன்மையின்
யாப்பறை என்றே எண்ணினன் ஆகிக்
காவிரி வாயிலில் ககந்தன் சிறுவன்
நீவா என்ன நேரிழை கலங்கி
மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர்;
புக்கேன் பிறன்உளம்; புரிநூல் மார்பன்
முத்தீப் பேணும் முறைஎனக்கு இல்என
மாதுயர் எவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றம் தானிலேன்
கண்டோர் நெஞ்சில் காப்பெளி தாயினேன்
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யான்அறி கில்லேன்
பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வம் நீஎனச் சேயிழை அரற்றலும்
மாபெரும் பூதம் தோன்றி மடக்கொடி
நீகேள் என்றே நேரிழைக்கு உரைக்கும்:
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேருய்
பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை ஆகலின்
மடவரல் ஏவ மழையும் பெய்யாது;
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியும் இல்லை;
யாங்கவை ஒழிகுவை யாயின் ஆயிழை
ஓங்கிரு வானத்து மழையும்நின் மொழியது
பெட்டாங்கு ஒழுகும் பெண்டிரைப் போலக்
கட்டா துன்னைஎன் கடுந்தொழிற் பாசம்;
மன்முறை எழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை அல்லது என்முறை இல்லை;
ஈங்கெழு நாளில் இளங்கொடி நின்பால்
வாங்கா நெஞ்சின் மயரியை வாளால்
ககந்தன் கேட்டுக் கடிதலும் உண்டுஎன
இகந்த பூதம் எடுத்துரை செய்தது." (மணிமேகலை, 22)

அங்கே நடந்த நிகழ்ச்சிகளை இது வரைந்து காட்டியுள்ளது. பொருள் நிலைகளைக் கண்ணூன்றிக் காண்பவர் அரிய பல உண்மைகளை உணர்ந்து கொள்வர். மருதி என்னும் பார்ப்பன மங்கையை மாரதன் காதலித்து அழைத்ததும், அவள் மன்றம் புகுந்து பூதத்தை நோக்கி முறையிட்டதும், அந்தக் காவல் தெய்வம் தோன்றி யாவும் தெளிவாக விளக்கித் "தீது செய்தவனை அரசன் தண்டிப்பான், நீ போ!" என்று அவளை தேற்றி விடுத்ததும் இதனால் தெரியவந்தன. தெய்வம் குறித்தபடியே ககந்தன் செய்து முடித்தான். குற்றவாளி என்று கண்டவுடனே தனது மகன் என்றும் பாராமல் அவனை மன்னவன் கொன்று ஒழித்தான். இது எவ்வளவு அதிசயம்! எத்துணை நீதி முறை! உய்த்துணர வேண்டும். சிறந்த ஆட்சிநிலைக்கு உயர்ந்த சாட்சியாய் நின்றான்.

யாண்டும் யாதும் அநியாயங்கள் புகாமல் எவ்வழியும் நியாயங்கள் நிலவிவர ஆண்டு வருவதே அரச தருமம் என்பது ஈண்டு அறியவந்தது. பெற்றமகனே ஆனாலும் பிழை செய்தால் அவனை உடன கடிந்து நீக்கி மாந்தரை மாண்போடு பேணுவதே

வேந்தன் கடமையாம் என்பதை இவன் விளக்கி நின்ருன். அரிய நீதியை உரிமையோடு செய்து வந்தான் ஆதலால் இவனுடைய புகழ் உலகம் எங்கும் ஒளி பெற்று நின்றது. இவன் பெயரை மருவி ஊரும் நாடும் உரையாட நேர்ந்தன. ககந்தன் காத்தலின் காகந்தி எனக் காவிரிப்பதி ஒரு காரணப் பெயரைப் பூண்டு நின்றது. நீதி நெறியால் உலக சோதியாய் உலாவ நேர்ந்தான்.

ஆட்சி முறையில் இவன் புரிந்த நீதி அரச குலத்துக்கு ஒரு மாட்சியாய் வந்தது. மாசு களைந்து தேசத்தை ஆள்பவன் ஈசன் அருள் அடைந்து தேசு மிகப் பெறுகின்ருன். அந்த அரிய பேற்றை இவன் உரிமையாப் பெற்று ஒளிமிகுந்து விளங்கினன்.

---

825. அன்றரசன் கேட்பான் அயலமர்ந்து தெய்வமோ
நின்றுதான் கேட்குமெனும் நீள்மொழியை—ஒன்றி
உணரின் அரசன் உறுதி நிலையை
உணரும் உலகம் உவந்து. (ரு)

இ—ள்

அரசன் அன்று கேட்பான்; தெய்வம் நின்று கேட்கும் என்னும் நெடிய முதுமொழியை உலகம் ஓர்ந்து உணரின் அவனது மகிமை மாண்புகளைத் தேர்ந்து தெளிந்து கொள்ளும் என்க.

ஒரு தேசத்தை ஆளுகின்றவன் அரசன் என அமைந்தான். அகில வுலகங்களையும் அளவிடலரிய அண்ட கோடிகளையும் என்றும் நிலையாய் ஆண்டு வருபவன் ஆண்டவன் என நீண்ட பெயரோடு நிலவி நின்ருன். உயிரினங்கள் இனிது வாழும்படி பாதுகாத்து ஆதரவு புரிவதால் தெய்வத்தோடு அரசன் நேர் என நேர்ந்தான். சீவாதாரங்கள் தெய்வீகங்களாய் நிலவின.

சூரியன் சந்திரன் என்னும் இரு பேர் ஒளிகளும் அந்த இறைவனுக்கு விழிகளாய் அமைந்தன; இந்த இறைவனுக்கு அவை சக்கரமும் குடையுமாய் முறையே நேர்ந்தன. பெரிய மனித சமுதாயத்தை இனிது ஆளுகின்ற தேசத் தலைவனது பெருமை தெரிய உரிமையான சின்னங்கள் மருவி வந்தன.

படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்

தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய. (தொல்காப்பியம்)

மன்னனுக்கு உரிய மரியாதை அடையாளங்கள் இன்னவாறு இசைந்து நின்றன. இந்த இராச சின்னங்கள் யாவும் காரணங்களோடு அமைந்துள்ளன. சீவர்களுக்கு இதமாய் வெண்ணிலவை விரித்துச் சந்திரன் தண்ணளிசெய்தல்போல் தன் நாட்டில் வாழும் குடிகளுக்கு நலமாய் அருள் சுரந்து அரசன் யாண்டும் ஆதரவு புரிபவன் என்பதைக் குடை விளக்கி நின்றது.

"உயர்ந்து ஓங்கு உச்சி உவாமதி போல
நிவந்து ஓங்கு வெண்குடை மண்ணகம்நிழற்செய
வேலும் கோலும் அருட்கண் விழிக்க
தீதின்று உருள்கநீ ஏந்திய திகிரி
நினக்கென வரைந்த ஆண்டுகள் எல்லாம்
மனக்கினி தாக வாழிய வேந்தே!" (மணிமேகலை, 22)

நெடுமுடிக்கிள்ளி என்னும் மன்னனை நோக்கி முனிவர் இன்னவாறு துதித்துள்ளார். வேந்தே நின் குடை பூரணசந்திரன் போல் உலகம் மகிழ நிழல் செய்க என அவர் வாழ்த்தியிருப்பது குடையின் இனிய இயல்பை உணர்த்தி நின்றது.

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச் சென்னிகுளிர்வெண்குடைபோன்றுஇவ்
அங்கண் உலகு அளித்தலான். (சிலப்பதிகாரம்)

சோழ மன்னன் குடைபோல் உலகுக்கு இதம் செய்தலால் திங்களை யாம் போற்றுதும் என இளங்கோவடிகள் இங்ஙனம் பாடியிருக்கிறார். அரசின் தண்ணளி அறிய வந்தது.

உலகுடன் நிழற்றிய தொலையா வெண்குடைக்
கடல்போல் தானைக் கலிமா வழுதி. (அகம், 204)

நின்குடை வெயில்மறைக் கொண்டன்றே வருந்திய
குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ! (புறம், 35)

வெயிலழல் கவியாது வியலக வரைப்பின்
உயிரழல் கவிக்கும் உயர்ச்சித் தாகிப்
பூந்தார் அணிந்த ஏந்தல் வெண்குடை. (பெருங்கதை 1-42)

அரசர் குடை வெயிலுக்காக அன்று; உயிர்கள் துயர் உருவகை காத்தருளுவதற்கு அறிகுறியாகவே அமைந்தது என்ப

தை இங்கே அறிந்து கொள்கிறோம். அளிபுரிந்து ஆளும் அரசு ஒளி மிகுந்து வரும் ஆதலால் அந்நிலை தெரிய விண்மதி நேர் வந்தது. மண்ணை மதியோடு ஆள்பவன் விண்மதியாய் நின்றான்.

மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும்
அண்ணல்தன் குடைமதி அமையும் ஆதலான்
விண்ணிடை மதியினை மிகையி தென்னலே.
(இராமாயணம்)

தசரதனது வெண் கொற்றக் குடை மண்ணுலகில் துயர இருளை நீக்கி எவ்வழியும் உயிர்களை இனிது பேணி வருகிறது; ஆகவே விண்ணிலுள்ள வெண்மதி வீணே வேண்டியதில்லை என நயமாய் இது குறித்துள்ள அழகைக் கூர்ந்து நோக்குக.

வெண்கொடை, செங்கோல், அரியணை முதலிய அரச மாட்சிகள் உயிர்களை அவன் நீதியோடு பாதுகாத்து வரும் ஆட்சி நிலைகளைக் காட்சிப் படுத்தியுள்ளன. பொல்லாத புலைகளில் புகாமல் நல்ல வழிகளிலேயே பழகி மாந்தர் யாண்டும் சுகமாய் வாழ்ந்து வர நயமா ஆண்டு வருபவனே உயர் வேந்தன் ஆகின்றான். மன்னுயிர் புரப்பதே மன்னன் சிறப்பாம்.

நீதிமுறையான பரிபாலனத்துக்குச் சரியான சான்று நாட்டில் யாதொரு தீதும் நேராமல் செய்வதேயாம். எங்கே குற்றம் தோன்றினும் விரைந்து கண்டு அதனை உடனே கடிந்து ஒழிப்பது அரச தருமம் ஆதலால் அரசன் அன்று கேட்பான் என்னும் முதுமொழியும் வந்தது. தெய்வம் அவ்வாறு தண்டியாது; குற்றவாளி பழியும் பாவமும் சுமந்தபின் இழி துயரிலும் அழி நரகிலும் தள்ளி அவனை வருத்தித் திருத்தும்; ஆகவே தெய்வம் நின்று கேட்கும் என நேர்ந்தது. அரச நீதியின் அரிய தண்டனையும், தெய்வநீதியின் பெரிய தண்டனையும் இங்கு ஒருங்கே தெரிய வந்தன. அரச தண்டனைக்குத் தப்பினும் தெய்வ தண்டனைக்குத் தப்ப முடியாது; எப்படியும் தப்பாமல் அது தண்டித்தே விடும்.

"God's mill grinds slow but sure." [God]

கடவுளின் யந்திரம் மெதுவாய் அரைக்கிறது; ஆனால் தப்பாமல் அது தூள் ஆக்கி விடும் என்னும் இது ஈண்டு அறியத்

தக்கது. மில் என்னும் ஆங்கிலமொழி திரிகையை நேரே குறிக்குமாயினும் தரும சக்கரத்தை மருமமாய் அது உணர்த்தி நின்றது. செம்மையான நீதி நன்மையான அரசாம்.

தீமை யாதும் படியாமல் எவ்வழியும் நன்மையே படிந்து சீவர்கள் சுகமாய் வாழ வேண்டும் என்றே ஆளும் அதிகாரத்தைத் தந்து அரசனைக் கடவுள் ஈண்டு உரிமையோடு அனுப்பியிருக்கிறார்; தனது நிலைமையை உணர்ந்து நெறிமுறையே நீர்மையோடு அவன் நீதி புரிய வேண்டும்; அவனது தலைமையைத் தெளிந்து மாந்தர் சாந்தராய் நெறியோடு வாழ்ந்து வரவேண்டும்

———

826. மனித சமுதாயம் மாண்புபெற ஆய்ந்து
புனித நிலையில் புரிந்த—மனுவின்
நெறிமுறையே நீதியென நேர்ந்துளது வேந்தன்
அறிகரியாய் நின்றான் அதற்கு. (சு)

இ—ள்

மனித சமுதாயம் மகிமை மாண்புகளோடு இனிது வாழ்ந்து புனித நிலையில் உயரும்படி மனு புரிந்த முறையே நீதிநெறி என நேர்ந்துள்ளது; நேரே உரிமையாய் வாய்ந்த அரசன் அதற்கு ஆன்ற சான்றாய் யாண்டும் அமைந்து நிற்கின்றான் என்க.

தரும நீதிகள் தழுவி மாந்தர் வழிமுறையே வாழ்ந்து வர வழிசெய்து அருளவே வேந்தன் விதிமுறையாய் நேர்ந்து வந்துள்ளான். பிறர் எவரையும் நேர்மையா நடத்த வுரியவன் ஆதலால் அரசன் எவ்வழியும் சீர்மையும் செம்மையுமாய் இருக்க வேண்டிய சிறப்போடு சேர்ந்து நின்றான் குற்றம் இன்றிக் குணங்கள் நிறைந்த அளவுதான் காரியங்களில் வெற்றிகண்டு சீரிய கொற்றவனாய் உலகில் அவன் குலாவி நிற்க நேர்ந்தான்.

நாட்டுக்குத் தான் விதித்த நீதியின்படி தன்னை முன்னதாக் காட்டி ஒழுகுவோனே மன்னர் மன்னவனாய் மகிமை பெற்று வருகின்றான். சத்தியம் தோய்ந்தவன் உத்தமனாகிறான்.

குலசேகர பாண்டியன் மதுரையிலிருந்து அரசு புரிந்தான். கோற்கை நகரமும் பக்கக் கிளையாயிருந்தது இவன் நல்ல நீதிமான். நெறிமுறையே குடிகளைப் பேணி வந்தான். தன் ஆட்

சியின் நிலைமையை நேரே அறியச் சில சமையங்களில் மாறு வேடம் பூண்டு இரவில் நகர சோதனை செய்வது இக் கோமகனது வழக்கம். அவ்வாறு செய்து வருங்கால் ஒருநாள் யாமத்தில் ஒரு வீட்டில் ஓர் இளமங்கை மறுகி மொழிந்த உரைகள் கேட்டன. அம் மாதின் பேர் மாலதி; கணவன் கீரந்தை என்னும் பேரினன். அவன் காசி யாத்திரை போக விரும்பினன்; தான் தனியே இருக்க நேர்ந்ததை நினைந்து மனைவி வருந்தவே அவன் இனிது தேற்றினன்: "நம் மன்னர் பெருமான் பாதுகாப்பில் யாதொரு தீதும் நேராது; நீ சும்மா தைரியமாயிரு!" என்று ஆறுதல் கூறிப் போனன். அவ்வுரையைக் கேட்டு வேந்தன் அரண்மனை புகுந்தான். மறுநாள் முதல் அம் மனையைப் புனிதமாக் கவனித்தான்; முதிய கிழவிகளை இடையிடையே பாதுகாப்பிற்கு அனுப்பி அதி விநயமாய் ஆதரித்து வந்தான்; கங்கையாடப் போன கணவன் மீண்டு வந்து சேர்ந்தான்; அவன் வந்தது வேந்தனுக்குத் தெரியாது; அன்று இரவும் நகர சோதனைக்குச் சென்றன்; அவ் வீட்டு அருகே செல்லுங்கால் உள்ளே ஓர் ஆண்குரல் கேட்டது. நீட்டிய வாளோடு விரைந்து சென்று அக் கதவைத் தட்டினன்; "யார் அது?" என்று உள்ளிருந்து ஓர் உரை வந்தது. உரிய கொழுநனே வந்துள்ளான் என்று தெரிந்தது; தெரியவே அரசன் உள்ளம் வருந்தினன். தான் கதவைத் தட்டியது அவனுக்கு விபரீதமான சந்தேகத்தை விளைத்து விடுமே! என்று மறுகி நொந்த மன்னன் விரைந்து அந்தத் தெருவிலிருந்த கதவுகளை யெல்லாம் தட்டி விட்டுத் தாவிப் போனன். மறுநாள் அத் தெருவினர் யாவரும் இரவு நடந்ததைக் குறித்து அரசனிடம் முறையிட வந்தனர். அரசன் அரியணையில் அமர்ந்தான்; மந்திரிகள் வந்து நின்றனர்; நீதி விசாரணை புரிந்தான்: "இரவு கரவாய்ப் போய் ஒரு இள மங்கையிருந்த வீட்டின் கதவைத் தட்டின கள்வனைக் கண்டு பிடித்தால் என்ன தண்டனை கொடுக்கலாம்?" என்று மன்னன் கேட்டான். "அந்தக் கையைத் துண்டிக்க வேண்டும் மகாராஜா!" என்று அத்தெருவிலிருந்து வந்த ஒருவன் துணிந்து சொன்னன். சொல்லவே உடைவாளை உடனே உருவி எடுத்து "அந்தத் தீமையைச் செய்தது இந்தக் கைதான்; இதோ துண்டிக்கப் படுகிறது" என்று துண்டாக வெட்டி வீழ்த்தினன். கை தரையில் துள்ளி

வீழ்ந்து துடித்தது. எல்லாரும் ஐயகோ! என்று அலறி அழுதார். பின்பு நடந்த வரலாறுகளை யெல்லாம் நன்கு தெரிந்து நாடும் நகரமும் வருந்தி நொந்தன. என்ன நீதி! என்ன நெறி! என்ன தருமம்! என மாதவரும் மறுபுலங்களின் மன்னவரும் வியந்து புகழ்ந்தனர். இழந்து போன கை தெய்வத்திருவருளால் பொன் கையாய் வளர்ந்து விளங்கியது. அதனால் பொற்கைப் பாண்டியன் எனப் புகழ் பெற்று நின்றான். இந்த அதிசய சரித்திரத்தை மதுரையின் அதி தேவதை கண்ணகியிடம் துதிசெய்து சொல்லி அரசைப் புகழ்ந்துள்ளது. அயலே வருவது காண்க.

"உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் புடைத்தனன் ஓர்நாள்
அரசு வேலி அல்லது யாவதும்
புரைதீர் வேலி இல்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீர் அவ்வழி
இன்றவ் வேலி காவாதோ? எனச்
செவிச்சூட் டாணியிற் புகையழல் பொத்தி
நெஞ்சம் சுடுதலின் அஞ்சி நடுக்குற்று
வச்சிரத் தடக்கை அமரர் கோமான்
உச்சிப் பொன்முடி ஒளிவளை உடைத்தகை
குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்." (சிலப்பதிகாரம்23)

கோமுறை கோடாக் கொற்றவர் ஏறே முறை யேயோ
தர்மரை யாள்வாழ் தண்கடி மார்பா முறை யேயோ
மாமதி வாழ்ஞேன் வழிவரு மைந்தா முறையேயோ
தீமைசெய் தாய்போல்செங்கைகுறைத்தாய்முறையேயோ?
(திருவிளையாடல்)

எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும் காணார்
எனச்செய்யார் மாணா வினை. (பழமொழி 102)

ஆதிச் செழியற்கு ஒருகைம் மலர் பொன்
அடைய. (தக்கயாகப்பரணி)

நாடுவிளங்கு ஒண்புகழ் நடுதல் வேண்டித்தன்
ஆடுமழைத் தடக்கை அறுத்துமுறை செய்த
பொற்கை நறுந்தார்ப் புனைதார்ப் பாண்டியன். (குணநாற்பது)

கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தால்
எய்யும் சிலைக்கை இரங்கேசா. (இரங்கேச வெண்பா)

மையிலாள் கடைதொட்டு உயர்கரம் குறைத்த
மாசறு தேசுடை நீதி ஐயனே! (திருவாலவாய்)

தன்மனமே சான்ருகத் தான்ஒழுகின் மேலான
பொன்மகன் ஆகிப் பொலிகுவான்----மன்மகனுய்
ஆண்டுவந்த பாண்டியன்முன் அவ்வா றொழுகியதால்
பூண்டுவந்தான் கையெல்லாம் பொன். (இதயஒலி)

இம்மன்னனது நீதி முறையை இவ்வாறு பலரும் புகழ்ந்துள்ளனர். உயர்ந்த இராச தருமத்திற்கு உலகறிந்த சான்ருய் இவன் ஒளி செய்து நின்றமையால் அறிகரி என நேர்ந்தான். தன் உள்ளமே சாட்சியாய் நேர்மையோடு ஒழுகி நீதி புரிந்து வந்த இவனது அரிய சீர்த்தி யாண்டும் நெடிது நிலவி நீண்டது.

கம்பர் ஒரு நாள் தனது அருமை மனைவியோடு உல்லாசமாய் உரையாடிக் கொண்டிருந்தார். வசந்த காலம்; இரவு நேரம்; நிலவொளி எங்கும் பரந்து நின்றது; தென்றலாகிய இளங்காற்று மெல்ல வீசியது; அதனுல் கதவு இதமாய்அசைந்து திறந்தது; யாரோ வந்துள்ளார் என்று விரைந்து எழுந்து வந்து வெளியே பார்த்தார்; யாரும் காணேம்; காற்றின் வேலை என்று தெரிந்து கொண்டார். தென்றலை நோக்கி ஒரு பாட்டுப் பாடினுர். சுவையான அந்த அழகிய கவி அயலே வருகிறது.

கொற்கையான் மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையான் ஆனகதை போதாதோ---நற்கமல
மன்றலை வாரி மணிவா சலையசைக்கத்
தென்றலே ஏன்வந்தாய் செப்பு? (கம்பர்)

தென்னுட்டு மன்னன் பொன்னுட்டிய கையை எடுத்துக் காட்டித் தென்றலோடு கவிஞர் இவ்வாறு விநயமாய் வினவியிருக்கிருர். பாண்டிய அரசன் செய்துள்ள நீதி உலக வுள்ளங்களை உருக்கியுள்ளது. நெஞ்சமே சான்ருய் நெறிமுறையில் ஒழுகி வருவோன் நிலையான மகிமையை நேரே பெறுகின்ருன்.

உண்மை வழியில் ஒழுகுவோன் உலக ஒளியாகின்ருன்.

---

827. முறைவேண்டி னார்க்கு முறைசெய்து நெஞ்சின்
குறைவேண்டி னார்க்குக் கொடுத்துப்—பொறையோடு
நின்று குடிகளுக்கு நீதி புரிந்துவரின்
வெற்றி விளைந்து வரும். (எ)

இ—ள்

குடிகளுடையமுறைகளையும் குறைகளையும் பொறையோடு கேட்டு நெறி முறையே அரசன் நீதி புரிந்துவரின் அரிய பல வெற்றிகள் உறுதியாய் அவனுக்கு விளைந்து வரும் என்க.

மனித வாழ்வு பல இடையூறுகளை யுடையது; குறை பாடுகள் நிறைந்தது; வெவ்வேறான நிலையிலுள்ளவர் ஒருங்கே கூடி வாழ்தலால் நாட்டில் மாறுபாடான வழக்குகளும் வேறு பாடான குழப்பங்களும் தோன்றுவது இயல்பு.

பொது மக்களிடையே கலகங்கள் நேர்ந்த பொழுது அவற்றைத் தீர்க்க அரசனை நாடி அவர் வருகின்றனர்; அவ் வாறு வருங்கால் அவர்க்கு விரைந்து காட்சி தந்து முறையீடு களை முறையே பொறுமையோடு கேட்டு நேர்மையாய்த் தீர்த்து நெறி செய்துவரின் அதுவே சீர்மையான நீதி முறையாம்.

முறை வலியோர் வகையாய் வந்தது.

குறை எளியோர் வழியாய் இசைந்தது.

பொருளின் வரவு செலவுகளால் வளர்ந்து வருகிற வழக்கு களின் முறையீடுகளையும், வறுமை காரணமாகக் கருமங்கள் கருதி வருகிற குறை பாடுகளையும் நேரே துறைதோறும் ஆராய்ந்து இதம்புரிந்து தன்நாட்டு மக்கள் எவ்வழியும் சுகமாய் வாழ்ந்துவர வேந்தன் நீதி முறைகளைச் செய்து வருவது நித்திய நியமமாய் நின்றது. மாந்தர் மகிழ்வாழ்வதேவேந்தின்வாழ்வாம்.

"குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி
இடைத்தெரிந்து உணரும் இருள்தீர் காட்சிக்
கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து
உரும்பில் சுற்றமோடு இருந்தோன்." (பெரும்பாண்)

தொண்டைமான் இளந்திரையன் நீதிமுறை புரிந்திருந்த நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. கடலிடையே தோன்றி இருளை நீக்கி ஒளி செய்கின்ற கதிரவன்போல் பருவம் தவருமல் அவையிடையே தோன்றியிருந்து மக்களுடைய மருளை நீக்கித் தெளிவுசெய்து யாண்டும் உவகைஓங்கிவர அம்மன்னன் ஆண்டு வந்துள்ள நீதி முறையை ஈண்டு உணர்ந்து கொள்கிருேம். முறை வேண்டியும் குறை வேண்டியும் வந்தவர் தாம் கருதி வேண்டியதை விரைந்து பெற்று நிறைவோடு மீண்டுள்ளனர். வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி என்றதனுல் அவனது கொடையும் அளியும் செங்கோல் முறையும் முறையே தெரியவந்தன. உரும்பு இல் சுற்றம் என்றது அவனுடைய உறவினங்களின் இனிய குண நீர்மைகளை உணர்த்தி நின்றது. உரும்பு = கொடுமை. எல்லார்க்கும் நல்லவனுய் நின்று குடிகளை நன்கு ஓம்பி வந்தமையால் அவனுடைய புகழ் உலகம் எங்கும் ஓங்கி எவ்வழியும் தலைமையோடு நிலவி நின்றது.

குடிசனங்கள் உவகையாய் வாழ்ந்துவர எவ்வழியும் செவ்வையாய் ஓர்ந்து செய்பவனே உண்மையான வேந்தன் ஆகின்ருன். நீதிமுறை என்பது யாரும் யாதும் தீது புரியாவகை தேர்ந்து காத்து மாந்தரை ஓர்ந்துஉரிமையுடன்ஆதரிப்பதேயாம்.

நீதி என்பது சீவர்கள் ஒழுங்காய் வாழ நேர்ந்த நெறிமுறை. அந்த முறையை அரசன் சரியாகச் செய்துவரின் தெய்வ அருள் அவன்பால் நேரே சுரந்து வரும். அவ்வாறு செய்யாதுவிடின் தேவகோபமும் பாபமும் ஆம்; ஆகவே அல்லலும் பழியும் அடைய நேர்கின்ருன்; ஆட்சியும் கடையாய் அழிய நேர்கின்றது. அரசுநிலை குலையின் யாவும் குலைகின்றன.

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். (குறள், 559)

மன்னவன் முறை கோடினுல் வானம் அவன் நாட்டில் மழை பெய்யாது என இது காட்டியுள்ளது. உறை = மழை. அரசன் உரிமையோடு நீதி முறை செய்யவில்லையானுல் பருவ மழை அங்கே பெய்யாது என்றது வெய்ய தீமையை விளக்கி நின்றது முறைக்கும் உறைக்கும் உள்ள உறவுரிமையை ஈண்டு ஊன்றிஉணர்ந்து உண்மை தெளிந்துகொள்ளவேண்டும்.

"முறைவேண்டு பொழுதில் பதன்எளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே". (புறம், 35)

நீதி முறையை எவ்வழியும் நீ செவ்வியனாய் நெறியே செய்ய வேண்டும்; அப்பொழுது தான் உன் நாட்டில் நீ கருதிய போதெல்லாம் சரியான பருவ மழை உரிமையோடு பெய்யும் என நாகனார் என்னும் கவிவேந்தர் புவிவேந்தனுக்கு இவ்வாறுபோதித்திருக்கிறார். முறைசெய்யும்அளவுஉறைபெய்கிறது.

செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறியில் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
திங்கள்மும் மாரிக்கு வித்து. (திரிகடுகம், 98)

மாதம் மூன்று மழை பொழியும் வழியை இது குறித்துள்ளது. அரச நீதியின் தரும நிலை மருமமா அறிய வந்தது.

வேதம் ஓதிய வேதியர்க்கு ஓர் மழை;
நீதி மன்னர் நெறியினுக்கு ஓர் மழை;
மாதர் கற்புடை மங்கையர்க்கு ஓர் மழை;
மாதம் மூன்று மழைஎனப் பெய்யுமே. (1)

அரிசி விற்றிடும் அந்தணர்க்கு ஓர் மழை;
வரிசை தப்பிய மன்னருக்கு ஓர் மழை;
புருடனைக் கொன்ற பூவையர்க்கு ஓர் மழை;
வருடம் மூன்று மழைஎனப் பெய்யுமே. (2)
விவேகசிந்தாமணி)

மன்னன் முறை கோடினால் வானம் பெயல் ஒல்லாது என்ற தேவர் கருத்தை இவை விரித்து வந்துள்ளன. அந்தணன் அறமே கருதி இகலோக இச்சையின்றிப் பரமே நோக்கி வாழ வேண்டும்; அதுவழுவின், பழியும் பாவமும் விளையும். அரசன் நீதி முறை தவறலாகாது; தவறின் வசையாம். மாதர் கற்பைப் பேணி ஒழுக வேண்டும்; நழுவின் இழிவாம். மன்னனது நீதியை நடுவில் வைத்து முன்னும் பின்னும் அறமும் கற்பும் வைத்தது உய்த்துணரத்தக்கது. அரசன் நீதி முறையைச் சரியாய்ச் செய்தால் யாவும் நெறியே அமையும் என்பதை இந்த வைப்பு முறை நுட்பமா உணர்த்தி நின்றது. நாட்டு மக்கள் நலமாய் வாழ வழிகோலி வருகின்றவனே நிலையான நீதி மன்னனாய்

யாண்டும் ஒளி மிகுந்து உயர்ந்து நீண்டு விளங்குகின்றான்.

"The noblest motive is the public good" (Steele)

பொதுசன நன்மையே அரசனுக்கு உயர்தர நோக்கமாம் என்னும் இது இங்கே உணரத்தக்கது. பிறர்நலமுற எண்ணி வருகின்றவன் பெரிய புண்ணிய மன்னனாய் நண்ணி வருகிறான்.

---

828. நல்ல பயிருள் நவையா யிடைநுழைந்த
பொல்லாக் களைகளைப் போக்கியே—வல்லோன்
புலம்புரந்து போற்றல்போல் போந்தமுடி வேந்தன்
நிலம்புரந்து போற்றும் நிலைத்து. (அ)

இ—ள்

நல்ல பயிர்கள் இடையே நுழைந்த பொல்லாத களைகளை அகழ்ந்து நீக்கி விளை புலத்தை இனிது பேணி வரும் உழவன் போலத் தீயோரை அழித்து ஒழித்து நல்லோரைப் போற்றி உலகத்தை அரசன் யாண்டும் நன்கு புரந்து வருவன் என்க.

நெல் முதலிய நல்ல உணவுப் பொருள்களை உளவாக்கி நாட்டுக்கு நலம்பல புரிந்து தனது குடித்தனத்தை இனிதுபேணி வருபவன் உழவன் என நின்றான். அவனுடைய உழைப்பு உறுதி ஊக்கம் காப்பு முதலிய நிலைகளைக் கருதி நோக்கி அரசன் உலகத்தைப் பேண வேண்டும் என்றது இருவகை இனங்களையும் ஒருங்கே கூர்ந்து ஓர்ந்து உண்மை காண வந்தது.

பூமிபாலகன் என்பது அரசனுக்கு ஒரு பெயர். அது உழவனுக்கும் உரிமையாய் அமைந்தது. உழவன் இல்லையானால் பூமி பாலைவனம் போல் பாழ்பட்டுப் போம். அதனை உழுது பண்படுத்தி அரிய பல வளங்களை விளைத்து உயிரினங்கள் யாவும் உரிமைத் தாய் என்று உவந்து போற்றப் பூமிதேவி என்னும் அருமைப் பேரோடு பெருமையாய் விளங்கச் செய்தவன் உழவனே ஆதலால் அவனது விழுமிய நிலை தெளிவாய் நின்றது. நிலத்தின் கிழவன் என உழவன் உரிமை பூண்டுள்ளதும் ஈண்டு உணர வுரியது. அவன் வளம் செய்ய வையம் நலம் செய்கிறது.

புல்லும் நெல்லும் விளைந்து வருகிற புன்செயும் நன்செயும் புலம் என வந்தன. புலம் புரந்து வருகிற ஏர் உழவன் நிலம்புரந்து

வருகிற பேருழவனுக்கு என்றும் நிலையான துணையாய் நின்று வருதலால் இங்கே அவன் தலையான உவமையாய் வந்தான்.

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். (குறள், 1034)

உழவரது பெருமையைக் குறித்து வந்துள்ள இந்த அருமைத் திருக்குறள் ஆன்ற பொருளுடையது. ஓர்ந்து சிந்திக்கத் தக்கது. வெண் கொற்றக் குடைகளையுடைய பல நாட்டு அரசர்களின் நிலம் முழுவதும் தன் நாட்டு அரசனுடைய குடை நிழலில் வந்து நிற்கும்படி உழவர் செய்வர் எனத் தேவர் இவ்வாறு அழகாக உணர்த்தியுள்ளார். அலகு = பயிர்க்கதிர்.

பலவகைப் பண்டங்களையும் விளைத்து உழவர் நில வளங்களைப் பெருக்கி வருவர்; வரவே அந்நாடு செல்வங்கள் கொழித்துச் செழித்து விளங்கும்; விளங்கவே அந்நாட்டு வேந்தன் எந்நாட்டு மன்னரினும் உயர்ந்து திகழ்வன்; திகழவே பல அரசர்களும் அவனிடம் வந்து தலைவணங்க நேர்வர்; தலைமையான அந்த நிலைமைக்கு உழவர் மூலகாரணமாயுள்ளமையால் அவரது மேலான சீர்மையும் நீர்மையும் இங்கே ஞாலம் அறிய வந்தன.

பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர். [சிலப்பதிகாரம், 10]

உலகத்தை ஆளுகிற அரசரது வெற்றி உழவரால் நிலைத்து வருகிறது என இளங்கோவடிகள் இங்ஙனம் வழங்கியுள்ளார். இரவலரையும் புரவலரையும் உழவர் இனிது புரந்து வரும் திறம் உணர்ந்து கொள்ள வந்தது. உடல் எடுத்த உயிர்கள் எல்லாம் குடல் எடுத்த பசியோடு வந்துள்ளன; அந்தப் பசிப்பிணியை நீக்கி எவர்க்கும் உறுதியும் ஊக்கமும் தருபவர் உழவர் ஆதலால் அவர் உலகிற்கு உயிர் என ஒளி மிகுந்து நின்றார்.

உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. (குறள், 1032)

மூவரும் நெஞ்சமர முற்றி அவரவர்
ஏவல் எதிர்கொண்டு மீண்டுரையான்—ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவான் உலகுக்கு உயிர். (புறப்பொருள்)

வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே. (புறம், 35)

உழவரது உதவி நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. உழுவார் உலகத்தார்க்கு ஆணி, உயிர் என்றது அவருடைய உறுதியான ஆதரவுகளை ஆய்ந்து காண. அரசனுடைய படைகள் வெற்றி பெற்று வருவது உழுபடையாலேயாம். உணவுகளை உளவாக்கி உழவர் ஊட்டி வருதலால் மன்னன் படைகள் யாண்டும் மூண்டு பொருது மன்னிய வெற்றியோடு மீண்டு வருகின்றன. வேந்தன் கொற்றம் வேளாண்மையால்மேவியது.

மனித வாழ்வு இனிதாய் நடந்துவர உழவர் உழைத்து வருகின்றார்; அவருடைய உதவிகள் எவ்வழியும் உயிராதாரமாய்ச் செழித்து உறுதிநலங்களை விளைத்து உயர் நிலையில் உள்ளன.

"The farmers are the founders of civilization and prosperity".
[D. Webster]

மனித சமுதாயத்தின் சீர்மைக்கும் செழிப்புக்கும் உழவர்கள் மூலகாரணமா யுள்ளனர் என மேல்நாட்டு அறிஞரும் இங்ஙனம் குறித்திருக்கின்றனர். உழுது பயிர் செய்து விளைவுகளைக் காண நேர்ந்ததிலிருந்துதான் மனிதன் நாகரீக வாழ்வை அடைய நேர்ந்தான். உழவின் வழியே உலகம் ஒளிசெய்து வந்துள்ளது.

நிலத்தை நன்கு பண்படுத்தி விதைத்து இடையே தோன்றுகின்ற தீப்பூடுகளைக் களைந்து நீக்கி நல்ல பயிர்களை நாடிக்காத்துப் பல்வகை விளைவுகளையும் உளவாக்கித் தனக்கும் பிறர்க்கும் உதவியா யிருந்து வருதலால் குடித்தலைவனான உழவன் முடித்தலைவனான மன்னனுக்கு முறையே உவமையாய் வந்தான்.

" வறிஞன் ஓம்பும் ஓர் செய் என
வையகம் முழுவதும் காத்து இனிது அரசு செய்கின்றான் "

எனத் தசரதனது ஆட்சி முறைக்கு உழவனை இவ்வாறு முன் மாதிரியாகக் கம்பர் குறித்துக்காட்டியிருக்கிறார். அரியதிருவன் வறிய ஒருவன் போல் மருவி நின்று கருமம் செய்ய வேண்டும் என்றது காப்பின் பொறுப்பையும் குறிப்பையும் கூர்ந்து ஓர்ந்து ஆட்சியின் அமைதியை ஆய்ந்து கொள்ள வந்தது.

"அந்தமில் சிறப்பின் மந்தர அரசன்
உயர்ந்த ஒழுக்கோடு உத்தரம் நாடி
ப்யந்த புதல்வரைப் படுநுகம் பூட்டி
விளேவித்து ஓம்புதும் வேண்டிய தாமென
ஒடுக்கி வைக்கும் உழவன் போல
மோக்கம் உன்னிய முயற்சியேன்." (பெருங்கதை, 4, 15)

தனது அரசுரிமையைத் தன் மகனுக்குக் கொடுத்துவிட்டுத் தவத்தை நாடி நின்ற ஓர் அரசன் உழவனை ஒப்புக்கூறியுள்ள மையை இதில் உணர்ந்து உறுதியைத்தெளிந்துகொள்ளுகிறோம்.

பயிர்களை எவ்வழியும் நலமாகப்பேணி நிலத்தைக்காத்து வரும் உழவன் போல் உயிர்களை யாண்டும் உரிமையோடு ஆதரித்து உலகத்தைப் பாதுகாத்துவரின் அந்த அரசன் அரிய பல நலங்களை அடைந்து பெரிய புகழோடு பெருகி விளங்குவான். நீதிமுறை புரிந்து நிலம்புரந்து ஆதிமுதல்வன் அருளை அடைக.

---

829. புன்மைகளை எவ்வழியும் போக்கிப் புனிதமாம்
நன்மைகளை எங்குமே நன்காற்றி—தன்மையுடன்
தானும் நடந்து தகைபுரிந்து வந்தானேல்
வானும் அவன்பால் வரும். (௯)

இ. ள்.

புலையான தீமைகளை யாண்டும் தலைகாட்டாதபடி தடிந்து நீக்கிப் புனிதமான நன்மைகளை எங்கும் நன்கு வளர்த்து இனிய நேர்மையோடு அரசன் ஒழுகிவரின் வானமும் அவனுக்குத் தனி உரிமையாய் இனிமை சுரந்து வரும் என்க.

சிறுமையான சின்ன இயல்புகள் ஒருமையாய் மருவிய வழி அது புன்மை என நின்றது. பெருந்தன்மைக்கு இது நேர் மாறானது. புன்மைதோய்ந்த பொழுது அந்த மனிதர் புல்லர், அற்பர், இழிஞர், கீழோர் என இழிவுறுகின்றனர். பெரிய தன்மைகள் அரிய நன்மைகளாய் வருகின்றன; சிறிய புன்மைகள் வெறிய தீமைகளாய் விரிந்து மனிதரைத் தாழ்த்துகின்றன.

தம் பிள்ளைகளிடம் நல்ல குணங்களும் கல்வியறிவும் வளர்ந்து வர வளர்த்து வருவது தாய் தந்தையர்க்கு முறையே

உரிமையான கடமையாம். அத்தகைய மக்கள் வாழுகின்ற நாடே தக்க பான்மைகள் சுரந்து மிக்க மேன்மைகள் அடையும்.

இழிநிலைகள் யாண்டும் புகாமல் உயர்குணநிலைகளே எவ் வழியும் பரவி வரும்படி அரசன் பேணிவரின் அந்த ஆட்சி திவ் வியமாட்சியாய்ச் சிறந்து விளங்கும். மனித சமுதாயத்தை ஆள நேர்ந்தவன் முதலில் தன் பொறிகளை அடக்கி ஆளவேண் டும். புலன்களை அடக்கிப் புனிதநெறியில் ஒழுகிவருபவனிடம் விழுமிய மேன்மைகள் எவ்வழியும் பெருகி வருகின்றன.

தன்னுடைய ஆட்சிக்கும் மாட்சிக்கும் தாழ்ச்சி தருவது எதையும் மன்னன் காட்சியிலும் காணலாகாது. கருமங்கள் யாவும் தரும நீதிகள் தோய்ந்து வர வாழ்ந்து வருபவனே விழு மிய வேந்தனாய் விளங்கி யாண்டும் உயர்ந்து வருகிறான்.

"சினனே காமம் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவும்இவ் வுலகத்து
அறந்தெரி திகிரிக்கு வழியடை ஆகும்
தீதுசேண் இகந்து நன்றுமிகப் புரிந்து
கடலும் கானமும் பலபயம் உதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையில் அறிவினர் செவ்விதின் நடந்துதம்
அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி உய்த்த உரவோர் உம்பல்!" (பதிற்றுப்பத்து, 22)

சேர மன்னனுடைய குணநலங்களையும் பரிபாலன நிலை களையும் இது உரைத்துள்ளது. தரும சக்கரமான நீதிமுறைக் குத்தடைகளாயுள்ளவைகளை இதில் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. கண்ணோட்டம் = இரக்கம், தாட்சணியம்.

இது நல்ல குணமே ஆயினும் பொல்லாதவர்களிடம் இத னைக்காட்டலாகாது; அவரைக் கடுமையாய்த் தண்டித்து ஒழிக்க வேண்டும்; அங்ஙனம் ஒழிக்காமல் இத்தண்ணளியை மன் னன் மருவி நின்றால் நீதிமுறை நிலைகுலைந்து போம்; ஆதலால் கழிகண்ணோட்டம் அறம்தெரி திகிரிக்கு வழியடை என வந்தது.

ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார் மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. (குறள், 541)

செய்த குற்றங்களை நன்கு ஆராய்ந்து நடுவு நிலைமையுடன் நின்று யோசித்து குற்றவாளி யாராயிருந்தாலும் இரங்கி விடாமல் தகுந்தபடி தண்டிப்பதே அரசனுக்குச் சிறந்த நீதிமுறையாம் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பெற்றபிள்ளையாயிருந்தாலும் குற்றம் செய்தால் அவனை உடனே தண்டிக்கவே வேண்டும் என்பார் யார் மாட்டும் என எல்லை காட்டி நின்றார்.

தீமை செய்தவரைத் தண்டிக்காமல் இரங்கிவிடின் அது நன்மையைக் கொன்றபடியாம். தண்டனை யில்லையானால் தீயோர் மிஞ்சிவருவர்; அதனால் நல்லோர் அஞ்சி அலமருவர்; அரசும் நீதி முறை அற்றதாய் நிலை குலைந்து இழிந்துபோம்.

"Mercy to the criminal may be cruelty to the people."
(Crime)

குற்றவாளிகளுக்கு இரக்கம் காட்டுவது பொதுமக்களுக்குக் கொடுமை செய்தபடியாம் என்னும் இது இங்கே அறியவுரியது. ஆட்சியில் அவலம் நேராமல் ஆய்ந்து புரிக.

"In the public administration of justice, mercy to one may be cruelty to others." (Addison)

நீதி முறையான ஆட்சியில் ஒருவனுக்கு இரங்குவது பல பேர்க்கு இடர் செய்வதாம் என அடிசன் என்பவர் இவ்வாறு குறித்திருக்கிறார். ஏதம் படியாமல் நீதம் புரிக.

"He threatens the innocent who spares the guilty." (Coke)

குற்றமுடையார்க்கு இடம் கொடுப்பவன் குணமுள்ள நல்லவர்களை அச்சுறுத்தி அல்லல் செய்கிறான் என இது உரைத்துளது. குற்றம் களைந்து குணம் பேணிக் கோமுறை பூணுக.

தீய காரியங்களைச் செய்கிற தீவினையாளரை அடக்கி ஒழிப்பதே உயர்ந்த அரச நீதியாம்; அவ்வாறு செய்யாது விடின் நல்லவர்கள் அங்கே சுகமாய் வாழ முடியாது; ஆகவே அந்த ஆட்சி அவலமுடையதாய் இழிந்து ஒழிந்துபோம். தீயோர்க்குத் தீ; நல்லோர்க்கு அமுதம் என உயர்ந்தோர் புகழ்ந்துவர அரசன் ஒழுகிவரின் அவன் விழுமிய நீதிபதியாய் விளங்கி வருகின்றான்.

தன் நாட்டு மக்கள் நல்லவர்களாய் உயர்ந்து வாழ வேண்டு மானல் முதலில் அரசன் நல்லவனுய்த் திருந்தி ஆளவேண்டும். தலைமையான சிறந்த பதவியை அடைந்தவன் தனது நிலைமையை உணர்ந்து எவ் வழியும் செவ்வியனாய் நீதி முறைகளைச் செய்து வரின் ஆதியிறைவன் அருளையடைந்து மேலும் திவ்விய கதிகளை எய்தி மகிழ்கின்றான். இறைமுறை புரிந்து இன்பம் பெறுக.

---

830. நீதி சிறிது நிலைதவறின் அவ்வரசு
பாதி அழிந்து படுதுயராம்—நீதி
திரியாது நின்றுவரும் சீரின் அளவே
மரியாதை யாகும் மதி. (ய)

இ—ள்

நீதிமுறை சிறிது தவறினும் அந்த அரசு பாதிக்குமேல் அழிந்து படுதுயரங்களை அடையும்; நீதி வழுவாமல் நின்று வரும் அளவே அரசு விழுமிய நிலையில் விளங்கி எவ்வழியும் உயர்ந்து மரியாதை மாண்புகளை அடைந்து வரும் என்க.

உலகத்தை ஆளும் அரசபதவி அரியபெரிய மகிமையுடைது. தெய்வீகம் தோய்ந்தது. மிகுந்த பொறுப்பு வாய்ந்தது. மனித சமுதாயத்தை நெறியே நடத்த நேர்ந்தவன் ஆதலால் முதலில் தான் புனிதமாய் நடக்க வேண்டியது அரசனுக்குத் தலைமை யான கடமையாய் அமைந்தது. உரிய ஒழுக்கம் அரிய விழுப்ப மாகிறது; ஆகவே அவ்வேந்தன் மேலான நீதிமானுய் நெடிது நிலைத்து ஞாலம் முழுவதையும் வழிமுறையே ஆள நேருகிறான்.

தரும நீதியே அரசை மருமமாய் நடத்தியருளுகிறது. உட லுக்குஉறுதி குருதி; அரசுக்கு உறுதி நீதி என்பது ஆதிமனு மொழி. இரத்த ஓட்டம் சரியாகவும் ஒழுங்காகவும் இருந்தால் தேகம் சுக மாகவும் பலமாகவும் இருக்கும்; அது பழுதாய்ச் சீர் குலைந்தால் தேகம் பிழையாய்ப் பீழையுறும். உயிர் வாழ்வு செந்நீரால் இயங் கிவருதல் போல் அரசவாழ்வு செங்கோலால் நடந்து வருகிறது. கோல் கோடாத வரையும் அரசு வாடாது வளமையாய்வளர்ந்து வரும்; அது கோடின் யாவும் அவலமாய் அழிந்தே போம்.

ஆதிபகவன் அருள் நீதி வழியே வருதலால் அதனையுடைய அரசன் அதிசய நிலையில் ஒளிவீசி மிளிர்கிறான். நீதியுடையானிடம் அரியபல குணநீர்மைகள் நேரேஉரிமையாய் வருகின்றன.

ஆதி மதியும் அருளும் அறனும் அமைவும்
ஏதில் மிடல்வீரமும் ஈகையும் எண்ணில்யாவும்
நீதி நிலையும் இவை நேமியினோர்க்கு நின்ற
பாதி முழுதும் இவற்கே பணிகேட்ப மன்னோ.

(இராமா, அரசியல் 2)

தசரத மன்னனிடம் மருவியிருந்த குணநலங்களை இது குறித்துள்ளது. பொருள் நயங்களைக் கருதி யுணரவேண்டும். "மன்னர் பெரும! இன்று என்ன பணிசெய்ய வேண்டும்?" என நீதி முதலியன இந்த அரசனிடம் ஏவல் கேட்கும் என்றதனால் இவனது பரிபாலன முறை அறியலாகும். இவ்வளவு நீதிமான் கைகேசியிடம் அளவு கடந்த காதல் கொண்டமையால் தீது அடைய நேர்ந்தான்; ஆயினும் சொன்ன மொழி மாறாமல் இன்னுயிரை ஈந்து எவ்வுலகும் புகழ இசை மிகப்பெற்றான்.

நீதி முறை அரசனுக்கு உயிர்; அதனை எவ்வழியும் செவ்வையாக அவன் பேணி வரவேண்டும். நாட்டு மக்கள் சுகமாய் வாழ்வது அரசன் நடத்தும் நீதி நெறியால் ஆதலால் அதனை உரிமையோடு கருதிச்செய்வது அரிய பெரிய தருமமாய் வந்தது.

"One hour in the execution of justice is worth
seventy years of prayer." (Justice)

நீதி முறை செலுத்துவதிலுள்ள ஒருமணி நேரம் கடவுளைத் துதிக்கின்ற எழுபது வருடங்களுக்குச் சமம் என்னும் இது இங்கே அறிய வுரியது. மனித சமுதாயத்துக்குத் தினையளவு இதம் செய்தாலும் அது கடவுளுக்குப் பனை அளவு பூசனை செய்வதினும் மேலாம் என்பதை இது சால்பாக உணர்த்தியுள்ளது. இராச நீதியை எவ்வழியும் செவ்வையாகச் செய்து வருவோர் திவ்விய மகிமையை அடைகின்றார். பாரபட்சம் பாராமல் நியாய முறையை யாரிடமும் நேர்மையாய்ச் செய்வதே நெடிய சீர்மையாம்; அதனால் அரியமேன்மைகள் உளவாம்.

"Let justice be done though heaven should fall."

தெய்வம் தவறு செய்தாலும் நீதி தவருமல் செய்யப் படும் என்னும் இது இங்கே அறிய வுரியது. யாராயிருந்தாலும் பிழை காணநேர்ந்தால் தண்டிப்பதே நீதி மன்னர் சிறப்பாம். தீது களைவதால் நீதி வளர்ந்து நெடிது நிலவுகின்றது.

தான் தவறியதாகக் கண்டபோது தன் இன்னுயிர் போன மன்னவனையும் இந்நாடு முன்னம் பெற்றிருந்தது. கோவலனைக் கள்ளன் என்று வஞ்சித்துக் கொண்டு வந்த கொடிய வஞ்சகன் சொல்லை நம்பி நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் அவனுக்கு மரணதண்டனை விதித்தான். கண்ணகி நேரே வந்து உண்மையை உரைத்தாள்: "என் கணவன் நல்லவன்; கள்வன் அல்லன்" என்று அக் கற்புடையாள் காட்டவே உண்மை தெளிந்த மன்னன் உள்ளம் பதைத்து உயிர் துடித்து அரியணை யிலிருந்து கீழே வீழ்ந்து உடனே இறந்து போனன். அவன் தேவியும் கூடவே ஆவி நீங்கினள்.

மன்னன் மறுகி மாண்டது.

*பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட*
*யாஞே அரசன்? யானே கள்வன்;*
*மன்பதை காக்கும் தென்புலம் காவல்*
*என்முதல் பிழைத்தது; கெடுகஎன் ஆயுள்என*
*மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே; தென்னவன்*
*கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கிக்*
*கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்று*
*இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி.*

(சிலப்பதிகாரம், 20)

தான்செய்தது பிழைஎன்று தெரிந்தவுடன் யாஞே அரசன்? யானே கள்வன் என்று உள்ளம் துடித்து அலறியிருக்கிருன். துயரம் தாங்கமாட்டாமல் உயிர் நீங்கிப்போயது. நாயகன் பிரிவைச் சகிக்க முடியாமல் தேவியும் உடனே மாண்டாள். இது எவ்வளவு அதிசயம்! எத்துணைப் பரிதாபம்! உய்த்துணர வேண்டும். உத்தம நீதிமான் என்று அரசகுலம் முழுவதும் அதிசயம் மீதூர்ந்து பரிவோடு இவனைப் பரசியுள்ளது.

"வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோல் ஆக்கியது"

கொடிய விதி கடிதுவளைத்துக் கொடுங்கோல் செய்தது; அதனைத் தன் உயிரைக்கொடுத்து நேரே நிமிர்த்திச்செங்கோல் ஆக்கினன் என இவ் வேந்தனை வியந்து மறுபுல மன்னரும் இன்னவாறு புகழ்ந்துள்ளனர். தரும நீதியைத் தம் உயிரினும் அருமையாக் கருதி அரசர் பேணியருள்வர் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி யருளினன். இவனது நீதி முறையை ஓதி உணருந் தோறும் உலக உள்ளங்கள் மிகவும் உருகி வருகின்றன.

தருமநீதியாய் ஒழுகிவரும் அளவுதான் அரசன் எவ்வழியும் பெருமை மிகப்பெறுகிறான்; அது வழுவின் இழிவுகள் பல எய்தி அழிதுயரங்களை அவன் அடைய நேர்கின்றான்.

"Nothing can be honourable where there is no justice." (Cicero)

எங்கே நீதி இல்லையோ அங்கே கண்ணியமான மகிமை இருக்க முடியாது என்று சிஸரோ என்பவர் இவ்வாறு குறித்திருக்கிறார். நேர்மையான நீதி அளவே அரசு சீர்மையாம்.

எங்கண் அனையர் எனக்கருதின் ஏதமால்;
தங்கண்ணே யானும் தகவில கண்டக்கால்
வன்கண்ணன் ஆகி ஒறுக்க ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான் அரசு. (பழமொழி)

தன்கண் தவறு செய்தாலும் மன்னன் அதனைத் தண்டித்து நீதி முறை புரியவேண்டும் என இது ஓதி உணர்த்தியுள்ளது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நீதிமுறையே அரசின் நியம நெறி.
உள்ளமே சான்றாய் ஒழுகிவருக.
வேந்தன் விதி மாந்தர்க்கு மதி.
குற்றம் களையின் குணம் விளையும்.
அரசநீதி அன்றே கேட்கும்.
மனுவின் முறையே மன்னன் துறை.
முறை புரிந்துவரின் இறை உயர்ந்துவரும்.
தீது நீங்க நீதி ஓங்கும்.
வழுவாது ஒழுகின் வானும் வாழ்த்தும்.
இழிவு நேரின் அழிவு நேரும்.

அங்கு வது நீதி முற்றிற்று.

# எண்பத்து நான்காம் அதிகாரம்.

## யூ க ம்.

அஃதாவது கூர்ந்து ஆராய்ந்து ஓர்ந்து உணரும் விவேகம். அரச நீதி எவ்வழியும் செவ்வையாய் இனிது நடைபெற உறுதியோடு உதவிபுரிவது ஆதலால் நீதியின்பின் இது வைக்கப்பட்டது.

831. மதியூகம் வாய்ந்து மரபோ டெதையும்
அதியூக மாகவே ஆய்ந்து—விதியூகம்
கண்டு தெளிந்து கருமம் புரியினே
விண்டு விளங்கும் விறல். (க)

இ—ள்

கூரிய அறிவு அமைந்து சீரிய நெறி முறைகளை ஆராய்ந்து நேரிய விதி நியமங்களின் படி காரியங்கள் புரிந்துவரின் அந்த ஆட்சி வெற்றியும் திருவும் நிறைந்து விழுமியநிலையில் விளங்கும்; அவ்வாறு செய்து வருவதே செவ்விய அரச நீதியாம் என்க.

சிந்தனை செய்து எதையும் ஓர்ந்து உணர்ந்து தெளிந்து கொள்ளும் திறம் மனிதனுக்குத் தனியுரிமையாய் அமைந்துள்ளது. இந்த உணர்வின் தெளிவை எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவன் அடைந்திருக்கிறானோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் உயர்ந்து நிற்கின்றான். நிலையுயர்வு தலையுணர்வால் நிலைத்து வருகிறது. உணர்ச்சி வளர உயர்ச்சிகள் வளர்ந்து வருகின்றன.

நேர்ந்த பொருளை நிறை தூக்கி மதித்து அறிவது மதி என அமைந்தது. நேர்ந்ததைக் கொண்டு நேராததையும் ஊகமாய் ஓர்ந்து உணர்வது யூகம் என வந்தது. இந்த மதியும் யூகமும் மருவிய பொழுது அந்த மனிதன் அதிசய மேதையாய் ஒளி செய்து திகழ்கின்றான். யூகவான் யோகவான் ஆகின்றான்.

உண்மையான உயர்ந்த யூகத்திற்குப் பயன் புன்மையான சோகமோகங்கள் யாண்டும் தீண்டாத ஏகமான இன்பநிலையை வேகமாய் அடைந்து கொள்வதேயாம். மனிதப் பிறவி மதிநலம் உடையது; சிறந்த அறிவு அமைந்த இந்தப் பிறவியைப் பெற்றவன் ஈண்டு விரைந்து பெற வுரியது மீண்டும் பிறவாமையே.

பிறவி எவ்வழியும் துன்பமே ஆதலால் அதனை நீக்கி உய்ய நேர்ந்தவர் ஞானிகள் என நேர்ந்தார். கருப்ப வாசம் முதல் உயிரடையும் துயர நிலைகளை யூக விவேகமாய் உணர்ந்து தெளிந்தவர் ஆதலால் உலகப் பற்றுக்களை யெல்லாம் ஒருங்கே துறந்து பிறவியை நீக்க விரைந்தார். அவ்வாறு யூகமாய் உணராதவர் மோகமாயிழிந்து யாண்டும் கொடிய பிறவித்துயரில் ஆழ்ந்தார்.

ஊகமில் மூகர்க்கு எல்லாம் ஊழிவெங் கடலாம் சென்மம்;
மோகமில் ஊகத் தோர்க்கு முன்னுறு கோவின் தாளாம்;
சோகமில் ஞானி நெஞ்சில் தொடர்ந்தசிற் றின்பம் பற்று;
போகமில் சிற்றூர்ப் புன்பெண் பொலிநகர் விடலைக்கு என்னும்.
(ஞானவா சிட்டம்)

யூகமுள்ள ஞானிகள் பிறவியை எளிதே நீங்கிப் பேரின்ப நிலையை அடைகின்றார்; அத்தகைய யூகமில்லாத மூகர்கள் பிறவிக் கடலுள் வீழ்ந்து பெருந்துயருறுகின்றார் என இது வரைந்து காட்டியுள்ளது. ஞானக்காட்சி நன்கு காணத்தக்கது.

உற்றுள்ள நிலைகளை உய்த்துணர்ந்து ஊறுநேராவகை உய்தி பெறுகின்றவன் உயர்ந்த விவேகி ஆகின்றான்; அவ்வாறு பெருதவன் அவிவேகியாய் அலமருகின்றான். வாழ்க்கையில் எச்சரிக்கையாய் முன் ஏறுகின்றவனை யூகசாலி என்று உலகம் புகழ்கின்றது; அங்ஙனம் செல்லாமல் அயர்ந்து நிற்பவனை அசடன் என்று எள்ளி இகழ்ந்து அவலமாத் தள்ளி விடுகின்றது.

பறவைகளுள் காகம் மிகவும் யூகம் உடையது. குறிப்பைக் கூர்ந்து நோக்குவது. கல்லோ கோலோ இல்லாமல் வெறுங் கையை ஓங்கினால் அது அஞ்சாமல் நிற்கும். "கையில் ஒன்றும் இல்லை; இந்த மனிதன் நம்மை என்ன செய்ய முடியும்?" என்னும் துணிவு அதனிடம் மன்னி உள்ளதை அதன் வெருவா நிலை தெளிவா விளக்கிஒருவகை உறுதியை மருமமாத் துலக்கியுளது.

"வெருவா வாய் வன்காக்கை" (புறம் 238) எனப் பெருஞ் சித்திரனார் அதனை இங்ஙனம் சித்திரித்துக் காட்டியுள்ளார். வெருவுதல் = அஞ்சுதல். அஞ்சாமையும் யூகமும் அதனிடம் உள்ளமையால் யாண்டும் எஞ்சாமல் அது இரை ஆர்ந்து செல்கிறது.

காக்கை நோக்குமுன் அறியும்; கொக்கு தாக்கியபின்தெரியும்

என்பது பழமொழி. வெடியைக் கண்ட வுடனே காக்கை விரைந்து பறந்து போம்; கொக்கு மக்காய்ப் பட்டு மடியும்.

பட்டால் அறியும் படுமுட்டாள் எவ்வழியும்
தொட்டால் அறியும் துவக்கயலே---கிட்டாமல்
கண்ட அளவிலே கண்ணுணரும் காட்சிபோல்
கொண்டறியும் மேதை குறித்து.

கிட்டவந்து தொட்டபோதுதான் உடல் அந்தப் பரிசத்தை அறியும்; யாரேனும் தூரவரும்போதே கண்தெரிந்து கொள்ளும்; அது போல் அல்லல் அடைந்த போது தான் மூடன் அறிந்து வருந்துவான்; அது அடையுமுன்னரே அறிஞன் அறிந்து விலகிக் கொள்வான் என இது உணர்த்தியுள்ளது. முட்டிக் குனிபவன் முட்டாள் என நேர்ந்தான். துவக்கு=தோல், உடல். மூடனுக்குச் சடமும், மேதைக்குக் கண்ணும் ஒப்பாம். உவமை நயங்கள் ஊன்றி உணரவுரியன. மேதை கண் போல் கண்ணியம் பெறுகிறான்; பேதை சடமாய் இழிந்து கழிந்து ஒழிகிறான்.

அல்லல் அணுகாமல் காத்தருளுவது யூகம். அல்லல் அடைந்து அலமருவது மூகம். மூடம் பீடையேதரும் ஆதலால் அது மூடாதபடி நாடி யுணர்பவன் நலம் பல காண்கிறான். பறவைக்கு இரு சிறகுகள் போல் மனிதனுக்கு அறிவும் ஆற்றலும் உயர் நிலைகளை உதவி உறுதி நலங்களை அருளுகின்றன.

ஊன்றி யுணரும் யூகமும், உணர்ந்ததை உறுதியாய்ச் செய்யும் தீரமும் உடையவன் உலகில் உயர்ந்த நிலைகளை அடைந்து கொள்கிறான். மதியும் விதியும் அதிசயங்களைத் தருகின்றன.

"Discretion and valour are the twins of honour" (Bonduca)

"விவேகமும் வீரமும் கீர்த்தியின் இரட்டைக்குழந்தைகள்" என்னும் இது இங்கே அறியவுரியது. மதிப்பும் மரியாதையும் மாட்சியும் ஆட்சியும் மதிநலத்தால் உளவாகின்றன.

விரிந்த தேசத்தை ஆளநேர்ந்த அரசன் சிறந்த யூகியாய் அமைந்த பொழுதுதான் உலகம் புகழ்ந்து போற்ற உயர்ந்து விளங்குகிறான். மிகுந்த செல்வ வளத்தோடு தகுந்த விவேகம் அமைவது அரிது ஆதலால் அரிய அந்த அருமைப்பேறு உரிமையாய் மருவிய போது பெருமைகள் பெருகி வருகின்றன. அவ்

வகையான அரிய மதிநலம் வாய்ந்து பெரிய செயல்களை ஆற்றிப் பேர்பெற்ற வேந்தன் ஒருவனை இங்கே காண வருகின்றோம்.

"எண்ணியல் முற்றி ஈர்அறிவு புரிந்து
சால்பும் செம்மையும் உளப்படப் பிறவும்
காவற்கு அமைந்த அரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை இவணர்க்கு
அருங்கடன் இறுத்த செருப்புகல் முன்ப!
அன்னவை மருண்டனென் அல்லேன் நின்வயின்
முழுதுணர்ந்து ஒழுகும் நரைமூ தாளனை
வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்
தெய்வமும் யாவதும் தவமுடை யோர்க்குஎன
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெருமநின் படிமை யானே." (பதிற்றுப்பத்து, 74)

சேரமன்னனுடைய சீர்மை நீர்மைகளை இதுகுறித்துள்ளது. இவனது யூக விவேகமும் குண நலங்களும் அறிவு முதிர்ந்த மேலோர்க்கும் ஞான ஒளிகாட்டி விழுமிய நிலையில் விளங்கி யிருந்தன; அவ்வுண்மையை இதில் உணர்ந்து கொள்ளுகிறோம்.

மதியூகம்வாய்ந்து விதிமுறை ஆய்ந்து அதிநயமாய் வினைகள் புரிந்து உயிர்களை ஓம்பிவருகிற அரசன் உயர்நலங்கள் தோய்ந்து எவ்வழியும் புகழ் ஒளி வீசிப் பொலிந்து திகழ்கிறான். கூரிய மேதையாய் நின்று காரியம் புரிந்து சீரிய மேன்மைகள் பெறுக.

---

832 கூர்ந்து குறிப்பறிந்து கோடாமல் நாடியே
ஓர்ந்து புரிவார் உயருவார்—தேர்ந்துவினை
செய்யும் அளவே சிறந்த மகிமைகள்
வையம் புகழ வரும். (உ)

இ-ள்.

செய்ய நேர்ந்துள்ள வினைகளைக் குறிப்போடு கூர்ந்து நேரே ஆராய்ந்து ஓர்ந்து உணர்ந்து செய்பவர் உயர்ந்து வருவார்; தேர்ந்து வினை செய்கின்ற அளவே சிறந்த மகிமைகள் தோய்ந்து உலகம் வியந்து புகழ நிலைமை விளைந்து வரும் என்க.

கூரிய அறிவும் குணநலங்களும் அமைந்த அளவு மனிதன்

சீரியனாய்ச் சிறந்து வருகிறான். கூர்ந்து அறிதலாவது பொருள்களை நுணுகி நோக்கி நிலைமைகளை ஓர்ந்து கொள்ளுதல். கூர்மையும் குறிப்பும் உயர்ந்த அறிவின் சிறந்த நீர்மைகளாய் அமைந்துள்ளன. கருதி உணர்வதில் உறுதிகள் பெருகி வருகின்றன.

எதையும் நுணுகி உணரும்திறம் ஒருவனுக்கு இனிது அமையின் அரிய பலநலங்களை அவன் எளிதே அடைந்துகொள்கின்றான். கூர்ந்த நோக்கு ஆர்ந்த ஆக்கமாய் நேர்ந்து வருகிறது.

மனம் ஒரு முகமாய்க் குவிந்து கூர்ந்து நோக்கும் போது அங்கே 'ஆன்ம ஒளி வீசுகிறது; வீசவே யாவும் தெளிவாய்த் தெரிய வருகின்றன. யோகக் காட்சி, ஞானப்பார்வை என்பன எல்லாம் மன ஒருமையிலேயே மருமமாய் மருவியிருக்கின்றன. மனிதன் மேலாய் உயர்வதும் கீழாய்த் தாழ்வதும் மானசக் காட்சியால் வாய்ந்து வருதலால் மனக் கூர்மையின் ஆட்சியையும் மாட்சியையும் நேரே ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

"Compare the lowest with the highest man. The difference is in the degree of concentration." (Vivekananda)

"உயர்ந்த மனிதனையும் தாழ்ந்தவனையும் நேரே சீர்தூக்கிப் பார்; மனக்கூர்மையின் அளவிலே தான் வேறுபாடாம்" என விவேகானந்தர் இவ்வாறு கூறியிருக்கிறார். மன ஒருமையோடு கூர்ந்து உணர்பவன் உயர்ந்த மனிதனாய் ஒளி மிகுந்து திகழ்கிறான்; அங்ஙனம் உணராதவன் மடமையாய்த் தாழ்ந்து நிற்கிறான். உயர்வும் தாழ்வும் உணர்வின் அளவே உளவாம்.

கூர்மையான அறிவுகுன்றிய அளவு சீர்மைகுன்றிச்சிறுமையுறுகின்றான். நுணுகி உணர்வதில் பெருமைகள் பெருகிவருகின்றன. நேரே கண்டதைக் கொண்டு காணாததையும் கருதியுணர்ந்து உறுதி காணும் திறம் மருவிவரின் அந்த மனிதன் உயர்ந்த மதியூகியாய் ஒளி பெற்று வருகிறான். அந்நிலையில் வந்துள்ளவனை உலகமாந்தர் உவந்து புகழ்ந்து தலைமையாளனாத் தழுவித்தொழுது உரிமை கூர்ந்து உறவாய் வருகின்றனர்.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. (குறள், 701)

பிறருடைய உள்ளம் கருதியுள்ளதை அவர் வாய் திறந்து சொல்லாமலே அவரது முகக்குறிப்பால் ஓர்ந்து உணர்ந்து கொள்பவன் இந்த உலகத்திற்கு ஓர் உயர்ந்த மணியணியாய் எழில் புரிந்து ஒளி மிகுந்துள்ளான் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். மதியூகத்தின் மாட்சி காட்சிக்கு வந்தது.

அறிவின் கூர்மை அளவுதான் மனிதன் சீர்மை மிகுந்து திகழ்கின்றான். உலக நிலைகளையும் கலைகளையும் பொதுவாகத்தெரிகின்ற அறிவினும் குறிப்பாக ஓர்ந்து கூர்ந்து தேர்ந்து எதையும் யூகமாய் உணரும் விவேகம் மிகவும் உயர்ந்தது.

அறிவு விளக்கின் ஒளிபோல் விளங்கி நிற்கிறது.

யூகம் கதிரின் ஒளிபோல் வேகமாய்ப் பாய்கிறது.

அறிவாளி என்பதை விட யூகி என்பது உயர்தரமுடையது. அறிஞன் செய்ய முடியாத அதிசய காரியங்களை யூகி விநயமாய்ச் செய்துவிடுகிறான். எதையும் கூர்ந்து ஓர்ந்து கவனமாய்க் கருதி நோக்குவதால் கருமங்களின் மருமங்களையெல்லாம் தெளிவாக யூகி விரைந்து தெரிந்து கொள்கிறான்; கொள்ளவே எல்லாம் எளிதாய் முடிகிறது. அதிமதி நுட்பம் என யூகம் அதிசய நிலையில் துதிகொண்டு யாண்டும் மகிமை மிகுந்துள்ளது.

எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ரோமாபுரியிலிருந்த ஒரு பெரியவரிடம் போய் அறிவுக்கும் விவேகத்துக்கும் என்னவேற்றுமை? என அறிஞர் சிலர் வினவினர். அதற்கு அந்த யூகி அதிவிநயமாய்ப் பதில் கூறியது அயலே வருகிறது.

An ounce of discretion is worth more than a pound of knowledge. [Ital]

ஒரு ராத்தல் அறிவை விட ஒரு அவுன்ஸ் யூகம் அதிக மகிமையுடையது என அவர் இவ்வாறு உரைத்திருக்கிறார்.

Discretion of speech is more than eloquence. (Bacon)

யூகமான ஒருவார்த்தை பெரிய பிரசங்கத்தினும் உயர்ந்தது என்னும் இது இங்கே உணர்ந்து கொள்ளவுரியது. சிறந்து முதிர்ந்த அறிவின் சாரமாய் விவேகம் விளைந்து வருதலால் அது உணர்வின் முடிவானஎல்லையில் தனியேஒளிசெய்துநிற்கின்றது.

இத்தகைய விவேகத்தோடு வினைகளைச் செய்துவரின் அந்த மனிதன் அதிசய நிலைகளை விரைந்து அடைந்து கொள்ளுகிறான்.

யூகமாய்ச் சிந்தித்துக் கருமங்களைப் புரிந்து வருவது அரச தருமங்களாய் நிறைந்து வருகிறது. விவேகமும் வினையாண்மை யும் வேந்தனை மேலான நிலையில் நன்கு விளக்கி வருகின்றன.

சிறந்த மதியூகம் அமைந்திருந்தாலும் காலம் கருதி இடம் நோக்கித் தகுந்த காரியங்களைச் செய்ய வில்லையானால் அது மழுங்கி விடும் ஆதலால் யாண்டும் அயராமல் செயலோடு தோய்ந்து வரவேண்டும். தீட்டத் தீட்ட வாள் கூர்மை ஆகும்; செயலில் நாட்ட நாட்ட யூகம் சீர்மையாய்ச் சிறந்து விளங்கும். காரியத்தைஎவ்வழியும் செவ்வையாக் கருதிச்செய்; சீரியமேன் மைகள் யாவும் உன்னை நோக்கி வீரியமாய் விரைந்து வரும்.

---

833 தகுதி நிலைதெரிது தக்காரை நாடிப்
பகுதி வகையைப் பகுத்துத்—தொகுதிதொறும்
நாடி வினைசெய்யின் நாடும் அரசுமே
பீடும் திருவும் பெறும். (௩)

இ. ள.

நேர்மையான குணநலங்களை அறிந்து தகுதியான நல்லோரை ஆராய்ந்து வினைவகைகளில் இனமாக விடுத்து எல்லாத் தொகுதி களையும் நாளும் நன்கு நோக்கிவரின் அந்த அரசு அரிய பல செல்வங்களை அடைந்து பெரிய மேன்மைகள் பெற்று விளங் கும்; அந்தப் பேற்றை விரைந்து பெறுக என்பதாம்.

அறிவும் அவாவும் ஆற்றல்களும் சீவர்களிடம் இயல்பாகவே மருவியுள்ளன. பழக்க வழக்கங்களின் வகைகளாலும் பயிற்சி முயற்சிகளின் தொகைகளாலும் அவை உயர்ச்சி தாழ்ச்சிகளை அடைந்து உரிமையான பலன்களைப் பயந்து வருகின்றன.

ஒருவன் எதனோடு பழகிப்பயின்று வருகின்றானோ அவன் அந்த வகையில் சிறந்து திகழ்கின்றான்; தொழில்கள் பல்வேறு நிலைகளில் பரவியிருக்கின்றன. தான் பழகித் தெளிந்ததன் கண் ணேயே எவனும் வளமையாய் உயர்ந்து நிற்கின்றான். செய்ய

நேர்ந்த கருமங்களைக் கருதியுணர்ந்து உறுதியாகச் செய்து வருபவரே உயர்ந்த வினையாளராய் ஒளிபெற்று வருகின்றார்.

அந்த நிலையில் வந்துள்ள கரும வீரர்களை எந்த அரசன் உரிமையாகத் தேர்ந்து கொள்ளுகின்றானே அந்த அரச ஆட்சி அரிய பல நிலைகளில் உயர்ந்து பெரிய மாட்சியோடு பெருகி விளங்கும். தக்க துணைகள் அமைந்த அளவே அரசன் மிக்க மேன்மைகளை அடையநேர்கின்றான்.

பகுதி தோறும் தகுதியாளரை உறுதியாக நிறுவின் அரசு எவ்வழியும் செவ்வையாய் இனிது இயங்கி நன்கு விளங்கி வரும். தக்கவரைத் தழுவிக் கொள்வதே மிக்க விவேகமாம். அத்தகைய விவேகி எத்தகைய வினைகளிலும் வெற்றி மிகப் பெற்று யாண்டும் உத்தம வேந்தனாய் ஒளிமிகுந்து நிற்கின்றான்.

தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல். (குறள், 462)

காரியங்களைக் கருதிச் செய்ய வுரியவர்களைத் தேர்ந்து தெளிந்து, அவரோடு ஓர்ந்து வினை செய்பவர் எதையும் எளிதே முடித்துக் கொள்வர்; அவர்க்கு முடியாத பொருள் யாதும் இல்லை எனத் தேவர் இவ்வாறு முடிவு செய்து கூறியுள்ளார். தக்க இனத்தைத் தழுவிக் கொள்ளின் விழிபெற்ற முகம்போல் ஆட்சி எவ்வழியும் மிக்க ஒளி பெற்று விளங்கும்.

மனமாட்சியும் வினையாட்சியும் ஒருங்கே வாய்ந்துள்ள வித்தகரை உய்த்துணர்ந்து உரிமை செய்து ஆட்சிக் குழுவில் வைத்துக் கொண்டால் அந்த அரசு சரியாய் இயங்கி நெறியே நடந்து வரும். சீரிய காரியக்குழுவால் சிறப்புகள் விளைகின்றன.

நல்ல இயல்புகள் தோய்ந்து யாண்டும் தீரமாய்க் கருமங்கள் செய்ய வல்லவரே நாட்டுக்கும் மக்களுக்கும் நலம் புரிய உரியராய்த் துலங்கிவருவர். அத்தகைய தகுதியாளரைத்தமராக மருவிவரின் அரசு மிகுதியான மேன்மைகளை அடைந்து திகழும். சார்ந்த இனம் சீர்மையுடையதாயின் யாண்டும் ஆர்ந்த யகிமை நீண்டு ஆட்சி மாட்சியாய் நிலைத்து நிலவும்.

நல்ல குடியில் பிறந்தாறு நவையும்
மறப்பு மடி பிழைப்பென்று

அல்ல லுறுக்கும் இவை முதலாம்
அனைத்தும் நீக்கிப் பழிக்கு அஞ்சி
ஒல்ல லுறுநாண் உடையானை
ஓர்ந்து தெளியப் படுமைந்தா!
வல்ல கலைதேர்ந்து ஆசற்றார்
மாட்டும் வெளிறு மருவிடுமே. (விநாயக புராணம்)

தனது ஆட்சிக்கு உறுதித்துணையாகத் தெளிந்து தேர்ந்து கொள்ளவுரியவரைத் தன் மகனுக்கு ஓர் அரசன் இவ்வாறு உணர்த்தியுள்ளான். குற்றங்கள் நீங்கிக் குணங்கள் ஓங்கியுள்ளவரையே கூர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி குறித்திருக்கிறான்.

அரசனது சிறந்த யூகத்திற்குப் பயன் தகுந்த விவேகிகளைத் தெளிந்து தழுவிக் கொள்வதேயாம். தக்க அறிவாளிகளே காரியங்களை நன்கு சாதிக்க வல்லவர். அறிவு பெருகிய அளவு ஒளி பெற்ற மணி போல் மனிதன் உயர்ந்து திகழ்கின்றான்; அது குறைந்து விடின் எவ்வழியும் அவன் இழிந்து படுகின்றான்.

மடமை மருவினவன் மடையன் என வருகிறான்; அவனால் உயர்ந்த காரியங்கள் யாதும் செய்ய முடியாது; ஆகவே கடையனாயிழிந்து அவன் கழிந்து போகின்றான். அறிவு ஒளியாய் உயர்ந்து உய்தி தருகிறது; அறியாமை இருளாய் இழிகிறது.

Ignorance is the curse of God,
Knowledge the wing wherewith we fly to heaven.
(Shakespeare)

அறியாமை தேவகோபமான சாபமாயுள்ளது; அறிவு தெய்வவுலகத்திற்கு விரைந்து செல்லும் திவ்விய சிறகாய்த்திகழ்கிறது என்னும் இது இங்கே நன்கு கருதியுணரவுரியது.

தேசத்தைப் பாதுகாத்து வரும் பொறுப்பினையுடைய அரசன் சிறந்த மதிமான்களைத் தகுந்த ஆலோசனையாளராச் சேர்த்துக் கொண்டு காரியங்களை நடத்திவரின் அந்த ஆட்சியாண்டும் சீரும் சிறப்புமுடையதாய்ச் செழித்து விளங்கும்.

நல்லாரை நாடி நலம்புரியின் நாடாட்சி
எல்லா வகையும் இனிது.

இதனை வேந்தன் ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

834 உள்ளம் பகையா யுறுவாரைக் கல்விநலம்
உள்ளமையால் தேறி உருதொழிக—வெள்ளமென
நீறுபுறம் பூத்து நெருப்பிருத்தல் போலவருட்
சீறி யிருப்பர் தெளி. (௪)

இ-ள்.

தம் உள்ளத்தில் பகையாயுள்ளவர் கல்வி முதலிய நலங்களை அடைந்திருந்தாலும் அவரை நல்லவர் என்று நம்பிச் சேராதே; அகத்தே கொடிய நெருப்பு மண்டிப் புறத்தே இனிய நீறுபூத்துள்ளது போல் அவர் சீறி நின்று தீமையே புரிவர்; அதனைத் தெளிந்து தேர்ந்து பாதுகாத்துக் கொள்க என்பதாம்.

குணநலங்கள் மனிதனை இனிமை செய்து உயர்த்துகின்றன; குற்றங்கள் அவனை இழிவாக்கித் தாழ்த்துகின்றன. நல்ல தன்மைகளை விடப் பொல்லாத புன்மைகளே மனிதனிடம் எங்கும் பொங்கி வளர்கின்றன. கெட்ட பழக்கங்களையே மனிதன் விழைந்து தழுவிக்கொள்ளுதலால் கேடுகளே யாண்டும் நீண்டு வர நேர்ந்தன. தீமைகள் எவ்வழியும் திரளாய் விளைகின்றன.

கோள் வஞ்சம் குரோதம் பொறாமை பகைமை முதலிய தீமைகள் மனித இனத்தைப் பாழ்படுத்தியிருக்கின்றன. உள்ளம் தூய்மையான நல்ல ஒருவனைக் காண்பது மிகவும் அருமையாயுள்ளது. இந்த நிலையில் வளர்ந்து நிற்கின்ற சமுதாயத்துள் மாறுபாடு மண்டியுள்ள பகையாளியை எந்த வகையிலும் நம்பலாகாது. நம்பினல் நாசங்கள் விளைந்து விடும்.

நெஞ்சில் பகையிருந்தால் அது வஞ்சகமாய் வதை செய்யும் வழிகளையே தொகையாய் நாடி வரும். பாம்பை நம்பினாலும் பகையை நம்பாதே என்பது பழமொழி. இதனால் அதன் அழிவு நிலைகளைத் தெளிவா அறிந்து கொள்ளலாம்.

பகைவர் உள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைகொள் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிகைசெல் மேகத்து மின்னும் செங்கில்லலா
புகைசெய் வேலினீர் போற்றுபு சென்மினே.

(சீவகசிந்தாமணி)

ஏமாங்கத நாட்டு அரசி இன்னவாறு புத்தி போதித்திருக்கிறாள். தன் மகனை சீவக மன்னன் பகைவருடைய சூழ்ச்சி

களில் அகப்படாமல் சுகமாய் வாழ வேண்டும் என்று அத்தாய் பேரன் போடு கூறியிருக்கும் நீதி மொழிகள் நினைந்து சிந்திக் கத் தக்கன. உற்ற அறிவுக்குப் பயன் ஊறு நேராமல் ஓர்வதாம்.

பகை நோக்கு பாம்பின் போக்கு மங்கையர்மனம் ஒரு நிலையில் நில்லா; அவற்றை நம்பலாகாது; நம்பி அணுகினால் நாச மே நேரும் என்று எச்சரிக்கை செய்து உச்ச நிலையில் போதித் திருக்கிறாள். கேடு சூழும் கெடு நிலைகளுள் பகையை முன் வைத்தது அதன் இயல்பான கொடுமையைக் கூர்ந்து தெரிய.

பாம்பை அணுகினால் அபாயம்; மகளிரை நணுகினால் நாசம்; பகையை அணுகாமல் அயலே விலகியிருந்தாலும் அவன் கேடே சூழ்ந்து அழிதுயரையே கருதி நிற்பன் ஆதலால் கொடிய பாம்பினும் அவன் கடியத்தக்கவன். நஞ்சிருக்கும் பாம்பினும் பகையிருக்கும் நெஞ்சு படுதுயர் புரியும். பாம்பு கடித்தால் கடி பட்ட ஒருவனே சாவன்; பகைவனை அடுத்தால் பலவகை இடர் களை விளைத்துக் குடியை அடியோடு அவன் கெடுத்து விடுவான்

இனியவனாய் நடித்தாலும், இதமுடையவனாய் அடுத்தாலும் பகைவனை உரிமையாய்ச் சேர்க்கலாகாது. தன்னை நம்புதற்கு உரிய வழிகளை யெல்லாம் விழி தெரியச் செய்து பகைவன் நல் லவன் போல் ஒட்டவருவன்; வரினும் உள்ளம் ஒட்டாமல் கள் ளமாய் எட்ட நில். வஞ்சப்பகை நஞ்சினும் கொடியது.

கல்வி குற்றங்களை நீக்கிக் குணங்களை ஆக்கும் ஆயினும் உள்ளத்தில் செற்றம் உள்ளவரை அது நல்லவர் ஆக்காது.

பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. (குறள், 823)

நல்ல பல நூல்களை நன்கு கற்றாலும் உள்ளம் பகையாயுள் ளவர் ஒழுங்காய்த் திருந்தி நல்லவராக மாட்டார் எனத் தேவர் இங்ஙனம் பகைமையின் கொடுமையைக் கடுமையாக் காட் டியிருக்கிறார். மாணார் = பகைவர்.

தரும நீதிகள் தழுவிய அரிய பல கலைகளைப் பயின்று தெளிந்து பெரிய மேதைகளாய் வெளியே விளங்கியிருந்தாலும் உள்ளே பகைமையிருக்குமாயின் அவர் தகைமையோடு நடக்க

முடியாது; ஆகவே அவரை நல்லவர் என்று நம்பி நெருங்க லாகாது. நெருங்கினல் நெடுங்கேடு நேரே விளைந்து விடும்.

உள்ளே கட்டையில் தீ எரிந்து கொண்டிருக்கும்; வெளியே நீறு வெள்ளையாய்ப் பூத்திருக்கும்; புறத்தோற்றத்தைக் கண்டு திருநீறு என்று அதனை எடுக்க நேர்ந்தால் தீ கையைச் சுட்டுவிடும். பொல்லாத பகையாளியை நல்ல கல்விமான் என்று நம்பி அடுத்தால் அல்லலே விளைந்து அவலமேயாம். எதிரியிடம் எச்சரிக்கையாயுள்ளவன் யாண்டும் அச்சமின்றி உச்சமாய் வாழுகின்முன். நல்ல அறிவு அல்லலை அறிந்து விலகுகிறது.

"மௌநிந கலஹோ நாஸ்தி ந பயம் சாஸ்தி ஜாக்ரத:"

மவுனம் கலகத்தை ஒழிக்கிறது; எச்சரிக்கை பயத்தை நீக்குகிறது என்னும் இது இங்கே அறியவுரியது. நெஞ்சம் திகிலடையாமல் நிம்மதியாய் வாழ்வதே நிறைந்த மதியின் சிறந்த பயனும். துயர் அணுகாமல் உயர் நிலையில் வாழுக.

பகைவருடைய நிலைகளை அறிந்து வகை புரிந்து தகையாய், ஒழுகிவருபவன் விழுமிய விவேகியாகின்முன். பல வகையான சூழ்ச்சிகளும் படிப்பினைகளும் எதிரிகளிடமிருந்து அறிய வருகின்றன. அந்த வரவு சிந்தை தெளியச் செய்கிறது.

The wise learn many things from their foes. [Aristophanes]

தங்கள் பகைவரிடமிருந்து பல நிலைகளை அறிவாளிகள் தெரிந்து கொள்ளுகிருர்கள் என்னும் இது இங்கே அறிந்து கொள்ளவுரியது. அல்லலுருமல் வாழ்வதே நல்ல யூகமாம்.

---

835 கல்விமிக வல்லராய்க் காட்சிதனில் நல்லராய்ச்
சொல்லில் இனியராய்த் தோன்றிடினும்—புல்லர்தாம்
உள்ளம் நலமாய் உரிமையுருர் நட்பாகக்
கொள்ளலோ தீதாம் குறி. (ரு)

இ-ள்.

அரிய கல்வியில் தேர்ந்து இனிய மொழிகள் பேசி வெளியே நல்லவர் போல் தோன்றினும் புல்லர்கள் உள்ளம் திருந்தி உயர்வாய் நில்லார்; அவரோடு உறவு கொள்ளலாகாது; கொண்டால் அல்லலே விளையும்; அதனை ஒல்லையில் உணர்க என்பதாம்.

நல்ல நூல்களின் அறிவையே கல்வி என்று உலகம் சொல்லி வருகிறது. குற்றங்களை நீக்கிக் குணங்களை ஆக்கியருள வல்லது ஆதலால் கல்வியாளர் நல்லார் எனப்பொதுவாக எண்ண நேர்ந்தார். மாசு களைந்து மதியருள்வதே கல்வி என வந்தது.

இத்தகைய கல்வியை நன்கு கற்றாலும் இயல்பாகவே உள்ளம் தீயராயுள்ள புல்லியர் உணர்வு தெளிந்து நல்லவராய் உயர்ந்து நில்லார். இழிபழக்கங்களில் இழிந்து போயுள்ளவர் அவ்வழிகளிலேயே ஆழ்ந்து களித்து அகம் செருக்கி நிற்கின்றார். ஈனமாய் இளிந்து போனவர் பின்பு ஞானமாய்த் தெளிந்து வருவது மிகவும் அரிதாகின்றது. மருவிய சுபாவத்தின்படியே மனிதன் எவ்வழியும் வெளியே பெருகி வருகிறான்.

தன் உள்ளத்தில் நல்ல நீர்மையில்லையானால் அந்த மனிதனை எந்த விதமான கல்வியும் நல்லவன் ஆக்காது. மேலும் பொல்லாங்கு செய்யவே அதனை அவன் உபயோகிக்கிறான். நல்ல ஞானமும் பொல்லாதவனைத் திருத்தாது என்றதனால் அவனது புலைநிலையும் போக்கும் நன்கு புலனாய் நின்றன.

இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச்சுரையின் காய். (நாலடியார்)

உயர்ந்த ஞான நூல்களைக் கற்றாலும் உள்ளம் இளிவாய்த் தாழ்ந்தவர் தெளிந்து உயரார் என இது தெளித்திருக்கிறது. பேய்ச்சுரைக்காய் மிகுந்த கசப்புடையது; எவ்வளவு இனிய பக்குவங்களைச் செய்தாலும் அதன் கசப்பை நீக்க முடியாது; அதுபோல் பொல்லாதவரையும் கல்விகளால் நல்லவராக்க இயலாது என்க. இதில் வந்துள்ள உவமைக் குறிப்பை ஊன்றி உணர்ந்து கொள்க. எட்டி இனிக்காது; பட்டி பழுக்காது.

மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா ஒலிகடல்போல்---மிக்க
இனநலம் நன்குடைய ராயினும் என்றும்
மனநலம் ஆகாவாம் கீழ். (பழமொழி)

மேலான நல்லோர்களைச் சேர்ந்தாலும் கீழ்மக்கள் உள்ளம் திருந்தி நல்லவராகார் என இது குறித்துள்ளது. பலநதி

களிலிருந்து பெருகி வருகிற இனிய நீர்களாலும் கடல் இனிமையாகாது; தன்பால் வந்த நீரை யெல்லாம் அது உப்பாக்கியே கொள்ளுகிறது; அதுபோல் எவ்வளவு நல்ல நூல்களைப்படித்தாலும் எத்தனை மேலோர்களைச்சேர்ந்தாலும்உள்ளம் பள்ளமாயிழிந்தவர் உயர்ந்து திருந்தார்; தம் இயல்பின்படியே வளர்ந்துவருவார் என வனைந்து காட்டியிருக்கும் இது நினைந்து சிந்திக்கத் தக்கது. இயற்கைஇளிவு யாண்டும் நீண்டு வருகிறது.

பாதமறைவெவ் அரவினுக்குப் பாலும் நெய்யும் புகட்டிடினும்
வாதைசெய்யும் வல்விடமே வளரு மாபோல் மனுநூலும்
வேதமவைஓர் ஆயிரமும் விளங்கும் கலையும் தசக்கிரிவன்
ஓதஓதப் போதம்கெட்டு அபோத மானது ஓங்கியதே.

(இராமா—உத்தரகாண்டம்)

வேதம் ஓதி அரிய பல கலைகளைக்கற்றும் இராவணன் உள்ளம் தெளிந்து நல்லவனாய் உயர்ந்து கொள்ளவில்லை; பொல்லாதவனாகவே பொங்கி நின்றான் என்று இது குறித்திருக்கிறது.

பாம்பு நல்ல பாலைப் பருகி வந்தாலும் உள்ளே நஞ்சு வளர்ந்தே வரும்; அவ்வாறே வெளியே நல்ல நூல்களைப் படித்து வந்தாலும் பொல்லாதவர் நெஞ்சம் கொடியராய் நெடிதோங்கி நீண்டே நிற்பர் என்பதை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம்.

"உபதேசோஹி மூர்க்காணாம் ப்ரகோபாய ந சாந்தயே
பயோதாநம் புஜங்காநாம் கேவலம் விஷவர்த்நம்."

மூர்க்கர்களுக்கு அரிய உபதேசங்களைச் செய்தாலும் அவர் இனியராகர்; கொடியரே யாவர்; பாம்புகளுக்குப் பால் வார்த்தாலும் விஷமே விருத்தியாம் என்னும்இது இங்கே அறியவுரியது.

புன்மையான நிலைகளிலேயே பழகியுள்ளவர் புல்லர் என நேர்ந்தார். அவர் உள்ளம் தூய்மையடைந்து நல்லவராய் உயர்ந்து வருதல் அரிது ஆதலால் அவரை நண்பராக நம்பி நணுகலாகாது. துன்பமே என்று தொலையில் ஒதுங்க வேண்டும்.

மனிதர்களுடைய தராதரங்களைச் சரியாகத் தெரிந்து பழகுவதே சிறந்த விவேகமாம். தன் வாழ்வில் அல்லல் யாதும் நேராமல் ஆராய்ந்து தெளிந்து நல்லவரோடு பழகிவரின் அந்த மனிதன் எந்த வகையிலும் நன்மைகளை அடைந்து கொள்ளுகிறான்.

பொல்லாத சூழல் புடைபரந்து நின்றாலும்
நல்லார் தொடர்பை நனிநயந்து---எல்லாரும்
ஓர்ந்து தெளிந்துள் உவந்துவர வாழ்வதே
தேர்ந்த அறிவின் திறம்.

மாந்தருடைய நிலைகளைக் கூர்ந்து அறிந்து குணமாய் வாழ்வதே மணமான வாழ்வாம். காண நேர்ந்த மனிதரைக் கருதியுணர்ந்து உறுதி காண்பவன் அரிய மதியூகியாய் உயர்ந்து திகழ்கிறான். ஊன்றி உணர்வதில் உய்திகள் தோன்றுகின்றன.

The proper study of mankind is man. [Pope]

மனித இனத்தைச் சரியாய் அறிந்து கொள்பவனே சிறந்த மனிதன் ஆகிறான் என்னும் இது ஈண்டு ஊன்றி உணர வுரியது.

எவருடைய இயல்புகளையும் இனிது அறிந்து தவறுநேராமல் தன்வாழ்வை நடத்திவரின் அவன் உயர்வுடையனாய் ஒளிபெற்று வருகிறான். நல்லவிவேகத்தால்எல்லாநன்மைகளும்விளைகின்றன.

---

836. நேர்ந்த பகைவர் நிலைதளர்ந்து நீள்வறுமை
சார்ந்தெளிய ராய்வரினும் சாரற்க—காய்ந்துலர்ந்த
வித்துமழை வீழ்ந்தவுடன் விம்முதல்போல் வேறுதுணை
ஒத்தவுடன் ஓங்குவார் உள். (சா)

இ-ள்

முதலில் பகையாய் நேர்ந்தவர் கால வேற்றுமையால் நிலைகுலைந்து வறுமையடைந்து எளியராய் வந்து இனியர் போல் உன்னைச் சாரவரினும் நீ அவரைச் சேராதே; காய்ந்து உலர்ந்து கிடந்த விதை சிறிது மழை பெய்தவுடன் முளைத்துக் கிளைத்தல் போல் வேறு துணை கிடைத்தவுடன் உள்ளே சீறி உனக்கு அவர் கேடுபுரிய மூளுவர்; அதனை நாடி உணர்ந்து நலம் தெளிக.

உறவு பகை நட்பு என்பன உலக வாழ்வில் உலாவி வருகின்றன. மாந்தர் யாண்டும் சேர்ந்து வாழும் இயல்பினர் ஆதலால் செயல் நிலைகளின் மாறுபாடுகளால் வேறுபாடுகள் அவரிடையே விளைந்து விரிந்துவிபரீதமாய்வளர்ந்து விடுகின்றன.

விருப்பு வெறுப்புகள் சீவ சுபாவங்களாய் மேவியுள்ளன. ஒருவனிடம் சிலர் பிரியமாய் நண்பு பூண்டிருக்கின்றார்; சிலர்

வெறுப்பாய் விரோதம் கொண்டு நிற்கின்றார்; பலர் பொதுவாயிருக்கின்றனர். இந்த மூவகை நிலைகள் யாண்டும் நீண்டன.

பொறாமை பொருளாசை தகாதசெயல் வாக்கு வாதம் முதலிய குரோதங்களால் விரோதங்கள் விரிந்து வருகின்றன. வழிமுறையே தொடர்ந்து வரும் பகைமை பரம்பரை விரோதம் என வரும். அந்த விரோதியை எந்தவகையிலும் அணுகாமல் விலக்கிவிட வேண்டும். அணுகினால் அல்லலும் அவலங்களுமாம்.

உள்ளத்தில் பகைமை யுள்ளவன் வெளியில் நல்லவனைப் போல் நடித்து உறவு கொள்ளவருவன்; அவனை உரிமையாளனா நம்பலாகாது; நம்பித் தழுவிக் கொண்டால் சமையம் பார்த்து நாசம் செய்து விடுவான். நீசம் நேராமல் நினைந்து விலகுக.

பகையாளி குடியை உறவாடிக் கெடு என்பது பழமொழி வழக்காய் வந்துள்ளது. பகைவரை வெல்லும்வகையினர் சூழுவுக்குஇது ஒரு தொகையான மந்திரமாய்த்தோன்றியிருக்கிறது.

எதிரி படைமுதலிய நிலைகளில் வலியுடையனாயின் அவனை நேரே எதிர்த்து வெல்ல முடியாது; ஆகவே வஞ்சகமாய் அவனுக்குக் கேடு சூழ நெஞ்சம் துணிகின்றனர். அவ்வாறு கரவு நிலையில் உறவாட வருகின்றவரிடம் மிகவும் எச்சரிக்கையாயிருக்கவேண்டும். குறி தவறினால் கொலை நிகழ்ந்து விடும்.

எளியராய் அழுதாலும், மெலியராய்த் தொழுதாலும், இனியராய் இதமொழிகள் பேசினாலும் பகைவரை உரிமையா மருவலாகாது. அழுகள்ளன், தொழுகள்ளன், ஆசாரக்கள்ளன் என்னும் களவு நிலைகள் எல்லாம் ஒன்னாரின் உளவு வழிகளாய் வந்துள்ளன. எவ்வழியும் விழியூன்றிச் செவ்வையாப் பேணுக.

வஞ்சக நடிப்புகள் நஞ்சகம் பொருந்தி வரும் ஆதலால் இவற்றை யூகமாய் நெஞ்சம் தெளிந்து கொள்ள வேண்டும்.

தொழுகை யுள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. (குறள்,828)

பகைவர் நல்ல நண்பர் போல் மெல்ல வந்து தொழுதாலும் அழுதாலும் அவரை நம்பாதே; வணக்கமாய்த் தொழுகின்ற அக் கையுள்ளேயே உன்னைக் கொல்லவல்ல கொலைக் கருவி

மறைந்திருக்கும்; அதனை யூகமாய் உணர்ந்து உறுதி சூழ்ந்து கொள்க எனத் தேவர் இங்ஙனம் நன்கு உணர்த்தியிருக்கிறார்.

தொழுததம் கையின் உள்ளும் துறுமுடி யகத்தும் சோர
அழுதகண் ணீரி னுள்ளும் அணிகலத் துஅகத்தும் ஆய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுடன் ஒடுங்கும் பற்றாது
ஒழிகயார் கண்ணும் தேற்றம்; தெளிகுற்றார் விளிகுற்றாரே.
(சீவகசிந்தாமணி, 1891)

தொழுத கையுள்ளும் அழுத கண்ணீர் உள்ளும் அணிகலங்களுள்ளும் உன்னைக் கொல்லும் கருவி ஒடுங்கி யிருக்கும்; ஆதலால் எதிரிகளை இனியரா எண்ணாதே; யாரையும் எளிதே நம்பிச் சேராதே; சேர்ந்தால் அழிவே விளையும் என இது குறித்துள்ளது. குறிப்பைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்க வேண்டும். தேவர் வாய் மொழியை வரைந்து கொண்டு தெளிவான நிலைகளைவிளக்கி இதுவிரிந்துவந்துள்ளமையை இங்கேநாம்தெரிந்துகொள்கிறோம்.

காய்ந்து உலர்ந்த வித்து என்றது பகைவரது நிலையை உய்த்துணர வந்தது. வறுமையால்வாடி அல்லலால் நொந்து யாதொரு ஆதரவும் இன்றி எளிமையாய் வந்தாலும் பகைமையாளரை உரிமையா நம்பலாகாது என்பதை நன்கு தெளிய அது உவமையாய் நேர்ந்தது. வித்துள் விளைவதை உய்த்து உணருக.

பசையற்று நிலத்தில் கிடந்த வறிய வித்து சில மழைத் துளிகள் வீழ்ந்தவுடனே கிளைத்து எழும்; அதுபோல் மெலிந்து கிடந்த பகையும் அயலே சார்பு சிறிது பெறின் உடனே பெருகி எழுந்து கொடிய அழிவுகளை அதி விரைவில் செய்ய நேரும்; ஆதலால் அதனை எவ்வழியும் எத்துணையும் சேரலாகாது.

தனக்கு அல்லல் நேராமல் பாதுகாத்துக் கொள்வதே ஒருவனுடைய நல்ல அறிவுக்குப்பயனும். யூகம், விவேகம் என்பன உணர்வின் உயர்ந்த பாகங்களாய் ஒளி தோய்ந்து ஓங்கியுள்ளன.

எத்தகைய நிலையிலும் தன்னை உத்தமனா உயர்த்தி வாழ்க்கையில் வெற்றி பெற்று வருபவனே வித்தக விவேகியாய் விளங்கி வருகிறான். எதிரியின் மருமங்களை எதிரறிந்து விலக்கிக் கருமங்களைக் கருதிச் செய்து வரின் அவனுடைய வாழ்வு எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து திகழும். நேர்ந்த எதனையும்

நிதானமாய்க் கூர்ந்து ஓர்ந்து நிலைமையைத்தேர்ந்து கொள்வதே தலைமையான யூகமாம். உணர்வின் அளவு உயர்வுகள் உளவாம்.

போகம் பொருளுயர்வு பொங்கிவரும் எங்குமே
யூகம் உடையான உழை.

இதனை இங்கே நன்கு மனனம் செய்து கொள்ளுக.

---

837 ஏற்ற பகைவர் எழுகோடி ஆனாலும்
ஊற்றமுற நின்றொருகால் உய்யலாம்—தோற்றமுறா
உட்பகைதான் ஒன்றேனும் உய்தலரி தையகோ
மட்பகைபோல் கொய்யும் மதி. (எ)

இ—ள்

எதிரே தோன்றிய பகைவர் ஏழு கோடி ஆனாலும் யாதொரு கேடும் இன்றி இனிது வாழலாம்; உள்ளே மூண்டுள்ள வஞ்சப்பகைவன் ஒரு சிறியனே எனினும் உய்ய முடியாது; மண்பாண்டத்தைக் கொய்து நீக்கும் வெய்ய துரும்பு போல் விளிவை விரைந்து செய்து விடுவன் என்க.

பகைமை எவ்வகையிலும் இடரே புரிவது; புறப்பகை அகப்பகை உட்பகை என அது மூவகை நிலையில் மேவியுள்ளது. அயலே பகிரங்கமாய் மாறுபட்டிருப்பவர் புறப்பகைவர்; உள்ளே உரிமையாய் மருவிக் கரவாய்க் கேடு புரிபவர் உட்பகைவர்; அகத்தே அமைந்த காமம் வெகுளி மதம் மாச்சரியம் முதலியன அகப்பகை. இந்த மூவகைப் பகையும் ஒன்றை விட ஒன்று அஞ்சிக்காக்கத்தக்க நிலையினவாய் நிலைத்து நிற்கின்றன.

பகை விளைவதற்கு மூலகாரணம் பழக்கமான தொடர்பே. நெருங்கிப் பழக நேர்ந்தவர்தாம் பெரும்பாலும் பகைவராய் நேருகின்றனர். தாயாதிப்பகை, பங்காளிப்பகை, இனப்பகை, ஊர்ப்பகை என வருவன பகை விளைந்து வரும் நிலைகளைத் தெளிவாவிளக்கி நிற்கின்றன. தாயாதி முறையினாலேயே தருமரோடு மாறுபட்டுத் துரியோதனன் கொடிய பகைவனாய் நின்றான்; நெடிய துயரங்களைக் கடுமையாய்க் கருதிச் செய்தான்.

கேவலந்தீர் வலியபகை கிடக்கமுதற்
கிளர்மழைக்குக் கிரிஒன்று ஏந்து
கோவலன்போய் உரைத்தாலும் குருநாடும்
அரசும் அவன் கொடுக்க மாட்டான்

நாவலம்பூ தலத்தரசர் நாடிரந்தோம்
எனநம்மை நகையா வண்ணம்
காவலன்றன் படைவலியும் எமதுதடம்
புயவலியும் காண லாமே. (பாரதம்)

இக் கவியின் சுவைகளையும் நயங்களையும் நயந்து காணுக.

வலிய பகை நெஞ்சில் மண்டியிருத்தலால் தாயபாகத்தைத் துரியோதனன் கொடுக்க மாட்டான்; கண்ணனை அவனிடம் தூது அனுப்ப வேண்டாம்; பொருது வென்றே அரசுரிமையை நாம் அடைய வேண்டும் என்று நகுலன் இவ்வாறு மான வீரோடு கூறியிருக்கிறான். கொடிய பகைமை கொண்டுள்ள எதிரியை அடியோடு தொலைப்பதே தகைமையாம் என வகைமையான தறுகண்மைகூர்ந்து அவன் கருதியிருப்பது இங்கே தெரியவந்தது.

வெளிப்படையாய் நின்ற இத்தகைய புறப்பகையினும் அகப்பகை மிகவும் அஞ்சத் தக்கது. இந்தப் பகைவகையுள் காமமும் கோபமும் கொடியன; எவரையும் அடியோடு கெடுக்க வல்லன. அசுரர் எவரையும் வென்று உயர்ந்த வெற்றி வீரனாய்ச்சிறந்த நிலையில் விளங்கியிருந்த இந்திரனைக் காமம் ஒரு நொடியில் கெடுத்து விட்டது; பெரிய தவசியாய்ப் பேர் பெற்று நின்ற விசுவாமித்திரரைக் கோபம் நிலை குலைத்து வீழ்த்தியது; இவ்வாறு உள்ளேயே பதுங்கியிருந்து பொல்லாத அழிதுயரங்களைச் செய்தலால் காமம் முதலியன அகப்பகை என வந்தன. நித்திய சத்துருக்களாய் நிலைத்து வருகிற இவற்றை அடியோடு தொலைத்தவரே அற்புத ஞானிகளாய் அதிசய ஆனந்தங்களை அடைகின்றனர். புலன்களை வென்றவர் புனிதராய் நின்றனர்.

புறப்பகை கோடியின் மிக்குறினும் அஞ்சார்
அகப்பகை ஒன்றஞ்சிக் காப்ப அனைத்துலகும்
சொல்ஒன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலும் காமப் பகை. (நீதி நெறி விளக்கம், 55)

ஒரு சொல்லால் உலகையெல்லாம் வெல்ல வல்ல தவசிகளும் அகப்பகையை வெல்ல முடியாமல் நாளும் விழிப்போடு தம்மைக்காத்து வருகின்றனர் என்னும் இது கருதியுணரவுரியது.

புறப்பகைதான் எவ்வளவும் போக்கலாம் பொல்லா
அகப்பகையேல் அந்தோ அழிவாம்---புறத்தமைந்த
கண்ணிமைமேல் புண்என்னில் காக்கலாம் கண்ணுள்ளே
நண்ணிவிடின் என்னுமோ நாடு.

புறப்பகையினும் அகப்பகை அழிதுயருடையது; கண்ணுள் நுழைந்த புண் போல் எண்ணரிய வேதனைகளை இழைத்து விடும் என இது உணர்த்தியுள்ளது. இந்த இருவகைப் பகைகளோடு இடை மருவியுள்ள உட்பகையையும் ஓர்ந்து விரைந்து கடிய வேண்டும். கடியாது கழிய விடின் குடியை அடியோடு அது கெடுத்துவிடும். கேடு விளையுமுன் நாடிக் களைந்து விடுக.

எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. [குறள், 889]

உட்பகை எள் அளவே ஆயினும் அது மலையளவு கேட்டை விளைத்து விடும் என இது குறித்திருக்கிறது. அதனைச் சிறிது என்று எண்ணி ஏமாந்து நில்லாதே; ஒல்லையில் களைந்து ஒழித்து விடு என விழிப்பூட்டி விரைவு படுத்தித் தேவர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். அழிவுநிலை தெளிவாய் விழிதெரிய நேர்ந்தது.

மட்பகை போல் கோய்யும் என்றது உட்பகை செய்யும் அழிவு நிலையை நுட்பமா உணரவந்தது. குயவன் சக்கரத்தின் மீது மண்ணை வைத்துப் பானை வனைகிறான்; அது உருவாகி வருகிறது; அவ்வாறு வரும்போதே ஒரு துரும்பை அடியில் அணைத்துஅதனைஅடியோடு துணித்து விடுவன். உட்பகைவரும் இப்படி உறவுபோல் அணுகி உயிர்க்கேடு செய்துவிடுவர்.

தாயோடு பிள்ளை தலைக்கூட விடாமல் குடியைக் குலைத்து உட்பகை கொடுங்கேடு விளைத்து விடும் என்பதை உவமைக் குறிப்பால் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்கின்றோம்.

புறத்தே இனிய உறவு போல் தோன்றி அகத்தே கொடிய இறவு சூழும் இந்த வஞ்சப் பகை நஞ்சினும் கொடியது; நாசம் புரிகின்ற இந் நீசத்தை அஞ்சி நீக்குக.

புறம்நட்டு அகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேருதல் வேண்டும் கழிபெரும்

கண்ணோட்டம் செய்யார் கருவியிட்டு ஆற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

(நீதி நெறி விளக்கம்)

புண்ணை மூடிவைத்தால் புழுமலிந்து உடல் நாசமாம்; உட்பகையைப் பொதிந்திருந்தால் துயர் மிகுந்து உயிர்க்கு அழிவாம். நண்ணிய புண்ணை அறுத்து ஆற்றுதல் போல் அண்ணிய உட்பகையைக் கடுத்து வெளிப்படுத்தி விரைந்து ஒழித்து விடுக எனத் தெளித்திருக்கும் இதை விழித்து நோக்குக.

பொறாமை குரோதம் முதலிய சிறுமைகள் மனிதரைப் புலைப்படுத்தியுள்ளன; ஆகவே எவரையும் எளிதில் நம்பலாகாது; யாரிடமும் எவ்வழியும் மிக எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.

"Man is daily in danger from man." [Seneca]

மனிதனிடத்திலிருந்து விளையும் அபாயத்தில் தான் மனிதன் நாளும் இருந்து வருகிறான் என்னும் இது இங்கே உணர்ந்து கொள்ளவுரியது. பொல்லாதவரின் அல்லல்கள் அணுகாமல் யாண்டும் ஒல்லையில் ஓர்ந்து விலகி நல்ல மதியூகமாய் வாழுக.

---

838. ஊடிநின்ற உட்பகைதான் ஓரணுவே ஆனாலும்
கோடியினும் மிக்கதுயர் கூட்டுமே—கோடியபுன்
கூனியால் சீராமன் கோலிழந்து கொண்டதுயர்
வானினும் நீண்டதே வந்து. (அ)

இ. ள.

மாறுப்பட்ட உட்பகை ஒரு அணுவே ஆனாலும் அளவிடலரிய அழிகேடுகளை விரைவில் விளைத்துவிடும்; நெஞ்சம் கோடிய ஒரு கூனக்கிழவி செய்த வஞ்சத்தால் அரசு திருவை இழந்து அடவிபுகுந்து இராமன் அடைந்த துயரங்கள் நெடியவானினும் நீண்டு நின்றன; அந்நிலையை நினைந்து புலைகளைந்து நலமாய்வாழ்க.

ஒரு சிறு தீப்பொறி ஊரை எரித்து விடும்; துளி அளவு நஞ்சு உயிரை வதைத்து விடும்; அதுபோல் அணு அளவு பகையும் காலம் நேரும் போது யாரும் மீளமுடியாதபடி கொடிய துயரங்களைச் செய்து குடிகேடுகள் புரிந்து விடும்.

அயோத்தி நகரில் கைகேசி மாளிகையில் மந்தரை என்னும் பேருடைய ஒரு கிழவி இருந்தாள். அதிசயமான சாதுரிய சாகசம் உடையவள்; பேசுவதில் வல்லவள். முதுகில் சிறிது கூன் இருந்தமையால் கூனி என்றே அவளை யாவரும் அழைத்தனர்.

இராமன் இளமையில் ஒரு நாள் அந்தப் புரத்துப் பூஞ் சோலையுள் சிறியவில்லோடு உல்லாசமா உலாவி வந்தான். அங்கே கூனியைக் கண்டான். கிழவியின் வளைந்த முதுகு அந்த அழகனுடைய இளங்கண்களுக்கு வியப்பாய்த் தோன்றியது; தோன்றவே கையிலிருந்த மண் உருண்டையை வில்லில் வைத்து அந்தக் கூனை நோக்கி எய்தான்; குறிதவருமல் பாய்ந்தது; கிழவி திரும்பிப் பார்த்தாள்; குழகன் புன்னகை புரிந்தான். தன் கூனை இகழ்ந்து கேலி செய்தான் என்று கூனி சினந்தாள். சக்கரவர்த்தித் திருமகன் ஆதலால் யாதும் பேசாமல் அடங்கிப் போனாள். ஆண்டுகள் பல கழிந்தன; பருவம் எய்திய போது தனது அருமைத் திருமகனுக்கு மணிமுடி சூட்ட வேண்டும் என்று தசரதன் விரும்பினான். வேண்டிய ஆய்த்தங்களை விரைந்து செய்தான். கூனி தெரிந்தாள்; முடிசூட்டு விழா முடியாதபடி செய்ய மூண்டு எழுந்தாள். என் கூனில் தெரித்தவனைக் கானில் துரத்துவேன் என்று கடுத்து விரைந்து கைகேசியிடம் போனாள்; கடுங்கோள் மூட்டினாள்; இராமன்பால் பேரன்புடைய அவள் முதலில் கிழவியை இகழ்ந்து வெறுத்தாள்; பின்பு அவள் பேச்சில் மயங்கி உள்ளம் திரிந்து உறுதியாய் மூண்டு இராமனைக் காட்டுக்கு ஓட்டினாள். மனைவியும் தம்பியும் தொடர்ந்து வர அடவியில் அலைந்து அல்லல் பல அடைந்தான். அற்பமான ஓர் உட்பகையால் அளவிடலரிய துயரங்களைத் தான் அடைய நேர்ந்ததை நினைந்த போதெல்லாம் சீவசுபாவங்களை இராமன் வியந்து வந்தான். அரசன் என்ற மமதையால் யாரையும் எளிதாக எண்ணி இகழலாகாது எனத் தெளிவாய் எவர்க்கும் சொல்ல நேர்ந்தான். அரசியல் முறைகளைச் சுக்கிரீவனுக்கு உரைக்கும் போது அவ்வீரக் குரிசில் கூறியிருப்பது வித்தக போதனையாய் விளைந்து உலகம் யாண்டும் உய்த்துணர நின்றது. ஒன்று அயலே வருகின்றது.

சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந்
நெறியிகழ்ந்து யானோர் தீமை இழைத்ததால் உணர்ச்சி நீண்டு

குறியதா மேனியாய கூனியால் குவவுத் தோளாய்!
வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்.
(இராமா, கிட்கிந்தா, அரசியல் 32)

சிறியர் என்று எவரையும் இகழாதே; எவ்வுயிர்க்கும் துயர் செய்யாதே; அவ்வாறு செய்யின் வெவ்விய துயரங்கள் விளைந்து விடும் எனத் தனது அனுபவத்தை விளக்கித் தன்னையே சான்முக எடுத்துக் காட்டிக் கோதண்ட வீரன் இவ்வாறு குறித்திருக்கிறுன். குறிப்புகளைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும். கூனியால் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன் என்றது ஆழ்ந்த பரிதாபமாய் நீண்டு நின்று உலக உள்ளங்களை என்றும் உருக்கியுள்ளது.

சிறுபிள்ளைத்தனமாய் இளமையில் செய்த ஒரு சிறு பிழை அளவிடலரிய துன்பங்களை விளைத்து விட்டதே! என்று உள்ளம் பதைத்து உலகம் அறிய உரைத்தது யாருக்கும் யாதொரு தீமையும் செய்யாமல் மனிதர் உய்ய வேண்டும் என்று கருதியேயாம்.

அரச குமாரன் என்ற இறுமாப்பே அந்தக் கிழவியை எளிதா எண்ணிப் பிழை புரியச் செய்தது; அதனுல் முடி துறந்தேன்; முடிவில்லாத கொடிய துயரங்களை அடைந்தேன்; நீ இப்போது புதிதாய் அரசதிருவை அடைந்திருக்கிருய்; அந்தச் செல்வச்செருக்கால் யாரையும் அவமதியாதே; எவருக்கும் இடர் செய்யாதே; எவ்வழியும் இதமே செய்! என்று வானரவேந்தனுக்கு இம்மான வீரன் மதிநலம் கூர்ந்து போதித்திருக்கிருன். இது உலகிற்கு ஒரு ஞானபோதனையாய் வந்துள்ளது.

சாதித்திமிர், செல்வத்திமிர், கல்வித்திமிர், முதலிய இந்தப் பொல்லாத்திமிர்களே எல்லாத்துயரங்களுக்கும்ஏதுவாயுள்ளன. அகங்காரம் கருவம் செருக்கு மேட்டிமை என்னும் மொழிகள் அவற்றின் தீமைகளைத் தெளிவாக வெளியே காட்டிக் கொண்டு நிற்கின்றன. இழி செருக்கே அழிகேடான பழிதுயரங்களுக்கெல்லாம் யாண்டும் காரணமாய் வருவது கருதியுணரவுரியது.

Pride is at the bottom of all great mistakes. (Ruskin)

பெரிய பிழைகளுக்கெல்லாம் மூலமாயிருப்பது செருக்கே என ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் குறித்திருக்கிருர். உள்ளத் தருக்கால் அல்லல்களே உளவாம்.

உள்ளே இருந்து கொண்டே எல்லையில்லாத அல்லல்களை விளைப்பது ஆதலால் இது பொல்லாத பகை என மேலோர் எல்லாரும் எள்ளியுள்ளனர். புறப்பகையினும் உட்பகையினும் இந்த அகப்பகை மிகவும் கொடியது. இதனை அடக்கின் அதிசயமாம்.

கூனியைக் கொடிய பகை ஆக்கி இராமனது குடியைக் கெடுத்தது ஆதலால் இதன் கொடுமையும் கடுமையும் காணலாகும். அல்லது ஒழிந்து விடின் நல்லது விளைந்து வரும்.

பொல்லாப் பகைகள் எல்லாவற்றுள்ளும் இந்த உட் பகை எவ்வழியும் தீயது; இதனைக் கடிந்து ஒழுகுக என அந்தக் கவி அரசனுக்கு இக்கோமகன் சுவையாக அறிவுறுத்தியருளினன்.

---

839. உள்ளே பகைகொண் டுறவினன்போல் வந்துநின்ற
கள்ளமுறும் விச்சுவனைக் கண்டவுடன்—பொள்ளெனவே
வெட்டி அமரர்கோன் வீட்டினன் உட்பகையை
ஓட்டியுறல் தீதாம் ஒழி. (கூ)

இ-ள்.

உள்ளே கொடிய பகை கொண்டு வெளியே இனிய உறவினன் போல் கள்ளமாய்வந்த விச்சுவனை இந்திரன் உணர்ந்து உடனே அழித்து ஒழித்தான்; உட்பகை யாண்டும் தீயது; அதனை யாதும் அணுகாமல் அயலே அகற்றி விடுக என்பதாம்.

தனது குடிவாழ்க்கை எவ்வழியும் செவ்வையாய் நடந்து வர யாண்டும் விழிப்போடு பேணி வருபவனே மேலான குலமகனாய் விளங்கி வருகின்றான். சாதாரணமான குடி வாழ்வை விட அரச வாழ்வு அரிய பல கவலைகளையுடையது. சிறந்த செல்வங்கள் பெருகி வருந்தோறும் நிறைந்த கவலைகளும் நெடிய பகைமைகளும் நேரே தொடர்ந்து வருகின்றன.

பரந்த தேசத்தின் பாதுகாப்பு அவனிடம் உரிமையாய் அமைந்துள்ளமையால் எங்கும் நன்கு நாடிக் காக்கும் பொறுப்பு அவனுக்குக் கடுமையாய் நீண்டு நின்றது. மதியூகமான எச்சரிக்கையோடு மருவிவரும் அளவே அவனது ஆட்சி மாட்சியாய்ப் பெருகி வருகிறது. எவ்வகையிலும் பகைவகையில் விவேகமாயிருப்பவன் வெற்றி நிலையில் விளங்கி நிற்கின்றான்.

விச்சுவவுருவன் என்பவன் சிறந்த மதிமான்; அரிய பல கலைகள் பயின்றவன். அசுர குருவான சுக்கிரன் போல் இராச தந்திரங்களில் இவன் உயர்ந்திருந்தான். இவனுடைய அறிவின் திறத்தை வியந்து தனக்கு மந்திரியாகவும் குருவாகவும் சிந்தனை செய்து இந்திரன் இவனை மருவிக்கொண்டான். அசுரர் மரபினன் ஆதலால் அமரர்பால் இயல்பாகவே பகைமை கொண்டிருந்தான்; அந்த வஞ்சநிலையைத் தேவராசன் அறிந்து கொள்ளவில்லை. தன் அரசு நலமுற ஒரு வேள்வி செய்ய விழைந்தான்; மந்திர முறையோடு அதனை விச்சுவனே செய்ய நேர்ந்தான். உள்ளம் கள்ளமாய் ஊறு செய்ய விரைந்தான். தானவர் வாழவும் வானவர் தாழவும் கரவாக அவன் உருச் செபித்து வந்தான். அந்த வஞ்ச நிலையை இந்திரன் யூகமாயுணர்ந்தான்; உணரவே ஒல்லையில் விரைந்து அவனை உடனே வெட்டி வீழ்த்தினான்.

கைதவக் குரவன் மாயம் கருதிலன் வேள்வி ஒன்று
செய்திடல் அடிகள் என்னத் தேவர்கட்கு ஆக்கம் கூறி
வெய்தழல் வளர்ப்பான் உள்ளம் வேறுபட்டு அவுணர்க்கு எல்லாம்
உய்திறம் நினைந்து வேட்டான் தனக்குமே லுறுவது ஓரான். (1)

வாக்கினால் மனத்தால் வேறாய் மகம்செய்வான் செயலை யாக்கை
நோக்கினான் ஓதி தன்னால் நோக்கினான் குலிச வேலால்
தாக்கினான் தலைகள் மூன்றும் தனித்தனி பறவை யாகப்
போக்கினான் அலகை வாயில் புகட்டினான் புலவுச் சோரி. (2)

(திருவிளையாடல்)

நெஞ்சில் பகைமைமண்டி வெளியே நல்லவன் போல் நண்ணியிருந்த நயவஞ்சகனை அமரர் கோன் அழித்து ஒழித்திருப்பதை இவை உணர்த்தி யுள்ளன. கபடமாய்ச் செய்கின்ற அவனது செயல் இயல்களைக் குறிப்போடு கூர்ந்து ஓர்ந்து கொண்டான் ஆதலால் ஓதிதன்னால் நோக்கினான் என்றார். ஓதி = ஞானம். அரியமறைகளை ஓதியுணர்ந்ததனால் விளைந்த யூகம் ஓதி என வந்தது. யாகத்தில் பகைவனால் நேர்ந்த அபாயத்தைத் தனது யூகத்தால் கடந்து மகவான் உய்தி பெற்றிருக்கிறான்.

உய்த்து உணர்கிற புத்திமான் எத்தகைய இடர்களையும் விரைந்து நீக்கி வெற்றி பெற்று வருகிறான். கூரிய அறிவு சீரிய

தெய்வீகமுடையது ஆதலால் அதனையுடையவன் அல்லல் யாதும் நேராமல் நல்ல சுகத்தை நேரே நன்கு காண்கின்றான்.

எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய். (குறள், 429)

பின்னே வருகிற அபாயத்தை முன்னதாகவே யூகமாய் அறிந்து காக்க வல்ல விவேகமுடையவர்க்கு நடுங்கத் தக்க துன்பம் யாதும் நேராது எனத் தேவர் இவ்வாறு குறித்திருக்கிறார்.

எவ்வகையிலும் இடர் நேராமல் செவ்வையாகப் பாதுகாத்துத் தன் சீவியத்தை இனிது நடத்துகின்றவன் எவனோ அவனே யாண்டும் சிறந்த மேதையாய் உயர்ந்து திகழ்கின்றான்.

மதியூகம் அதியோகம் என்பது பழமொழி. சித்த சுத்தியும் தெளிந்த புத்தியும் தெய்வத்தின் நிலையங்களாயுள்ளன. ஆகவே அவை அமைந்த போது அங்கே அதிசய மகிமைகள் தோன்றுகின்றன. ஞானம் தெய்வத்தின் தானமாயுள்ளது.

"No divinity is absent if prudence is present."
(Juvenal)

யூகம் உள்ள இடத்தில் தெய்வீகம் உள்ளது என்னும் இது இங்கே உணரவுரியது. அரியமதி பெரிய விதியாய்ப் பேராண்மை புரிகிறது. நல்ல அறிவால் நலம் பல விளைகின்றன.

தனது மேதையால் இந்திரன் ஏதம் நீங்கினான். பகைவகையினரை எவ்வகையிலும் நம்பலாகாது என்று அன்று முதல் அவன் நன்கு தெரிந்து கொண்டான். மயிரை ஒட்ட மழித்தாலும் மறுநாள் அது தலை நீட்டும்; உள்ளத்தின் செயிரும் அவ்வாறே உருத்து வரும். அகத்தில் செயிரோடு தோய்ந்துள்ள பகைவனை முகத்தின் மயிரோடு ஒப்பக் காட்டியது இகல் மூண்டு நீண்டு வரும் நிலைமையை நேரே தெரிய என்க.

உள்ள மயிரை ஒழித்தாலும் ஒல்லையது
மெள்ள முளைத்து மிகுதல்போல்---உள்ளம்
பகையாளர் வஞ்சம் பறித்தாலும் உள்ளே
தொகையாமே நம்பல் துயர்.

பகைவன் எவ்வளவு பணிந்து தணிந்தாலும் அவனைத் தகைவனாக நினைந்து நம்பாதே; தகுதியாக உணர்ந்து ஒழுகுக.

840. கல்வி அறிவு கருதும் மதியூகம்
எல்லாம் இனிதா இசையினும்—வல்லவினை
ஆற்றிவரும் அவ்வளவே அவ்வரசை யாவரும்
போற்றி வருவர் புகழ்ந்து. (ம)

இ-ள்.

சிறந்த கல்வியும் உயர்ந்த அறிவும் தேர்ந்த மதியூகமும் நிறைந்திருந்தாலும் கருமங்களை உரிமையோடு செவ்வையாய்ச் செய்து வருகிற அரசே எவ்வழியும் சிறந்து வரும்; யாவரும் அதனை உரிமையோடு புகழ்ந்து போற்றி உவந்து வருவர் என்க.

அறிவுக்கு உரிய பயன் அறிய வேண்டியதைத் தெளிவாக அறிந்து கொள்வதே. உலகவாழ்வில் பல வகை நிலைகள் அறிய வுரியனவாய் மருவி யிருக்கின்றன. அகமுகமாய் உயிரை நோக்கி உண்மையை உணர்வது ஆன்ம ஞானமாய் மேன்மை மிகுந்துள்ளது. வெளிமுகமாய்க் கருமங்களைக் கருதி நோக்கி உறுதி காண்பது உலக ஞானமாய் ஒளி புரிந்து விளங்குகின்றது.

உலக நிலைகளை ஓர்ந்து உறுதி நலங்களை உணர்ந்து தன் வாழ்வை நெறியே நடத்தி வருபவன் நிறைந்த மதியுடையனாய்ச் சிறந்து திகழ்கின்றான். கூர்ந்து உணரும்திறம் அரிய பல மகிமைகளை அருளி வருகின்றது. கூர்மையான சிந்தனையளவு மனிதன் சீர்மையானசிறப்புகளைச்செவ்வையா அடைந்துகொள்ளுகிறான்.

இயற்கையான யூகம் பயிற்சியால் உயர்ந்து வருகிறது.

கண் எதிரே காண நேர்ந்த பொருள்களை யெல்லாம் ஓர்ந்து நோக்கி அவற்றின் உண்மையான இயல்புகளைத் தேர்ந்து கொள்வது சிறந்த விவேகமாம். காவியங்களைக் கருதியுணர்வது போல் சீவசுபாவங்களையும் சீர்மை நீர்மைகளையும் கூர்மையாத் துருவி யறியின் அது அதிசய மதியாய்த் துதி செய்யப் பெறும்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. (குறள், 355)

உயர்ந்த அறிவுக்கு இலக்கணத்தைத் தேவர் இவ்வாறு உணர்த்தியிருக்கிறார். காணநேர்ந்த பொருள் வெளியேஎவ்வாறு தோன்றினும் சாரமான அதன் மூலவுண்மையைத் தெளிவாக

அறிந்து கொள்வதே விழுமிய மெய்யறிவாம் எனத் தெளிவு படுத்தியிருக்கிறார். கருதி நோக்குவதில் உறுதி காண வருகிறது.

நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களின் கலவையால் உலகம் அமைந்திருக்கிறது. அகிலவுலகங்களுக்கும் ஆதாரமாய் ஓர் நித்தியப் பொருள் நிலைத்துள்ளது. அந்த உண்மைப்பொருளையே கடவுள் என்று நாம் சொல்லி வருகிறோம். அது எங்கும் நிறைந்துள்ளமையால் மெய்யறிவாளர் எந்தப் பொருளிலும் அதன் இருப்பை அறிந்து கொள்ளுகின்றனர்.

கண்ட இடம்எல்லாம் கடவுள்மயம் என்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயம்நெஞ்சில் கொண்டிருப்பது எந்நாளோ?
(தாயுமானவர்)

ஞானிகள் காணும் காட்சியைத் தாயுமானவர் இவ்வாறு காட்டியிருக்கிறார். இது உயர்ந்த தத்துவக் காட்சியாம்; இத்தகைய நிலையை அடையாது போயினும் எப்பொருளையும் நுண்மையா நோக்கி அதன் உண்மையை உணர்ந்து கொள்பவன் உயர்ந்த புத்தி சாலியாய் ஒளிபெற்றுச் சிறந்து விளங்குகிறான்.

The wisest man may always learn something from the humblest peasant. (Senn)

தாழ்ந்த உழவனிடமிருந்தும் சில உண்மைகளை உயர்ந்த அறிஞன் எப்பொழுதும் அறியலாம் என்னும் இது இங்கு அறியவுரியது. நல்ல அறிவு நயங்களை நாடி அறிகிறது.

அறிவு எல்லையில்லாதது; எங்கும் எவ்வழியும் கருதியுணர்ந்து உறுதிகாணவுரியது. இத்தகைய அறிவும் செயலால் உயர்வடைந்து வருகிறது. கண் கண்டது கை செய்யும் என்பது பழமொழி. அறிவும் செயலும் கண்ணும் கையும் போல் மருவியுள்ளன. இரண்டும் கலந்தால் உயர்ந்தபலன்கள் விளைகின்றன.

தொழில் செய்து வரும் அளவுதான் வாழ்வு ஒளி மிகுந்து வருகிறது. தன் வாழ்க்கையைச் சீர்மையாய்ச் செய்து வருவதே ஒருவனது கூர்மையான அறிவுக்குப் பயனும். கல்வி கற்பது அறிவு வளர; அந்த அறிவு வளர்ச்சி ஆன்ம வளர்ச்சிக்கு அனுகூலமாய் மேன்மை புரிந்து வர வேண்டும். சீவியத்தை அல்லலுறாமல் செய்து கொள்வதே நல்ல கல்வியாம்.

**The best education in the world is that got by struggling to get a living. (Wendell philips)**

வாழ்க்கை வசதி பெற வருந்தி உழைப்பதால் பெறுவதே இவ்வுலகத்தில் உயர்ந்த கல்வியாம் என்னும் இது ஈண்டு உணர்ந்து கொள்ளத்தக்கது. முயற்சி செய்; அதுதான் உயர்ச்சியான கல்வி; உண்மையான படிப்பு என்று உணர்த்தியிருக்கிறார்.

வினை ஆற்று என்றது அதனால் விளைந்துவரும் மேன்மைகளை நினைவூட்டி நின்றது. அரிய மதியூகம் உரிய கருமங்களோடு ஊன்றிவரின் அது பெரிய யோகமாய்ப் பெருகி இனிய போகங்களை ஊட்டியருளுகிறது. காரியம் புரிவதே சீரிய விவேகமாம்.

மதியூகமாய் வினை செய்பவன் அதியூகியாய் உயர்கின்றான்; உயரவே யாவரும் அவனை உரிமையோடு துதி செய்து வருகின்றார். தொழிலில் யூகம் தோய எழிலும் இன்பமும் எய்துகின்றன.

சாணையில் தீட்டிய கத்தி கூர்மை ஆதல்போல் செயலில் நாட்டிய அறிவு சீர்மையாய்ச் சிறந்து திகழ்கின்றது. அரிய கருமங்களை ஆற்றுபவன் பெரிய அறிஞனாய்ப் பேர் பெறுகிறான்.

**"Action is the proper fruit of knowledge" (Thomas)**

அறிவின் சரியான கனி கருமமே என்னும் இது இங்கே கருதியுணர வுரியது. வினையாண்மை வித்தக விவேகமாகின்றது.

**The great end of life is not knowledge, but action. [Huxley]**

வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோள் அறிவு அன்று; செய்கையே எனச் சீவிய நிலையை இது குறித்துள்ளது.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

யூகம் அறிவின் தெளிவாய் அமைந்தது.
அது அரிய காரியங்களை எளிதே செய்கிறது.
தகுதிகளை நாடித் தகைமை புரிகிறது.
பகைவகை தெரிந்து நயமாய் ஒழுகுகிறது.
வெளிவேடங்களைத் தெளிவா அறிகிறது.
இகல் களைந்து இனிது வாழ்கிறது.
எதிரிக்கு இடங்கொடாமல் ஏற்றம் புரிகிறது.
உட்பகையை நுட்பமாய் ஓர்ந்து கொள்கிறது.
அல்லல்களை ஒல்லையில் ஒழிக்கிறது.
சீர்மையோடு சிறந்து வாழ்கிறது.

அஅ௪-வது யூகம் முற்றிற்று.

# எண்பத்தைந்தாம் அதிகாரம்.

## யூகி.

அஃதாவது மதியூகம் வாய்ந்த மந்திரியின் நீர்மை. அரிய பல அரசகாரியங்களை அதியூகமாய் ஆராய்ந்து ஆற்றவல்லவனது ஏற்றம் கூறுகின்றமையின் இஃது ஈண்டு வைக்கப்பட்டது.

841. கண்போல் அரசுக்குக் காட்சி புரிந்தமைச்சு
மண்பால் அமைந்து மதிசுரந்து—நண்பால்
அரிய வினைகளை ஆற்றி நெறியே
உரியவனாய் நிற்பன் உயர்ந்து. (க)

இ-ள்.

அமைச்சன் அரசனுக்குக் கண்போல் அமைந்து காட்சிகள்புரிந்து அறிவு நலங்கள் சுரந்து உரிமையோடு அரிய கருமங்களை ஆக்கியருளி உலகிற்கு உயர்ந்த நன்மைகளை உதவி நிற்பன்.

மந்திரியின் மாண்புகள் சிந்தனை செய்ய வந்தன.

ஒரு நிலமண்டலத்தை நெறிமுறையே பாதுகாத்து ஆண்டு வருபவன் அரசன் என அமைந்தான். அவனுக்கு எவ்வழியும் உறுதித்துணையாய் நின்று அறிவு நலங்கள் கூறி ஆதரவு புரிந்து நீதி தெரிந்து நெறியே வருபவன் அமைச்சன் என வந்தான்

மதிநலம் அமைந்து விதிமுறை தெளிந்து ஆட்சி நிலைக்கு உரிய துறைகளை உணர்ந்து மன்னனுக்கு அண்மையில் அமர்ந்து உண்மையாக உதவி புரிபவன் என்னும் குறிப்புகளை அமைச்சன் என்னும் பெயர் உணர்த்தி நிற்கிறது. அரசனுக்கு உரிமையாய் யாண்டும்உதவிபுரிய அமைந்தவன்அமைச்சன் என நேர்ந்தான்.

மந்திரி, அமாத்தியன், உழையன், சூழ்வோன், முன்னோன் எண்ணன், நூலோன், தேர்ச்சித்துணைவன் முதலிய பல பெயர்கள் அமைச்சனுக்கு அமைந்திருக்கின்றன. யாவும் காரணக் குறிகளால் வந்து அவனது கரும நிலைகளை உணர்த்தி நின்றன.

எண்ணர் நூலோர் அமைச்சர் மந்திரியர். (பிங்கலந்தை)

பிங்கல முனிவர் மந்திரிகளை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

உறைந்திடு நூலோர் சூழ்வோர் உழையர் மந்திரரே நீதி
அறிந்திடு முதுவர் முன்னோர் அமாத்தியர் அமைச்சர் நாமம்
(நிகண்டு)

குறித்துள்ள பெயர்களால் அமைச்சனுடைய குணநலங்களையும் அறிவு நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். செய்யும் செயல்களை நோக்கிப் பெயர்கள் பெருகி வந்துள்ளன.

பெரிய தேச ஆட்சிக்கு உரிய உசாத்துணையாய் அமைகின்றவனிடம் அரிய பல நீர்மைகளும் சீர்மைகளும் நன்கு அமைந்திருக்கவேண்டும். மதிநுட்பமும் வினைத்திட்பமும் மந்திரியின் சொந்த இயல்புகளாய் வந்த அளவுதான் அந்த அரசு எந்த வகையிலும் உயர்ந்து யாண்டும் மேன்மையாய் விளங்கும்.

காலம் இடம் வலி முதலிய நிலைகளைக் கருதியுணர்ந்து உறுதி தெளிந்து நாட்டுக்கும் அரசுக்கும் நலம் புரிந்து நெறிமுறைகளோடு நீர்மையாய்ச் சீர்மை செய்துவருபவனே சிறந்த மந்திரியாய்த் திகழ்ந்து எவ்வழியும் சீர்த்தியோடு துலங்கிவருகிறான்

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு. (குறள், 631)

இன்ன சீர்மைகள் அமைந்திருப்பவனே மன்னனுக்கு மந்திரியாய் வர வுரியவன் எனத் தேவர் இவ்வாறு குறித்திருக்கிறார். அரசகாரியங்களைக் கருதி ஆராய்ந்து பருவம் தவறாமல் உறுதியோடு ஆற்றவல்லவனே அமைச்சன் என்றதனால் அவனுடைய அறிவும் செயலும் நெறியும் நிலையும் அறிய வந்தன.

விதிமுறை தழுவி வினையாண்மையில் வீறு கொண்டபோது தான் அவன் மதிமந்திரியாய் மாண்புறுகின்றான். கண்ணுக்கு அழகு காட்சியில் தெளிவு; எண்ணுக்கு அழகு ஆட்சியில் மாட்சி. மண்ணுக்கு அழகு மன்னவன் மாண்பு.

மந்திரியைக் கண் என்றது மன்னனுக்கு எவ்வழியும் செவ்வையாத் தெளிவுறுத்தி ஒளி செய்து வரும் உரிமை தெரிய வந்தது. கண் ஒளியுடையதாயின் அந்த மனிதன் எதையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணர்ந்து உவந்து வாழுவான்; மந்திரி தெளிவுடையனாயின் அந்த மன்னன் எந்த நிலையையும் எதிர் அறிந்து இனிதுநடந்து தனியுரிமையோடு இன்பமாய் ஆளுவான்.

எண்சாண் உடம்புக்குச் சிரசே பிரதானம் என்பது பழமொழி.

இந்த முதுமொழி பிரதானிக்கும் பொருந்தி வந்துள்ளது. உடலுக்குத் தலைபோல் உலகுக்கு மன்னன் தலைவனாயிருக்கிறான். அந்தத் தலைக்குக் கண்போல் இந்தத் தலைவனுக்கு மந்திரி மருவியிருக்கிறான். மந்திரி இல்லையானால் அந்த அரசு கண் இழந்த குருடு போல் கழிந்துபடும் என்பது இங்கே தெளிந்து கொள்ள வந்தது. மதி யூகமுடைய மந்திரிகளைத் தன் கண்களாப் பேணிக் காரியம் புரிந்து வருகிற மன்னன் சீரிய மேன்மைகளோடு சிறந்து யாண்டும் உயர்ந்து திகழ்கின்றான்.

மந்திரக் கிழவர் கண்ணா மக்கள்தன் தாள்கள் ஆகச்
சுந்தர் வயிரத் திண்டோள் தோழராச் செவிகள் ஒற்றா
அந்தர உணர்வு நூலா அரசுஎனும் உருவு கொண்ட
எந்திரம் இதற்கு வாயாத் தூதுவர் இயற்றப் பட்டார்.

(சூளாமணி)

அரசனுக்குக் கண் கால் தோள் செவி வாய் அறிவு இவையாம் என இது சுவையாய்க் குறித்துள்ளது. உருவக நிலைகளை ஊன்றி உணர்ந்து பொருள் நயங்களை ஓர்ந்து கொள்ளுங்கள்.

நல்ல வழி காட்டியா யுள்ள விழிபோல் மந்திரி அமைந்துள்ளமையால் அவனுடைய மதிமொழிக்குச் செவிசாய்த்து மன்னன் விதிமுறையே ஒழுகி வரவேண்டும்; அந்நிலைவழுவின் புலை படிந்து அரசு பல துயரங்களை அடைந்து வருந்த நேரும்.

"கற்ற மந்திரி காட்டவும் காணாது
பெட்டாங்கு ஒழுகும் பெருமகன் போலவும்
முறைமையில் தேயும் நிறைமதி நீர்மை."

(பெருங்கதை, 1-46)

மந்திரியின் மதிமொழியைக் கேளாமல் மனம் போனபடி நடக்கும் மன்னவன் ஆட்சி சந்திரன் தேய்வது போல் தேய்ந்து போம் என இது குறித்திருக்கிறது. ஆட்சி மாட்சியுற வேண்டுமாயின் அமைச்சின் காட்சியை யாண்டும் கருதிஒழுகவேண்டும்.

உள்ளத் தெளிவும் நல்ல நீர்மையும் உள்ளவர் அமைச்சராக அமையின் ஒளி மிகுந்த விழிபோல் அந்த அரசு எந்த வழியும் இனிது இயங்கும்; அங்ஙனம் இல்லாதது அல்லலாய் மயங்கும்.

கற்றூர் பலரைத்தன் கண்ணுக இல்லாதான்
உற்றிடர்ப் பட்ட பொழுதின்கண் தேற்றம்
மரையா துணைபயிரும் மாமலை நாட
சுரையாழ் நரம்பறுத் தற்று. (பழமொழி)

கல்வியறிவுடைய நல்லமந்திரி இல்லாத அரசு நரம்பு அற்ற யாழ்போல் இழிந்து படும் என இது குறித்துள்ளது. கற்றூரைக் கண்ணுக உள்ளவன் உற்ற நிலையில் உயர்ந்து திகழ்கின்றான்.

கண் முகத்துக்கு அழகு; முகம் கண்ணுக்கு ஆதாரம். ஒளி அமைந்த கண்போல் தெளிவமைந்த மந்திரி அமையின் மன்னன் எழில் மிகுந்து விளங்குவான்; அவ்வாறு அமைய வில்லையானுல் கண் இழந்த முகம் போல் அவன் பொலிவிழந்து மெலிவான்.

கண்ணும் முகமும்போல் காட்சி யுயர்அமைச்சும்
அண்ணல் அரசும் அமைந்துளகாண்---நண்ணியதில்
ஒன்று பழுதுறினும் ஊனமா யீனமுறும
நின்று தெளிக நிலை.

இதனை ஈண்டு நன்கு தெளிந்து கொள்ள வேண்டும்.

உவமான உவமேயங்களின் பொருள் நயங்கள் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவுரியன. ஒளி இல்லாத கண்போல், கண் இல் லாத முகம்போல் அமைச்சில்லாத அரசு அவலமா யிழிவுறும்.

சந்திரன் இல்லா வானம், தாமரை இல்லாப் பொய்கை,
மந்திரி இல்லா வேந்தன், மதகரி இல்லாச் சேனை,
சுந்தரப் புலவர் இல்லாத் தொல்சபை, சுதரில் வாழ்வு
தந்திகள் இல்லா வீணை, தனம்இல்லா மங்கை போலாம்.
(விவேக சிந்தாமணி)

வானத்துக்குச் சந்திரன், தடாகத்துக்குத் தாமரை, சேனைக்கு யானை, சபைக்குப் புலவர், மனைக்குப்புதல்வர், வீணைக் குத் தந்தி, மங்கைக்குக் கொங்கை போல் மன்னனுக்கு மந்திரி யாம் என்க. எனவே அவனது நீர்மை சீர்மைகள் தெரியலாம்.

ஒளியும் அழகும் வலியும் மதிப்பும் வாழ்வும் இசையும் இன் பமும் ஏற்றமும் முறையே இங்கு நன்கு தெரிய வந்தன.

அரசனது நிலை முழுதும் அமைச்சரால் ஒளி பெற்று வரலால் அவர் கண் என எண்ண நேர்ந்தார். உடம்பு விழியால் ஒளி பெறு கிறது; அரசு அமைச்சால் தெளிவுற்று எழில்மிகப் பெறுகிறது.

"The light of the body is the eye: if therefore thine eye be single, thy whole body shall be full of light." (Bible)

கண் உடலின் ஒளி; ஆகவே உன் கண் தெளிவாயிருந்தால் உனது தேகம் முழுவதும் ஒளி நிறைந்திருக்கும் என ஏசுநாதர் கூறியிருக்கிறார். உடலுக்குக் கண்போல் அரசுக்கு அமைச்சு.

கண்வழி யாக்கை நடக்கிறது; அதுபோல் அமைச்சுவழி ஆட்சி நடக்கிறது. ஒளி நிறைந்த கண்போல் தெளிவமைந்த அமைச்சரை உரிமை செய்து கொண்டால் அந்த அரசனது ஆட்சி எவ்வழியும் சிறப்பாய் நடந்து இன்பநலமாய் விளங்கும்.

---

842. மன்னவன் என்ன மதியுடையன் ஆயினும்
அன்னவனோர் மந்திரியை ஆய்ந்துகொளின்—தன்னரசு
நன்னயமாய் ஓங்கி நலம்பலவும் காணுமே
பன்னரிய மேன்மை படிந்து. (உ)

இ-ள்.

அரசன் எவ்வளவு அறிவுடையனாயிருந்தாலும் நல்ல மந்திரி ஒருவனை உரிமைத்துணையாக ஆய்ந்து கொள்ளவேண்டும்; அவ்வாறு கொள்ளின் அந்த அரசு அரிய பல நலங்களையடைந்து பெரிய வளங்களோடு உயர்ந்து விளங்கும் என்க.

விரிந்து பரந்துள்ள தேசத்தைச் சிறந்த முறையில் பேணி வருவது அரசனுக்குக் காணியாய் அமைந்தது. அந்தப் பாது காப்புக்கு உரிமையான உறுதித்துணைவர்கள் மிகவும் தேவை. அரசியல் முறைகளை நன்கு தெரிந்த உயர்ந்த அறிவாளிகளே அதற்குத் தகுந்தவர்கள் ஆதலால் அவ்வாறான தகுதியாளரைத் தேர்ந்து எடுத்து வேந்தன் பகுதி தோறும் பண்பாற்றிவரின் அந்த அரசாட்சி எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து தேசு மிகுந்து வரும். உரிய வினையாளரால் அரிய ஆளுகை நிகழ்கிறது.

அரசியல் அமைச்சனால் அரிய மேன்மையாய்ப்
பரசிட வரும் அவன் பான்மை காணுக.

என்றதனால் ஆட்சிக்கும் அமைச்சுக்கும் உள்ள உறவுரிமை உணரலாம். மந்திரியின் தகைமையே மகிபதியின் மகிமையாம்.

ஒரு நாட்டின் ஆட்சி நலமாய் நடந்து வருவது அங்கே வாய்த்துள்ள மந்திரியின் மாட்சியாலேயாம். அலைகடலில் ஓடுகின்ற தோணிக்குக் காற்று எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் நிலவுலகில் நிகழுகின்ற ஆட்சிக்கு மந்திரி. தோணியை இயக்குகின்றவன் சிறந்த திண்ணியனாயிருந்தாலும் உரிமையான காற்று வீசவில்லையானால் அது சரியாய் இயங்காமல் தத்தளித்து நிற்கும்; அதுபோல் அரசை நடத்துகிற மன்னன். வல்லவனாயிருந்தாலும் நல்ல அமைச்சன் இல்லை ஆனால் அந்த ஆட்சி நன்கு செல்லாமல் அல்லல் அடைந்து அலமந்து மயங்கும்.

மால்மர் நெடுங்கடல் மதலை மாசிலாக்
காலமைந்து ஒழுகுமேல் கரையும் காணுமே
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவர் ஒழுக்கமும் வேலை காணுமே. (1)

தண்ணிய தடத்தவே எனினும் தாமரை
விண்ணியல் கதிரினால் விரியும் வேந்தனும்
புண்ணியப் பொதும்பரே புரிந்து வைகினும்
கண்ணிய புலவரால் அலர்தல் காண்டுமே. (2)

ஒன்றுநன் றெனவுணர்ந்து ஒருவன் கொள்ளுமேல்
அன்றென ஒருவனுக்கு அறிவு தோன்றுமே
நின்றதொன் றுண்டினி நீதி நூலினால்
ஒன்றிநின் றவருரை உலகம் ஒட்டுமே. (3)

அந்தணர் ஒழுக்கமும் அரசர் வாழ்க்கையும்
மந்திரம் இல்லையேல் மலரும் மாண்பில
இந்திரன் இறைமையும் ஈரைஞ் ஞூற்றுவர்
தந்திரக் கிழவர்கள் தாங்கச் செல்லுமே. (4)

(சூளாமணி)

மந்திரிகளைக் குறித்து வந்துள்ள இவை இங்கே நன்கு சிந்திக்கவுரியன. காயத்திரி முதலிய மந்திரங்களைச் செபித்து நெறியோடு ஒழுகி வரவில்லையானால் அந்தணர் அவலமாய் அழிந்து கெடுவர்; அரசியல் மருமங்களைத் தெளிவா அறிந்துள்ள மந்திரிகளோடு அளவளாவி ஆலோசனைகள் செய்யாது ஒழியின் அரச வாழ்வு பாழாம். பேரறிவுடைய இந்திரனும் ஆயிரம் மந்திரிகளைத் துணையாக்கொண்டு விண்ணுலக ஆட்சியை வியனா நடத்தி வருகிறான்; ஆதலால் மண்ணாளும் வேந்தர் சிறந்த மதிமாண்புடைய

ராயினும் தகுந்த மந்திரிகளைத் தக்கதுணையாகப் பக்கம் வைத்துப் பாராள வேண்டும்; அவ்வாறு ஆண்டபோதுதான் அரசு நீண்ட மகிமையோடு நிலவிவரும் என்பதை ஈண்டு நாம் உணர்ந்து கொள்கிறோம். மண் அரசோடு விண் அரசு மதிதெளிய வந்தது.

ஆயிரம் கதிருடை அருக்கன் பாம்பினால்
ஆயிரம் கதிரொடும் அழுங்கக் கண்டுகொல்
ஆயிரம் கண்ணுடை அமரர் கோனும்ஓர்
ஆயிரம் அமைச்சர்சொல் வழியின் ஆயதே. (சாந்திபுராணம்)

தேவராசனுக்கு ஆயிரம் மந்திரிகள் அமைந்திருந்தனர்; அவர் சொல்வழியே அவன் நல்வழியாய் ஒழுகி வந்தான் என இது உணர்த்தியுள்ளது. நீதிமுறைகளை நெறியே உணர்ந்த அறிவாளிகள் ஆதலால் அமைச்சர் மொழி அரசனுக்கு ஒளி விழியாய் உறுதி பயந்து எவ்வழியும் தெளிவுகளை அருளுகிறது.

நல்ல குடியில் பிறந்து கலைகள் பல கற்று நிலைவழுவாமல் ஒழுகி வருகிற விழுமியோரையே அரசியல் முறையில் வேந்தன் தழுவி வரவேண்டும். அவ்வாறு வரின் அந்த ஆளுகை எந்த நாளும் செவ்விய நிலையில் செழித்து எவ்வழியும் சிறந்து விளங்கிவரும். உரிய துணை அரிய மகிமைகளை அருளுகிறது.

"பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேதம் நெறி திரியினும
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ" (புறம், 2)

பால் புளித்தாலும் பகல் இருண்டாலும் வேதம் ஏதமாய் நிலை திரிந்தாலும் நீதிமுறை பிறழாத மந்திரச் சுற்றத்தோடு மருவி என்றும் நீ இனிது வாழுக எனச் சேரமன்னனை நோக்கி முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் பெருமான் இவ்வாறு வாழ்த்தியிருக்கிறார். உயர்ந்த அமைச்சர்களுடைய உண்மை நிலைகள் ஈண்டு உணரவந்துள்ளன. அரிய நீர்மைகள் அமையின் அங்கே அதிசய மேன்மைகள் துதி கொண்டு திகழ்கின்றன.

சிந்தனை உயரின் சீவன் சீருறும்;
தந்திரி உயரின் தானை தாருறும்;
மந்திரி உயரின் மன்னன் மாண்புறும்.

இவை இங்கே உன்னி உணர வுரியன.

843. எதிர்வருவ தோர்தல் இறையுயர்வு நாடல்
முதிர்பயன்கள் ஓங்க முயறல்—மதியுடையார்
சூழ்ந்துகொள நீதி துணிந்துசொலல் மந்திரியாய்
வாழ்ந்துகொள்வார் மாண்பாகு மால். (௩)

இ-ள்.

பின்னே நிகழ்வதை யூகித்து அறிதல், எவ்வழியும் அரசனுக்கு நன்மையை நாடுதல், சிறந்த வளங்கள் பல நாட்டில் விளைந்து வர முயலுதல், அறிஞர் எவரும் வியந்து கொள்ளும்படி நீதிகளை ஆராய்ந்து கூறுதல், தீதுகள் நேராமல் செவ்வையாய்ப் பேணுதல் முதலிய சீர்மைகள் மந்திரியின் நீர்மைகளாம் என்க.

மன்னனுக்கு உண்மைத் துணையாய் நின்று ஆட்சியை மாட்சியா நடத்தவுரிய அமைச்சன் இன்ன தன்மைகளோடு இசைந்திருக்க வேண்டும்; இவ்வாறு இசைந்த போது தான் அந்த அரசு எந்த வகையும் இசைமிகப்பெற்று இனிது விளங்கும். நல்ல அமைச்சு அமைந்தால் நாடாட்சி எல்லாவழியும் எழிலாய் யாண்டும் தெளிவோடு ஒளிமிகுந்து உயர்ந்து திகழும்.

ஒரு வீட்டுக்குத் தலைவன் போல் நாட்டுக்கு அரசன் அமைந்திருக்கிறான்; அந்தத் தலைவனுக்குத் தலைவிபோல் மன்னனுக்கு மந்திரி. மனையைஉடையவள் மனைவி; மந்திரம்உடையவன் மந்திரி. மந்திரம்=மறைமுறை, ஆலோசனை. பிறர் அறிய முடியாத அரிய மறைகளை முறையே அறிந்து சொல்பவன் எவனோ அவன் மந்திரி என வந்தான். அந்த மதி யூகியால் அரசுமுறை யாண்டும் பரசு முறையில் வரிசையோடு விளங்கி வருகிறது.

மனைக்கு விளக்கம் மனைவி; அரசுக்கு விளக்கம் அமைச்சன். என்பது முதுமொழி. இதனால் அவனது அமைதி அறியலாம்.

குடித்தனமும் துரைத்தனமும் ஒழுங்கே உணரவந்தன.

ஒருவனுக்கு எவ்வளவு செல்வங்கள் அமைந்திருந்தாலும் நல்ல மனைவி இல்லையானால் அவனது வாழ்வு தாழ்வாம்; அதுபோல் அரிய பல வளங்கள் நிறைந்திருந்தாலும் உரிய மந்திரி இல்லையானால் அந்த அரசு எந்தவழியும் இழிந்து அவலமாம்.

அரசனுக்குச் சேவி கண் என்பது பழமொழி.

மதி யூகியான மந்திரியின் அறிவுரைகளைக் கேட்டுப் பருவம் தவருமல் கருமங்களைக் கருதிக் கடைமைகளைச் செய்துவரின் அந்த அரசனது ஆட்சி அதிசய மாட்சிகளை அடைந்து வரும்.

நிகழ்கால நிலைகளையும், வருங்கால வகைகளையும் ஒருங்கே கூர்ந்து உணர்ந்து காரியங்களை ஓர்ந்து செய்வது மந்திரியின் கடமையாய் வந்தது. உறுவதை உணர்வது யூகியின் இயல்பாம்.

மந்திரிக்கு அழகு வருபொருள் உரைத்தல்.
தந்திரிக்கு அழகு தறுகண் ஆண்மை. [நறுந்தொகை]

மந்திரிக்கும் தந்திரிக்கும் உரிய தன்மைகளை ஒரு மன்னன் இன்னவாறு குறித்திருக்கிருன். தந்திரி=சேனைத்தலைவன். எதையும் முன்னதாக யூகித்து அறிந்து மன்னனுக்கு நன்னயமாகக் கருமம் புரிவதே மந்திரியின் தருமமாம்; ஆகவே அவனது அதிசய அறிவும் ஆலோசனை நெறியும் குறிப்பும் பொறுப்பும் தெரியலாகும். கூரிய சிந்தனையாளன் சீரிய மந்திரியாகின்ருன்.

வேந்தன் உளம்அறிந்து வேற்ருேர் திறமறிந்து
ஏந்து குடிகள் இயல்பறிந்து---சார்ந்ததிறம்
எல்லாம் எதிருணர்ந்து என்றும் இறைக்கிதம்செய்
நல்லானே மந்திரியாம் நன்கு.

இந்தவாறு மந்திரி மதிக்கப்பட்டுள்ளான்.

நீதிமுறை கோடாமல் நெடியபுகழோடு வேந்தன் நிலைத்து வருவது அமைச்சன் ஆட்சி செலுத்திவரும் அமைதியாலேயாம். அவனது கல்வியறிவு பல்வகை நெறிகளிலும் பரவி நல்ல பலன்களை ஆற்றி வருகின்றது. ஆகவே உலகம் அவனைப்போற்றுகிறது.

வத்தவ தேசத்து மன்னனுடைய முதல் மந்திரி சிறந்த மதிமான். பகைவர்களால் நேர்ந்த அரிய பல அல்லல்களை எல்லாம் தனது அறிவின் திறத்தால் நீக்கி அரசை எவ்வழியும் செவ்வையாய்ப் பேணி வந்தமையால் அவனை அதிசய மதியூகி என்று உலகம் துதிசெய்து வந்தது. உயர்ந்த யூகி என்று சிறந்த பெயரைத் தனி உரிமையாக அவன் இனிது அடைந்து நின்ருன். அவனுடைய குணநீர்மைகளையும் வினையாண்மைகளையும் விநயங்களையும் வேந்தன் நினைந்து நினைந்து வியந்து மகிழ்ந்துள்ளான்,

"பொன்று இயற்கைப் புகழது பெருமையும்
ஆன்முலைப் பிறந்த வால்நிற அமிர்தம்
மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு
வேறுபட்டு ஏகினும் கூறுபட் டியலா
அன்பின் அளைஇய நண்பின் அமைதியும்
அசைவில் தானை விசைய வெண்குடைப்
பெருநில மன்னர் கருமம் காழ்த்த
அருமதி நுனித்த அமைச்சின் ஆற்றலும்
இன்னவை பிறவும் தன்வயின் தாங்கி."[பெருங்கதை, 2-8]

யூகியைக் குறித்து வந்துள்ள இவை இங்கே யூகித்து உணர்ந்து கொள்ளவுரியன. தேனும் பாலும் கலந்தது போலக் கோனும் இவனும் கலந்து மகிழ்ந்து உலகம் உவந்து வர ஒழுகி வந்துள்ளான். இவனுடைய மேதையால் மேதினி பல மேன்மைகளை அடைந்துவந்தது. வேந்தனும் மேலானபுகழோடுமேவினன்.

அரசன் வீர தீரங்களால் விளங்குகிறுன்.
அமைச்சன் புத்தி யுத்திகளால் துலங்குகிறுன்.

அறிவு தெய்வ ஒளியாயுள்ளமையால் அதனை யுடையவனை வையம் வாழ்த்தி வருகிறது. யாவும் அவன்வசமாய் வருகின்றன.

"All countries are a wise man's home,
And so are governments to some." (Butler)

"எல்லா நாடுகளும் ஒரு ஞானியினுடைய வீடு ஆகின்றன; அது போல் அரச ஆட்சிகளும் சில அறிஞர்களுக்கு உரிமையாயுள்ளன" என்னும் இது ஈண்டு உணரவுரியது. அரசன் தேசத்துக்கு அதிபதியா யிருந்தாலும் மதியுடைய மந்திரியினுலேயே அது மாண்படைந்து வருகிறது. யூகம் மருவி வர யோகம் பெருகுகிறது. தக்க அமைச்சைத் தழுவி மிக்க மேன்மை பெறுக.

———

844 உற்ற அரசுக் குறுதுணையாய் ஓர்ந்துலகம்
சுற்றி அறிந்து தொழில்செய்து—பற்றிநின்ற
நாட்டிலுள்ளார் எல்லாரும் நன்கு பயன்காணக்
காட்டல் அமைச்சன் கடன். (ச)

இ-ள்.

தன்னுடைய அரசனுக்கு உறுதித்துணையாய் அமர்ந்து,

ளதையும் கூர்ந்து ஓர்ந்து, உலகத்தை சுற்றி உணர்ந்து, நாட்டிலுள்ள குடிசனங்கள் யாவரும் சுகமே வாழ்ந்துவரத் தேர்ந்து செய்து வருவது அமைச்சின் உரிமையான கடமையாம் என்க.

தன்நிலைமையையும் கடமையையும் கவனமாக் கருதிச்செய்து வரும் அளவே ஒருவன் தலைமையுடையனாய்த் தழைத்து வருகிறான். உயர்ந்த பதவியில் உள்ளவன் தனது உரிமையைக் கருதிச் செய்யவில்லையானால் இழிந்துபட நேர்கின்றான். அவ்வாறு இழிவுநோாமல் தெளிவோடு வினைபுரிந்து வருபவன் தேசத்தலைவனாய்ச் சிறந்து உயர்ந்து யாண்டும் தேசு மிகப் பெறுகின்றான்.

அரச காரியங்கள் பலவகையிலும் பரந்து விரிந்தன; யாவும் பருவம் அறிந்து செவ்வையாய்ச் செய்யவுரியன; எவ்வழியும் விழிப்போடு பேணத் தக்கன; அத்தகைய வினைகளுக்கு உத்தமத்துணையாய் அமைந்துள்ளவனே வித்தக மந்திரியாய் விளங்கி நிற்கின்றான். கூரிய அறிவு காரிய விளைவைக் காட்டி வருகிறது.

தேச மக்களுடைய வாழ்வு முழுவதும் ஆட்சி முறையில் அமைந்துள்ளமையால் அந்தக் கருமங்களின் காட்சியில் மிகவும் தேர்ச்சி அடைந்து அமைச்சன் யாண்டும் தெளிவு கொண்டு நிற்க வேண்டும். வினைத்திட்பம் விவேகத்தின் நுட்பமாம்.

நேர்ந்த வினைகளை எல்லாம் நேரே நுணுகி அறிதல், வினையாளரை ஏவி எதையும் கூர்ந்து செய்தல், ஓர்ந்து உணர்ந்ததை அரசனிடம் உறுதியாயுரைத்தல், கருமமே கண்ணாய் எவ்வழியும் கவனித்து வருதல் அமைச்சின் தருமங்களாய் மருவியுள்ளன. அறிவின் தெளிவு அரிய பல வினைகளை ஆற்றியருளுதலால் அது மந்திரிக்குச் சொந்தவுரிமையாய் முந்தி வந்து முதன்மை தந்தது.

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. (குறள், 634)

அமைச்சனுக்கு உரிய செயல் இயல்களைத் தேவர் இவ்வாறு குறித்திருக்கிறார். தெரிதல் தேர்தல் செய்தல் சொல்லல் என்றது யுத்தியும் யூகமும் வினையாண்மையும் சொல்வன்மையும் உய்த்துணர வந்தது. அறிவுஆற்றல்கள் அரசை ஆளுகின்றன.

தன் அரசனுக்கும் குடிகளுக்கும் நாட்டுக்கும் நன்மையான வழிகளையே யாண்டும் நாடிச்செய்யும் தன்மையும் வன்

மையும் உண்மையான அமைச்சனிடம் ஒளி வீசி வருகின்றன.

அறிவதும் செயலும் மொழிவதும் அரசர்க்கு
ஆக்கமே குறித்தன வாகும்
திறமைநன் றறியா அரசருக்கு உறுதி
செப்பலும் செய்வன வேனும்
உறுமுல கியற்கைக் கொத்திடின் செயலும்
ஒருவினைக்கு இயைந்தபல் செயலுள்
நிறுவுவது ஒன்றால் வாய்ப்பளஞ் ஞான்றும்
நிகழ்த்தலும் அமைச்சருக்கு இயல்பாம். [1]

மிகைவினை வரினும் அசைவுறு வன்கண்
விழுக்குடி காத்தல் ஆள் வினை நூல்
வகையுறச் சூழ்ந்து விடுவன விடுத்து
வகுப்பன வகுத்திடல் வேண்டின்
பகைவர்தம் துணையைப் பிரித்தல்தம் மிடத்துப்
பயின்றவர் பகைவர்பால் புகாமல்
தகையுறச் செய்தல் பிரிந்தவர் தம்மைத்
தமமொடு பொருத்தலும் அமைச்சாம். [2]

சுருக்கிமெய் விளக்கி இனிமையும் பயனும்
தொகுத்துஅய லார்மொழிக்கு இடையாத்
திருக்கிளர் மொழியைச் சோர்வற அவைக்கண்
செல்லுமாறு அஞ்சுதல் இன்றி
உரைக்கவல் லவரே அமைச்சர்கள் ஆவர்
உறுமுறை பிறழ்தரப் பலவாய்
விரிக்கவல் லவரும் கற்றது விளங்க
விரிக்கமாட் டாரும் மெல்லியரே. [3]

பொருள்பயந் திடினும் அறம்புகழ் பயவாப்
புரைபடு வினைஎன் றும் புரியார்;
மருளின்மற் று ஒருகால் புரியினும் இரங்கார்;
வையகத்து ஏனையோர் போல
இருமுது குரவர் கற்புடை மகளிர்
இளமகவு இவர்பசித் திடினும்
பெருமிதப் படாத வினைசெயார் உலகு
பேணுநர்க்கு ஏமஞ்செய் அமைச்சர். [4]

துணிவுறும் அளவும் சூழ்ந்துபின் இராது
சூழ்வினை பொருந்தும்வாய் எல்லாம்
தணிவற முடித்தல் அதுதகா தாயின்
தருபொருள் வினையிடம் காலம்
அணியுறு கருவி ஐந்தும்ஆய்ந்து இகலை
அடர்த்தல் ஒட்டலர்க்கழி வுறுங்கால்
பணிவுசெய் தேனும் காத்தல்முத் தொழிலும்
பண்புடை அமைச்சர்தம் தொழிலே. [5]
(விநாயகபுராணம்)

உயர்ந்த மந்திரிகளுடைய குணநலங்களையும் செயல்நிலைகளையும் இவை வரைந்து குறித்துள்ளன. பொருள் வகைகளைக் கூர்ந்து உணர்ந்து அறிவமைதிகளைத் தேர்ந்துகொள்ளவேண்டும்.

கல்வியறிவோடு அரிய பல பண்பாடுகளும் இயல்பாக அமைந்தவரே பெரிய இராச தந்திரிகளாய்ப் பேர் பெற்று வருகின்றனர். சுமந்திரன், சத்திய கீர்த்தி, தருமதத்தன், யூகி, உருமண்ணுவா, வயந்தகன், சேமன், சுச்சுதன், கருணாகரன், பட்டி, சந்தகன், சாமந்தகன், சுமதி முதலிய மந்திரிகள் எல்லாரும் உத்தம குணசீலர்களாய் ஒளி பெற்றுள்ளனர். புகழ் எல்லாம் புண்ணிய நீர்மைகளில் கண்ணியமாய்ப் பொலிந்து விளைந்தன.

தன்னலம் கருதாமல் மன்னனுடைய ஆட்சிக்கு மாட்சிமை புரிந்து மாநிலத்தைப் பேணி வந்தவரே மகிமையாளராய்க் காணவந்தனர். தரும நீதிகள் தழுவி வந்தமையால் பெருமைகள் பெருகி வந்தன. நெறிமுறைகளின் அளவே நிலை உயர்கின்றது.

ஆங்கில அறிஞரான பர்க்(Burke)என்பவர் சிறந்த அரசியல் நிபுணர்; உயர்ந்த பேச்சாளி. இராச சபையில் ஒருமுறை அவர் பேசிக்கொண்டிருக்கும் பொழுது "உண்மையான மந்திரிக்கு அழகு என்ன?" என்று சிலர் நன்னயமாய் வினவினர். அதற்கு அவர் உடனே பதில் சொல்லியது அயலே வருகிறது.

"What morality requires, true statesmanship should accept." [Burke]

"நீதிமுறையின் நெறியை உரிமையோடு உவந்து கொள்வதே உண்மையான அமைச்சாம்" என இவ்வாறு அவர் உரைத்தருளினர். நியாயம் நிலைத்துவர அரசு செழித்து வருகிறது.

845. மதங்கொண்ட மால்கரியை வன்பாகன் நோக்கி
இதங்கொண் டியற்றும் இயல்பே—கதம்கொண்ட
வேந்தை அணைத்து விறல்மந் திரியுலகம்
ஏந்த நடத்தும் இனிது. (ரு)

இ-ள்.

மதம் கொண்ட பெரிய மதயானையைப் பாகன் இதமா அடக்கி நடத்தல் போல் சினம் கொண்ட வேந்தனை நயமா அணைத்து இணக்கி ஆட்சியை மாட்சியோடு மந்திரி நன்கு செலுத்தி எங்கும் இதம் புரிந்து வருவன் என்க.

அமைச்சுத் தொழில் அரிய பல பொறுப்புகள் உடையது. அரசனுக்கும் குடிகளுக்கும் நடுவு நின்று எவ்வழியும் செவ்வியனாய் அவன் வினைகள் புரிய வேண்டும். உலகத்தலைவன் என்ற பெருமிதம் அரசனிடம் இயல்பாகவே பெருகியிருத்தலால் அவனோடு அணுகியிருந்து கருமங்களை இனிமையாக நடத்துவது மிகவும் கடுமையான நிலையாம்; கரும வீரம் அதில் மருவியுளது.

குலச்செருக்கு, செல்வச்செருக்கு, அதிகாரச்செருக்கு வீரச்செருக்கு முதலிய செருக்குகள் எல்லாம் பெருக்கமாயுள்ள மன்னன் பால் மன்னியிருந்து வினைகள் புரிந்து வருவது மந்திரியின் இங்கிதமான சாதுரிய சாகசங்களை நன்கு விளக்கிவரும்.

யானை மதம் கொண்டு மருண்டு வெருண்டு இடர் செய்ய நேர்ந்த போது கைதேர்ந்த பாகன் அதனை அடக்கி மடக்கி நெறியே நடத்துவன்; அதுபோல் அரசன் களிப்பு மீதூர்ந்து முறை கடந்து சென்றால் இடித்து அறிவு கூறி அமைச்சன் அவனை வசப்படுத்தி ஆட்சியை நடத்தியருளுவான்.

செவிசுடச் சென்றுங்கு இடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா---கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற்று எத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு. (நீதிநெறி விளக்கம்)

மதயானையைப் பாகன் வசப்படுத்தல் போல் மன்னனை மந்திரி இணக்கி நடத்துவன் என இது உணர்த்தியுள்ளது.

அரசன் உல்லாச போகியாய் உவந்து வீரகம்பீரமாயிருப்பவன் ஆதலால் யானை என நேர்ந்தான். அவனைத் தனது ஞான

விநயங்களால் நல்லவழிகளில் பழக்கி நாட்டுக்கு நன்மை செய்து வரும்படி நீதிமுறைகளை மெல்ல எடுத்துக்காட்டி மேன்மை புரிந்து வருவது மந்திரியின் பான்மையாய் வந்தது.

மந்திரி மதியூகம் வாய்ந்து நல்லவனுயிருந்தால் அந்த அரசு எந்த வகையிலும் செழித்துத் தழைத்துச் சிறந்து விளங்கும். அமைச்சன் அவ்வாறு அமைய வில்லையானல் அவ்வரசு செவ்வையாய்ச் சிறந்து திகழாது. சேர்ந்த மந்திரியின் சிந்தையின் படியே அரசும் ஆட்சியும் வரிசையாய் நேர்ந்து வருகின்றன.

தீயவனும் மந்திரியால் நல்வேந்தும்
　　தீவேந்தாம்; தீமை இல்லாத்
தூயவனும் மந்திரியால் தீவேந்தும்
　　நல்வேந்தாம் தொடர்ச்சிபோல
ஆயநெறி மன்னவரால் அமைச்சரும்அப்
　　படியாவர் ஆத லாலே
நேயவிவே கத்தமைச்சன் உண்டாகில்
　　எப்பயனும் நிருபர்க் குண்டாம். (1)

மன்னவன்எப் படியுலகில் மன்னுயிரும்
　　அப்படியாம்; மகிமை தானும்
நன்னடுவு நிலைமையுமெய்ஞ் ஞானநூல்
　　தெளிந்தவர்க்கே நண்ணு நிற்கும்;
அன்னதுகற் றிலர்என்னில் அரசர்அமைச்
　　சர்கள் என்போர் அபத்த ராகும்
இன்னகலை இலதாகில் எனக்குஇரையாய்
　　இளமைநலம் இழந்தீர் இன்றே. (வாசிட்டம்)

கற்கடி என்னும் ஒரு ஞானயோகி இன்னவாறு கூறியிருக்கிருள். உரைகளில் மருவியுள்ளன ஓர்ந்து உணரத்தக்கன.

மந்திரிக்கும் மன்னனுக்கும் உள்ள உறவுரிமைகளையும் சார்பின் சால்புகளையும் இங்கே நன்கு தெரிந்து கொள்கிறோம். அமைச்சன் விவேகி ஆனுல் அந்த அரசுக்கு அரிய பல நலங்கள் எளிதே உளவாம் என்றது மதியூகத்தின் மாட்சியை உணர்ந்து கொள்ள வந்தது. அறிவுநலம் ஆட்சிக்கு அதிசய நிலையாம்.

உண்மையான ஞானத்தெளிவு அமைந்தபொழுது தான் மன்னனும் மந்திரியும் பணிவும் பண்பும் வாய்ந்து உலகம் நலமுற

ஒளி புரிந்து வருவர் எனத் தெளிவான மொழிகளில் அவள் வெளியிட்டிருக்கிறாள். மதிநலம்மகிதலத்தைமாண்புறுத்துகிறது.

ஞானம் என்பது அறிவு யூகம் விவேகம் முதலிய எவற்றினும் உயர்ந்தது. அதனையுடையவன் எதனையும் தெளிவாக உணர்ந்து கொள்கிறான். தனது நிலைமையையும் கடமையையும் நன்கு தெரிந்து எங்கும் நேர்மையாய் நீதிமுறைகள் புரிகின்றான்; உயிர்களுக்கு இரங்கி உதவிகள் செய்கின்றான்; வாய்மை தூய்மை நிறை பொறை முதலிய புனித நீர்மைகள் யாவும் அவனிடம் இனிதமைந்து எவ்வழியும் இதம் புரிந்து நிற்கின்றன.

"The wise man is also the just, the pious, the upright, the man who walks in the way of truth. [Zochler]

"ஞானவான் நீதிமானாயிருக்கிறான்; நல்ல பத்திமானாய் நிற்கிறான்; நேர்மையாளனாய் நிலவுகிறான்; சத்திய நெறியில் நடக்கிற உத்தமனாய் ஒளிர்கிறான்" என ஸாக்லர் என்னும் ஜெர்மன் தேசத்துப் பெரியார் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

நித்திய உண்மையை நேரே தெளிந்து கொள்வதால் ஞானம் அற்புத சோதியாயுள்ளது. அதனை உரிமையோடு மருவி நின்றவனிடம் தெய்வத் தேசு தெளிவாய் வீசுகின்றது.

The intellect of the wise is like glass; it admits the light of heaven and reflects it." (Hare)

"தெளிந்த ஞானியின் அறிவு பளிங்குக் கண்ணாடி போல் உள்ளது; தெய்வ ஒளிதோய்ந்து அது திவ்வியமாய்த்திகழ்கிறது" என்னும் இது இங்கே நன்கு சிந்தித்து உணர வுரியது.

கலையறிவோடு மெய்யுணர்வு தோய்ந்த அமைச்சனே வெய்ய வேந்தனை வணக்கிச் செய்ய நெறிகளில் செலுத்தி வையம் நலமுற வழிமுறைகளை வகுத்து அருளுகிறான். உடலின் கூறுகளை உணர்ந்த உயர்ந்த மருத்துவன் போல் உலக நிலைகளை நன்கு அறிந்த அவன் இடர்களை நீக்கி இதம் புரிந்து வருகிறான்.

வீரமுடைய அரசன் உலகை நேரே ஆளுகிறான்; ஞானமுடைய அமைச்சன் அவனுக்கு நயமா வழிகாட்டி ஒளி நீட்டி வாழுகின்றான். வேந்தன் மேன்மை வித்தக மந்திரியால் விளங்கி வருகிறது. மதியூகமும் மான வீரமும் மகிமைகள் புரிகின்றன.

846. விதிமுறைகள் தேர்தல் விநயமொடு பேசல்
அதிமதி நுட்பங்கள் ஆய்தல்—மதிநலங்கள்
வேந்துக் கினிது விளக்கல் வினைபுரிந்தே
ஏந்தல் அமைச்சின் இயல்பு (சு)

இ-ள்.

அரசுக்கு உரிய விதிநியமங்களைத் தெளிவாக அறிதலும், யாரிடமும் விநயமாய்ப் பேசுதலும், காரியங்களை யூகவிவேகமாய் ஆராய்தலும், அரிய அறிவு நலங்களை வேந்தனுக்கு நன்கு விளக்கலும் நயம் புரிதலும் அமைச்சனுக்குஉரிய இயல்புகளாம்என்க.

உலக நிலைகளைப் பலவகைகளிலும் கூர்ந்து ஓர்ந்து காரியங்களைக் கருதிச்செய்து வருவது கருமத்தலைவனான மந்திரிக்கு உரிய கடமையாய் அமைந்தது. கல்வியறிவும் சீலமும் கலந்து வந்த பொழுது தான் மனிதன் புனிதனாய் உயர்ந்து விளங்குகிறான். அரிய பெரிய உண்மைகள் அவனுக்குத் தெளிவாய்த் தெரிய வருகின்றன. இனிய இதங்களை எவ்வழியும் செய்கிறான்.

நாட்டு மக்கள் சுகமாய் வாழும்படி வழிகாட்டியாய் வந்துள்ள மந்திரி முதலில் தன்னைப் புனித நிலையில் வைத்து இனிது வாழவேண்டும்; அவ்வாறு வாழுகின்றவனே அவனியைச் செவ்வையாக ஆளுகின்றவனாய் ஆண்மையோடு திகழுகின்றான்.

ஐயறிவும் தம்மை அடைய ஒழுகுதல்
எய்துவது எய்தாமை முற்காத்தல்---வைகலும்
மாறுஏற்கும் மன்னர் நிலையுணர்தல் இம்மூன்றும்
வீறுசால் பேரமைச்சர் கோள். (திரிகடுகம், 61)

பொறிகளை அடக்கி நெறியே ஒழுகுதல், நாட்டுக்கு நேருகிற இடையூறுகளை முன்னதாக நாடி நீக்குதல், பகை அரசர்களுடைய நிலைகளை உணர்தல் ஆகிய இவ்வகைகள் உயர்ந்த அமைச்சருடைய தகைமைகள் ஆம் என நல்லாதனார் இங்ஙனம் குறித்திருக்கிறார். ஒழுக்கமும் காப்பும் உணர்வும் விழுப்பங்களை விளைத்தருளுதலால் அவை ஈண்டு விழி தெரியவந்தன.

அரசனது பரிபாலனமுறை அமைச்சனுடைய அறிவினாலும் ஆள் வினையாலும் சரியான நிலையில் உயர்ந்து வருகிறது.

குதிரைகளை நெறியே நடத்தும் சாரதி போல வினையாளர்களை அமைச்சன் முறையே செலுத்தின் ஆட்சித்தேர் காட்சிக்கு இனிதாய்க் கவின் சுரந்து வரும். அரசனும் மாட்சிமையாய் விளங்குவான். விதிநியமங்களால் வேந்தன் விழுமியனாய்த் திகழ்கின்றான்; மதியூகங்களால் மந்திரி மகிமையுறுகின்றான்.

விதிமுறை தோராத வேந்து, விறல்சேர்
ததியறிந்து சாராத தானை,—மதியூகம்
இல்லாத மந்திரி, இம்மூன்றும் என்றுமே
பொல்லாத தாகும் புவிக்கு.

வேந்தனும் தானையும் மந்திரியும் இன்னநீர்மைகளோடு இசைந்திருக்கவேண்டும்; இல்லையானால் உலகத்துக்கு அல்லலாம்என இது உணர்த்தியுள்ளது. உண்மைநிலைகள் உணரவுரியன.

தக்க நீர்மைகள் சார்ந்த அளவுதான் எவரும் மிக்க மேன்மைகள் அடைய நேர்கின்றனர். அரிய காரியங்களைச் செய்யவுரியவர் பெரிய சீர்மைகளை இயல்பாகவே மருவி வருகின்றனர். குணமும் செயலும் மணமும் மலரும் போல் மலர்தலையுலகில் மலர்ந்து பலவகை நிலைகளிலும் கமழ்ந்து திகழ்கின்றன.

உற்ற சூழல்களையும் உரிய நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து தேச காரியங்களை எவ்வழியும் செவ்வையாக அமைச்சன் செய்யவேண்டும் ஆதலால் அதற்கு வேண்டிய வினையமும் விவேகமும் அவனிடம் விழுமிய நிலையில் செழுமி விளங்குகின்றன. கூர்மையான அறிவால் எல்லாச் சீர்மைகளும் ஒருங்கே உளவாகின்றன அல்லல்களை நீக்கி அது அதிசயம்அருளுகிறது.

அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். (குறள், 421)

குற்றம் குறை கேடுகள் நேராமல் அரசனை உரிமையோடு பாதுகாக்க வல்லது அறிவே; வலிய பகைவராலும் வெல்ல முடியாத அரிய கோட்டையாகவும் அது நன்கு மருவியுள்ளது எனத் தேவர் இவ்வாறு அறிவின் மகிமையை அறிவித்திருக்கிறார்.

இத்தகைய அறிவு பயிற்சியால் உயர்ச்சியடைந்து அமைச்சனிடம் உரிமையோடு அமைந்திருத்தலால் எத்தகைய காரியங்

களையும் அவன் எளிதே முடித்து விடுகிறான். சிறந்த மதியூகம் எவ்வழியும் உயர்ந்த வழிகாட்டியாய் ஒளி நீட்டியுள்ளது.

"No other protection is wanting, provided you are under the guidance of prudence." (Juvenal)

"விவேகத்தின் வழியே நீ ஒழுகுவாயானால் வேறு ஒரு பாதுகாப்பு உனக்கு வேண்டியதில்லை" என்னும் இது ஈண்டு உணரவுரியது. கூரிய முன்னறிவு சீரிய நன்மைகளை அருளுகிறது.

யூகம் உடையவன் எதையும் எதிர்நோக்கி வேகமாய் உணர்ந்து கொள்ளுகிறான்; கொள்ளவே அல்லல்களை நீக்கி நல்லவைகளை ஆக்கி வல்லவனாகிறான். செய்யும் வினைகளே சீர்த்திகளை விளைத்து எவ்வழியும் சிறப்புகளை அருளுகின்றன.

தன்னிலையும் தாழாத் தொழில்நிலையும் துப்பெதிர்ந்தார்
இன்னிலையும் ஈடில் இயல்நிலையும்---துன்னி
அளந்தறிந்து செய்வான் அரசமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்ற லான். (சிறுபஞ்சமூலம் 58)

தனது நிலை வினைநிலை வலிநிலை பகைவர் நிலை உலகநிலை முதலிய நிலைகளையெல்லாம் அளந்து ஆராய்ந்து எதையும் பகுத்து உணர்ந்து எவ்வகையும் செவ்வையாச் செய்ய வல்லவனே அமைச்சன் ஆவான் எனக் காரியாசான் இவ்வாறு கூறியிருக்கிறார்.

கூரிய யூகமும் காரிய விவேகமும் கூடிய பொழுது அங்கே சீரிய மேன்மைகள் சேர்ந்து நிற்கின்றன. இத்தகைய தன்மைகளை இயல்பாக எய்தியுள்ளவர் உத்தம மந்திரிகளாய் உயர்ந்து திகழ்கின்றார். அவ்வித்தகரால் வேந்து விளங்கிவருகிறது.

---

847. எத்துணைய மாட்சிகள் எய்தி இருந்தாலும்
ஒத்த அமைச்சொருவன் இல்லையேல்—பொத்தியஅவ்
வேந்தாட்சி வீணாய் விளியும் விழியில்லான்
போந்த படியாம் புலை. (எ)

இ-ள்.

அரசன் எவ்வளவு மாண்புகளை அடைந்திருந்தாலும் செவ்விய மந்திரி ஒருவன் இல்லை ஆனால் அந்த ஆட்சி விழியில்லான் வழி நடத்தல் போல் வீணே இழிந்து படும் என்க.

ஒரு கருமத்தைச் செய்ய நேர்ந்தவன் அதற்கு உரிய கருவி களைத் துருவி ஆராய்ந்து கொள்ளுகிறான். சாதனம் இன்றி எதையும் யாரும் சாதிக்க இயலாது. நிலத்தைப் பண்படுத்த நேர்ந்த உழவன் முதலில் ஏர் மாடு ஆள் முதலிய சாதனங்களைச் சேகரித்துக்கொள்கிறான். ஒரு தேசத்தை ஆள அமைந்த வேந்தன் தனக்குத் துணையாக நல்ல மந்திரிகளை மருவிக்கொள்வது மரபாய் வந்தது.

துற்புத்தி மந்திரியால் அரசுக்கு ஈனம் என்பது பழமொழி.

மந்திரி நல்லவனாயில்லையானால் அந்த அரசு அல்லல் பல அடையும் என்பதை இதனால் அறிந்து கொள்ளுகின்றோம். கெடு மதியாளன் மந்திரியாய்வரின் படுபழிகளும் அடுதுயர்களும் நெடிது ஓங்கி எவ்வழியும் இழிவாய் அரசுபாழாய் விடும்.

மந்திரிக்கு வேண்டிய தகுதிகளுள் நல்லபுத்தி எல்லாவற்றினும் மேலானது. பிறவுயிர்கள் நலமாய் வாழ்ந்து வர நாடிவருவதே நல்ல புத்தியாம். அத்தகைய புத்தியுடையவனே உத்தம மந்திரியாவன்; எத்தகைய நிலையிலும் இதமே புரிவன்.

ஒருவன் சித்தம் நல்லது ஆயின் அங்கே புத்தியும் நல்லதாம். மக்கள் இனம் தக்கவகையில் மிக்க சுகமாய் வாழ்வேண்டும் என்று கருதிவரின் அந்த உள்ளம் பெரிய மகிமையுடையதாம். அவ்வாறு அமைந்த செவ்விய உள்ளம் உடையவரே சீரிய மேலோராய்ச் சிறந்து திகழ்கின்றார். அவர் எவ்வழியும் அரசுக்கு இதமே கூறி யாண்டும் நலமே செய்து வருவர்.

"மன்பதை காப்ப அறிவு வலியுறுத்தும்
நன்று அறி உள்ளத்துச் சான்றோர்." (பதிற்றுப்பத்து, 72)

சேரலிரும் பொறை என்னும் சேரமன்னனுடைய மந்திரி களை இது குறித்துவந்துள்ளது. மன்பதையை அன்போடு காத்து வரும்படி மன்னனுக்கு இதமாய் அவர் அறிவு கூறியிருக்கின்றார். நன்று அறி உள்ளத்துச் சான்றோர் என்றதனால் அவருடைய மதிநலமும் மன நிலையும் விதிமுறையும் மேலான நெறியில் ஒழுகியுள்ள விழுமிய சால்பும் தெளிவாய்த் தெரிய வந்தன.

இத்தகைய உத்தம அறிவாளிகளை உறவுரிமையாத் தழுவிக் கொள்ள வேண்டுமானால் அரசனும் வித்தக மேதையாயிருக்க வேண்டும். ஒத்த அறிவே உரிமையை உவந்து கொள்கின்றது.

"wise kings generally have wise counsellors; and he must be a wise man himself who is capable of distinguishing one."
[Diogenes]

"விவேகமுள்ள அரசர் மதியூகமான மந்திரிகளை அடைந்து கொள்கின்றனர்; சிறந்த ஒரு விவேகியைத்தெரிந்து எடுக்கவுரியவன் உயர்ந்த யூகி யாயிருக்கவேண்டும்"; என்னும் இது ஈண்டு உணர்ந்து கொள்ளவுரியது. அரியமதி உரியமதியை மருவுகிறது.

மகா மேதையான தசரதன் சிறந்த மதியூகிகளை மந்திரிகளாக மருவி யிருந்தான். அந்த அமைச்சர்களுடைய நிலைமை தலைமை நீர்மை சீர்மைகளுள் சில அயலே காணவருகிறோம்.

குலமுதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்
நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலமுதல் அறுத்துஅரும் தருமம் தாங்கினார். (1)

நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லையின் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்
ஒல்லைவந்து உறுவன உற்ற பெற்றியின்
தொல்லைநல் வினைஎன உதவும் சூழ்ச்சியார். (2)

உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருள்உணரும் கோளார்;
மற்றது வினையின் வந்தது ஆயினும் மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அரிய நூலும்
கற்றவர் மானம் நோக்கின் கவரிமா வனைய நீரார். (3)

காலமும் இடனும் ஏற்ற கருவியும் தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வம் நுனித்தறம் குணித்த மேலோர்;
சீலமும் புகழ்க்கு வேண்டும் செய்கையும் தெரிந்து கொண்டு
பால்வரும் உறுதி யாவும் தலைவற்குப் பயக்கும் நீரார். (4)

தம்உயிர்க்கு உறுதி எண்ணார்; தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின்று உரைக்கும் வீரர்;
செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார்; தெரியுங்காலம்
மும்மையும் உணர வல்லார்; ஒருமையே மொழியும் நீரார். (5)
(இராமா, அயோத்தி, மந்திரப்படலம்)

மந்திரிகளின் மாண்புகளைக் குறித்து வந்திருக்கும் இந்தப் பாசுரங்கள் இங்கே நன்கு சிந்திக்கத்தக்கன. கூறியுள்ள குண நீர்மைகள் சீரிய பண்பாடுகளோடு சிறந்து வளர்ந்துள்ளன.

குலநலம், கலைஞானம், உள்ளத்தெளிவு, உறுதி ஊக்கம், எதையும் நுணுகி யுணருந்திறம், காலம் கருதி இடம் அறிந்து வலி தெரிந்து நிலை தெளிந்து கருமங்களை எவ்வழியும் செவ்வையாய்ச் செய்தல், யாண்டும் நடுவு நிலைமையோடு தரும நீதி தழுவி விழுமிய நிலையில் ஒழுகுதல், தன்னலம் கருதாமல் மன்னுயிர்க்கு இரங்கி நன்னயம் புரிதல், உயிர் அழிய நேர்ந்தாலும் உறுதிகுன்றாமல் உண்மையே பேசுதல், வேந்தன் வெகுண்டாலும் யாதும் அஞ்சாமல் அரச நீதியை அமைதியோடு கூறுதல், புண்ணிய சீலராய் எவ்வழியும் புனித நெறியில் செல்லுதல் முதலிய இனிய பல நீர்மைகள் அவரிடம் உரிமைகளாய் அமைந்திருக்கின்றன.

இவ்வளவு மகிமை வாய்ந்த மந்திரிகளை மருவியிருந்தமையால் அந்தச் சக்கரவர்த்தி அதிசய நிலையில் அரசாண்டு வந்தான். உலகம் உவந்து துதிசெய்து வந்தது. தரும நீதிகளால் இருமையிலும் அவன் பெருமை அடைந்து இன்பம் மீதூர்ந்தான்.

Royalty consits not in vain pomp, but in great virtues."
[Agesilaus]

அரசு நிலை அதிசய ஆடம்பரங்களில் இல்லை; அரிய தருமங்களில் உள்ளது என்னும் இது இங்கே அறியவுரியது. இறைமாட்சி நீதிக் காட்சியால் நிலைத்து நெடிது நடந்து வருகிறது.

தெளிவுள்ள மந்திரிகள் ஒளியுள்ள விழிபோல் வழிகாட்டியருள்கின்றார்; அவரை உரிமையோடு தழுவிவருகிற அரசர் எவ்வழியும் பெருமையாய் விழுமிய நிலையில் விளங்கி வருகின்றார்.

---

848. திருவும் தருவும் திறலும் குலிசப்
பொருபடை ஆதிவலம் பூண்டும்—மருவிநின்ற
மந்திரியை இந்திரன்முன் மாறி இழந்தமையால்
சிந்தி யுழந்தான் சிதைந்து. (அ)

இ-ள்.

அரிய தெய்வத் திரவியங்களும் இனிய கற்பகதருக்களும் வலிய குலிசம் முதலிய பெரிய ஆயுத பலங்களும் இந்திரன் அடைந்திருந்தும் உரிய மந்திரியை இழந்தமையால் கொடிய துயரங்களை அடைந்து நெடிது வருந்த நேர்ந்தான் என்க.

நாட்டுக்கு அரசன் நேரே தலைவன் ஆயினும் ஆட்சிக்கு அமைச்சர் மாட்சி புரிந்து வருகின்றனர். அவர் இலரேல் அது தவறடைய நேரும். கற்பகம் காமதேனு சிந்தாமணி முதலிய அற்புதச் செல்வங்கள் அமரர் கோனுக்கு உரிமையாய் அமைந்திருக்கின்றன. இருந்தும் தனது முதல் மந்திரியான வியாழகுரு ஒரு முறை மனம் கனன்று அயலே பிரிந்து போனமையால் மன்னன் பெருந்துயரங்களை அடைந்தான். பின்னர் அவர் வந்து சேர்ந்தார்; ஆட்சி நன்னயமாய் நன்கு நடந்து வந்தது.

வேந்தனது விழுமிய தலைமை மந்திரிகளின் கிழமையான நிலைமையால் நிலைத்து வருகிறது. சூழ்ச்சித் துணைவர் என அமைச்சருக்குப் பெயர் அமைந்துள்ளமையால் அரசுக்கும் ஆட்சிக்கும் அவர் மாட்சி புரிந்து வரும் காட்சி மருமமாக் காணலாம்.

சுற்றுநின்று எரியும் செம்பொன் மணிமுடி சுடரச் சூடி
வெற்றிவெண் குடையின் நீழல் வேந்தன்வீற் றிருக்கும் ஏனும்
மற்றவன் மனமும் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும்
அற்றமில் அரசும் கோலும் ஆபவர் அமைச்சர் அன்றே. (1)

வால்வளை பரவி மேயும் வளர்திரை வளாகம் எல்லாம்
கோல்வளை வுறாமல் காக்கும் கொற்றவன் நெடியன் ஏனும்
மேல்விளை பழியும் வெய்ய வினைகளும் விலக்கி நின்றார்
நூல்விளை புலவர் அன்றே நுணங்குபோது அணங்கு தாரீர்.(2)

வீங்குநீர் உலகம் காக்கும் விழுநுகம் ஒருவ னாலே
தாங்கலாம் தன்மைத் தன்று தளையவிழ் தயங்கு தாரீர்
பாங்கலார் பணியச் சூழும் நூலவர் பாகம் ஆகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப் புரவலன் பொறுக்கு மன்றே. (3)

செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை தெரிந்து சொன்னால்
அறிந்தவை அமர்ந்து செய்யும் அமைதியான் அரசன் ஆவான்;
செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை தெரிந்து கூறி
அறிந்தவை இயற்று கிற்கும் அமைதியார் அமைச்சராவார். (4)

வாள்வலித் தடக்கை மன்னர் வையகம் வணக்கும் வாயில்
தோள்வலி சூழ்ச்சி என்றாங்கு இருவகைத் தொகையிற் றாகும்;
ஆள்வலித் தானை யார்கட்கு ஆதியது அழகி தேனும்
கோள்வலிச் சீயம் ஒப்பீர் சூழ்ச்சியே குணமது என்றான். (5)

ஆற்றல்என்று ஓதப்பட்ட அரசர்கட்கு அவற்றின் மிக்க
ஆற்றல்தான் சூழ்ச்சி என்பது ஆதலால் அதனை ஆயும்
ஆற்றலார் அமைச்சர் ஆக அமைச்சரோடு அமர்ந்துசெல்லும்
ஆற்றலான் அரசன் ஆகின் அரியதுஒன் றில்லை யன்றே. (6)
(சூளாமணி)

அரசுக்கு எவ்வழியும் உறுதித் துணைவராய் அமைந்துள்ள மந்திரிகளைக் குறித்து ஓர் மன்னன் இன்னவாறு கூறியிருக்கிறான். குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும். அரசியல் துறைகளிலும் முறைகளிலும் இந்நாடு நெடுங்காலம் முன்னேறி வந்துள்ளது; அந்த உண்மையை நூல்கள் சால்பாக் காட்டியுள்ளன. மாந்தர் மகிழ்ந்து வர வேந்தர் விழைந்திருந்தனர்.

நாட்டிலுள்ள மக்கள் நலமாய் வாழ்ந்து வருவது ஆட்சிக்கு உரிய மன்னன் ஆய்ந்து சூழ்ந்து ஆண்டுவரும் அமைதியினலேயே அமைந்து வருகிறது. மாந்தர் வாழ்வுக்கு மன்னிய துணையாயுள்ளது வேந்தன் வாழ்வு; அந்த அரச வாழ்வு இனிமையாய் நெடிது நிலைத்து வருவது அமைச்சரது அறிவாலேயாம். அவருடைய அறிவுரைகளுக்குச் செவிசாய்த்து நெறியே நடந்தவர் அரிய பல மேன்மைகளை அடைந்து மகிழ்ந்தார்; அவ்வாறு கேளாதவர் ஆளாதவராய்க் கொடிய கேடுகளை அடைந்தார்.

ஏமாங்கத நாட்டு மன்னன் ஆன சச்சந்தன் மந்திரிகள் சொல்லைக் கேளாமையால் அரசை இழந்து அவலமாய் அழிந்தான். அமைச்சர் கூறிய அறிவுரைகளை மதியாமையால் நிடத நாட்டு மன்னனை நளன் நெடிய துயரங்களில் உழந்தான்.

மந்திரிகள் சிறந்த மதியூகிகள் ஆதலால் அவர் கூறுகிற நீதி மொழிகளை வேத மந்திரங்களா விழைந்து ஒழுகுவது வேந்தன் கடமையாம். கண்ணை இமைகாப்பது போல் மண்ணை மன்னன் காக்கிறான்; அவனைக் காத்து வருகிற மந்திரியை மதியூகம் காக்கின்றது. புத்தி யூகம் அரிய பல சித்திகளை அருளுகிறது.

மதியால் மந்திரியும், மந்திரியால் மன்னனும், மன்னனல் உலகமும் மாண்படைந்து வருவது யாண்டும் மரபாய் வந்தது.

"Prudence is the best safeguard." (Aristophanes)

விவேகம் நல்ல பாதுகாவலுடையது என்னும் இது ஈண்டு

அறியவுரியது. உய்த்து உணருகிற புத்திமான் எதையும் கூர்ந்து ஓர்ந்து எய்துகின்ற இடையூறுகளைத் தடையறநீக்கி எவ்வழியும் காரியங்களைச் செவ்வையாகச் சாதித்துக் கொள்ளுகிறான். சூழ்ச்சித்திறம் வாய்ந்த அத்தகைய அமைச்சரைத் தனக்குத் துணையாக அரசன் தழுவிக் கொண்டால் ஆட்சி இனிது நடந்து இன்பம் பயந்து வரும். கருமக் காட்சிகள் கருதியுணர வுரியன.

சூழ்வார் கண்ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். (குறள், 445)

விழுமிய அமைச்சரே விழியாக ஆட்சி நடத்தலால் வேந்தன் அவரைத் துணையாக ஆய்ந்து கொள்ள வேண்டும் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். சூழ்வார் என்று மந்திரிகளுக்கு இங்கே ஒரு பெயர் வந்துள்ளது. சூழ்தல் மதியூகமாய் ஆராய்தல். கூர்ந்து ஆராய்ந்து கூறுகின்ற ஆலோசனைகள் அரசுக்கு மேலான நன்மைகளை அருளி மேன்மை புரிந்து வருகின்றன.

"Good counsels observed are chains of grace." [Fuller]

ஆராய்வான நல்ல யோசனைகள் அரிய வரப்பிரசாதங்களாயுள்ளன என இது குறித்துள்ளது. மந்திரிகளுடைய மதிநலங்கள் மன்னனுக்கு அதிசய நலங்களை அருளி வருகின்றன. உத்தம யூகியை உறவாகக் கொண்டு உறுதியான உயர் நிலைகளைப் பெறுவது உலகாளும் வேந்தர்க்கு மரபாய் வந்துள்ளது.

———

849. ஆண்டகைமை இல்லாத ஆண்மகனும்; ஆய்ந்தமைந்த
நாண்டகைமை இல்லாத நங்கையும்—தூண்டியும்போய்ச்
செய்யா வினையாளும் தேற்றமிலா மந்திரியும்
நொய்யாம் உலகிற்கு நோய். (கூ)

இ-ள்.

உறுதியான ஆண்மையில்லாத ஆடவனும், உரிமையான நாணம் இல்லாத பெண்ணும், சரியாக வேலை செய்யாத வினையாளும், தெளிவான அறிவில்லாத மந்திரியும் உலகத்திற்கு இளிவான நோய்களாம்; அவரை ஒழிய விடுவது நலமாம் என்க.

இனிய குணங்களும் அரிய செயல்களும் உயிரினங்களை உயர் நிலைகளில் நிறுத்தி ஒளி புரிந்து வருகின்றன. தன்மைகள்

தோய்ந்த அளவே நன்மைகள் வாய்ந்து நலம் பல காண்கின்றன. கூர்ந்து உணரும் அறிவும் ஓர்ந்து செய்யும் வினையும் மனிதனை உயர்ந்தவன் ஆக்கி அருளுகின்றன. மேலோர் கீழோர் என்பன எல்லாம் விவேகங்களாலும் வினைத்திறங்களாலும் விளைந்து வந்துள்ளன. அறிவும்ஆற்றலும்அதிசயஏற்றங்களை அருளுகின்றன.

மனிதஇனம் இருவகை நிலையில் மருவியுள்ளது. ஆண்மை பெண்மை என அமைந்து அது கேண்மை கிளர்ந்து வருகிறது.

ஆண்மகன் அருந்திறலாண்மைகளோடு அரிய வினைகளைச் செய்து பெரிய மேன்மைகளை அடையவுரியவன். பெண்மகள் திருந்திய பண்போடு நாணம் பேணி மானம்காத்து மனைவாழ்வு புரிய உரியவள். இருபாலும் இவ்வாறு சரியாக அமையின் அந்த நாடு எவ்வழியும் செவ்வையாய்ப் பெருமேன்மைகளை அடைந்து விளங்கும். சிறந்த நீர்மைகள் நிறைந்த சீர்மைகளாகின்றன.

உறுதி ஊக்கங்களோடு முயன்று வருபவன் உயர்ந்து வருதலால் அவனை உலகம் உவந்து புகழ்ந்து கொண்டாடுகின்றது.

"This world belongs to the energetic." (Emerson)

ஊக்கி முயல்பவர்க்கு இவ்வுலகம் உரிமை ஆகிறது என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது. உள்ளத்தின் முயற்சி அளவே உலகத்தில் உயர்ச்சி விளைகிறது. ஊக்கம் வர ஆக்கம் வருகிறது.

உரிய கடமைகளை உறுதியோடு செய்வது பெரிய தருமம் ஆகிறது. ஆணுக்கு அழகு ஆள்வினை ஆற்றல்; பெண்ணுக்கு அழகு மரியாதையோடு மனைவாழ்வு போற்றல்; வினையாளுக்கு அழகு யாதும் ஏவாமல் உரிமையோடு வேலைசெய்தல்; மந்திரிக்கு அழகு எதையும் தெளிவாக உணர்ந்து தேசத்துக்கு இதம் புரிதல். உரிய கடமைகளைச் செய்பவர் பெரியவராகின்றார்.

தக்க தன்மைகளை இழந்து விடின் மிக்க புன்மைகள் விளைந்து விடும். கருமங்களையே தருமங்கள் தழுவியுள்ளன.

மந்திரியிடம் தெளிந்த அறிவில்லையானால் அந்த அரசு பல வகையிலும் நிலை குலைந்து இழிந்து படும். அரசன் செல்வக்களிப்பில் மூழ்கி அல்லது புரிய நேர்ந்தால் அவனுக்கு நல்ல நீதிகள் கூறி உள்ளத்தைத் திருத்தி உயர்ந்த வழியில் செலுத்த வேண்டி

யவன் அமைச்சன் ஆதலால் தக்க அறிவும் மிக்கவுறுதியும் விநய சாகசங்களும் அவனிடம் பெருகியிருக்க வேண்டும். அவ்வாறு மருவியிருந்த அளவுதான் அவன் மதிப்பு மிகுந்து ஆட்சியை மாட்சியாய் நடத்தி யாண்டும் மகிமைகளை விளைத்தருளுவன்.

வேந்தன் விழுமிய நிலையில் வாழ்வது சேர்ந்த மந்திரியின் மதியூகத்தாலேயாம். கூர்ந்து ஆராய்ந்து தேர்ந்து தெளிகின்ற அந்த விவேகம் குன்றினல் வேந்து நிலை குன்றி வெந்துயர் நேர்ந்து விடும். மந்திர முறையில் மனுமுறை மருவியுள்ளது.

சுந்தரச் சுரும்புண் கண்ணிச் சூழ்கழல் அரசர் வாழ்க்கை
தந்திரம் அறிந்து சூழ்வான் சூழ்ச்சியது அமையல் வேண்டும்;
மந்திரம் வழுவு மாயின் வாள்எயிற்று அரவு காய்ந்து
தந்திரம் தப்பி னற்போல் தன்னையே தபுக்கு மன்றே.
(சூளாமணி)

அரசவாழ்வு அமைச்சனுடைய அறிவு ஆலோசனைகளால் நெறியே அமைந்து வருகிறது; ஆகவே அவனது யூகமும் யோசனையும் தெளிவும் தேற்றமும் உடையனவாய் ஒளி பெற்றிருக்கவேண்டும்; வழுவினல் அழிவு தோய்ந்து விடும் என விழி தெரிய இது விளக்கியுள்ளது. தந்திரம் = உபாயம், காரணம். காரியங்களைக்கருதி ஆராய்ந்து முடிவு கூறுவதில் பிழைகள் நேரலாகாது; எவ்வழியும் செவ்வையாகத் தெளிந்து சொல்லுவதே நல்லது. தெளிவானமொழி ஒளி விழியாய் உய்தி தருகிறது.

செறிவுடைத் தார்வேந்தன் செவ்விமா றுமல்
அறிவுடையார் அவ்வியமும் செய்ப---வறி துரைத்துப்
பிள்ளை களைமருட்டும் தாயர்போல் அம்புலிமேல்
ஒள்ளியகாட் டாளர்க் கரிது. (பழமொழி)

பெற்ற தாயர் பிள்ளைகளைத் திருத்திப் பேணுதல் போல் உற்ற அமைச்சர் உரிய அரசரை நெறிமுறையே பாதுகாப்பர் என முன்றுறையரையர் இங்ஙனம் குறித்திருக்கிருர். அரசுக்கும் அமைச்சுக்கும் உள்ள உறவுரிமையை இதனல் உணர்ந்து கொள்கிறேம். மதியூகி நல்ல மாதாவாய் மருவியுள்ளான்.

பெரிய இராச்சியத்தைப் பேணிவரும் பொறுப்பு பெருகி வந்துள்ளமையால் அமைச்சன் அரிய பல கலைகளை ஆய்ந்து அறிவு நிலையில் உயர்ந்து நிற்கின்ருன். மதிநுட்பமே மந்திரிக்கு

அதிசய ஆற்றல்களை அருளியுள்ளது. எதையும் நுணுகியுணரும் யூகம்உடையவன் எங்கும்பேரறிவாளனாய்ப் பெருகி வருகிறான்.

Discretion is the perfection of reason, and a guide to us in all the duties of life. [Bruyere]

மதியூகம் அறிவின் நிறைவாயிருக்கிறது; வாழ்க்கையின் கடமைகள் எல்லாவற்றிலும் நமக்கு அது வழிகாட்டியா யுள்ளதுஎன புரூயர் என்பவர்இங்ஙனம்தெளிவாக் காட்டியுள்ளார்.

The better part of valour is discretion, in the which better part I have saved my life. (Shakespeare)

வீரத்தின் சிறந்த பாகமே விவேகம்; அதில் எனது சீவியத்தைச் செவ்வையாய்ப்பேணி வருகிறேன் என்னும் இது இங்கே காணவுரியது. மதிநலம் வாழ்வை மகிமைப்படுத்தி வருகிறது.

தனிமனிதன் வாழ்வில் விவேகம் இவ்வளவு பாதுகாப்பா யுள்ளது; ஆகவே பலகோடி மக்களுடைய வாழ்வுகளை வளமாப் பேணியருள வுரிய ஆட்சியாளரிடம் அது எவ்வளவு நலமா இசைந்திருக்க வேண்டும்! என்பது ஈண்டு எளிது தெளிவாம்.

இத்தகைய புத்திசாதுரியம் உடையவர்களையே உத்தம மந்திரிகளாக அரசன் உவந்து கொள்ளவேண்டும். மதியூகம் மருவாதவரை மருவினால் அதிதுயரம் ஆகும் ஆதலால் அவரைத் தமராகத் தழுவலாகாது. உயர்ந்த விவேகிகளை உறுதித்துணையாக் கொண்டால் அந்த ஆட்சி எந்த வகையிலும் சிறந்து விளங்கும்.

---

850. காலம் அறிந்து கருமம் புரிந்துரிய
கோலின்பம் கூரக் குடிபுரந்து—சீலம்கைக்
கொண்ட அமைச்சின் குணநலனை ஏத்திநிற்கும்
மண்டலம் எல்லாம் மகிழ்ந்து. (ம)

இ-ள்.

பருவ காலங்களை உணர்ந்து உரிய கருமங்களைக் கருதிச் செய்துஅரசு இன்பம் மீதூர்ந்து இனிது வாழ்ந்து வரக் குடிகளை அன்பு கூர்ந்து புரந்து குணநலங்களோடு ஒழுகி வருகிற மந்திரியை உலகம் முழுவதும் உவந்து புகழ்ந்து போற்றும் என்க.

ஒருவன் வாழ்வு செழித்து வர வேண்டுமானல் அவன் காலத்தைக் கணித்து நோக்கிக் கருமம் புரிந்து வரவேண்டும். பொழுதை எவன் பழுதாக் கழிய விடுகிருனே அவன் இழுதையாய் இழிந்து கழிகிருன். அதனை நாளும் நன்கு பயன் படுத்தி வருகிறவன் வாழ் நாளை எங்கும் வளம்செய்து வருகிருன்.

நாட்டுநலம் நாடி எவ்வழியும் செவ்வையாய் அரசகாரியங்களை ஆற்றிவருகிற அமைச்சன் ஒவ்வொரு நிமிடத்தையும் உரிமையோடு கருதி ஒழுகி வரவேண்டும். காலம் கருதி வருகிற அளவு கருமங்கள் நன்கு கைகூடி நலமாய் வருகின்றன.

உரிய பருவங்களை ஊன்றி யுணர்ந்து வினை செய்கின்றவன் அரிய பல காரியங்களை எளிதே முடித்துக் கொள்ளுகின்ருன்.

அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின். (குறள், 483)

காலத்தைக் கருதியுணர்ந்து தக்க சாதனங்களோடு செய்யின் முடியாத காரியம் யாதும்இல்லை; எல்லாம் இனிதே முடிந்து இன்பம் தரும் எனத் தேவர் இங்ஙனம் குறித்திருக்கிருர்.

சீலம் அல்லன நீக்கிச் செம்பொற்றுலைத்
தாலம் அன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ? (இராமாயணம்)

நடுவு நிலைமையோடு எதையும் ஆராய்ந்து அரசர்க்கு ஆவன செய்யும் அமைச்சர் காலத்தைக் கண் ஆகக்கொண்டு காரியம் புரிவர் என வசிட்ட முனிவர் இவ்வாறு கூறியிருக்கின்ருர்.

நாள்கூட்டம் மூர்த்தம் அவற்ருெடு நன்ருமக்
கோள்கூட்டம் யோகம் குணனுணர்ந்து---தோள்கூட்டல்
உற்ருனும் அல்லானும் ஐந்தும் உணர்வானல்
பெற்ருனுட் கொள்க பெரிது. (சிறுபஞ்சமூலம், 44)

நாள் முகூர்த்தம் முதலிய காலக் கூறுகளைக் கருதி நோக்கி உறுதியோடு காரியம் செய்க எனக் காரியாசான் இப்படிக் கூறியுள்ளார். உரிய நேரம் இனிய சாரமாய் உதவி புரிகிறது.

அன்பின் நெகிழ வழிபட்டுக் கொள்ளாது
நின்ற பொழுதின் முடிவித்துக் கொள்வதே
கன்றுவிட்டு ஆக்கறக்கும் போழ்தில் கறவானய்
அம்புவிட்டு ஆக்கறக்கு மாறு. (பழமொழி, 77)

கன்று குடிக்கும் பொழுது பசுவினிடமிருந்து பாலைக் கறந்து கொள்ளுதல் போல் உரிய சமையம் பார்த்துக் கருமம் புரிக என மூன்றுறையரையர் இவ்வண்ணம் மொழிந்துள்ளார். பருவத்தில் செய்து கொள்ளுகிற கருமம் உருவத்தில் ஒளிபெற்று உயர் பலன்களை அருளுகிறது. காலத்தைக் கருதி வருகிறவன் கரும வீரனாய் எவ்வழியும் பெருமை மிகப் பெறுகிறான்.

அரிய கருமங்களை முடித்துப் பெரிய மகிமைகளை அருளுதலால் உரிய காலத்தை மேலோர் உணர்ந்து போற்றி வருகிறார்.

"The great rule of moral conduct is, next to God, to respect time." [Lavater]

"கடவுளுக்கு அடுத்தபடியாக் காலத்தை மதித்துப் போற்றுவது நீதி ஒழுக்கத்தின் பெரிய நியமமாயுள்ளது" என இது உரைத்துளது. அருமையுடையது பெருமை அடைகின்றது.

"As every thread of gold is valuable,
so is every moment of time." [J. Mason]

காலத்தின் ஒவ்வொரு நிமிடமும் உயர்ந்த தங்கத்தின் இழையாய் விலை மிகுந்துள்ளது' என இது விளக்கியிருக்கிறது.

"To choose time is to save time." [Bacon]

காலத்தைத் தேர்ந்து கொள்வது அதனை ஓர்ந்து பாதுகாப்பதாம்.

"Remember that time is money." (Franklin)

நேரத்தை நிறைந்த பொருளா நினைந்து கொள்.

"Well arranged time is the surest mark of a well arranged mind." (Pitman)

ஒழுங்காக நன்கு பண் பட்ட உள்ளத்தின் உண்மையான அடையாளம் உரியகாலத்தைச் சரியாக ஒழுங்கு செய்து கொள்வதேயாம். காலம் காண்பதில் சீலம் காண்கிறோம்.

"Save your time." (Seneca)

உன் காலத்தை உரிமையோடு பேணிக் கொள்க.

Lost time is never found again. [Richard]

இழந்த காலத்தை மறுபடி ஒருபோதும் காணமுடியாது.

Nothing is so dear and precious as time. (Rabelais)

காலத்தைப்போல் மிகவும் அருமையான பொருள் யாதும் இல்லை.

Time flies away; and cannot be restored. (Vergil)

காலம் பறந்து போகிறது; அது திரும்பி வராது.

"Take time when time is, for time is ay mutable." [Skelton]

காலம் நிலையில்லாதது; உள்ள பொழுதே அதனைப் பயன் படுத்துக.

"I wasted time, and now doth time waste me."
[Shakespeare]

காலத்தை நான் வீணாக்கினேன்; என்னை அது வீணன் ஆக்கி விட்டது.

"All my possessions for a moment of time."
[Queen Elizabeth.]

என் அரச செல்வம் யாவும் ஒரு கண நேரத்துக்கு இணையாம்.

மேல் நாட்டார் காலத்தைக் குறித்துக் கருதியுள்ள நிலைகளை இவற்றால் ஓரளவு நாம் உணர்ந்து கொள்ளலாம். ஒரு கணமும் வீணாக்காமல் பொழுதைப் போற்றித் தொழில் புரிந்து வருதலால் எல்லாவழிகளினும் விழுமிய நிலையில் அவர் விளங்கி வருகிறார்.

பொழுதைப் பழுதாக் கழிய விடுபவர் பழி வறுமைகளை அடைந்து இழிவழிகளில் அழுந்தி அழி துயரங்களோடு அலமந்து உழலுகின்றனர். காலம் பேணிக் கருமம் புரிந்து வருபவர் ஞாலம் பேணி நயந்து வர மேலான நிலைகளை அடைந்து மேன்மை மிகுந்து வருகின்றார். பெற்றநேரம் பெருமகிமை தருகிறது.

காலம் கருதி ஒழுகினால் ஞாலமும் கைகூடும் என்று வள்ளுவப் பெருந்தகை போதித்திருந்தும் போதம் இழந்து நாடு ஏதம் அடைந்துள்ளது. பொழுது பழுது கழியின் அழுது அழியவரும்.

ஞால மன்னற்குக் காலம் கண் என இராமனிடம் முனிவர் விநயமாய்க் கூறியது அந்தச் சக்கரவர்த்தித் திருமகன் அதனைப் பேணி ஒழுகின் உலகம் உயர் நிலையடையும் என்று கருதியே யாம். இராம காவியத்தில் அரசியல் முறைகள் அதிசய நிலைகளில் வந்துள்ளன. யாவும் உறுதியாக் கருதி உணர வுரியன.

உமைக்கு நாதற்கும் ஓங்குபுள் ஊர்திக்கும்
இமைப்பில் நாட்டம்ஓர் எட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கினர் ஆயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே.

(இராமாயணம்)

அரசன் திரிமூர்த்திகளைப் போல் ஆற்றல்படைத்திருந்தாலும் அமைச்சர்களுடைய அறிவுரைகளைக் கேட்டு உரிமையோடு நடப்பதே அதிசய ஆற்றலாம் என இது குறித்துள்ளது.

அமைச்சரை முன்னோர் என்னவாறு எண்ணி மதித்துள்ளனர் என்பதை இதனால் உன்னி உணர்ந்து கொள்ளுகிறோம்.

மன்னர்க்கு மதிநலம் கூறி ஆட்சியை மாட்சியா நடத்தியருளுதலால் இன்னவாறு அமைச்சர் இசைபெற்று வந்துள்ளார்.

இறைவன் அமிசமாய் மதுரையில் அமர்ந்து இந்நாட்டை ஆண்டு வந்த சோமசுந்தர பாண்டியன் தமது அருமைத் திருமகனிடம் அரச பதவியைக் கொடுக்கும் பொழுது சுமதி முதலிய அமைச்சர்களை ஆதரவாக அமைத்தருளினர். அவ்வமையம் அவரை நோக்கி இம்மன்னர் பெருமான் உரைத்த மொழிகள் ஆட்சியாளர்க்கு அருள் ஒளிகளாய் நேரே காட்சியளித்தன.

சூட்சி வினையில் பொன்அனைய சுமதி தன்னைத் தொன்னூலின்
மாட்சி யறிஞர் தமைநோக்கி வம்மின் இவனைக் கண்இமைபோல்
காட்சி பயக்கும் கல்வியும் போல் காப்பீர் இதுநும் கடனிம்மண்
ஆட்சி இவனது என்றிளைய அரியேறனையான் தனைநல்கா. (1)

வெய்யவேல் காளைஅன்னான் தன்னையும் வேறு நோக்கி
ஐயஇவ் வையம் தாங்கி அளித்தனன் நெடுநாள் இந்த
மையறு மனத்தார் சொல்லும் வாய்மையாறு ஒழுகி நீயும்
செய்யகோன்முறைசெய் தாண்டு திருவொடும்பொலிகஎன்றான்.

(திருவிளையாடல்)

மந்திரிகளைக் குறித்து வந்துள்ள இந்தக் கவிகள் இங்கே சிந்திக்கத் தக்கன. கண்போல், கல்விபோல் காப்பீர்! இது நும் கடன் என அமைச்சரிடம் அரசை ஒப்பித்திருக்கும் முறை உய்த்துணரவுரியது. ஆட்சி இனிது நடந்து வருவது அமைச்சரது ஆதரவினாலேயாம் ஆதலால் அவரது மாட்சி இவ்வாறு செவ்வையாய்த் தெரிய வந்தது. மகிபதிமதியூகியால் மாண்புறுகிறான்.

குடிசனங்கள் உவந்துவாழவும், கொற்றவன் உயர்ந்து திகழவும் எவ்வழியும் உய்த்துணர்ந்து உரிமையோடு ஆற்றியருளுவது மந்திரிகளின் மரபான கடமையாம். அவருடைய மதியூகமும் வினையாண்மையும் நாட்டுக்கு நலம் புரிந்து வருதலால் வேந்தன் அவரை விழுமிய துணையா விழைந்து பேணி வருகின்றான்.

அளவில் ஆற்றலும் திறனும்நல் லரும் பெறற் கல்வி
விளைவும் ஞானமும கிடைத்தனர் மீலவற் கினிமேல்
வளைவி லாதகோல் அமைச்சராய் வளம்பல பெருக்கிக்
களைவில் பாசம்நீத் தெம்பெருங் கணத்தவ ராவார். (1)

நல்லாவின் பாலின் நறுந்தேன் கலந்தென்னப் பன்னூல்
வல்லாரும் ஆகி மதிநுட்பரும் ஆகிச் சோர்வில்
சொல்லால் அடையார் மனமும களித்தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர் சொற் பயன் ஆய்ந்து கவர வல்லார். (2)

மறத்தான வேலான் மனக்கொள்கை தம்நெஞ்சுள் வான
நிறத்தாடி நீழல்எனத் தோற்ற நிறுத்து மற்றது
அறத்தாறெனில் ஆற்றுவர் அன்றெனில் ஆக்கம் ஆவி
இறத்தான் வரினும மனத்தானும் இழைக்க எண்ணார். (3)

(திருவிளையாடல்)

இராசராசன் என்னும் பாண்டிய மன்னனிடம் மருவியிருந்த மந்திரிகளை இவை குறித்துள்ளன. குணநீர்மைகளையும் மதிமாண்புகளையும் கூர்ந்து நோக்குவோர் அமைச்சின் சீர்மைகளைத் தேர்ந்துகொள்வர். சீரியயூகிகளைப்பேணி அரசன் ஆளவேண்டும்.

## இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அமைச்சன் அரசனுக்குக் கண்.
அவனைத் தேர்ந்து கொண்ட அரசு சிறந்து விளங்கும்.
அரிய மதியூகியே பெரிய மந்திரி.
ஆட்சி மாண்புற அவன் ஆற்றி யருளுவன்.
வேந்தனை அணைத்து விதிமுறை புரிவன்.
அதிமதி நுட்பமாய் யாவும் அறிவன்.
மதிநலம் கூறி மகிமைகள் செய்வன்.
மந்திரி அளவே மன்னன் உயர்வு.
தெளிந்த மதியால் அவன் உயர்ந்து திகழ்வன்.
ஞாலம் புகழ நலம் பல ஆற்றுவான்.

அருவது யூகி முற்றிற்று.

# எண்பத்தாறும் அதிகாரம்.

## தகவு

அஃதாவது உற்ற நிலைமைகளைத் தக்கபடி ஓர்ந்து புரியும் தன்மை. சிறந்த மந்திரி அமைந்திருந்தாலும் மன்னன் தகுந்தபடி உணர்ந்து யாண்டும் நெறிமுறையே நடந்து வர வேண்டும் என்று உணர்த்துகின்றமையால் இது இங்கே வைக்கப்பட்டது.

851. உன்னை உயர்த்தி உலகிலொரு மன்னவனு
முன்னவன் பெய்த முதன்மையை —உன்னிநீ
ஓர்ந்து தகவோ டுயர்நீதி ஆற்றிவரின்
ஆர்ந்து வருமே அறம். (க)

இ-ள்.

மனித இனத்துள் உன்னை ஒரு மன்னன் என மகிமையுடன் உயர்த்தி இறைவன் இனிது வைத்திருக்கிருன்; அந்த உண்மையை உணர்ந்து உரிய தகுதியோடு நீ ஒழுகி உயர வேண்டும்; தகவறிந்து நடப்பது தகுந்த தருமமாய் வருகின்றது.

நன்றியறிவு மனிதனுக்கு நலம் பல தருகின்றது. நெஞ்சம் கோடாமல் நேர்மையோடு எதையும் சீர்தூக்கி நோக்கும் நீர்மையாளரே எவ்வழியும் செம்மையுடையராய்ச் சீர்மையுடன் சிறந்து திகழ்கின்ருர். தமக்கு வாய்த்த மேன்மைகளைத் தக்க வகையில் பயன்படுத்தி வரும் அளவு அவர் தகவுடையர் ஆகின்ருர். செம்மை சீர்மை என்பன தகவின் தன்மைகளாம்.

தனது தலைமையான நிலைமையைத் தகுதியாய் அறிந்த அளவு தான் அரசன் உரிமையோடு கடமைகளைச் செய்து உயர்ந்து வருகிருன். தன் பொறுப்பை உண்மையா உணர்ந்தவனே திண்மையாச் செயல் ஆற்றிச் சிறப்படைய நேர்கின்ருன். உற்ற உணர்வு உயர்ந்த வெற்றியை உறுதியா விளைத்தருளுகிறது.

மனித இனம் மன்னனை மகிமையா மதித்து வருகிறது; அந்த மதிப்புக்கு உரிய மாண்பை யாண்டும் குன்ருமல் எவ்வழியும் அவன் இனிது பேணி வரவேண்டும். உரிய நீர்மை தழுவி உண்மையாய் நடந்துவரின் அரிய சீர்மை பெருகி வருகிறது.

நாடும் மக்களும் நலம் பல பெற நாடிச் செய்யின் பீடும் பெருமையும் கூடவே கூடி வருகின்றன. ஓர்ந்து செய்யும் கருமங்கள் உயர்ந்த தருமங்களாய் நேர்ந்து நிலவுகின்றன.

நாட்டுக்கு ஆக்கத்தை ஆக்கி மாந்தரைக் காத்தருளுவது கடமையாக் கொண்டுள்ளமையால் வேந்தனுக்குக் காவலன் என்று ஒருபெயர் வியனாய் நேர்ந்தது. அல்லல் யாதும் நேராமல் குடிசனங்களை எவ்வழியும் செவ்வையா ஆதரித்து வருபவனே நல்ல அரசன் ஆகின்றான். ஆளுபவன் உலக ஊழியனாகின்றான்.

"A good king is a public servant." (Ben Jonson)

நல்ல அரசன் என்பவன் பொது சன ஊழியனே என்னும் இது இங்கே அறியவுரியது. உலகமக்களுக்கு உழைத்து வரும் அளவே மன்னனது தலைமை மகிமையாய் நிலைத்து வருகிறது.

ஆதிமுதல்வன் ஒருவனே தன்னிகர் இல்லாத் தலைவன். அவனுடைய அருள் வழியிலே உலகத் தலைமைகள் தோன்றி வருகின்றன. இந்த நிலைமையை எண்ணி எவ்வழியும் கண்ணியமா ஒழுகுபவர் புண்ணிய வினைகளில் பொலிந்து திகழ்கின்றார்.

மைந்தர்களைத் தந்தை காப்பது போல் மாந்தர்களை வேந்தன் காக்கின்றான். ஒரு நாட்டுக்குத் தந்தை தாய் குரு தெய்வமாக அரசன் சார்ந்து நிற்கிறான். தேக பிதா இருந்தாலும் தேச பிதா சரியா இல்லையானால் அந்த மனித வாழ்வு பரிதாபமாம். ஆகவே மனித சாதியின் இனிய தாதையாய் அரசன் மருவியுள்ளமை அறியலாகும். ஆதரவு புரிபவன் தாதை என நேர்ந்தான்.

"Whoever is king, is also the father of his country."(Congreve)

எவன் அரசனோ தன் தேசத்துக்கு அவன் தந்தையாகவும் இருக்கிறான் என்னும் இது இங்கே நன்கு சிந்திக்கவுரியது.

தேச மக்கள் சுகமாய் வாழ்ந்து வரும்படி சூழ்ந்து வரவே தன்னைத் தலைவனாக உயர்த்தி ஈசன் நியமித்திருக்கிறான் என்னும் நினைவு மன்னனிடம் மன்னியிருக்குமானால் அவன் யாண்டும் மகிமையுடையவனாய் விளங்கி நன்னயங்கள் புரிந்து நிற்பான்.

அரிய பல நீர்மைகள் அமைந்த போதுதான் மனிதன் பெரியவனாகிறான். உயர்ந்த தலைவனிடம் இயல்பாகவே சிறந்த குணங்கள் பல நிறைந்து தேசம் நலமுற வருகின்றன.

கைப்புரை ஏற்றுப் பொய்ப்புகழ் ஏலாக்
காதினன்; அருள் பொழி கண்ணன்;
தப்புரை வழங்கா நாவினன்; புவியோர்
தாசன்தான் எனவுணர் மனத்தன்;
செப்பயல் மடவார் காணரும் உரத்தன்;
திருந்தலர் காணரும புறத்தன்;
எப்பொழு தினும்சென்று யாரும்காண் முகத்தன்;
ஈசன அன்புடையவன் இறையே. (நீதிநூல்)

உண்மையான ஒரு நல்ல அரசன் எப்படி இருப்பான் என்பதை இது வரைந்து காட்டியுள்ளது. காதினன், கண்ணன், நாவினன், மனத்தன், உரத்தன், புறத்தன், முகத்தன், என உறுப்புக்களைக் குறித்தது சிறப்பு நிலைகளை உய்த்து உணர்ந்து கொள்ள.

அறிஞர் கூறுகிற உறுதிமொழிகளுக்குச் செவி சாய்த்து, வீண்புகழ்ச்சிகளை விரும்பாமல், கருணைதோய்ந்து, இன்சொல் வாய்ந்து, கடமை ஓர்ந்து, பிறர்மனைநயவாமல், எதிரிக்கு இடங் கொடாமல், எவருக்கும் எளிய காட்சி புரிந்து, தெய்வசிந்தனையாளனுயிருப்பவனே தேசம் ஆள உரியவன் என்க. பெரிய அரசன் என்று கருதிச் செருக்காமல் சீவர்களுக்கு இதம் செய்யும்படி தேவன் அனுப்பிய ஒரு உலகவூழியன் எனத் தன்னைக் கருதிக் கொள்ள வேண்டும் என்பது புவியோர் தாசன் என்றதனல் தெரிய வந்தது தாழும் தகவு ஆளும் வலியை அருளுகிறது.

தனக்கு வாய்த்துள்ள பதவியின் நிலையை உணர்ந்து தன் கடமையைச் செவ்வையாச் செய்து வருபவனே எவ்வழியும் சிறந்த அரசனுய் உயர்ந்து திகழ்கின்றான். சேவை செய்து வரும் அளவு தேவனது அருளை அவன் அடைந்து கொள்கின்றான்.

"அரிய தந்து குடி அகற்றிப்
பெரிய கற்று இசைவிளக்கி
முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மின் நடுவண் திங்கள் போலவும்
பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கிப்
பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும்பெயர் மாறன்." (மதுரைக்காஞ்சி)

அரிய பொருள்களை ஆக்கி நாட்டை வளப்படுத்திக் குடி

களை உயர்த்தி யாண்டும் புகழ் ஒளி பரப்பிச் சூரிய சந்திரர்கள் போல் பாண்டிய மன்னன் ஈண்டு விளங்கியிருந்த நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. இன்னவாறு நீதி பரிபாலனம் செய்து வருபவரே மன்னருள் மன்னராய் மகிமை பெற்று வருகின்றார்.

---

852. கடமை உணர்ந்து கருமம் புரிந்து
மடமை கடிந்து மதியாய்த்—திடமுடனே
எவ்வழியும் சீர்மையை ஏந்தி வருமாயின்
அவ்வழி யாகும் அரசு (உ)

இ-ள்.

தான் செய்ய வுரிய கடமையை உணர்ந்து பருவம் தவறாமல் கருமங்கள் புரிந்து மடமை கடிந்து மதிமிகுந்து உள்ளத்துணிவுடன் எவ்வழியும்செவ்வையாய்ச் சீர்செய்து தேசத்தைப் பேணிவரின் அரசு பெருமகிமையாய்ப் பேர் பெற்று விளங்கும் என்க.

பிறந்த ஒவ்வொரு மனிதனும் தனக்கு உரிய நிலையில் உழைக்கவே ஈண்டு உருவாகி வந்திருக்கிறான். உழையாது நின்றால் அவ்வுயிர் வாழ்வு பிழையான பிரேத வாழ்வாம். உடல் உழைப்பால் உயிரின் பிழைப்பு உயர்வாய் உளவாகி வருகிறது.

மனித இனம் கூடி வாழும் இயல்புடையது. கூட்டம் கூட்டமாய் வாழ நேரவே அங்கங்கே ஒரு தலைவன் ஆளநேர்ந்தான்.

ஒரு வீடு, ஓர் ஊர், ஒரு நாடு, உலகம் என்பன உயிரினங்கள் வாழும் நிலையங்களாம். ஆகவே வீட்டுத் தலைவன், ஊர்த்தலைவன், நாட்டுத் தலைவன், உலகத் தலைவன்எனத் தலைவர்கள்உலாவ நேர்ந்தனர். ஒன்றை விட ஒன்று உயர்ந்து நிற்றலால் தலைமைகளின் நிலைமைகளையும் நீர்மைகளையும் நினைந்து கொள்ளலாம்.

தன்னைச் சார்ந்துள்ள மக்கள் ஆர்ந்த அமைதியோடு வாழ்ந்துவர ஓர்ந்து செய்து வருபவனே உயர்ந்த தலைவன் ஆகிறான். பிறர் நலமுற எவன் உரிமையோடு பேணுகின்றானோ அதிசய மகிமைகளை அவன் பெருமையோடு நேரே காணுகின்றான்.

தன்னலம் கருதாமல் மன்னுயிரைக் காத்து வருகின்ற மன்னனை வானவரும் மகிமையோடு நன்கு போற்றி வருகின்றனர்.

கன்னியர்க் கமைவருங் கற்பின் மாநிலம்
தன்னையித் தகைதரத் தருமம் கைதர
மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்
என்னுயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன்.

(இராமாயணம்)

தசரதன் நாட்டைக் காத்து வந்திருக்கும் நிலையை இது காட்டியிருக்கிறது. தரும நீதி தழுவி உயிர்களை அவன் பேணி வந்திருக்கிருன். மன் உயிர்க்கு உறுவதே செய்து வைகினேன் என்பது உன்னி உணர வுரியது. மன்னன் இன்னவாறு ஒழுக வேண்டும் என அந்த விழுமிய வேந்தன் வாய்மொழி ஈண்டு வெளி செய்துள்ளது. ஆருயிர்களை ஆதரித்து வருவதே அரசனது குல தருமமாம். அதனைச் செவ்வையாய்ச் செய்து வருகின்றவன் எவ்வழியும் திவ்விய மகிமையை எய்தி மகிழ்கின்ருன்.

தன் கிரணங்களால் கடல் நீரைச் சிறிது சிறிதாக மேல் இழுத்துப் பின்பு இனிய மழையாக உலகம் எங்கும் பெய்தருளு கிற சூரியன் போலக் குடிகளிடம் கொஞ்சம் வரிகளை வாங்கி நாடு முழுதும் நலமடைய அரசன் நாடிச் செய்கிருன். மனித சமுதாயம் இனிது வாழ உதவி செய்வதே மன்னவன் கடமையாம். தன் உரிமையைப் புரிவது தருமமாய் வருகிறது.

தலைமுறையாய் வந்த தன் குலமுறையை நலமாச் செய்து வருகிற அரசன் தருமவானுய் உயர்ந்து இருமையும் பெருமை பெறுகிருன்; அங்ஙனம் செய்யாது விடின் பழிபடிந்து இழிவுறுகிருன். உயர்வும் இழிவும் அவன் செயலால் விளைகின்றன.

திறந்தரு முத்தியும் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறி யே ஆற்றல் வேண்டும்;
சிறந்தநீர் ஞாலம் செய்தொழில் யாவையும்
அறைந்திடில் வேந்தனுக்கு ஆறில்ஒன்று ஆமே. (1)

ஆவையும் பாவையும் மற்று அற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவாது ஒழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. (2)

[திருமந்திரம்]

தன் கருமத்தை அரசன் கருதிச் செய்துவரின் பேரின்ப நிலையை அடைவன்; செய்யாது ஒழியின் மீளாநரகில் விழுவன் எனத் திருமூலர் இவ்வாறு குறித்திருக்கிறார். ஆட்சி புரிவதில் எவ்வளவு அபாயங்கள் நிறைந்திருக்கின்றன என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். கருதி ஆள்வதே உறுதி சூழ்வதாம்.

ஆளுகின்றவன் நாளும் நாட்டின் நலனைக் கண்ணூன்றிக் கவனிக்க வேண்டும். மக்கள் யாண்டும் மகிழ்ச்சியாய் வாழ்ந்து வரும்படி ஓர்ந்து செய்வதே தேர்ந்து சிறந்த நல்ல ஆட்சியாம்.

"That is the best government which desires to make the people happy, and knows how to make them happy."

[Macaulay]

"சனங்களின் சேம நலங்களை அறிந்து எவ்வழியும் அவர் சுகமாய் வாழ விரும்பி ஆளுகிற ஆட்சியே உத்தமமான உயர்ந்த ஆட்சியாம்" என ஆங்கில அறிஞரான மெக்காலே இவ்வாறு கூறியிருக்கிறார். மன்னன் அன்பு மக்களை இன்புறுத்தி வருகிறது.

தேச மக்கள் சிந்தை மகிழ்ந்து சிறந்து வருமாறு புரிந்து வருவதே அரசனின் தலைமையான கடமையாம்; அதனை உணர்ந்து செய்துவரின் உயர்ந்த மேன்மைகளை அவன் அடைந்து வருகிறான். மாந்தர் சுகமாய் வாழ்ந்து வரும் அளவு வேந்தன் மகிமையாய் உயர்ந்து யாண்டும் சிறந்து திகழ்கிறான்.

---

853. மாநிலத்தில் வந்த மனுவின் குலம்தழைக்கத்
தானுதித்த வந்த தனிவிதியே—ஞானமுயர்
நீதியென நின்று நிலவும் அதனையே
ஓதி ஒழுகும் உலகு. (௩)

இ-ள்.

இந்த உலகத்தில் தோன்றிய மனித சமுதாயம் இனிது வாழ்ந்து வரும்படி அமைந்த விதிமுறையே தருமநீதியாய் மருவியுளது; அந்த உண்மையை உணர்ந்து அதன் வழியே யாவரும் ஒழுகிவரின் எவ்வழியும் அதிசய நலன்கள் மேவி வரும் என்க.

உலக வாழ்க்கையில் மனிதன் பலவகையான தொடர்புகள் உடையவன். தன்னைச் சார்ந்துள்ள சூழலின் நோக்கையும் உலகப் போக்கையும் தழுவி ஒழுகும் வகையில் அவனுடைய

வாழ்வுகள் நேர்ந்திருக்கின்றன. சேர்ந்து நிற்கின்ற சமுதாய நிலைகளை ஓர்ந்து நடந்து வருவதில் ஊறுகள் நேராமல் சீரோடு வாழ்ந்துவரின் அது சீரிய வாழ்வாய்ச் சிறந்து திகழ்கின்றது.

பாடறிந்து ஒழுகும் பண்பு மனிதனிடம் படிந்திருத்தலால் அவன் கூடி வாழும் குழுவில் கோதுகள் கூடாமல் நாடியுணர்ந்து நயமாய் நடந்து கொள்கிறான். தனி மனிதனும் சமுதாயமும் இனிது வாழ்ந்து வரும்படி அமைந்துள்ள சீரிய ஒழுங்கு தான் நீதிமுறை என நேர்ந்துள்ளது. தன் நெஞ்சே நியம விதியாய் நடப்பவர் உயர்ந்த தரும சீலராய் ஒளிபெற்று நிற்கின்றார். அரசு முறை இவரைப் பரிசி வருகிறது. இத்தகைய உத்தமர்கள் இருக்கும் நாடு புத்தேளுலகமாய்ப் பொலிந்து விளங்குகிறது.

பாவம் யாதும் படியாமல் எவ்வழியும் புண்ணிய எண்ணங்கள் படிந்து வருபவர் இவ்வுலகிலேயே விண்ணோர்களாய் வாழுகின்றனர். தரும சிந்தனை இருமை இன்பங்களையும் ஒருங்கே அருளுகின்றது. தூய எண்ணங்களே புண்ணியங்களாகின்றன.

புண்ணி யம்புரி பூமிபார்; அதில்வரு போகம்
நண்ணி இன்புறு பூமிவான நாடென்ப; நாளும்
புண்ணி யம்புரி பூமியும் அதில்வரு போகம
நண்ணி இன்புறு பூமியும் மதுரைமா நகரம்.

(திருவிளையாடல்)

பாண்டிய மன்னன் அரசு ஆண்டு வருங்கால் இந் நாட்டில் இருந்த மக்கள் நிலைமையையும் இந்நகரின் இயல்பையும் இது காட்டியுள்ளது. தம் உள்ளமே சான்றாக ஒழுகி வந்துள்ளமையால் எல்லோரும் சான்றோராய் விழுமிய நிலையில் செழுமி நின்றனர்.

குற்றம் செய்தால் அரசன் தண்டிப்பான் என்று அவனது ஆணைக்கு அஞ்சி அடங்கி நடப்பவர் உயர்ந்தவராகார். தம் நெஞ்சே சாட்சியாய் நெறியே நடப்பவரே நீதியான்களாய் நிலவுகின்றார். மனம் புனிதமானால் மனிதன் தெய்வமாகிறான்.

அரச நீதியான சட்டம் திட்டமாயிருந்தாலும் அதனையும் மீறிக் கெட்டவர்கள் கேடு செய்கின்றனர்; யாதொரு சட்டமும் இல்லாவிடினும் நல்லவர்கள் தம் உள்ளமே விதியா யாண்டும் நெறியே ஒழுகி எவ்வழியும் செவ்வியராய் வருகின்றனர்.

மனமே சாட்சியாய் ஒழுக நேர்ந்த போது அந்த மனித மரபு புனிதமான தெய்வ இனமாய்ப் பொலிந்து திகழ்கிறது. சுகமும் கீர்த்தியும் நன்மையிலிருந்துவிளைகின்றன; துக்கமும்பழியும் தீமையிலிருந்துவருகின்றன. விளைவுகள்விழியூன்றி யுணரவுரியன.

துன்பத்தையும் இழிவையும் எவரும் விரும்புவதில்லை; இன்பத்தையும் புகழையுமே யாவரும் விழைகின்றனர். விழைந்தும் அவை கிடையாமல் பலர் இழிந்து போகின்றனர். தம்முடைய இழிவுக்கும் இழவுக்கும் காரணம் என்ன? என்பதைக் கருதியுணராமையால்அவரது வாழ்வு பரிதாபமாய்ப் பாழ்படுகின்றது.

தம்மை நல்லவர் என்று பிறர் சொல்ல வேண்டும் என்றே எல்லோரும் விரும்புகின்றனர். விரும்பியும் பொல்லாத பழக்கங்களால் பிழைகளைச் செய்து பீழையுறுகின்றார். நல்ல பிள்ளைகளும் கெட்டவர்களோடு சேர்ந்து கெட்டு விடுகின்றனர்.

நல்லது வேண்டும் என்றே நாடியுள்ள மனிதன் அல்லல் அடைந்து அலமந்து உழல்வது உள்ளம் கோடியதால் நீடியது.

True goodness springs from a man's own heart.
All men are born good. (Confucius)

மனிதனுடைய சொந்த உள்ளத்திலிருந்து தான் உண்மையான நன்மை ஊறுகிறது; எல்லா மனிதரும் நல்லவராகவே பிறக்கின்றனர் என்னும் இது இங்கே குறிப்போடு கூர்ந்து சிந்திக்க வுரியது. நன்மை தோய்ந்து வந்தவன் தீயனாயிழிகின்றான்.

இங்ஙனம் நல்ல நிலையில் பிறந்த மனிதன் உள்ளத்தை மழுக்கி ஒழுங்கை மீறிப் பொல்லாதவனாய்ப் புலையுறுவது புல்லிய புலைப்பழக்கத்தாலேயாம். கள்ளன் பொய்யன் வஞ்சன் துரோகி என மனிதன் வெளியே பேரெடுத்து நிற்பது உள்ளே அவன் உள்ளம் பிழையாய்ப் பழுது பட்டுள்ளமையை உணர்த்தியுள்ளது. அகநிலையே புறவாழ்வாய்ப் புலனாய் வருகிறது.

தன் உள்ளம் புனிதமாய்த் தரும நீதியோடு ஒழுகிவரின் அந்த மனிதன் உயர்ந்தமகானாய் ஒளி சிறந்து நிற்கின்றான். மனித சமுதாயம் முழுவதும் அவனை மதித்துப் போற்றி மகிழ்கிறது.

There is a natural aristocracy among men.
The grounds of this are virtue and talents.
[Thomas Jefferson]

மனிதருள் இயல்பாகவே தலைமையான ஒரு குல மேன்மை தோன்றுகிறது; தரும குணமும் தக்க அறிவுமே அதற்குக் காரணங்களாயுள்ளன என இது காட்டியுள்ளது. நீதிநெறி மனிதனை உன்னத நிலையில் உயர்த்தி ஒளி செய்தருளுகிறது; மன்னனும் அவனை மகிழ்ந்து புகழ்ந்து மதித்து வருகின்றான்.

———

854. பகையுறவு நண்பென்று பாராமல் யாண்டும்
தகைமை உணர்ந்து தகவின்—வகைமையாச்
செய்துவரின் அவ்வரசு தெய்வத் திருவெய்தி
உய்தி பெறுமால் உயர்ந்து. (ச)

இ-ள்.

எவரிடமும் வாரம் பற்றி ஓரம் செய்யாமல் எவ்வழியும் நடுவு நிலைமையாய் நின்று யாவும் நேரே ஆராய்ந்து தெளிந்து நீதி முறை செய்துவரும் அரசன் ஆதிபரன் அருளை அடைந்து யாண்டும் மேன்மையா உயர்ந்து விளங்குவான் என்பதாம்.

ஒருவனுடைய உண்மையான உயர்வு அவன் உள்ளச்செம்மையில் உறைந்துள்ளது. ஒருபாலும் கோடாமல் எப்பாலும் செப்பமாயிருப்பதே செம்மையாம். அரசன் தெய்வம் போல் எல்லார்க்கும் பொதுவா யிருப்பவன். சீவசாட்சி என அந்த இறைவன் மாட்சி பெற்றுள்ளது போல் இந்த இறைவனும் ஆட்சியில் அமைந்துள்ளான். நீதிபரிபாலன முறையில் யாரிடமும் ஓரம்படியாமல் நேர்மையோடு நெறியே ஒழுகிவரும் அளவே அரசன் சீர்மையாய்ச் சிறந்து வருகின்றான்.

தகவு என்னும் சொல் மிகவும் பொருள் ஆழம் உடையது.

தருமநீதி தழுவிய மனநேர்மையே தகவு என வந்தது. இதனை உரிமையாக வுடையவனிடம் அரிய பல மகிமைகள் பெருகி வருகின்றன. தகவு நிலையில் தருமங்கள் யாவும் மருவியுள்ளன.

தையல்தன் கற்புந்தன் தகவும் தம்பியும்
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேம மாகக்கொண்டு
ஐயனும் போயினன் அல்லின் நாப்பணே.

(இராமா, தைலம், 48)

அரசு முடிதுறந்து அயோத்தியை விட்டு இராமன் வனவாசம் போன போது அக்கோமகனைத் தொடர்ந்து துணையாகப்போன வர்களைக் கவி இவ்வாறு சுவையாகக்காட்டியிருக்கிறார். பொருள் நயங்கள் கருதி யுணரவுரியன. இராமபிரானுடைய அரிய குண கணங்களுள் தகவு இங்கே தலைமையாய் முதலில் வந்துள்ளது.

தகவுறு சிந்தையன் தருமநீதியன்
மகன்மகன் மைந்தன்நான் முகற்கு வாய்மையான்.
(இராமா, விபீட, 45)

விபீடணனை இங்ஙனம் குறித்திருக்கிறார். தகாத வழியில் சென்றமையால் தமையனை அறவே வெறுத்துவிட்டுத் தக்கவனை நாடித் தகவா வந்தவன் ஆதலால்தகவுறு சிந்தையன் எனநின்றான்

தம்பிஎன நினைந்திரங்கித் தவிரான் அத்தகவில்லான்
நம்பிஇவன் தனைக்காணின் கொல்லும் இறைநல்கான்.
(இராமா, கும்பகரு 358.)

இராவணனைக் குறித்து இராமனிடம் கும்பகருணன் இவ் வாறு கூறி விபீடணனைக் காத்தருளும்படி வேண்டியிருக்கிறான். தகவு இல்லான் என இராவணனைச் சுட்டியிருப்பது உய்த்துண ரத்தக்கது. தகவுடையார் இராமன் போல் எவ்வழியும் ஒளிபெறு கின்றார்; தகவில்லார் இராவணன் போல் இழிவுறுகின்றார்.

மனச்செம்மை தெய்வத் தன்மையாய் மகிமை தருகிறது; செவ்விய இந்தத் திவ்விய இயல்பு இல்லையானால் அங்கே வெவ் விய தீமைகள் விளைந்து வினைத் துயரங்கள் நேர்கின்றன.

நீதிநெறி மாறாமல் நேர்மையாய் ஆள நேர்ந்தவன் அரசன் ஆதலால் அவன் உள்ளம் கோடாமல் இருந்தால் செங்கோல னாய்ச் சிறந்து திகழ்கிறான்; கோடினால் கொடுங் கோலனாய் இழிந்து படுகிறான். கோல் கோடிய பொழுது நாடு கொடுந் துயரங்களை அடைய நேர்கிறது. நேரவே அரசு அழிவுறுகிறது.

நெஞ்சம் நேர்மை குன்றினால் அந்த அரசன் நஞ்சு போல் அஞ்சத் தக்கவனாகிறான். அவனது ஆளுகையில் வாழும் குடிகள் நாளும் நலிவுறுகின்றார். அரசன் செம்மை இழந்து விடின் யாவ ரும் வெம்மை யுழந்து வெருண்டு மருண்டு வெருவுகின்றனர்.

"நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலின்
உறலூறு கமழ்கடாஅத் தொல்கிய எழில்வேழம்
வறனுழு நாஞ்சில்போல் மருப்பூன்றி நிலம்சேர
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்." (கலி,8)

நடுவு நிலைமை இன்றிக் கொடுமை மண்டி நின்ற அரசனது ஆட்சிபோல் கொடிய சுடு வெயில் எங்கும் பரந்திருந்தது; காய்கின்ற வெப்பத்தைப் பொறுக்கமுடியாமல் மதயானைகளும் மறுகிக்கிடந்தன எனப் பாலை வனத்தைக் குறித்து இது கூறியிருக்கிறது. தகவிழந்தபோது அந்த அரசு மிகவும் துயரமாகிறது.

அரசன் கொடியன் ஆனால் அந்நாடு சுடுகின்ற கொடிய காடாம்; பெரிய குடிகளும் அங்கே வாழ முடியாமல் மறுகியுழலுவர் என்பதை இதனால் இங்கே அறிந்து கொள்ளுகின்றோம்.

செம்மையும் நீதியும் மன்னனுக்குத் திவ்விய மகிமைகளை அருளுகின்றன; அவற்றால் எல்லாச் செல்வங்களும் பெருகி வருகின்றன. உயிரினங்களை உரிமையோடு பேணவே அரசன் கோல் ஏந்திநிற்கின்றான். தன் கோலும் குடையும் முடியும் நெடிது நிலைத்து வருவது குடிகள் செழித்து வருவதைப் பொறுத்து வருகிறது.

மனித சமுதாயம் அமைதியாய் இனிது வாழ்ந்து வரும்படி சூழ்ந்து வந்துள்ள ஒழுங்கே அரசநீதியாய் நேர்ந்து வந்துள்ளது. அந்தவழியே ஆள்பவர் எந்தவழியும் இனியராய் விளங்குகின்றார்.

தரும நீதி தழுவித் தகவோடு தரணியை ஆளுக.

---

855. மன்னன் வளவன் மனுநீதி குன்றாமல்
தன்மகனைக் கொல்லத் தனிஎழுந்தான்—என்னவகை
ஆனாலும் நீதி அரசருயிர் ஆதலினால்
ஆனாமல் காப்பர் அதை. (ரு)

இ-ள்.

மனுநீதி மன்னன் என மகிமை தோய்ந்த சோழ மன்னன் அரசியல் முறையில் தனது அருமை மகனையும் கொல்ல நேர்ந்தான்; ஆதலால் நீதியே அரசனுக்கு உயிர்; அதனை எவ்வழியும் உரிமையோடு செவ்வையாய் அவன் பேணியருளுவன் என்க.

நியாயம் என்பது நெறிமுறையே ஆராய்ந்து புரியும் நயம். நாட்டுக்குத் தலைவனான நாயகன் நாடிச் செய்வது நியாயம் என வந்தது. நிறை தூக்கி நிறுத்து நோக்கி நீதி புரிவது அரச தருமமாம். நடுவன் என நீதிபதிக்கு ஒரு பெயரமைந்துள்ளது.

குடிசனங்கள் தமக்குள்ளே இகலி மாறுபட்ட போது அந்த முறையீடு அரசனிடம் வருகிறது. வரவே இருசாராரையும் அழைத்து விசாரிக்கிறான்; வழக்கின் நிலைகளைக் கூர்ந்து உணர்கிறான்; வழுக்களைக்களைந்து வசையில்லாதபடி நீதிவழங்குகிறான்.

தனித்த அதிகாரம் தன்பால் நிலைத்திருத்தலால் எவ்வழியும் முறையீடுகளை நுனித்து உணர்ந்து நேர்மையோடு நீதி புரிவதே மன்னனது நீர்மையாய் வந்துள்ளது. குற்றம் களைந்து குணம் வளர்ப்பதே நீதி முறையின் குறிக்கோளாம். இதில் பிழை நேர்ந்தால் பெரும் பழிகள் கொடுமையாய்ச் சேரும் ஆதலால் அரசன் நெடிது சிந்தித்தே எதையும் நேரே முடிவு செய்கிறான்.

உற்ற வழக்கு யாரும் தெளியமுடியாத சிக்கலாயிருக்குமானால் கொற்றவன் மிக்கவும் கவலை அடைகிறான். முடிவில் தெய்வத்தை நினைந்து தவம் கிடக்கிறான். குலோத்துங்கன் என்னும் பாண்டிய மன்னன் அரசு புரிந்து வருங்கால் ஒரு மறையவன் வந்து மறுகி முறையிட்டான்: அவன் தன் மனைவியோடு திருப்பத்தூரிலிருந்து மதுரைக்கு வந்தான்; வருங்கால் இடைவழியில் ஒரு ஆலமரத்தடியில் தங்கினான்; மனைவியின் தாகத்துக்காக நீர் கொண்டு வர அயலே போயினான்; அவள் தனியே படுத்திருந்தாள்; அந்த மரக்கிளையில் முன்னமே தொங்கியிருந்த ஓர் அம்பு காற்றால் அசைந்து கீழே படுத்திருந்தவள் மேல் பாய்ந்தது; பாயவே உடனே அவள் இறந்து போனாள்; தண்ணீர் மொண்டு கொண்டு மீண்டு வந்தவன் மனைவி மாண்டு கிடப்பதைக் கண்டு மறுகி அழுதான்; அவ்வமையம் அங்கே வில்லும் கையுமாய் அம்மரத்தருகே வந்து வெயிலுக்கு ஒதுங்கி ஒருவேடன் நின்றான். தன் மனைவியைக் கொன்றவன் அவன் தான் என்று துணிந்து அவனைப் பிடித்து இழுத்து வந்து அரசன் எதிரே விட்டு அவ்வேதியன் கதறி அழுது நின்றான். மன்னன் நேரே விசாரித்தான்; தான் கொல்லவில்லை என்று வேடன் சொன்னான்; வேறுயாரும்அருகே இல்லாமையால்அவனே கொன்றிருப்பான்

என்று அமைச்சர் உரைத்தார். அரசன் வேடனைச் சிறையில் அடைப்பித்தான். தனியே வந்து சிந்தனை செய்தான்: "கொலை செய்த குறி அவன் முகத்தில் தோன்ற வில்லை; நிகழ்ந்த நிலை யாதும் தெளிவாய்த் தெரிய வில்லையே!" என்று மறுகியுளைந்த மன்னன் இரவு வரவும் தனியே கோவிலுக்குப் போனான். சிவ பெருமான் சந்நிதியில் நின்று இருகைகளையும் சிரமேல் கூப்பி உருகித் தொழுது உண்மை நிலையைக் கருதி வேண்டினன்.

மன்ருடு மணியேஇம் மறவன்தான் பார்ப்பனியைக்
கொன்ருனே? பிறர்பிறிதால் கொன்றதோ? இதுஅறநூல்
ஒன்ருலும் அளப்பரிதாக் கிடந்ததால் உன்னருளால்
என்தாழ்வு கெடத்தேற்ருய்! என்றிரந்தான் அவ்வேலை.

மன்னன் இவ்வாறு மறுகி வேண்டவே மேலிருந்து ஒரு ஒலி எழுந்தது. "வேடன் கொல்ல வில்லை; வினைப்பயன் மூண்டது; காற்ருல் அலைந்து வீழ்ந்த அம்பால் அவள் மாண்டாள்" என அவ் ஓசை நீண்டு ஒலிக்கவே அரசன் உள்ளம் களித்தான். தெய்வத் திருவருளை நினைந்து வியந்து வெளியே வந்தான்; வேதி யனுக்கு ஆதரவோடு உணர்த்தி மறுமணம் முடிக்கும்படி பொருள் உதவி அனுப்பினன்; சிறையிலிருந்த வேடனை வெளி ஏற்றித் தன் எதிரே அழைத்து "அப்பா! தப்பாக நான் உன்னைத் தண்டித்தேன்; என் பிழையைப் பொறுத்தருள்" என்று பொன் னும் மணியும் அணியும் ஆடையும் அள்ளிக்கொடுத்து அவனை அனுப்பினன். அரசனுடைய நீர்மையையும் நீதியையும் நினைந்து நினைந்துநெஞ்சம் கரைந்து கண்ணீர் மல்கிக் கை தொழுது நின்று "ஆண்டவா! நீங்கள் நீடூழி வாழவேண்டும்" என்று அவன்போற் றிப் புகழ்ந்து போனன். அவன் போனபின் இவன் இறைவன் கோவிலுள் மீண்டும் போய் ஆர்வம் மீதூர்ந்து தொழுதான்.

ஆதரம் பெருகப் பாவியேன் பொருட்டெம்
அடிகள்நீர் அரும்பழி அஞ்சு
நாதரா யிருந்தீர் எந்தையார்க் குண்டே!
நான்செயத் தக்கது ஒன்றென்னைக்
காதலிற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக்
கரையில்மா பூசனை சிறப்பித்து
ஏதம தகற்றி உலகினுக்கு உயிராய்

இருந்தனன் இறைகுலோத் துங்கன்.

(திருவிளையாடற் புராணம்)

குலோத்துங்க மன்னனுடைய பரிபாலன முறையையும் நீதி நிலையையும் தெய்வத் திருவருளையும் இங்கே உணர்ந்து வியந்து உவந்து நிற்கிறோம். உலகினுக்கு உயிராய் இருந்தனன் என்றதனால் இந்த வேந்தனுடைய ஆதரவும் ஆட்சி நலனும் நன்கு அறிய வந்தன. தருமநீதி இருமையும் பெருமை தந்தது.

உலகுக்கு மன்னன் உயிர்; அவனுக்கு நீதி உயிர்.

That most kingly and godlike surname, The Just."

'[Plutarch]

"நீதி என்பது கடவுளுக்கும் அரசனுக்கும் உரிய ஒரு மறு பெயரே" என்னும் இது இங்கே அறிய வுரியது. நீதிமான் நித்திய சோதியாய் நிலைத்து வருகிறான். ஆருயிர்கட்கு ஆதரவு செய்து வருதலால்பேரின்பநிலை அவனுக்கு நேரே உரிமையாயது.

The memory of the just survives in heaven.

(Wordsworth)

நீதிமானுடைய நினைவு பரமண்டலத்தில் வாழுகிறது என இது குறித்திருக்கிறது. தன்னைத் தழுவியுள்ளவனுக்கு இருமை இன்பங்களையும் அருளி வருதலால் நீதி தெய்வத் திருவாய் நின்றது. இத்தகைய நீதியைப் பேணி ஆதரவுடன் அரசாண்டு வருகிறவன் உத்தம வேந்தனாய் ஒளி மிகப் பெறுகிறான்.

---

856. உற்ற திருவும் உயர்வும் உரிமையாப்
பெற்ற தவத்தின் பெருமைகாண்—மற்றதைக்
கண்டு களித்துக் கழியாமல் எவ்வழியும்
தொண்டு புரிக தொடர்ந்து. (சு)

இ-ள்.

சிறந்த திருவும் உயர்ந்த பெருமைகளும் அரிய தவத்தின் பயனாய் அமைந்துள்ளன; அந்த மேன்மைகளை நோக்கிச் செருக்காமல் நல்ல பான்மை யுடையவனாய் எல்லார்க்கும் இதங்களைச் செய்க; அது திவ்விய மகிமைகளை அருளும் என்பதாம்.

உலகம் விசித்திரமான காட்சிகளையுடையது, பலவகையான

மாறு பாடுகள் யாண்டும் நீண்டு எவ்வழியும் விழி தெரிய நிற்கின்றன. அந்நிலைகளை நோக்கிக் காரணங்களைக் கருதி ஆராய்ந்து தெளிவான முடிவு தெரியாமையால் மேலோர் அது ஒரு புண்ணியம் என அரச பதவியை வரிசையா முடிவு செய்துள்ளனர்.

ஒத்தமனிதருள் சிலர் அரிய மேன்மைகளை அடைந்து பெரியராய்த் திகழ்கின்றார்; பலர் அவ்வாறின்றி அயர்ந்து நிற்கின்றார். முன் செய்த நல்ல கருமங்கள் தருமங்களாய்த் தழைத்து வருதலால் அவற்றை மிகுதியாக வுடையவர் அரசர்களாய் நீண்டு யாண்டும் வரிசை மிகப்பெற்று வழிமுறையே வந்துள்ளனர்.

புண்ணிய நிலையில் இவ்வாறு போந்துள்ள வேந்தர் எவ்வழியும் கண்ணிய நிலைகளைக் கருதி ஒழுகி வருவது பிறப்பின் கடமையாய் வ்ந்தது. பிறப்பும் சிறப்பும் அவரது நீதி முறைகளில் நிலைத்து நெடிதுசெழித்து நெறியே தழைத்து வருகின்றன.

சமுதாயம் செவ்வையாய் வாழச் செய்து வருவதே சிறந்த நீதி ஆதலால் அது அரசனது குலதருமமாய்க் குலாவி நின்றது.

The virtue of kings seems to consist chiefly in justice.

அரசரது தருமம் முக்கியமாய் நீதியில் அடங்கியிருக்கிறது என்னும் இது இங்கே நன்கு அறியவுரியது.

சீவர்கள் சிறந்து வாழ நீதிபரிபாலனம் புரிந்துவரின் அது உயர்ந்த தருமமாய்ப் பொங்கி வருகிறது: வரவே அந்த மன்னன் புண்ணியமூர்த்தியாப் பொலிந்து விண்ணும் புகழவிளங்குகிறான்.

தனக்குக் கிடைத்த அரச பதவி அரிய மகிமையுடையது; பெரிய தவத்தால் வந்தது; இதனைத் தக்கவகையாகப் பேணிவர வேண்டும் என்னும் உணர்வு அரசனிடம் ஓங்கி நின்ற போது தான் உரிமையை ஓர்ந்து கருமம் புரிந்து யாண்டும் அயராமல் நீண்டு நிலைத்து உயர்ந்த நலங்களை அடைந்து வருகின்றான்.

கடமையுணர்ச்சி மடமையை நீக்கி மகிமை தருகிறது.

தான் முடிபுனைந்திருப்பது குடிகளை இனிது பேணவே என்னும் உணர்வு சிறிதுடையனாயினும் அவனே பெரிய அரசனாகிறான். மாந்தரை ஆதரவோடு காத்துவரும் அளவே வேந்தன் சீர்த்தியாய் விளங்கி வருகிறான். பல்லோரையும் பாதுகாக்க

நேர்ந்தவன் நல்லோனு யிருக்கவேண்டும். இனிய குணநீர்மைகள் மன்னனை உன்னத நிலையில் உயர்த்தி ஒளி புரிந்தருளுகிறது.

உலகப் பகுதிகளை உரிமையோடு பேணி வந்த அரசர் யாவரும் இராமனை வியந்து புகழ்ந்துள்ளனர். அக்கோமகனுடைய குண நலங்கள் கோக்குலங்களுக்கு மேல்வரிச் சட்டமா அமைந்து யாண்டும் நீண்ட ஆக்கங்களை அருளி யிருக்கின்றன.

தானமும் தருமமும் தகவும் தன்மைசேர்
ஞானமும் நல்லவர்ப் பேணு நன்மையும்
மானவ எவையும் நின் மகற்கு வைகுமால்
ஈனமில் செல்வம்வந் தியைக என்னவே.

(இராமா, மந்திர, 81)

தசரதனிடம் இராமனைக் குறித்து மன்னர்கள் இன்னவாறு கூறியிருக்கின்றனர். தகவு தருமம் முதலிய அரிய பல குண நலங்கள் அக்குலமகனிடம் பெருகியுள்ளமையை இதனால் அறிந்து கொள்கிறோம். இனியநீர்மைகள் தனிமகிமைகளாயின.

"பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்யஸந்திதே."

மன்னர் பெரும உன்மகனிடம் எண்ணரிய கலியாண குணங்கள் நிறைந்திருக்கின்றன என வான்மீகத்தில் வந்துள்ளதும் இங்கேசிந்திக்கத்தக்கது. சீராமன்நீர்மைசிறந்து திகழ்கிறது.

இத்தகைய உத்தம குணங்களையுடையவர் எவ்வழியும் ஒளி மிகுந்து வருதலால் உலகம் என்றும் அவரை உவந்து போற்றி வருகிறது. அல்லல்களை நீக்கி உயிர்களை நல்ல வகையாக் காத்து வரும் அரசை யாவரும் ஏத்தி வருகின்றார். இனிய நீரர் யாண்டும் பொன்னாய் உயர்கின்றார்; இன்னாதவர் மண்ணாயிழிகின்றார்.

வண்மை தவம்கல்வி வீரமிவை மற்றின்ன
ஒண்மை யுடையன ஒன்றால் புகழ்யாக்கை
நண்ணும் அவரன்றே பொன்றா நலம்பெற்றார்
மண்ணாவார் மற்றை யவர்." (இன்னிசையிருநூறு)

என்றும் அழியாத புகழை அடைந்து வேந்தன் வென்றி வீரனாய் விளங்க வேண்டும். அது நீதி பரிபாலன முறையால் நேரே நிறைவாகி வருகிறது. தன் செங்கோலே யாண்டும் மங்காத கீர்த்தியை அரசனுக்கு நன்கு அருளி நலம் பல புரிகின்றது.

அங்கோல் அவிர்தொடி! ஆழியான் ஆயினும்
செங்கோலன் அல்லாக்கால் சேர்ந்தாரும் எள்ளுவர்;
வெங்கோன்மை வேந்தர்கண் வேண்டும் சிறிதெனினும்
தண்கோல் எடுக்குமா மொய். (பழமொழி 248)

சக்கர தரனை திருமாலே யானாலும் மக்களுக்கு இனியனாய்ச் செங்கோல் செலுத்தானாயின் அவனை யாவரும் எள்ளி இகழுவர்; நீதிமுறையான தண்ணிய கோலே அவனுக்கு எண்ணிய உறுதி நலனை உதவி வருகிறது என இது உணர்த்தியுள்ளது.

A sense of justice is a noble fancy. [Tegner]

நீதியுணர்வு மேன்மையான இனிய நினைவு என்னும் இது ஈண்டு எண்ணவுரியது. மன்னர்க்கு நீதி மன்னிய மகிமையாம்.

---

857. மன்னன் எனினும் மனுநீதி குன்றினால்
சின்னவன் என்னும் சிறுமையாம்—என்ன
நிலைமை அடையினும் நீர்மை குறைந்தால்
தலைமை அழியும் தணிந்து. (எ)

இ-ள்.

உலகத் தலைவனாய் அரசன் உயர்ந்திருந்தாலும் நீதிமுறை குன்றினால் அவன் தீது படிந்து சிறுமையாயிழிந்து ஒழிவான்; செல்வம் அதிகாரம் முதலிய நிலைமைகளில் சிறந்து நின்றாலும் தன்மை குறைந்தால் புன்மையாய் இழிந்து அழிந்து போவான்; அரிய சீர்மைகள் உரிய நீர்மைகளால் அமைந்து வரும் என்க.

தனது தலைமைக்கு உரிய நிலைமையைத் தழுவியிருக்கும் அளவே வேந்தன் விழுமியனாய் விழைந்து போற்றப் படுகிறான். செம்மையான நீதி ஒழுக்கமே மன்னனுக்கு எவ்வழியும் மகிமை தந்து வருகின்றது. அதனைப் பேணுவது காணியைக் காப்பதாம்.

மனித சமுதாயம் அமைதியாய் இனிது வாழ அமைந்துள்ள ஒழுங்கு முறையே மனுநீதி என விளங்கியுள்ளது. நியாயம் நீதம் நடுவுநிலைமை தருமம் நெறி முறை என வருவன எல்லாம் நீதியின் பரியாய நாமங்களே. பெயர்களில் உயர்வுகள் உள்ளன.

மன்னுயிரைக் காக்க நேர்ந்த மன்னனுக்கு நீதி இன்னுயிராய் இசைந்திருக்கிறது. இராச தருமமாய் மருவியுள்ள இதனைத்

தழுவி ஒழுகுகிறவனிடம் அதிசய ஆற்றலும் அற்புத மகிமைகளும் பெருகி வருகின்றன. காப்புமுறை கடவுள் நிலையாகிறது.

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும். (குறள், 388)

நீதி நெறியே ஒழுகி நாட்டை நன்கு காத்துவருகிற அரசன் மக்களுக்கு நேரே கண் கண்ட கடவுளாகவே கருதப் படுவான் என இது காட்டியுள்ளது. முறைக்கும் இறைக்கும் உள்ள உறவுரிமையை இதனால் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

நீதி முறை செய்பவனிடம் தெய்வத் தேசு சேர்ந்து திகழ்கிறது. தருமதேவதை அவன்பால் மருவி மிளிர்கிறது.

There is no virtue so truly great and godlike as justice.
(Addison)

நீதியைப் போல் கடவுளுக்கு நிகரான பெரிய தருமம் வேறு யாதும் இல்லை என அடிசன் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். மனித மரபை அது புனிதமாக்கி வருகிறது.

தன் உள்ளத்தில் நீதி தோய்ந்த போது அந்த மனிதன் ஆதி முதல்வன் ஆகின்றான். நீதி கடவுளின் வடிவம் ஆதலால் அதனையுடையவன் உருவம் மருவிய ஓர் இறைவன் என நேர்ந்தான்.

இறைமையின் தனி நீர்மை ஆதலால் நீதிமுறை யாண்டும் நிலையான மகிமைகளை விளைத்துத் தலைமையாய் வருகிறது.

மாளாத நீதி இகழாமை நின்கண் அபிமானமில்லை வறியோர்
ஆளாயும் வாழ்தி அரசு ஆள்தி. (இராமா, நாக, 256)

இராமனது நீதிநிலையைக் கருடன் இங்ஙனம் துதித்திருக்கிறான்.

நீதியாய்! முனிந்திடேல் நீஇங்கு யாவர்க்கும்
ஆதியான். (இராமா, பரசுராம 37)

பரசுராமன் இராமனை இவ்வாறு பரசி யுள்ளான்.

நீதிமுறையில் இராமன் நிலைத்து வந்துள்ளமையால் அதிசய மகிமைகள் அக்கோமகன் பால் தழைத்து வந்துள்ளன.

மக்கள் இனத்தைப் பாதுகாக்க வந்தவன் தக்க நீதிமானாயிருந்த போது தான் அவனது ஆட்சி நீட்சியாய் மாட்சியடைந்து வரும். வேல் வாள் முதலிய ஆயுத பலங்களை விட

நீதியே பெரிய வலியுடையதாம். இதனை உரிமையாக உடைய வன் எவ்வழியும் வெற்றியும் புகழும் பெற்று வருகின்றான்.

Every place is safe to him who lives in justice. [Epictetus]

நீதியில் வாழுகிறவனுக்கு ஒவ்வொரு இடமும் சேமமான பாதுகாவலாம் என நீதியின் அரணை இது நேரே குறித்துள்ளது.

The administration of justice is the firmest pillar of government. [Washington]

ஆட்சிக்கு உறுதியான தூண் நீதிமுறையான காரிய விசாரணையே என ஜார்ஜ் வாஷிங்டன் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். எங்கே நீதிமுறை நிறைந்திருக்கிறதோ அங்கே மக்கள் வாழ்க்கை மாண்பு தோய்ந்து மிக்க சுகமாய் மேவி மிளிர்கிறது.

Justice is like the kingdom of God. [G. Eliot]

நீதி தேவராச்சியமாயுள்ளது என இது உணர்த்தியுளது.

இத்தகைய நீதிமுறைகளைத் தழுவி அரசுபுரிபவன் அரிய பல மேன்மைகளை மருவி மகிழ்கிறான். ஆட்சிக்கு உயிர் நிலையமான இந்த அற்புத நீர்மையை இழந்து விடின் அவன் அற்பனாயிழிந்து படுகிறான். புன்மை படியப் புலைகள் படிகின்றன.

நல்ல தன்மைகள் மன்னியுள்ள அளவு மன்னவன்; அவை யில்லையேல் அவன் சின்னவன். சிறுமையாயிழிந்து சீரழியாமல் பெருமையாயுயர்ந்து பேர் பெற்றவரே பார்பெற்ற பயனைநேரே பெற்று நிற்கின்றார். உயர்ந்த தலைமையை அடைந்தவன் சிறந்த நிலைமைகளை எவ்வழியும் செவ்வையாய்ப்பேணி ஒழுகவேண்டும். அந்த ஒழுக்கமே அவனுடைய காணியைக் காப்பாற்றியருளும்.

---

858. மேன்மையும் கீழ்மையும் வேறிடத்தில் இல்லையுன்
பான்மையின் உள்ளே படிந்துளகாண்—மேன்மை
அடைய விரும்பின் அரிய குணங்கள்
உடையவனாகு உயர். (அ)

இ-ள்.

மேலான உயர்வும் கீழான இழிவும் வேறு அயலே இல்லை; யாவும் உன் இயல்பிலேயே உள்ளன; ஆகவே அரிய குணங்களை உரிமையுடன் அடைந்து பெரியவனாய் உயர்ந்து கொள்ளுக.

மரத்தின் வளர்ச்சி அதன் வேரிலிருந்து வருகிறது; மனிதனின் உயர்ச்சி அவனுடைய மன நீர்மையிலிருந்து விளைகிறது. மனம் செம்மையானல் மனிதன் நன்மையாளனுய் நலம் பல பெறுகிறுன்; அது புன்மையானல் அவன் புலையாய் இழிவுறுகிறுன். உயர்வுக்கும் தாழ்வுக்கும் மனமே மூல காரணமாயுள்ளது. அது சுத்தமானல் நித்திய முத்தியை நேரே பெறலாம்.

நினைவுகள் நல்ல நெறிகளில் பழகிவரின் அந்த மனம் புனிதமாய்ப் பொலிந்து வருகிறது; அதனையுடைய மனிதனும் மகானுய் மகிமை தோய்ந்து வருகிறுன். நல்லவாசனையால் மலரின் மேன்மையை அறிகிறேம்; அதுபோல் உள்ளப் பண்பால் ஒருவனுடைய உயர்வினை உணர்ந்து கொள்கிறேம். பண்பு படிந்துவரின் இன்பம் சுரந்து வரும். சீவஒளியால் மனம்சிறந்து திகழும்.

The mind is the atmosphere of the soul. [Joubert]

உயிரின் வெளி உயிர்ப்பே மனம் என இது குறித்துள்ளது.

A good mind possesses a kingdom. (Seneca)

நல்ல மனம் ஒரு இராச்சியத்தை யுடையது என சேனிகா என்பவர் இவ்வாறு கூறியிக்கிறுர். இனிய நீர்மைகளோடு பழகி மனதைப் புனிமா வைத்துக் கொள்ளுபவன் அரிய பல நன்மைகளையும் அதிசயமேன்மைகளையும் அடைந்துகொள்கிறுன்.

மனித சமுதாயத்தை மாண்போடு பாதுகாக்க நேர்ந்த அரசன் புனிதமான இனிய நீர்மைகள் தோய்ந்துவரின் அவனுடைய ஆட்சி யாண்டும் மதிப்பாய் மாட்சி மிகுந்து வரும்.

ரகு, ககு, சிபி முதலிய மன்னர்களை எண்ணுந் தோறும் அவருடைய புண்ணிய நீர்மைகள் நம் கண் எதிரே தோன்றி எண்ணரிய இன்பங்களை விளைக்கின்றன. சீவர்களுக்கு இதம் செய்து அவர் ஆண்டு வந்துள்ள ஆண்மைகள் அரச குலங்களுக்கு யாண்டும் மேன்மை ஒளிகளாய் மேவியுள்ளன.

இரவி தன்குலத்து எண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு என்பது தாய்முலை அன்னதிவ்
வுரவு நீர்நிலத்து ஓங்கும் உயிர்க்கெலாம். (இராமாயணம்)

சரயுநதி கோசல தேசத்தில் உள்ளது. தண்ணீர் எப்பொழுதும்

கண்ணியமாய் அதில் நிறைந்து செல்லும்; பயிர்களும் உயிர்களும் அதனால் செழித்துக் களித்து வந்தன. அந்தத் தேசத்தை ஆண்ட அரசர்களுடைய குண நீர்மைகள் போல் அந்நதி நீர் இருந்தது எனக் கவிநாயகன் குறித்திருப்பது சுவை சுரந்துள்ளது. சிறந்த குணநலங்கள் நிறைந்த அளவுதான் அரசன் உயர்ந்தவனாய் ஒளிபெற்று விளங்குகிறான். அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் தூங்காமை கல்வி துணிவு இன்சொல் இரக்கம் ஒழுக்கம் அடக்கம் உறுதி பொறுதி நீதி மானம் வீரம் முதலியன அரசனின் இயல்பான நீர்மைகள் என இறைமாட்சியுள் தேவர் இசைத்துள்ளமை ஈண்டு எண்ணி யுணரவுரியது.

> "The king-becoming graces,
> As justice, verity, temperance, stableness,
> Bounty, perseverance, mercy, lowliness,
> Devotion, patience, courage, fortitude."
>
> (Macbeth, 4, 3,)

தயை நீதி சத்தியம் தன்னடக்கம் உறுதி ஈகை விடாமுயற்சி இரக்கம் பணிவு தெய்வபத்தி பொறுமை தைரியம் வீரியம் என்பன அரசனை அணிசெய்யும் பண்புகளாம் என இது குறித்துள்ளது. எந்த நாட்டிலும் அரசன் எவ்வாறு இருக்க வேண்டும் என மேலோர் கருதியுள்ள குணநலங்களையும் குறிப்புகளையும் இதனால் உறுதியா இங்கே உணர்ந்து கொள்கிறோம்.

வையம் உவந்து வாழ வழி காட்டியாய் வந்துள்ளமையால் அரசன் உயர்குண சீலனாய் ஒளி நீட்டியிருக்க வேண்டும்.

தான் நல்ல நீர்மையாளனா யிருந்த போதுதான் மாந்தரை வேந்தன் நன்கு பாதுகாத்து நாட்டைச் சீர்மையோடு ஆளமுடியும். உள்ளம் செம்மையாய்த் திருந்தி யுள்ளவனுக்கு உலத்தைத் திருத்தமா ஆளும் வல்லமை தானாகவே வந்து சேருகிறது.

மனத்தின் நன்மையே மன்னனுக்கு மன்னிய மகிமைகளை அளித்து வருகின்றன. அகத்தைச் சுத்தமா வைத்திருப்பவன் அதிசய சத்திகளை விரைந்து அடைந்து கொள்கிறான். உலக மாந்தர் எவரும் வியந்து புகழும்படி அவன் உயர்ந்து திகழ்கிறான். உயர்வெல்லாம் உள்ளப்பண்பால் உளவாகின்றன.

எண்ணினர் எண்ணகப் படாத செய்கையான்;
அண்ணினர் அகன்றவர் திறத்தும் ஆணையான்;
நண்ணினர் பகைவர்என் றிவர்க்கு நாளினும்
தண்ணியன் வெய்யன்நம் தானை வேந்தனே. (1)

கற்ற நூலினர் கலந்த காதலால்
உற்ற போழ்துயிர் கொடுக்கும் ஆற்றலான்;
கொற்ற வேலவன் குடையின் நீழலார்
சுற்ற மாண்பினர் சுடரும் வேலினுய். [சூளாமணி] (2)

சுரமை நாட்டு மன்னனுடைய மாண்புகளை இவை வரைந்து காட்டியுள்ளன. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. அரிய பண்புகளால் பெரிய மேன்மைகள் நேரே பெருகி வருகின்றன.

இனிய நீர்மையால் உயர்ந்து எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து வருகிற மன்னன் யாண்டும் மனிததெய்வமா மருவி மிளிர்கிறான்.

---

859. உள்ளம் உயரின் உலகில் அவனுயர்ந்து
வெள்ளமென மேன்மைகளை மேவுகின்றான்—உள்ளம்
இழிந்து படிநேர இழிமகனுய் எங்கும்
கழிந்து படுகின்றான் காண். (௯)

இ-ள்.

உள்ளம் நல்ல வழியில் பழகி உயர்ந்தால் உலகில் உயர்ந்து அளவிடலரிய மேன்மைகளை அடைகிறான்; அது இழிந்து பட்டால் அவன் இழிமகனுய்க் கழிந்து ஒழிந்து போகிறான் என்க.

உடலின் உள்ளே யிருந்து உணர்வது உள்ளம் என வந்தது. வெளியே நிகழுகின்ற செயல் நிலைகளுக் கெல்லாம் இது மூல யந்திரமாயுள்ளது. உள்ளம் அகத்தே யிருந்து இயக்க மனித வுலகம் புறத்தே இயங்கி வருகிறது. இதன் அதிசய ஆற்றல்கள் அளவிடலரியன. இது ஆட்டியபடியே யாவரும் ஆடி வருகின்றனர். மனம் நடத்த மானிடங்கள் நடக்கின்றன.

கண்ணுடி உருவங்களைக் காட்டுதல் போல் மனம் மனிதனுடைய மருமங்களையெல்லாம் தெளிவாகக்காட்டுகிறது. உயர்வு தாழ்வு இன்பம் துன்பம் எனவருவன யாவும் இதன் இயல்பின் அளவே விளைவனவாம். சிந்தைவழியே சீவர்கள்வாழுகின்றனர்.

உள்ளம் நல்ல பண்பு படிந்துவரின் அந்த மனிதன் எல்லா மேன்மைகளையும் எளிதே எய்தி இன்பம் மிக அடைகின்றான். இது பொல்லாத தாய்ப் புலை படிந்து வரின் எல்லா வழிகளிலும் இழிவும் பழியும் அழிகேடுகளும் அல்லல்களுமே விளைந்து வரும்.

தூய உள்ளம் பேரின்ப வெள்ளத்தைப் பெருக்கியருளுகிறது; அது தீயதாயின் கொடிய நரக துயரங்களையே கூட்டி விடுகிறது. மாசு நீங்கிய அளவு அங்கே ஈசன் அருள் ஓங்கி எழுகிறது. நெஞ்சத் தூய்மையே நிமலன் நிலையமாம்.

பரிசுத்த இதயம் பரஞ்சோதி நிலையமாயுள்ளமையால் அது அதிசய மகிமையாய் யாண்டும் துதிசெய்யப் பெறுகிறது.

"உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தின் ஆரும் கலந்தறி வார் இல்லை."

இறைவன் மனிதனது தூய உள்ளத்தில் உளன்; கள்ளம் படிந்த நெஞ்சர் அவனைக் காண முடியாது; உள்ளம் தூயரே காணுகின்றனர் எனத் திருமூலர் இவ்வாறு காட்டியுள்ளார்.

மாசற்ற மனம் ஈசனை நேரே காணுகிறது; காணவே ஈசன் ஆகவே அது காட்சி தந்து எவ்வழியும் இன்பம் அருளுகிறது.

"Our mind is God." (Menander)

நமது மனமே கடவுள் என இது காட்டியுளது.

"God is Mind, and God is infinite; hence all is Mind.
(Baker Eddy)

கடவுள் எல்லையின்றி எங்கும் நிறைந்தவர்; உள்ளமாயுள்ளார்; ஆகவே எல்லாம் உள்ளமே என்னும் இது ஈண்டு உணரவுரியது. சித்த சுத்தி சிவம் என நின்றது.

உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின்று ஆடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியிலோரே. [திருமந்திரம், 509]

புனித உள்ளம் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களிலும் உயர்ந்தது; அதனையுடையவர் பரம பரிசுத்தராய் உயர்கின்றார் என இது உணர்த்தியுள்ளது. தன் உள்ளம் நல்லதானால் அவன் தூய தெய்வீக நிலையில் துலங்கி இன்பமாய் இலங்கி நிற்கிறான்.

உள்ளம் உடைமை யுடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். (குறள், 592)

ஊக்கம் உடைய நல்ல உள்ளமே பெரியபாக்கியம்; அதற்கு நிகரான செல்வங்கள் வேறு யாதும் இல்லை எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிரூர். மனிதன் அடையவுரிய பெருமைகள் யாவும் உள்ளத்திலேயே மருமமா மருவியுள்ளன.

இத்தகைய உள்ளத்தைப் புனித நினைவுகளால் இனிது பண் படுத்திவரின் அந்த வேந்தனிடம் மேம்பாடுகள் விரிந்து விளைந்து வருகின்றன. மனம் பெருந்தன்மையாய் உயர்ந்து வருதற்கு அடையாளம் தாழ்ந்த இனங்களை ஆழ்ந்த அனுதாபத்தோடு ஆதரித்து வருவதேயாம். அன்பு நலம் இன்ப நிலையமாகின்றது.

தலைவனுய் உயர்ந்துள்ள மன்னன் குடிகளை உரிமையோடு பேணி வருங்கால் அரிய பல பெருமைகளை அடைந்து கொள்ளு கிருன். உலகமாந்தர் அவ் வேந்தனை உவந்து புகழ்ந்து வருகின் ருர். உண்மையான உதவியால் உயர்ந்த மகிமைகள் உளவாம்.

உலகத் தோரே பலர்மற் செல்வர்
எல்லா ருள்ளும்நின் நல்லிசை மிகுமே
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே!
பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை
வசையில் செல்வ! வான வரம்ப!
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்தி நீ யாகன் மாறே. (பதிற்றுப்பத்து,38)

சேர மன்னனுடைய சீர்மை நீர்மைகளை இது கூறியுள்ளது. குற்றம் இல்லாத நல்ல உள்ளம் உடையனுய் எல்லார்க்கும் இரங்கி உதவிப் பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்பிப் பிறர்க்கு என அவன் வாழ்ந்து வந்தான்; ஆகவே உலக மன்னர் எல்லாரினும் உயர்ந்த கீர்த்திமானுய் ஒளி பெற்று எவரும் புகழ்ந்து போற்ற நின்றுள்ளான் என்பதை இங்கே உணர்ந்து கொள்கிருேம்.

உள்ளத்தில் நல்ல நீர்மை தோய்ந்தவன் இனிய தருமவா னுய் உலகத்தில் உயர்ந்து திகழ்கிருன். உயர்வுகள் செயல்களின் இனிமைகளால் செழித்துத் தேசு மிகுந்து சிறந்து வருகின்றன.

தேசத்தைச் சேமமா ஆள நேர்ந்த அரசன் முதலில் தன் நெஞ்சத்தை நேமமா ஆளவேண்டும்; அங்ஙனம் ஆளானுயின் அவனது ஆட்சி மாட்சியுருது; தாழ்ச்சியே அடையும். மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கமாய் மகிமை தருகிறது; அந்த அரிய நலத்தை இழந்தவன் எல்லா நலங்களையும் ஒருங்கே இழந்து எவ்வழியும் உய்தி காணுமல் வெவ்வியனுய் இழிந்து போகிருன்.

உள்ளத் தூய்மை தெய்வத்திரு; அதனை எய்தி இன்புறுக.

---

860. கோடி வெளிவேடம் கொண்டாலும் உள்ளத்தே
பாடிய நீர்மை படிந்திலதேல்—நீடியவன்
நின்ற நிலையெல்லாம் நீள்கானல் நீராகி
ஒன்ற ஒழியும் ஒருங்கு. (௰)

இ-ள்.

புறத்தே ஆடம்பரமான கோலங்கள் பல கொண்டாலும் அகத்தே நல்ல நீர்மை இல்லையேல் அவை யாவும் அவமானமா யிழிந்து படும்; அவனும் அவலமாய் அழிந்து படுவான் என்க.

வேடம் என்பது ஆடை அணி முதலியவற்ருல் வெளியே பகட்டாக் கொள்ளும் கோலம். உள்ளத்தில் தகுதியுடையவர் அதற்குத் தக்கபடி புறத்தே புனைந்து கொள்ளின் அது நல்ல தவவேடமாம்; அங்ஙனம் இல்லாமல் கள்ளமா வனைந்து கொள்ளின் அது பொல்லாத அவ வேடமாய்ப் புலையே தரும்.

அயலார் கண்டு தம்மை உயர்வாக மதிக்கவேண்டும் என்னும் மயலான ஆவல் எல்லாரிடமும் இயல்பாய் அமைந்துள்ளது. மனிதனுடைய உண்மையான பெருமை புறப்பொருள்களில் இல்லை. அவனது அகத்திலேயே அமைதியாய் உள்ளது.

நல்ல எண்ணங்களோடு நல்ல காரியங்களை எவன் செய்து வருகிருனே அவன் நல்லவனுய் உயர்கிருன். அங்ஙனம் இல்லாதவன் பொல்லாதவனுய் இழிந்து புலையுறுகின்ருன்.

தன்னலமே நாடித் தான் ஒருவனே சுகமாய் வாழவேண்டும் என்று அவாவி உழலுகின்றவன் யாண்டும் உயர்ந்த மதிப்பை அடைவதில்லை. பிறர் நலமுற உரிமையோடு கருதுகின்றவனே பெரிய மனிதனுய் அரிய மேன்மைகளை அடைகின்ருன்.

தன் வயிற்றை நிறைத்துச் சுய நலமாய்த் திரிபவன் ஒரு நலமும் காணுமல் ஊனமாய் ஒழிந்து போகிருன். அயலாரைப் பேணுபவன் உயர்நலங்களை ஒருங்கே காணுகிருன். பிற உயிர்கள் இன்புற அன்பாய் ஆதரித்து வருபவன் அதிசய தருமவானுகிருன்; ஆகவே அந்தப் புண்ணிய வேந்தனை யாவரும் ஆவலோடு எண்ணிஏத்துகின்ருர். சீவர்கட்கு இதம் செய்பவன் தேவனும்.

உறையூரிலிருந்து அரசு புரிந்து வந்த சோழ மன்னன் இறந்து போனுன்; அப்பொழுது அவனை நினைந்து பொத்தியார் என்னும் புலவர் பெருமான் பாடிய பாடல் ஒன்று அயலே வருகிறது.

பாடுநர்க்கு ஈத்த பல்புக ழன்னே
ஆடுநர்க்கு ஈத்த பேரன் பினனே
அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்
அனையன் என்னது அத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்!
நனந்தலை யுலகம் அரந்தை தூங்கக்
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே. (புறம், 221)

அரிய பல புகழ்களும் உயிர்கள்பால் பேரன்பும் உடைய செங்கோல் வேந்தனை எமன் கொண்டு போய் விட்டான் என அவனை வைது நொந்து புலவர் அழுதிருக்கும் நிலையை அறிந்து இங்கே நாம் வருந்தி நிற்கிரேம். இத்தகைய உத்தம அரசரைப் பெற்றுள்ள மக்கள் பெரிய பாக்கியவான்களாகின்ருர். குடை கொடி முடி முதலிய அரிய ஆடம்பரங்களால் அரசன் பெரியவன் ஆகான்; உள்ளத்தில் அமைந்துள்ள நல்ல குணங்களாலேயே எல்லாரும் உவந்து புகழ அவன் உயர்ந்து திகழ்கிருன்.

பள்ளத்தில் வெள்ளம் படிந்து பயனருளும்
உள்ளத்தில் நீர்மை உயர்வாகும்---பள்ளமிலா
மேட்டில்நீர் நில்லாது மேட்டிமையும் அப்படியே
காட்டும் கயமாம் கடுக்கு.

பள்ளத்தில் வெள்ளம் தங்கியுள்ளது போல் மனிதன் உள்ளத்தில் நல்ல நீர்மைகள் நிறைந்திருந்தால் எல்லாரும் அவனைப் புகழ்ந்து போற்றுவர்; அங்ஙனமின்றி மேட்டு நிலம் போல் மேட்டிமை காட்டிச் செருக்கி நின்றால் யாவரும் இகழ்ந்து எவ்வழியும் அவனை வெறுப்பர் என இது உணர்த்தியுளது.

உயர்ந்த பதவியை அடைந்துள்ள அரசன் உள்ளம்பதமாய் உயிர்களுக்கு உதவி புரிந்து வரவேண்டும். செய்துவரும் ஆதரவின் அளவே ஆட்சி மாட்சியாய்ச் சிறந்து வருகிறது.

மன்னவர்க்கு அழகு செங்கோல் முறைமை. (நறுந்தொகை)

என ஒரு மன்னன் இன்னவாறு அரசு நிலையைக்கூறியுள்ளான்.

மன்னுயிரைக் காப்பது மன்னன் கடமை ஆதலால் அதனை உரிமையோடு செவ்வையாச் செய்த போதுதான் தெய்வ அருளை நேரே அவன் எய்த நேர்கிறான்.

Truth is a divine word. Duty is a divine law. (Douglas)

சத்தியம் கடவுள் வார்த்தை; கடமை கடவுளின் கட்டளை. என்னும் இது இங்கே உறுதியாய் நன்கு கருதியுணரவுரியது.

ஆண்டவனுடைய ஆணையை ஆளுகின்றவன் நாளும் பேணி ஒழுகுவது காணியாய் வந்தது. தக்கவன் என்று கருதித் தந்த உரிமையைத் தகவோடு ஆற்றி வருகிற அரசன் யாண்டும் ஏற்றம் மிகவுடையனாய் உலகம் போற்ற ஒளிபெற்று நிற்கிறான்.

## இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தகவு தரும நிலையம்.
அதனை யுடைய அரசன் உயர்ந்து திகழ்வான்.
நீதிநெறி நித்திய சுகம்.
மன நேர்மை மகிமை தரும்.
மனு நீதி மன்னன் உயிர்.
கண்டு களியாமல் தொண்டு புரிக.
நிலைமை வழுவின் தலைமை ஒழியும்.
உயர்வும் தாழ்வும் உள்ளத்தில் உள்ளன.
உள்ளத்தின் அளவே உயர்வுகள் உளவாம்.
நீர்மை நிறைந்து சீர்மை பெறுக.

அசு-வது தகவு முற்றிற்று.

# எண்பத்தேழாம் அதிகாரம்.

## தரம்.

அஃதாவது செயல் இயல்களின் வகையால் வளர்ந்து வரும் உயர்வு. தன்மையால் விளைகின்ற நன்மையை நன்குவிளக்குகின்றமையால் தகவின் பின் இது இங்கு வைக்கப்பட்டது. தகவும் தரமும் மிகவும் உறவாய் மேன்மை புரிகின்றன.

861. அரிய வினைகளை ஆற்றி வருவார்
பெரியர் எனவே பெருகி—உரியசீர்
யாவும் பெறுவர் எவரும் அவரையே
மேவி வருவர் விழைந்து. (க)

இ-ள்.

அரிய காரியங்களைச் செய்து வருகின்றவர் பெரிய மேன்மைகளை எய்தி உயர்கின்றார்; அந்த மேலோரையே யாவரும் விழைந்து புகழ்ந்து வியந்து உவந்து போற்றி வருவர் என்பதாம்.

தகுதி, தரம் என்னும் மொழிகள் பொருள்களின் உயர்நிலைகளை உணர்த்தி வருகின்றன. உயர்ந்தது வியந்து புகழப் பெறுகிறது; இழிந்தது இகழ்ந்து தள்ளப்படுகிறது. மனிதனுடைய உயர்வு தாழ்வுகளுக்கு மூலகாரணம் அவன் அகத்திலேயே அமைந்திருக்கிறது. உள்ளம் உயர உயிர்கள் உயர்கின்றன.

உள்ளம் துணிந்து ஊக்கி முயன்று அரிய காரியங்களை ஆற்றுகின்றவன் பொருளும் புகழும் ஏற்றமாப் பெறுகின்றான்; பெறவே உலகம் அவனை விழைந்து நோக்குகிறது; வியந்து போற்றுகிறது. ஊன்றியமுயற்சியால்உயர்ச்சிகள்உறுகின்றன.

ஒருவன் செய்து வருகிற அரிய செயல் அவனைப் பெரிய மனிதனை ஆக்கி வருகிறது. வினையாண்மை வியக்கத்தக்க மேன்மைகளை விளைத்து வருதலால் அது மனிதனுடைய மகிமைக்கு வித்தக வித்தாய் விளங்கி எத்தகைய நலங்களையும் அருளுகின்றது.

பறவை மிருகம் முதலிய எல்லாப்பிராணிகளினும் மனிதன் மேலான நிலையில் மேவி நிற்பது அவனது உள்ளம் உணர்வு செயல்களினாலேயாம். உள்ளத்தால் எண்ணுகிறான்; எண்ணிய

அந்த எண்ணத்தை உணர்வு ஒழுங்கு படுத்தி உயர்த்துகிறது; உயர்ந்த அந்த நினைவை ச்செயல் சிறந்ததாகச் செய்தருளுகிறது.

வித்திலிருந்து முளை தோன்றி மரமாய் வளர்ந்து பலன் தருகிறது; அதுபோல் உள்ளத்திலிருந்து உணர்வு தோன்றிச் செயலாய் விரிந்து உயர் நலன்களை உதவுகிறது. நினைவு அறிவுகள் இருந்தாலும் செயல் இல்லையானால் யாதொரு பலனும் இல்லை. செயல்களே மனிதருடைய நிலைகளை நேரே தெரியச்செய்கின்றன.

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செயகலா தார். (குறள், 26)

அரிய காரியங்களைச் செய்வார் பெரியர் எனத் தேவர் இவ்வாறு கூறியுள்ளார். பெரியரையும் சிறியரையும் அறிந்து கொள்ளுவதற்குச் செயல் கருவியாய் வந்துள்ளது. அருமை புரிபவர் பெருமையுறுகின்றார். மனிதர் விழைந்து செய்கின்ற கருமங்கள் அவருடைய தரங்களை வரைந்து காட்டி விடுகின்றன.

"Great actions speak great minds." (John Fletcher)

பெரிய செயல்கள் பெரிய உள்ளங்களைத் தெரியச் செய்கின்றன என்னும் இது இங்கே உறுதியா ஊன்றி அறியவுரியது.

உள்ளத்திறலோடு ஊக்கி வினை செய்பவர் உயர்ந்த மேன்மைகளை ஆக்கிக் கொள்கின்றனர். அருந்திறலாண்மை பெருந்திருவாய்ப் பெருகிச் சிறந்த சீர்மைகளை அருளிவருகிறது.

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் இளமையிலேயே அரியணை ஏறினான்; அதிசய நிலையில் ஆட்சி புரிந்தான். வயதில் இளையவன் என இவ்வழுதியை எளிதாக எண்ணிச் சோழ மன்னனும் சேர அரசனும் சேர்ந்து ஐந்து குறுநிலத் தலைவரைத் துணை சேர்த்துக் கொண்டு இவனோடு போராட வந்தனர். வரவே வீறோடு இவன் போருக்கு எழுந்தான். அப்பொழுது இவன் கூறிய வீரவாதம் எப்பொழுதும் யாவரும் கூர்ந்து சிந்திக்கத்தக்கது. அதன் ஒரு பகுதி அயலே வருகிறது.

"இளையன் இவன்என உளையக் கூறிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎன் ஆயின் பொருந்திய

என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணுது
கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக." (நெடுஞ்செழியன்)

"என்னை இளையன் என்று இகழ்ந்து கூறிப் போருக்கு வந்த வேந்தரைப் பொருது தொலைத்து நான் வெற்றி பெறேன் ஆயின் கொடுங்கோலன் என்று என்குடிகள் தூற்றும் பழியை நான் அடைவேனுக" என்று இவ்வாறு வீரசபதம் கூறிச்சென்றவன் போரில் அனைவரையும் ஒருங்கே வென்று பெருங் கீர்த்தி பெற்முன். இவனது வெற்றிநிலை எங்கும் வியப்பை விளைத்தது.

கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங் கானத் தகன்றலை சிவப்பச்
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி
நார்அரி நறவின் எருமை யூரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப் பொருநன்என்று
எழுவர் நல்வலம் அடங்க ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே. (அகம், 36)

சோழன் முதலிய எழு மன்னரையும் அவர் தம் சேனைகளோடு ஒருங்கே வென்று இந்த வீரபாண்டியன் வெற்றிபெற்றுள்ள நிலையை நக்கீரர் இவ்வாறு வியந்து பாடியிருக்கிருர். பருவம் நிரம்பாத இளைஞனயிருந்தும் அரிய செயல்களை ஆற்றி அதிசயங்களை விளைத்திருத்தலால் உலகம் இவனைத் துதி செய்து தொழுது வந்தது. வீரத்திறலால்விழுமியமேன்மைகள் விளைந்தன.

மனவுறுதியும் வினையாண்மையும் மனிதனை மகிமையாளனுக உயர்த்துகின்றன. உரத்தோடு ஊக்கி வினை செய்பவன் தரத்தில் உயர்ந்து தரணியில் சிறந்து நிறைந்த புகழுடன் திகழ்கின்முன்.

ஆற்றும் வினைகள் அருமை யுடையவெனின்
போற்றும் உலகம் புகழ்ந்து.

உள்ளம் துணிந்து உயர்ந்த குறிக்கோளோடு காரியங்களைச் செய்து வருபவன் சீரிய புகழ்களை அடைந்து கொள்கிருன்.

---

862. உற்ற கருமம் உயர்ந்த குறிக்கோளைப்
பெற்ற பொழுதே பெருமையாம்—முற்ற
உணர்ந்து புரியின் உறுதி நலங்கள்
புணர்ந்து பெருகும் பொலிந்து. (உ)

இ—ள்.

பொருந்திய தொழில்கள் உயர்ந்த நிலைகளைக் கருதி எழுந்த போது அவை மேன்மையாச் சிறந்து திகழ்கின்றன; கருமங்களை ஓர்ந்து உணர்ந்து செய்தால் உறுதிநலங்கள் மிகுந்து உயர் பலன்கள் பெருகி வியன்புகழ்கள் விரிந்து விளைந்து வரும்என்க.

உள்ளம் கருதி வருகிற அளவு மனிதன் உறுதி நலங்களை மருவி வருகிறான். கருத்தின் உயர்வு மனிதனது விருத்தியை விளக்குகிறது. எண்ணங்கள் வளர்ந்து வர ஏற்றங்கள் கிளர்ந்து வருகின்றன. சிறந்த எண்ணங்களையுடையவன் உயர்ந்தவனாய் ஒளி சிறந்து திகழ்கின்றான். நினைவு உயர நிலைகள் உயர்கின்றன.

குறிக்கோள் என்றது உயர்ந்த இலட்சியத்தை. ஓர்ந்து குறித்துக்கொள்ளும் உயர்ச்சி நிலை குறிக்கோள் என வந்தது.

தன் வாழ்க்கையில் உன்னத நிலைகளை அடைய வேண்டும் என்று எண்ணி முயலுகின்றவன் எவனோ அவனே உலகில் உயர்நிலைகளை அடைய நேர்கின்றான். மேலான உறுதி நலன்களைக் கருதியபொழுது அந்த மனிதன் மேலோனாய்த் திகழ்கிறான். குறியோடு சரியாக எண்ணி வருகிறவன் அதனை நெறியே அடைந்து கொள்வது நியமமாய் முடிந்துள்ளது.

விண்ணுலகில் இருந்த விழுமிய கங்கையை இம் மண்ணுலகில் கொண்டு வருவேன் என்று பகீரதன் எண்ணினான்; எண்ணியதை எண்ணியபடியே எய்தத் திண்ணியனாய் நின்று திறலோடு முயன்றான்; கருதியவாறே அதனை உரிமையா அடைந்தான். உள்ளத்தின் அளவே உயர்வுகள் உளவாகின்றன.

உயர்ந்த குறிக்கோளோடு தகுந்த வழியில் முயன்றமையால் மார்க்கண்டேயர் எமனையும் வென்று என்றும் சிரஞ்சீவியாய் நின்று விளங்குகின்றார். உறுதியோடு கருதிமுயல்பவர் உலகம் தொழுது புகழ விழுமியநிலையில்ஒளிபெற்று நிற்கின்றார்.

கல்வி செல்வம் தருமம் கீர்த்தி ஞானம் வீடு என மருவியுள்ள மகிமை நிலைகள் யாவும் கருதி முயலும் உறுதியாளர்க்கே உரிமையாய் அமைகின்றன. கருத்து ஊன்றி முயன்றவன் விருத்தியடைந்து விளங்குகிருன்; கருதாதவன் விருதாவாய் இழிந்து ஒழிந்து போகிருன். மனத்தில் மடிபுகின் மனிதன் அழிகிருன்.

உள்ளத்தில் உரமுடையவன் உலகத்தில் தரமுடையனாய் உயர்கிருன். அங்ஙனம் இல்லாதவன் தரங்கெட்டுத் தாழ்ந்து கழிகிருன். சிறந்த சிந்தனைகளையுடையவரே நிறைந்த மேன்மைகளை அடைந்திருக்கின்றனர். தன் உள்ளம் நல்லவழிகளில் பழகிவரின் அவனிடம் எல்லா மேன்மைகளும் வெள்ளமாய் விரைந்து வந்து சேருகின்றன. புனித எண்ணங்கள் மனிதனைப் புண்ணியவானாக்கித் தனி நிலையில் உயர்த்தியருளுகின்றன.

கண்ணன் ஒரு முறை தருமரை மருமமா வினவினான். "உமது உள்ளத்தில் உறுதியாக் கருதியுள்ளது யாது? வாழ்க்கையின் குறிக்கோள் என்ன?" என இன்னவாறு கண்ணன் கேட்டான். இந்தக் கேள்விக்கு உடனே அவர் அமைதியாகப் பதில் உரைத்தார். அயலே வருவது காண்க.

வெல்லுக அறமும் மெய்மையும் பொறையும்
மேக மேனியனும் வெல்லாமல்
செல்லுக பாவம் பொய்மொழி கோபம்
தயித்தியர் குலம்எனத் தெளிவுற்று
அல்லும் வெம்பகலும் என்மனம் நிகழும்
அலகையாம் அன்னையை முன்னம்
கொல்லுதல் புரிந்தோய்! என்றனன் முரசம்
கோட்டிய கொற்றவெங் கொடியோன்.

[பாரதம், பழம் 16]

தருமம் சத்தியம் பொறுமை புனிதர் இனிது வாழவேண்டும்; பாவம் பொய் கோபம் தீயோர் அடியோடு ஒழிய வேண்டும் என்னும் இந்தக் குறிக்கோள்களே என் உள்ளத்தில் என்றும் நிலைத்துள்ளன என்று அவர் இவ்வாறு கூறியிருக்கிருர். இதனால் அவருடைய நிலைமை நீர்மைகளை நேரே தெரிந்து கொள்ளுகிறோம். நன்மையைநாடிவருகிறவன் நல்லவனாகிருன்.

உள்ளத்தின் தன்மை அளவே உலகத்தில் மனிதன் நிலவி நிற்கின்றான். நல்ல மனமுடையவன் நல்லவனாகிறான்; தீய நினைவுடையவன் தீயவனாகிறான். தீமையைவெறுத்து விலகுவதும்நன்மையை விரும்பிக்கொள்வதும் நல்லோர் இயல்புகளாயுள்ளன.

The good hate to sin through love of virtue. (Horace)

நல்லோர் தருமத்தை விரும்புவதின் மூலம் பாவத்தை வெறுக்கிறார் என்னும் இது இங்கே அறியவுரியது. பாவம் எவ்வழியும் துயரங்களை விளைக்கும் ஆதலால் அதனை மேலோர் அஞ்சி அகலுகின்றார். தீமை நீங்கிய அளவு நன்மைகள் வருகின்றன.

தரும சிந்தனையோடு மருவி வருபவர் பெரிய மனிதராய்ப் பெருகி வருகின்றார். அகத்தே பெரிய நோக்குடையவர் புறத்தே பெரியராய் அரிய மகிமைகளைக் காணுகின்றார். கருதி வருகிற எண்ணத்தின் படியே உறுதி நலங்கள் உருவாகி வருகின்றன.

Great hopes make great men. (Fuller)

பெரிய விருப்பங்கள் பெரிய மனிதரை உண்டாக்குகின்றன என இது உணர்த்தியுளது. எண்ணங்களால் விளையும் ஏற்றங்களை இங்கே நன்கு அறிந்து கொள்கிறோம். சிறந்த குறிக்கோளோடு தன் கடமையைக் கருதிச்செய்துவரின் அந்த மனிதன் அதிசய நிலையில் உயர்ந்து யாவரும் துதி செய்துவரச் சிறந்து திகழ்கிறான். சித்தம் உயரச் சீர்த்திகள் விளைந்து விரிகின்றன.

---

863. உள்ளத் தமைந்த உறுதியும் ஊக்கமும்
வெள்ளத் தனைய விறல்களைக்—கொள்ளக்
கொடுத்து வருதலால் கோவேந்தர் எல்லாம்
எடுத்து மகிழ்ந்தார் எதிர்ந்து. (ங)

இ—ள்.

தம்முடைய உள்ளத்தில் அமைந்த உறுதி ஊக்கங்களால் அதிசய வெற்றிகளை மனிதர் மிகவும் அதிகமா அடைந்து கொள்கின்றனர்; இந்த அரிய தன்மைகளால் அரசர் எல்லாரும் பெரிய மேன்மைகளைப் பெற்றிருக்கின்றனர் என்க.

உறுதி என்பது நிலையான நெஞ்சத்துணிவு. ஊக்கம் என்பது உள்ளக்கிளர்ச்சி. அரிய பல பொருள்களையும் பெரிய பதவி

களையும் அடைய வேண்டும் என்று யாவரும் விரும்புகின்றனர். அகத்தில் கிளைத்தெழுகின்ற விருப்பங்களே மனித சமுதாயத்தை யாண்டும் இயக்கி வருகின்றன. வெளியில் விரிந்து தெரிகின்ற அசைவுகள் எல்லாம் உள்ளத்தின் நசைகளால் ஓங்கியுள்ளன. உலக வாழ்வுகளை உளமே உளவாக்குகின்றது.

உரிமையோடு உணர்ந்து கருதுபவன் உயர்ந்த கருத்தனாய்ச் சிறந்த விருத்திகளையடைந்து திகழ்கின்றான்; அங்ஙனம் கருதாதவன் ஒரு பயனும் காணாமல் விருதாவாய் இழிந்து கழிந்து ஒழிந்து போகிறான். உள்ளம் உடையவன் எல்லாம் உடையவனாய் ஒளி மிகப்பெறுகிறான். அதனை இழந்தவன்யாவுமிழந்தான்.

நல்ல எண்ணங்களை எண்ணி வருவதினாலேயே உள்ளம் ஒளி மிகுந்து உயர்ந்து வருகிறது. தாயின் பால் அருந்திவரும் பிள்ளை போல் தூய சிந்தனைகள் பொருந்தி வருகிற உள்ளம் அதிசய ஆற்றல்களை இயல்பாகவே அடைந்து கொள்ளுகிறது; கொள்ளவே அதனால் அரிய பல மகிமைகள் உரிமையாய் வருகின்றன. தியான சமாதிகளில் தெய்வீக ஒளிகள் எழுகின்றன.

செம்மையான உள்ளம் நன்மைகளை நயமா அருளுகிறது. விதி நியமங்களை உணர்த்துகிற அறிவினும் அவற்றை உறுதியாகச் செய்து வருகிற உள்ளம் உயர் நலமுடையது. கூர்மையான அறிவினும் நேர்மையான நெஞ்சம் நீர்மை தோய்ந்து சீர்மையாய்த் திகழ்கிறது. மனச் செம்மை மகிமைகளை அருளுகிறது.

உயிர் வாழ்வின் உயர்வுகள் எல்லாம் உள்ளப்பண்புகளால் உளவாகின்றன. உலக வாழ்வு செல்வத்தால் வளம் பெறுகின்றது; செல்வம் முயற்சியால் விளைகின்றது; முயற்சி ஊக்கத்தால் உறுகின்றது; அந்த ஊக்கம் உள்ளக் கிளர்ச்சியால் எழுகின்றது; ஆகவே எல்லா மேன்மைகளுக்கும் உள்ளமே மூல காரணமாயுள்ளமை யுணரலாகும். உள்ளம் நல்ல நிலையில் பழகி வரின் நலங்கள் பல வருகின்றன; இல்லையானால் எல்லா நலங்களையும் இழந்து மனித வாழ்வு பொல்லாததாய்ப் புலைப்படுகிறது.

உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு. (குறள் 598)

உள்ளம் இல்லாதவர்க்கு உளவாம் எள்ளல்களைத் தேவர்

இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிறார். இங்கே உள்ளம் என்றது உறுதியாய்க் கருதி முயலும் ஊக்கத்தை. உள்ளத்துணிவு இல்லையானல் ஊக்கி முயலும் முயற்சி இல்லையாம்; அது இல்லையேல் செல்வம் இல்லையாம்; அது இல்லையாகவே வள்ளல் என்னும் பெருமித நிலையை அடையமுடியாது; வறுமை இழிவு முதலிய சிறுமைகளையே அடைய நேரும் என்பதை இங்கே அறிந்து கொள்கிறோம். பொருள் புகழ்முதலியன வருவழி தெரியவந்தது.

உள்ளம் உடையவன் பொருளை வளமா ஈட்டிப் பிறர்க்கு உதவி புரிந்து புகழ் புண்ணியங்களை அடைந்து கொள்கிறான்; அது இல்லாதவன் ஏழையாய் எள்ளல் இளிவுகளை எய்தி இழிகின்றான். சிறந்த செல்வம் உயர்ந்த உள்ளத்தால் உண்டாகிறது.

வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்
கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ளம் இல்லவர்க்கு ஊர்தொறும் உய்த்துராய்
வெள்ளம் நாடு மடுத்து விரைந்ததே. (சீவகசிந்தாமணி)

ஏமாங்கத நாட்டிலே நதிகளில் வெள்ளம் பெருகி ஓடிய நிலைகளை இது காட்டியுள்ளது. மலைகளில் மருவியிருந்த அரிய பொருள்களை எல்லாம் வாரிக் கொண்டு வந்து ஊர்கள் தோறும் ஏழைகளுக்கு அது உதவியருளியது என உணர்த்தியிருப்பது ஊன்றி உணரவுரியது. உள்ளம் இல்லவர் என இங்கே குறித்திருப்பது சோம்பேறிகளை. உள்ளம் துணிந்து ஊக்கி முயலாமல் எள்ளலாய் மடிமண்டி இழிந்திருந்தவர் வெள்ளம் தந்த நிதிகளை விழைந்து கொண்டனர். முயலாதவரின் இழிவு காண வந்தது.

உள்ளம் உடையவர் வெள்ளம் என விழுமிய நிதிகளை எய்தி வள்ளல்களாய் உயர்ந்து மகிமைகளை அடைகின்றனர்; அஃது இல்லாதவர் எளியராய் இழிந்து எள்ளல்களில் அழுந்தி உழல்கின்றனர் என்பதை இந்த வெள்ளப் பாட்டு விழி தெரிய விளக்கியுள்ளது. பிறரிடம் வாங்கிப் பிழைப்பது வசையாம்.

மனம் துணிந்து செய்யுங் கருமங்களினாலேயே தான் மனிதன் உயர்ந்து வருகிறான். தன்னை உரிமையோடு தழுவி வருபவனைக் கருமம் எவ்வழியும் பெருமை செய்தருளுகிறது. முன்னம் மூண்டு செய்த நல்வினையின் பயனையே ஈண்டு மன்னராய் வந்து மருவி மகிழ்கின்றார். கருமவினைவுகள் மருமமா வருகின்றன.

விழைந்து புரிந்த வினையின் வழியே யாவும் விளைந்து வருகின்றன. உள்ளம் ஓர்ந்து கருதினும், வாய் தேர்ந்து மொழியினும் செயலே கருமங்களை உருப்படுத்தி உயர்வாக்கியருளுகிறது. ஊக்கிச்செய்யும் வினையே உயிர்க்கு உறுதியை உதவி வருகிறது.

Only deeds give strength to life. [Jean paul]

செயல்கள் தான் உயிர் வாழ்வுக்கு உறுதி தருகின்றன என ஜீன்பால் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிமுர். ஒருவன் கருதிச் செய்யும் கருமம் அவனுடைய சீவியத்தை உயர்த்திச் சீவனுக்கு மேன்மை தருதலால் அது சீவசஞ்சீவியாய் மேவி நின்றது.

காரியம் கருதி வர வீரியம் பெருகி வருகிறது. மேலான காரியங்களைச் செய்பவர் மேன்மையாளராய் விளங்குகின்முர்.

Great deeds are reserved for great men. (Cervantes)

அரிய செயல்கள் பெரிய மனிதர்களுக்காக அமைந்துள்ளன என்னும் இது இங்கே அறியவுரியது. சிறந்த கருமங்களைச் செய்து முடிப்பவர் உயர்ந்த மேலோராய் ஒளி பெற்று நிற்கின்முர். ஆற்றும் வினைவழியே ஏற்றங்கள் ஏறுகின்றன.

ஊக்கி வினைசெய்; ஆக்கம் உன்னை நோக்கி வரும்.

---

864. ஊக்கம் எனும்சொல் உயிரின் உயர்ச்சியை
நோக்கி அமைந்துள்ள நுண்மையால்—ஊக்கம்
உடையான் உயிரை யுடையான் ஒழிந்தான்
கடையாய் இழிவன் கழிந்து. (௪)

இ—ள்.

ஊக்கம் என்னும் சொல் உயர்ந்த பொருளுடையது; உயிரின் உயர்ச்சியாய் அது ஓங்கியுள்ளது; அதனையுடையவன் எவ்வழியும் உயர்ந்து செவ்வையாய்ச் சிறந்து திகழ்கின்முன்; இழந்தவன் யாண்டும் கடையாய் இழிந்து கழிகின்முன் என்க.

உலக வாழ்வில் மனிதரிடம் பல வகையான உயர்வு தாழ்வுகளைக் காண்கின்முேம். புறத்தே விரிவாகத் தோன்றுகிற காட்சிகளுக்கெல்லாம் அகத்தே சரியான காரணங்கள் மறைந்திருக்கின்றன. சீவிய மருமங்கள் யாவும் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

பிறவிகள் தோறும் பழகி வந்துள்ள உயிர் வாசனைகள் உள்ளத்தில் உறைந்துள்ளமையால் அந்த வழிமுறையே மனித வாழ்வுகள் விழிதிறந்து வருகின்றன. குறிக்கோளோடு நல்ல பண்பாடுகள் தோய்ந்து வந்துள்ள மனிதனே யாண்டும் சிறப்படைய நேர்கின்றான். மனத்திண்மை மனிதனது உண்மை நிலைகளை உணர்த்தி உரிமை நலங்களை விளக்கி வருகின்றது.

உறுதியான உள்ளத்துணிவையே ஊக்கம் என்று நாம் சொல்லி வருகின்றோம். மனிதனுடைய காரியசித்திகளுக்கெல்லாம் இது வீரிய சத்தாய் மேவியிருக்கிறது. கருதிய கருமங்களை உறுதியோடு ஊக்கிச் செய்பவனையே கரும வீரன் என்று உலகம் பெருமையாப் புகழ்ந்து பேசி வருகின்றது.

உள்ளத்தின் திண்மையே வெளியே காரியங்களை வெற்றியா நன்கு முடித்தருளுகின்றது. மனவுறுதியுடையவன் எவ்வளவு கடினமான வினைகளையும் எளிதே முடித்துக் கொள்ளுகிறான்.

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. (குறள், 661)

தொழில்களை நலமாகச் செய்து முடித்தற்கு உரிய இனிய கருவி மனவுறுதியே; அது சரியாக அமையவில்லையானால் பொருள் இடம் காலம் முதலிய வசதிகள் எல்லாம் வளமா அமைந்திருந்தாலும் அவை நன்கு பயன்படா என்னும் இது இங்கே அறியவுரியது. தளர்ந்து கலங்காத நிலை திண்மை என வந்தது. அந்த நெஞ்சத் திட்பம் யாண்டும் அஞ்சாமல் மூண்டு முனைந்து கருமங்களை முடித்து வரும் ஆதலால் காரிய வெற்றிக்கு அது வீரியம்நிறைந்தமூலவேராய்ச் சீரியநிலையில்சிறந்துநின்றது.

வினைத்திட்பம் என்பது மனத்திட்பமே என உருவகித்து உரைத்தது அதன் மருமத்தை நுட்பமா நோக்கி உணர. திண்ணிய மனம் உடையவனே எண்ணிய நிலைகளை எண்ணியாங்கு எய்தி இசை பெற்று வருகிறான். தன்னந்தனியனாய்ச் சென்று இலங்கை புகுந்து அனுமான் அதிசய வினைகளை ஆற்றி வந்துள்ளான்; அது அவனது உள்ளத்திண்மையையும் உறுதிப்பாட்டையும் உக்கிரவீரநிலையையும் ஒருங்கே தெளிவா உணர்த்தி நின்றது.

கடமையுணர்ச்சியும் கருமத்தில் பிரியமும் மனிதனுக்கு

மனவுறுதியைத் தருகின்றன. தன் குடிவாழ்க்கை உயர்ந்த நிலையில் சிறந்து விளங்க வேண்டும் என்று எண்ணுகின்றவன் உள்ளம் துணிந்து ஊக்கி முயல்கின்றான். அம்முயற்சியால் உயர்ச்சிகள் உளவாகின்றன. உறுதி முனையில் உயர்வுகள் விளைகின்றன.

ஆதன் என்னும் சேர மன்னன் நல்ல நீதிமான். சிறந்த செல்வங்கள் அவனிடம் நிறைந்திருந்தன. இருந்தும் அவன் ஊக்கி முயன்று அரசை விருத்தி செய்து ஆக்கங்கள் பல அடைந்து அதிசய நிலையில் எவரும் துதி செய்ய வாழ்ந்தான். அவனுடைய மன நிலையையும் வினையாண்மையையும் குணநலங்களையும் கபிலர் வியந்து பாடியுள்ளார். அயலே வருவது காண்க.

வையம் காவலர் வழிமொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடம்சிறிது என்னும் ஊக்கம் துரப்ப
ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேரல் ஆதனை
யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறம்கொடுத்து இறத்தி
மாறி வருதி மலைமறைந்து ஒளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே. (புறம்)

மன்னன் முயன்று உயர்ந்துள்ள நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. பகல் ஒளியாகிய சூரியனிலும் இவ்வீரியன் புகழ் ஒளி பரப்பி உயர்வா வாழ்ந்துள்ளான் எனக் கவி சுவையாகப் புனைந்து கூறியிருக்கிறார். ஊக்கம், ஒடுங்கா உள்ளம் ஆகிய இந்த இரண்டுமே இவனுடைய உயர்ச்சிகளுக்கெல்லாம் மூலகாரணமா இருந்துள்ளமையை இங்கே தெரிந்து கொள்கிறோம். சிறந்தமனவுறுதிஉயர்ந்த மேன்மைகளை அருளுகின்றது.

உள்ளம் உயர்ந்த பொழுது எல்லா உயர்வுகளும் அங்கே வெள்ளமாய் விரைந்து வருகின்றன. சிறந்த ஊக்கம் உடையவன் நிறைந்த ஆக்கங்களை நேரே அடைந்து கொள்கிறான். மனம் பெரிதாய் விரிய மனிதன் பெரியவனாய் வருகிறான்.

A great mind becomes a great fortune. (Seneca)

பெரிய உள்ளம் பெரிய செல்வங்களாய் வருகிறது என்னும் இது ஈண்டு அறியவுரியது. உள்ளம் நல்லதானால் எல்லா

நன்மைகளும் ஒருங்கே உளவாகின்றன. சுகமாய் வாழ விரும்பு கிறவன் தன் உள்ளத்தை நலமாப் பேணிக் கொள்ள வேண் டும். நல்ல உள்ளம் ஊக்கமாய் உயர்கிறது; அதனுல் பாக்கியங் கள் விளைகின்றன. உறுதியோடு கருதி நோக்கி ஊக்கி உயருக.

---

865. ஊக்கி முயலும் உயர்வுடையான் பால்வந்து
பாக்கியங்கள் எல்லாம் பணிந்துவிழும்—ஊக்கமின்றி
ஏங்கி இருக்கும் இழிமகன்பால் புன்பழிகள்
ஓங்கி இருக்கும் உறைந்து. (ரு)

இ—ள்.

உள்ளம் துணிந்து ஊக்கி முயல்பவன் உயர்ந்து திகழ் கிருன்; எல்லாப் பாக்கியங்களும் அவனிடம் வந்து உரிமையாய் நிற்கின்றன; ஊக்கம் இன்றிச் சோம்பலாய் ஏங்கியிருப்பவன் இழிமகன் ஆகின்ருன்; பழிகள் யாவும் அவன்பால் வழிகளாய் வருகின்றன; வரவே அங்கே அழிதுயரங்கள் நிறைகின்றன.

செல்வமும் சுகமும் பெருமையும் வருகிற வழியும் வறுமை யும் துயரும் சிறுமையும் சேர்கிற வகையும் இதில் விழி தெரிய வந்தன. உள்ளம் நல்ல நிலையில் உயர்ந்து வர அந்த மனித வாழ்வு எல்லா வகையிலும் சிறந்து திகழுகிறது; அது தாழ்ந்து படின் யாவும் வீழ்ந்து மடிந்து விரைந்து மறைந்து போகின்றன.

ஆக்கம் ஊக்கத்தில் உள்ளது; அழிவு அதன் நீக்கத்தில் நேர்கிறது. இந்த உண்மையை ஊன்றி நோக்கி உய்தி பெறுக.

சிறந்த மேன்மைகளை அருளுதலால் ஊக்கம் உயர்ந்த பான் மையாய் ஒளி பெற்று நின்றது. ஒளி மிகுந்த மணி தரத்திலும் தகவிலும் நிலையிலும் விலையிலும் உயர்ந்து யாண்டும் மதிப்பாய்ச் சிறந்து திகழ்கின்றது; ஒளி இந்தது, இளிவாய் இழிந்து கழி கிறது. ஊக்கம் உடையவன் ஆக்கங்கள் பல அடைந்து எங்கும் பெருமையாய் விளங்கி வருகிருன்; அதனை இழந்து மடிமண்டி யிருப்பவன் மிடிமண்டி யாண்டும் இழிவாய் மங்கி ஒழிகிருன்.

ஒருவனிடம் மடி படிய நேர்ந்தால் அவன் பிறந்த குடி சிறந்து விளங்காது; அவன் இறந்து படு முன் அக்குடி விரைந்து அழிந்து படும். மடிநீங்கி மதி ஓங்கி மானமுடன் வாழுக.

தான் பிறந்த குடியைச் சிறந்த நிலையில் உயர்த்துகின்றவன் எவனோ அவனே யாண்டும் உயர்ந்த குலமகன் ஆகின்றான்.

திவிட்டன் என்பவன் சுரமை நாட்டு அரசன் மகன். சிறந்த அழகன்; உயர்ந்த குணங்கள் பல இவனிடம் நிறைந்திருந்தன. அச்சுவக்கிரீவன் என்னும் பெரிய அரசனுக்குத் தன் தந்தை திறை செலுத்தி வருவதை இம் மைந்தன் அறிந்தான். மான வுணர்ச்சியால் மறுகி வருந்தினான். வரன்முறையே திறை வாங்க வந்திருந்த தூதுவரை இவன் நேரே கண்டான். திறை தர மறுத்தான்; இளவரசன் என்ற முறையில் எதிர்த்து உரைத்தான். பிறர்க்குத் திறை செலுத்துவது தன் இறைமாட்சிக்கு இழிவு என்று இவன் வீறோடு உரைத்த மொழிகள் உயர்தர வீரமாய் உணர்வின் ஒளிகளை வீசி வந்தன. சில அயலே வருகின்றன.

நாளினும் திறைநுமக்கு உவப்பத் தந்துநாடு
ஆளுதும் அன்றெனில் ஒழிதுமே எனின்
தோளினும் தொடுகழல் வலியி னானும்இவ்
வாளினும் பயன்எனை மயரி மாந்தர்காள்! (1)

விடமுடை எரிக்கொடி விலங்கு நோக்குடை
அடலுடைக் கடுந்தொழில் அரவின் ஆரழல்
படமுடை மணிகொளக் கருதிப் பார்ப்பதோர்
மடமுடை மனத்தன்அம் மயரி மன்னனே. (2)

உழுதுதம் கடன்கழித்து உண்டு வேந்தரை
வழிமொழிந் தின்னணம் வாழும் மாந்தர்போல்
எழுதிய திறையிறுத் திருந்து வாழ்வதே
அழகிது பெரிதுநம் அரச வாழ்க்கையே. (3)

பாழியால் மெலிந்தவர் திறத்துப் பண்டெலாம்
ஆழியால் வெருட்டி நின்று அடர்த்திர் போலுமஃது
ஏழைகாள்! இனிஒழிந் திட்டுச் செவ்வனே
வாழுமா றறிந்துயிர் காத்து வாழ்மினே! (4)

அன்றெனில் திறைகொளக் கருதின் ஆங்கொரு
குன்றின்மேல் பெறுவதென் வந்துகொள்க யான்
நின்றுதன் நெஞ்சகம் நிறைய வீழ்வன
வென்றியம் பகழியும் விசும்பும் ஈவனே. (5)

இறைவனை மகளிர்போல் கழறி என்னைஎம்
குறையிது கூறுமின் சென்று தூதிர்காள்!
திறையினை மறுத்தவர் திறத்துச் செய்வதோர்
முறையுளது எனினது முயன்று கொள்கவே. (6)

[சூளாமணி]

இந்தப் பாசுரங்களை ஊன்றி நோக்கிப் பொருள் நிலைகளைக் கவனியுங்கள். இக் குலமகனுடைய மனவுறுதியும் மான வீறும் இங்கே நன்கு தெரிய வந்துள்ளன. இவ்வீர இளவல் கூறி விடுத்த தீரமொழிகளைக் கேள்வியுற்றதும் அப்பேரரசன் முதலில் சினந்து சீறினன். பின்பு இவனது அருந்திறலாண்மைகளை அறிந்து வியந்து திறையை நீக்கி உறவுரிமையோடு உவந்திருந்தான். வழிமுறையே தொடர்ந்து வந்த தாழ்வுகளைத் தலைமகன் நீக்கியருளினன் என்று உலகம் இவனைப் புகழ்ந்து போற்றியது.

ஊக்கம் உடையவன் அரிய பல ஆக்கங்களை அடைந்து அதிசய மேன்மைகளைப் பெறுவான் என்பதை எவரும் தெளிவா அறிந்து உயர்ந்து வர இவன் உறவாய் உணர்த்தி நின்றான்.

பிறந்தகுடி பெருமைபெறப் பேணி ஒழுகுக.

---

866. தளர்ந்து மடிந்திருந்தான் தாழ்ந்து பழியில்
வளர்ந்து துயரோடு மாய்கின்றான்—கிளர்ந்தூக்கி
நின்றான் திருவில் நிறைந்து சிறந்துமேல்
வென்றான் எதையும் விரைந்து. (௬)

இ—ள்.

உள்ளம் தளர்ந்து சோம்பலாயிருப்பவன் எள்ளலாத் தாழ்ந்து இழி பழியில் வீழ்ந்து இழிந்து அழிகிறான்; உள்ளம் கிளர்ந்து ஊக்கி முயன்றவன் எல்லாச் செல்வங்களையும் அடைந்து நல்ல மேன்மையாய் உயர்ந்து திகழ்கின்றான் என்க.

தளர்வு வளர்வு என்பன வறுமை செல்வங்களை முறையே வரைந்துவந்துள்ளன. செல்வநிலையில் செழித்துச் சீரோடுசிறந்து வாழ்வதையும், அல்லல் நிலையில் இழிந்து அவலமாய்த் தளர்ந்து உழல்வதையும் மனித சமூகத்தில் யாண்டும் கண்டு வருகிறோம்,

உயர்வும் தாழ்வும் இயல்பாய் வருவன அல்ல; நிறைந்த காரண காரியங்களோடே கலந்து வருகின்றன. ஒரு மரம் பெரிதாய் வளர்ந்து கிளர்ந்து விரிந்து பரந்து குளிர்நிழலைத் தந்துவரின் அதன் மூல வேர்கள் நல்ல நிலையில் பாய்ந்து தோய்ந்துள்ளன என்பதை நாம் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம். இலை தழைகள் இன்றிப் பட்ட மரமாய் நிற்பின் அதன் அடிவேர் கெட்டுப் போயிருத்தலை அது முடிவாச் சுட்டிக் காட்டி நிற்கின்றது.

ஒரு மனிதனுடைய வாழ்வு வறுமை சிறுமை மடமை முதலியன மண்டி மறுகியிருப்பின் அவன் சரியான நிலையில் எண்ணி முயலாதவன்; இழிவான வழிகளில் பழகியுள்ளவன் என்பதை அது தெளிவாக நேரே காட்டியுள்ளது. புறத்தில் புலனுகின்ற எவையும் அகத்தின் விளைவாகவே அமைந்து வருகின்றன.

சிந்தையின் வழியதே சிறப்பும் சீர்மையும்
நிந்தையும் இழிவும்எந் நிலையும் நேர்வதால்
அந்தமெய் அகத்தினை அழகு செய்தவன்
எந்தநன் னலங்களும் எளிதின் எய்துமே.

இது மதியோடு மனிதன் நாளும் சிந்தனை செய்து தெளிந்து வரும்படி விளைந்து வந்துள்ளது. கூர்ந்து ஆராய்ந்து ஓர்ந்து எண்ணுகின்றவன் தேர்ந்த மேதையாய்த்திகழ்ந்து சிறந்த மேன்மைகளை அடைந்து எவ்வழியும் செவ்வையா உயர்ந்து விளங்குகிறான். கருதி உணராதவன் கடையனாய் இழிகின்றான்.

எவன் உள்ளம் துணிந்து உறுதியோடு கருதி முயலுகின்றானோ அவனிடம் அரிய பல பெருமைகள் உரிமையாய் மருவி வருகின்றன. அங்ஙனம் முயலாதவன் மயலாயிழிந்து மாண்பிழந்து படுகிறான். முயற்சி ஒழியின் உயர்ச்சிகள் ஒழிகின்றன.

மனிதன் அடைகிற மாட்சிகள் யாவும் அவனுடைய முயற்சியால் விளைந்தன. தாழ்ச்சிகள் எல்லாம் அயர்ச்சியால் அமைந்தன. முயன்று உயர்ந்து வாழ்; அயர்ந்து தாழாதே.

உரிய சமையத்தில் ஊக்கி முயலாதவன் கல்வி செல்வம் முதலிய நல்ல பொருள்களை இழந்து விடுகிறான்; விடவே மடையன் வறியன் என இழி நிலைகளில் இழிந்து அவன் கடையன் ஆகின்றான். பழியான மடியால் அழிகேடுகள் விளைகின்றன.

மடி என்பது மனிதனை உயிரோடு மடியச் செய்கிற கொடிய நோய். அதனை ஒருவன் தழுவ நேர்ந்தால் அவன் குடி அடியோடு அழிந்துபோம். இழிவுகள் யாவும் அவனைத் தழுவி நிற்கும்.

மடிமை குடிமைக்கண் தங்கின் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும். (குறள், 608)

சோம்பல் ஒருவன் குடியுள் புகுந்தால் அது மிடி வாய்ப்பட்டு மடிந்துபோம்; அவனும் விரைந்து பகைவர்க்கு அடிமையாய் இழிந்து போவான் என இது உணர்த்தியுள்ளது. சோம்பி இராதே; எவ்வழியும் செவ்வையாய் முயன்று வாழ் என மனிதனுக்கு இனிது போதிக்க நேர்ந்த தேவர் மடியால் நேரும் குடிகேடுகளை இவ்வாறு விழி தெரிய விளக்கித் தெளிவுறுத்தியிருக்கிறார். தாளாண்மை ஒழியின் ஆளாண்மை அழியும்.

கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாள்இலான் குடியேபோல் தமியவே தேயுமால். (கலி, 149)

முயற்சியில்லாதவன் குடி தானாகவே தேய்ந்துபோம் என்னும் இது இங்கே கூர்ந்து உணரவுரியது. தாள் = முயற்சி.

கால் மனிதனுக்கு உறுதி தருகிறது; அதனால் எங்கும் நலமாய் நடந்து திரிகிறான்; அது இல்லையானால் அவன் முடமாய் ஒடுங்கிக் கிடப்பான்; தாள் மனிதனுக்கு எப்படியோ, அப்படியே வாழ்வுக்கு முயற்சி உறுதியாயுள்ளது. இந்த உண்மையை நுண்மையா உணர்ந்து கொள்ளவே முயற்சிக்குத் தாள் என்று ஒரு பெயரைப் புகழ்ச்சியா மேலோர் புனைந்து தந்துள்ளனர். ஓடி உழைப்பவன் பீடும் திருவும் ஒருங்கே பெறுகிறான்.

காரியம் புரிந்து வரும் அளவு மனிதனிடம் வீரியம் சுரந்து வருகிறது. அதனைக் கைவிட்டுச் சோம்பியிருப்பவன் மதியும் மாண்பும் இழந்து கதிகெட்டவனாய்க் கழிந்து இழிகின்றான்.

கருமம் புரிவதில் தருமம் மருமமாய் விளைகிறது. உள்ளம் ஒருமுகமாய் ஊன்றி வேலைசெய்யுங்கால் உயிருணர்ச்சி அங்கே உயர்வாய் ஒளி பெறுகின்றது. செயலிழந்து நின்றால் உயர்வுகள் ஒழிந்து போகின்றன; இழிவுகள் எதிர்ந்து நேர்கின்றன.

"Life is Act, and not to Do is Death... (Morris)

"செயல் உயிர் வாழ்வாம்; செய்யாது நிற்றல் சாவாம்"

என்னும் இது இங்கே அறியவுரியது. தொழில் செய்பவன் ஒளி பெற்று உயர்கிருன்; அவ்வாறு செய்யாதவன் இளிவுற்று அழிகிருன். கழிசோம்பலே அழிதுயரங்களுக்கு வித்தா யுள்ளது.

Idleness is the greatest prodigality in the world. (Taylor)

இந்த உலகத்தில் மிகவும் அழிம்பாயுள்ளது சோம்பலே என ஜெரிமி டேலர் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிருர்.

மடி படிய மிடி படிகிறது; அது படியக் குடி அழிகிறது. கொடிய குடிகேடுகளை விளைத்து மனிதனை இழிவாக்கியாண்டும் அழி துயரங்களைச் செய்கின்ற சோம்பலை அடியோடு ஒழித்தவனே அதிசய பாக்கியவானுய் உயர்ந்து உலகம் துதி செய்ய வருகிருன். ஆற்றும் தொழில்வழியே ஏற்றங்கள் விளைகின்றன.

உனது மதிப்பான உயர்ச்சியெல்லாம் முயற்சியில் இருக்கின்றன; அதனை உரிமையோடு ஓர்ந்து செய்; அதனுல் அரிய பல மகிமைகளும் பெரிய செல்வங்களும்ஒருங்கே உனக்குஉளவாம்.

---

867. கானும் கடலும் கடந்து கடிதூக்கி
வானும் படியா மதிளிலங்கை—ஊனம்
படிய முடித்துப் படிபுகழ நின்ருன்
நெடிய சிலைமன் நிலைத்து. (எ)

இ—ள்.

பெரிய கோதண்ட வீரனை இராமன் தனது மனவுறுதியால் கானும் கடலும் கடந்து போய் வானவரும் அணுக முடியாத அரணுடைய இலங்கா புரியை வளைந்து இராவணனை வென்று உலகம் உவந்து புகழ உயர்ந்த ஒளி பெற்று நின்ருன் என்க.

குணம் செயல்களின் உயர்வுகளால் மனிதன் உயர்ந்து வருகிருன். இந்த நீர்மையும் சீர்மையும் குன்றிய அளவு அவன் குறைந்து மறைந்து போகின்ருன். மனத்தின் அளவே மனிதன் என்னும் பழமொழி அதன் தரத்தையும் உரத்தையும் ஒருங்கே உணர்த்தியுள்ளது. சித்தம் உயரச் சீவன் உயர்கின்ருன்.

உலகத்தில் உயர்ந்த புகழ்களுடையராய் விளங்கி நிற்பவர் எவரும் உள்ளத்தின் தகுதிகளாலேயே ஓங்கியிருக்கின்றனர். உறுதி ஊக்கம் ஞானம் வீரம் முதலிய மேலான நீர்மைகளி

லிருந்தே மேலோர்கள் தோன்றியுள்ளனர். பேரும் கீர்த்தியும் யாரும் எளிதே அடைய முடியாது. அரிதின் முயன்று ஆகாய கங்கையைப் பூமியில் கொண்டு வந்த பகீரதன் எங்கும் புகழ் ஒளி ப்ரப்பி என்றும் உயர்ந்து நிற்கிறான். இந்த மன்னனுடைய மனவுறுதியைக் கருதியுணர்வார் எவரும் பெரிதும் வியந்து இன்றும் புகழ்ந்து போற்றி வருகின்றார். அருமை கண்ட போது அங்கே பெருமையுண்டாகிறது. உரிமை கொண்டாடுகின்றனர்.

வினையாண்மையே மனிதனை அதிசய நிலையில் உயர்த்தி உலகம் துதி செய்து வரும்படி செய்தருளுகிறது. நல்ல உள்ளத் துணிவால் வெள்ளத்தனைய மகிமைகள் விளைந்து வருகின்றன.

இராமனுடைய வாழ்க்கைச் சரித்திரம் முழுவதும் அருந் திறலாண்மைகளையும் பெருந்தகைமைகளையுமே விளக்கியிருக்கின்றன. விதிவசத்தால் மணி முடி துறந்து காட்டுக்குப் போனான்; அங்கே நேர்ந்த சோதனைகளும் வேதனைகளும் அளவிடலரியன; மூண்ட இடையூறுகளையெல்லாம் தன் நெஞ்சத் திட்பத்தால் கடந்து இலங்கை புகுந்து கொடிய நிருதர் குலத்தை முடிய நூறி மனைவியைச் சிறை மீட்டி வானும் வையமும் மகிழ்ந்து வாழ வழி வகுத்து எவ்வழியும் இசை நிறுத்தினான்.

கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கடந்துஇமையோர் இடுக்கண்தீர்த்த கழல்வேந்தே.

என உலகம் உவந்து புகழ்ந்து போற்றி வர இக்கோமகன் யாண்டும் ஒளி வீசி நிற்கின்றான். தன் உள்ளத்துணிவினாலேயே இவ் வீர வள்ளல் உயர்ந்து யாண்டும் ஒளி பெற்றுள்ளான்.

தக்க வசதிகள் யாதும் இன்றிப் பரதேசியாய்ச் சென்றிருந்தும் அரிய பெரிய காரியங்களை முடித்து அதிசய வெற்றிகளை ஆற்றியிருத்தலால் அகிலமும் வியந்து துதி செய்ய நேர்ந்தன.

மாமுது தாதை ஏவலின் ஊர்துறந்து
கானுறை வாழ்க்கையில் கலந்த இராமன்
மாஅ இரலை வேட்டம் போகித்
தலைமகட் பிரிந்த தனிமையன்; தனது
சுற்றமும் சேணிடை யதுவே; முற்றியது
நஞ்சுகறை படுத்த புன்மிடற்று இறைவன்
உலகுபொதி உருவமொடு தொகைஇத் தலைநாள்

வெண்கோட்டுக் குன்றம் எடுத்த மீளி
வன்தோள் ஆண்டகை ஊரே; அன்றே
சொன்முறை மறந்தனம் வாழி
வில்லும்உண்டு அவற்கு அந்நாள் ஆங்கே
மாதர்க் கெண்டை வரிப்புறத் தோற்றமும்
நீலக் குவளை நிறனும் பாழ்பட
இலங்கை அகழி மூன்றும் அரக்கியர்
கருங்கால் நெடுமழைக் கண்ணும் விளிம்பழிந்து
பெருநீர் உகுத்தன மாதோ அதுஅக்
குரங்கு தொழில் ஆண்ட இராமன்
அலங்குதடறு ஒள்வாள் அகன்ற ஞான்றே.

(ஆசிரியமாலை)

இராமனது தீரத்தையும் வீரத்தையும் வெற்றித் திறலையும் இப்பாசுரம் நன்கு விளக்கியுள்ளது. பொருளின் சுவைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். தன் தந்தை இட்ட கட்டளைப்படி கானம் புகுந்தான்; அங்கே ஒரு மாயமானால் வஞ்சிக்கப் பட்டான்; அருமை மனைவியைப் பிரிந்தான்; அல்லல் உழந்தான்; ஆனாலும் உள்ளம் தளராமல் ஊக்கி எழுந்து யாரும் அணுக முடியாத இலங்கையை வளைந்து அரக்கர் குலத்தை அழித்து இராவணனைத் தொலைத்துத் தேவியை மீட்டித் திசைகள் தோறும் தன் இசைகள் பரவி ஓங்க என்றும் குன்றாத வென்றி வீறோடு இராமன் நின்றுவிளங்கினான் என இது விளக்கியுள்ளது.

தூய எண்ணங்களாலும் திண்மையான மனவுறுதியாலும் மனிதன் அரிய பல அதிசய மேன்மைகளை அடையலாம் என்பதை இராமன் ஒழுகிக் காட்டியிருக்கிறான். தைரிய வீரிய சத்திய பராக்கிரமன் என இவ்வுத்தம வீரனைக் காவியங்கள் யாவும் உரிமையோடு உவந்து பாராட்டி வருகின்றன. உள்ளத்தில் நல்ல உறுதி நிறைந்துள்ளமையால் எல்லா சீர்மைகளும் இக்கோமகனிடம் நேமமாக் குடி கொண்டு நிலைத்து நின்றன.

Where true fortitude dwells, loyalty, bounty, friendship, and fidelity may be found. (Thomas Browne)

எங்கே உண்மையான மனவுறுதி உள்ளதோ அங்கே நன்மையான அரசநீதி நட்பு கொடை நேர்மைகள் குடிகொண்டுள்ளமையைக் காணலாகும் என இது காட்டியுள்ளது.

புனிதமான மனத் திண்மையால் மனிதன் அரிய பல பெருமைகளை அடைந்து அதிசய நிலையில் உயர்ந்து கொள்ளுகிறான்.

---

868. மடமை மடிமை மனித மரபின்
விடமே இவற்றை விலகிக்—கடமையை
ஓர்ந்து தினமும் உணர்வோடு செய்துவரின்
ஆர்ந்து பெருகும் அறம். (அ)

இ—ள்.

உயர்ந்த மனித இனம் இழிந்து கழிந்து போகும்படி செய்வது மடமையும் மடிமையுமே; இவற்றைக் கொடிய விடமாக் கருதிக் கடிது விலகிக் கடமைகளை உணர்ந்து செய்துவரின் தருமங்கள் நிறைந்து இருமை இன்பங்களும் பெருகி வரும் என்க.

அறிய வேண்டியதை அறிந்து, செய்ய வேண்டியதைச் செய்த போதுதான் மனிதன் சிறந்து திகழ்கிறான். இந்த அறிவும் செயலும் இல்லையானால் அந்த மனிதன் எந்த வகையிலும் இழிந்தே கழிகிறான். கண் ஒளி போல் அறிவு எண் ஒளியாய் இலங்குகிறது. கொடிய இருள் போல் மடமை நெடிய மருளாயுளது. அறிவு இருமையும் மருவி வர இன்பம் அருளுகிறது; அறியாமை எவ்வழியும் துன்பமே தருகிறது. பொருளும் புகழும் சுகமும் அறிவால் வருகின்றன; அந்த அரிய பெரிய இனிய பேறுகளை எல்லாம் அறியாமை வறிதே இழந்து விடுகின்றது.

மடமை = அறிவு பாழான அவல நிலை.
மடிமை = செயல் இழந்த சிறுமை நிலை.

உணர்ச்சி இன்மையே முயற்சியின்மைக்கு மூல காரணமாம்; ஆகவே மடமையும் மடிமையும் தொடர்பாய்த் தோய்ந்து வந்தன. யாண்டும் அவலத்துயரங்களையே தருகிற இந்த அவகேடுகளைத் தழுவி இழிவது மிகவும் பழியான அழிவாம்.

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. [குறள், 604]

சோம்பலாயிழிந்து ஏம்பலான முயற்சியை இழந்திருப்பவர்க்கு நேருகிற குடி கேடுகளையும் குற்றங்களையும் தேவர் இவ்வாறு குறித்துக் காட்டியிருக்கிறார். மடியை நீ உவந்து

கொண்டால் உன் குடி அடியோடு அழிந்து போம்; அந்த அழிவு நேராமல் விழி திறந்து விரைந்து முயன்று வாழுக என மனிதனுக்கு இங்ஙனம் உறுதிநலனை இனிது போதித்துள்ளார்.

வறுமை இழிவு பழி முதலிய துயரங்கள் யாவும் மடியின் அடியாகவே வருகின்றன. மடிபடியின் குடி அழியும் என்றதனால் அதன் கொடிய கேடுகள் யாவும் நேரே தெரியலாம்.

Sloth brings in all woe. [Gower]

துக்கங்கள் எல்லாம் மடியால் வருகின்றன என இது குறித்திருக்கிறது. சோம்பல் ஒன்றால் துயரங்கள் பலதோன்றுகின்றன.

A lazy man is necessarily a bad man; an idle is necessarily a demoralized population. (J. W. Draper)

சோம்பேறி கட்டாயம் கெட்டவனாகிறான்: ஆகவே ஒரு சோம்பல் சன சமுதாயத்தைக் கேடாக்கிப் பாழ்படுத்தி விடுகிறது என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது.

I live an idle burden to the ground. [Iliad]

பூமிக்குப் பாரமான ஒரு சோம்பேறியாய் நான் வாழுகிறேன் என இது கூறியிருக்கிறது. கிரீஸ் தேசத்துப் பெரிய கவிஞானான ஹோமர் Homer மடியின் கொடிய இழிவை இவ்வாறு விளக்கியிருக்கிறார். சோம்பலை எந்த நாடும் இகழ்ந்து வெறுத்திருத்தலை இவற்றால் நன்கு அறிந்து கொள்ளுகிறோம்.

சிறந்த பிறவியை அடைந்திருந்தும் அதன் பயனை விரைந்து பெறாதபடி மனிதனை மடி ஈனமாத் தாழ்த்தி நிற்றலால் அது மிகவும் கொடிய கேடு என வெறுக்கப் பட்டது. தன்னை உண்டவரை நஞ்சு கொல்லுதல் போல் மடியும் தன்னைக் கொண்டவரைக் கொன்று விடுதலால் விடம் என அறிஞர் அதனை அஞ்சியுள்ளனர். நஞ்சு உயிரை உடலிலிருந்து நீக்கி ஒழியும்; மடி உயிரோடு வைத்துக் கொண்டே அவனைச் சித்திரவதை செய்து செத்த சவமாக்கி விடும். உயிரழிவும் துயரும் விழிதெரிய வந்தன.

குடிகேடான கொடிய இந்த மடியை அடியோடு நீக்கி மனிதன் ஊக்கமாய் முயன்ற போது தான் உயர்ந்த ஆக்கங்களைப் பெறுகிறான். சோம்பியிருந்தவன் தேம்பி அழிகின்றான்; ஊக்கி முயன்றவன் மேலான பாக்கியங்களை விரைந்து அடைந்து

கொள்கிறான். உறுதியோடு ஆளுகின்ற வினையினாலே தான் மனிதன் ஆண்மையாளனாய் யாண்டும் மேன்மையுறுகின்றான்.

கேள்கேடு ஊன்றவும், கிளைஞர் ஆரவும்,
கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்,
ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து
ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை உறந்தை அன்ன
பெறலரு நன்கலன் எய்தி நாடும்
செயலரும் செய்வினை முற்றினம் ஆயின்
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறு நறுநுதல்
நீளிருங் கூந்தல் மாஅயோள் ஒடு
வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகம் சென்மோ நெஞ்சே! (அகம், 93)

புதிதாய் மணந்த அழகிய இளமனைவியைப் பிரிந்து அயலே பொருள் தேடச் சென்றிருந்த ஒரு குலமகன் தன் நெஞ்சை நோக்கி இதில் இவ்வாறு கூறியிருக்கிறான். வறுமைக்கேடும் பசித்துயரும் நீங்கிக் கேளும் கிளையும் சுகமாய் வாழவும், ஊரார் உவந்து பேணவும், நாட்டார் நன்கு மதிக்கவும், நாம் ஈட்டிய பொருளோடு விரைந்து மீளுவோம்; மீண்டதும் நம்மைப் பிரிந்து வருந்தியுள்ள மனைவி பெருமகிழ்ச்சியடைவாள்; அவளோடு பஞ்சணையில்உவந்து மகிழ்ந்து எல்லார்க்கும் உதவி புரிந்து சிறந்த புகழோடு உயர்ந்து வாழலாம் என அப் பெருந்தகையாளன் தன் உள்ளத்தோடு பேசியிருப்பது உலகத்தார்க்கு ஓர் போதனையாய்ப் பொலிந்து வினையாண்மையை விநயமா விளக்கியுள்ளது.

புலவர் பெருமானான நக்கீரர் இந்தப் பாட்டைப் பாடியிருக்கிறார். ஒரு நல்ல ஆண்மையாளனை மேன்மையா ஆக்கிக் கொண்டு அக்குலமகன் மூலமா உலகத்துக்கு இவ் வண்ணம் உறுதிநலனை உரிமையோடு தெளிவா அவர் உணர்த்தியிருக்கிறார்.

உயிர் வாழ்க்கைக்குப் பொருள் அவசியம் தேவை; அப் பொருள் முயற்சியில் உள்ளது; முயற்சி ஊக்கத்தால் ஓங்குகிறது; அந்த ஊக்கம் உடையவன் எல்லா ஆக்கங்களையும் ஒருங்கே அடைந்து கொள்கிறான். "ஊக்கமது கைவிடேல்" என ஒளவையார் இவ்வாறு உரைத்தது அது ஆக்கம் தருதல் கருதியே. செல்வமும் சீர்த்தியும் சேர வருவது தெரிய வந்தது.

முயற்சி ஊக்கங்களுக்கு நேர் மாறானது மடி. ஈனமான இம் மடி மானவாழ்வை மாய்த்து மனிதனை அடியோடு கெடுத்து விடும் ஆதலால் கேடான இதை யாதும் கூடாமல் யாண்டும் மூண்டுமுயன்று வருவோரே மேலானநிலைகளில்நீண்டுவருகிறார்.

மனிதனுடைய தரத்தைக் கெடுத்துத் தாழ்வு படுத்துவது மடியே; அதனை மடித்து முயல்பவன் மகிமையில் உயர்கின்றான். கருதி முயன்று உறுதி நலங்களை அடைந்து உயர்ந்து வாழுக.

---

869. ஊக்கம் உடையான் உயர்வுடையான் இல்லாதான்
ஆக்கையோ டாடி அலமந்து —போக்கில்
நடைப்பிணமாய் நின்று நவைகொண் டிழிந்து
கிடைப்பிண மாவன் கிழிந்து. (௯)

இ—ள்.

உள்ளத்தில் ஊக்கம் உடையவன் உலகத்தில் உயர்வடைகிறான்; அஃது இல்லாதவன் உயிரோடிருந்தாலும் நடைப் பிணமாய் அலைந்து திரிந்து கிடைப்பிணமாயிழிந்து ஒழிவான் என்க.

உடல் எடுத்த உயிர்கள் யாவும் குடல் எடுத்த பசியோடு கூடி வந்திருத்தலால் யாண்டும் உணவுகளை நாடி உலாவி அலைகின்றன. உண்ண வுரிய பண்டங்கள் உண்டிகள் என வந்தன. உயிர்களின் பசிகளை நீக்கத்தக்க பொருள்கள் பயிர்களில் விளைந்து வருதலால் அவற்றை நிலங்களில் விளைக்க நேர்ந்தனர். அந்த விளைவுகளால் மாந்தர் வாழ்ந்து வருகின்றனர். அவ்வாழ்வு செவ்வையாய் நடந்துவர வேந்தர் துணை புரிந்து வருகின்றனர்.

ஒரு பெரிய மனித சமுதாயத்தை இனிது பாதுகாத்து வர வுரிய பொறுப்பு அரசனிடம் தனியுரிமையாக மருவியிருத்தலால் அவன் அதிசய தீரனாய்ப் பெருகி யிருக்கிறான். மனவுறுதியும்

மானவீரும் போர் வீரமும் மன்னனுக்குச் சிறந்த நீர்மைகளாச் சீர்மைகளை அருளுகின்றன. மூண்டு புகுந்த இடர்களை யெல்லாம் ஓர்ந்து விரைந்து நீக்கி யாண்டும் நாட்டை நன்கு காக்க வேண்டியது கோக்குலக் கடமையாய் நீண்டு வந்துள்ளது.

உக்கிர குமாரன் என்னும் பாண்டிய மன்னன் மதுரையிலிருந்து அரசு புரிந்து வருங்கால் ஒரு முறை நாட்டில் கொடிய பஞ்சம் தோன்றியது. குடிகள் படுகிற துயரத்தைக் கண்டு கோமகன் உள்ளம் வருந்தினன்; தன் குல தெய்வமாகிய சோம சுந்தரப் பெருமானைத் தொழுது வேண்டி அன்று முழுதும் உணவு கொள்ளாமல் கவலையோடு படுத்திருந்தான். இரவு நடு நிசியில் ஒரு கனவு தோன்றியது: "பாண்டியா! இன்னும் ஓர் ஆண்டு மழை பெய்யாது; இமயமலையில் ஒரு குகையுள்ளது; செம்பொன் அதில் நிறைந்திருக்கிறது; உனக்கு உரிமையாக அதனை எடுத்துக் கொள்க" என இன்னவாறு தோன்றிய கனவைக்கண்டதும் மன்னன் கண் விழித்து மகிழ்ந்தான்; மறு நாளே நேம நியமமா இமயம் நோக்கி ஊக்கி எழுந்தான்.

மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போல் மன்னன்
பகவுறு மதியம் சூடும் பரஞ்சுடர் முன்போய்த் தாழ்ந்து
மிகவுறு பசியால் வையம் மெலிவதை ஐய என்னுத்
தகவுற இரங்கிக் கண்ணீர் ததும்பிநின் றிரந்து வேண்ட. [1

திரைக்கடல் விடம்சேர் கண்டர் காலத்தின் செவ்வி நோக்கி
இரக்கமில் லவர்போல் வாளா இருத்தலும் மருத்தார் மார்பன்
கரைக்கரி தாய துன்பக் கடலில்வீழ்ந்து இருக்கை புக்கான்;
அரக்கர்போர்க் கடலினீந்தி அருக்கன்நீர்க் கடலில் வீழ்ந்தான். [2

வள்ளல்தன் குடைக்கீழ்த் தங்கும் உயிர்ப்பசி வருத்தம் எல்லாம்
கொள்ளைகொண் டிருந்த நெஞ்சிற் குளிர்முகச் செவ்வி குன்றத்
தள்ளருந் துயரின் மூழ்கித் தரையிடைத் துயின்றான் ஆக
வெள்ளிமன் றுடையார் சித்த வேடராய்க் கனவில் வந்தார். [3

அடற்கதிர் வேலாய்! மாரி அரிதுஇப்போது அதனை வேண்டி
இடர்ப்படல் வரைக்கு வேந்தா யிருக்கின்ற எரிபொன் மேருத்
தடப்பெரு வரையின் மாடோர் தனிப்பெரு முழையிலிட்டுக்
கிடப்பதோர் எல்லை யில்லாக் கேடிலாச் சேம வைப்பு. [4

கிடைத்துமற் றனைய மேரு கிரிசெருக் கடங்கச் சென்டால்
புடைத்துநின் ஆணைத் தாக்கிப் பொன்னறை பொதிந்த பாறை

துடைத்துநீ வேண்டுங் காறும் தொட்டெடுத்து அதனை மீள
அடைத்துநின் குறியிட்டு ஐய வருதி என்று அடிகள் கூற. ]5

விழித்தனன் எழுமான் தேரோன் விழிக்குமுன் கடன்கள் எல்லாம்
கழித்தனன் மீன நோக்கி கணவனை வலமாய்ப் போந்து
சுழித்தெறி கடலனீகத் தொகைபுறம் சூழக் கொண்டல்
கிழித்தெழு வாயில் நீங்கிக் கீழ்திசை நோக்கிச் செல்வான். [6
[திருவிளையாடல், மேருவை 7--12]

இந்த மன்னனுடைய மாட்சியும் ஆட்சியும் தெய்வக்காட்சியும் இங்கே நன்கு தெரிய வந்தன. மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போல் தன் குடிகளின் துயர்களை நோக்கி இவன் துடித்திருத்தலால் இவனுடைய பரிவும் பண்பும் பரிபாலன முறையும் அரச தருமத்தின் நெறியும் துறையும் அறியலாகும்.

வையம் நையாமல் காக்க வேண்டிச் சேம நிதியை எடுத்து வர மேருகிரியைநோக்கித் தன் பரிவாரங்களோடு மன்னன் ஊக்கிச் சென்றான். நாடுகள் பலவும் கடந்து முடிவில் இமயம் அடைந்தான். தரைக்கு வேந்தனுடைய தரத்தை உணர்ந்து வரைக்கு வேந்தன் வணங்கி வந்து நிதியறையை நேரே காட்டினான். காட்டவே வேண்டிய அளவு முகந்து கொண்டு மீதமுள்ளதைப் பாண்டியன்நிதி என்று தன் முத்திரையை யிட்டு வைத்து மீண்டு வந்தான். தன் குடிகளுக்கு யாண்டும் ஆதரவு புரிந்தான். யாவரும் இக்கோமகனைப் புகழ்ந்து பொற்றி உவந்து வாழ்ந்தனர். மாந்தர் மகிழ்ந்து வாழச்செய்வதே வேந்தன் கடமை.

அல்லல் நேர்ந்த போதும் உள்ளம் தளராமல் ஊக்கி முயன்று செல்வ வளங்களைஆக்கிக்கொண்டு வந்து எல்லாரையும் ஆதரித்தருளினமையால் இவ்வேந்தன் கீர்த்தி யாண்டும் ஓங்கி நின்றது. நாட்டை ஆளும் முறையை நாளும் நன்கு கவனித்து வந்தான்; ஆகவே இவனது ஆட்சி மிக்க மாட்சியாய்விளங்கியது.

They are not kings who sit on thrones, but they who know how to govern. [Emerson]

அரியணைகளில் பெருமிதமாய் வீற்றிருப்பவர் அரசர் அல்லர்; தேசத்தை ஆள வேண்டிய முறையை நன்கு அறிந்தவரே அரசர் ஆவார் என்னும் இது இங்கே அறிந்து கொள்ளவுரியது.

ஊக்கம் மனிதனைத் தனிநிலையில் உயர்த்துகிறது; கரும

வீரன் என உலகம் அவனை உவந்து புகழும்படி ஆக்குகிறது. உள்ளக்கிளர்ச்சியான அந்த நல்ல நீர்மை இல்லையானால் மனிதன் உயிர் இருந்தும் இல்லாதவனாய் எங்கும் எள்ளப்படுகிருன்.

ஊக்கம் பேணி ஆக்கம் காணுக.

---

870. ஒத்த பிறப்பில் உதித்தும் பலரிழிந்து
செத்த சவமாய்த் திரிகின்ருர்—தத்தம்
இயல்பின் அளவே எவர்க்கும் உலகில்
உயர்வும் இழிவும் உணர். (ய)

இ—ள்.

மனித மரபில் ஒரு நிகரா உருவம் பிறந்திருந்தும் ஒத்த உரிமைகளை உணராமல் பலர் செத்த சவங்களாகவே திரிகின்ருர்; அவரவருடைய செயல் இயல்களின் அளவே உயர்வும் தாழ்வும் உளவாம்; அந்த உண்மையை உணர்ந்து நன்மையை அடைக.

சிறப்பான தோற்றம் பிறப்பு என வந்தது.

உடல் உறுப்புக்களாலும், நடை உடை பாவனைகளாலும், பேச்சு வழக்காலும் மனிதர் ஒரு நிகராய்த் தோன்றினும் குண வகைகளால் மாறுபாடி மண்டி வேறுபட்டு விரிந்து பிரிந்து திரிந்து வருகின்றனர். உள்ளப்பண்பும் உணர்வு நலனும் உரிமையாய்ப் பெருகி வரும் அளவே மனிதன் பெருமையாய் மருவி வருகிருன்; அவ்வாறு வராவழி எவ்வாற்ருனும் அவன் இழிந்தே போகிருன். இழிவுருமல் எழுபவன் விழுமியனாகிருன்.

உயர்ந்த வாழ்வுகளை அடைந்து சிறந்த சுக போகங்களை நுகர்ந்து மேன்மையாய் வாழ வேண்டும் என்றே மாந்தர் யாவரும் விரும்புகின்றனர். தாம் விரும்பிய நலங்களை விரும்பியபடியே அடைய வுரிய கருமங்களைக் கருதிச் செய்யின் அவை தாமாகவே அவரிடம் வந்தடைகின்றன. உரிய வினைகளை உரிமையோடு ஊன்றிச் செய்யாதவர் ஒரு பலனையும் அடையாமல் ஊனமாயுழல்கின்றனர். இழிவு ஈனங்கள் எல்லாம் மடி மடமைகளால் மருவி வருகின்றன. அகத்தே மூடம் ஏறப் புறத்தே பீடைகள் ஏறிப் பிழைபாடுகள் மீறுகின்றன.

மனித வாழ்வு பொருளால் இனிது நடந்து வருகிறது. அந்தப் பொருள் முயற்சியால் விளைகிறது. செல்வங்களை ஆக்கிய

ருளுகிற முயற்சியையுடையவன் எவ்வழியும் உயர்ச்சிகளை அடைகிருன். அதனை இழந்து மடிந்திருப்பவன் வறியனுய் இழிந்து கழிகிருன். வறுமை புகுந்தால் பெருமைகள் எல்லாம் ஒருங்கே ஒழிந்து போம்; சிறுமைகள் செறிந்து சீரழித்து விடும்.

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். (குறள், 1042)

வறுமையால் இருமையும் பாழாம் எனத் தேவர் இவ்வாறு மறுகி யுரைத்துள்ளார். பாவி என்று அதனைக் கோபமா வைதது சீவர்களைச் சித்திரவதை செய்யும் அதன் தீமையை நினைந்து. இன்ப நுகர் வின்றித் துன்பமே தோய்ந்து வருதலால் இல்லாமை கொடிய பொல்லாமையா எவரும் அஞ்ச நேர்ந்தது.

பொருளிலார்கு இன்பம் இல்லை; புண்ணியம் இல்லை; என்றும்
மருவிய கீர்த்தி இல்லை; மைந்தரில் பெருமை இல்லை;
கருதிய கருமம் இல்லை; கதிபெற வழியும் இல்லை;
பெருநிலம் தனில்சஞ் சாரப் பிரேதமாய்த் திரிகு வாரே.

பொருள் இல்லாத போது விளைகின்ற அல்லல்களையும் அவமானங்களையும் இதனுல் அறிந்து கொள்ளுகிறோம். சஞ்சாரப் பிரேதம் என்றது நடைப் பிணம் என்றவாறு. உயிரோடு செத்த சவம் என்றதனுல் இன்மையின் ஈன இழிவு உய்த்துணர வந்தது.

மிடி புகுந்த போது கொடிய துயரங்கள் எல்லாம் அங்கே கூடவே குடிபுகுகின்றன. யாசகம் முதலிய இழிநீசங்கள் பலவும் அதனுல் நேர்கின்றன. இரப்பு இறப்பினும் இழி துயருடையது. மானத்தை மாய்த்து ஈனத்தை விளைத்து இடர்களைப் பெருக்கி வருகிற வறுமையைப் போல் மனிதனைச் சிறுமைப் படுத்திச் சிதைத்து அழிப்பது வேறு யாதும் இல்லை.

Poverty is a great enemy to human happiness. (Johnson)

மனிதனது இனிய வாழ்வுக்கு வறுமை கொடிய விரோதி என ஜான்சன் இவ்வாறு கூறியுள்ளார். வறுமை வரின் மன அமைதி குலைந்து போம்; கொடிய கவலைகள் நெடிது ஓங்கி வரும் ஆதலால் அது துயரங்களுக்கெல்லாம் உறையுளாயது.

எவ்வழியும் இன்பமாய் வாழ விரும்புகிற மனிதன் துன்பமே மயமான மிடி தன் குடியை யாதும் அணுகாதபடி பாதுகாத்து முயன்று உயர்ந்து கொள்ளவேண்டும். கருதி முயல்பவன் உறுதி நலங்களை உடைமையா அடைந்து கொள்ளுகிருன்.

பொருளை ஈட்டிச் சுகமா வாழ்வதால் மட்டும் ஒருவன் பெரியவன் ஆக முடியாது. தரும சீலங்களைத் தழுவி ஒழுகிவரும் அளவே மனிதன் புனிதனாய் விழுமிய மேன்மைகளை அடைந்து வருகிறான். எண்ணரிய இன்பங்களைப் புண்ணியம் அருளுகிறது.

மானிடம் பெறுதல் வானிடம் பெறுதலாம் என இன்னவாறு புகழ்ந்து போற்றப் பெற்ற உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்திருந்தும் இழிந்த மிருகங்களினும் கடையராய்ப் பலர் கழிந்து ஒழிந்து போகின்றனர். தாம் ஈனமாய்த் தாழ்ந்து கழிவதை உணராமல் மானமா வாழ்ந்து வருவதாக மனம் களித்துத் திரிவது ஞான சூனியமாய் விரிந்து வருகிறது. மடமைக் களிப்பு மனிதனைக் கடையனாக்கி யாண்டும் அவலப்படுத்தி எவ்வழியும் செழித்து நிற்கிறது. இழிகளி ஒழிவது தெளிவான ஒளியாம்.

பொய் பேசுவது புலை என்று யாரும் உணரவில்லை. நீசப் பொய்யை வாயில் வைத்து நாளும் நாசமடைந்து மடிகின்றார். பழி இழிவுகளை விழி திறந்து பாராமல் தழுவி வருவது அழி துயரங்களாய்ப் பெருகி வருகிறது. நல்ல நீர்மைகளை இழந்த அளவு தரம் கெட்ட மனிதராய்த் தாழ்ந்து தொலைகின்றார்.

இயல்பு என்னும் பண்புச்சொல் குணம் தகுதி சீலங்களை உணர்த்தி வரும். அவற்றை உரிமையாக வுடையவர் உயர்ந்த மனிதராய்ச் சிறந்து திகழ்கின்றார்; இழந்தவர் இழிந்தவராய்க் கழிந்து போகின்றார். தன்மை தழுவி ஒழுகி நன்மையுறுக.

## இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அரியன செய்வார் பெரியவர் ஆவார்.
கருத்து உயரக் கருமங்கள் உயரும்.
மனவுறுதி மகிமைகள் அருளும்.
உள்ளக் கிளர்ச்சி உயர்ச்சிகள் தரும்.
ஊக்கி முயலின் பாக்கியங்கள் வரும்.
தளர்ந்து படாமல் வளர்ந்து வருக.
கரும வீரனைத் தருமமும் புகழும்.
மடமை யுறாமல் கடமையைச் செய்.
ஊக்கம் உடையவன் ஆக்கம் அடைவான்.
இயல்பின் அளவே உயர்வுகள் உளவாம்.

அள—வது தரம் முற்றிற்று.

# எண்பத்தெட்டாம் அதிகாரம்

## உ ர ம்.

அஃதாவது உபகார நிலையால் ஓங்கி வரும் திண்மை. தனது தரத்தை உயர்த்தி மனிதனை மாண்புறுத்தி வருதலால் ஈண்டு இது வைக்கப்பட்டது. தரத்தில் வளர்ந்து உரத்தில் உயர்ந்து உய்தி பெறுக என உணர்த்தியுள்ளமையால் உறவுரிமைகள் உணரலாகும். உள்ளம் உரம் பெற உயர்வுகள் ஓங்குகின்றன.

871. தாளாண்மை யோடுமுன் தாமீட்டி வந்ததை
வேளாண்மை செய்யின் வியனாகி—நீளாண்மை
எங்கும் பரவி இசைபெருகி நிற்குமே
பொங்கும் மகிமை பொலிந்து. (க)

இ—ள்.

முயற்சி செய்து ஈட்டிய பொருளை உயிர்களுக்கு இதமா உபகாரம் செய்க; அவ்வாறு செய்யின் அது மேன்மையாய் வளர்ந்து புகழும் புண்ணியமும் பயந்து எவ்வழியும் செவ்விய நலங்களை அருளித் திவ்விய மகிமைகளை விளைத்து வரும் என்க.

இனிய செயலும் இயலும் மனிதனுடைய உயர்நிலைகளுக்கு மூலகாரணங்களாயுள்ளன. உரிய பான்மைகளிலிருந்து பெரிய மேன்மைகள் பெருகி வருகின்றன. பேற்றி அளவே பெருமை என்னும் பழமொழி அரிய பல பொருள்களை உய்த்துணரச் செய்துள்ளது. நீர்மையிலிருந்தே சீர்மைகள் விளைகின்றன.

இங்கே மூன்று ஆண்மைகள் அடையடுத்து வந்துள்ளன. ஆள் என்னும் சொல் மனிதனைக் குறித்து வருகிறது. இந்த ஆண்மகன் ஆற்றிவரும் நீர்மையே ஆண்மை என அமைந்தது.

ஆடவனிடம் ஆளும் தன்மை கூடியுள்ளமையால் ஆண்மையாளன் என நேர்ந்தான். ஆண்டவன் என்னும் அருமைப் பெயரும் இந்த ஆண்மையடியாகவே கேண்மையாத் தோன்றியுளது.

தாளாண்மை என்றது முயற்சியை. கால் பெயர்ந்து ஆற்றுவது என்னும் காரணக் குறியாய் வந்தது. கருங்கடல் கடந்தும் மலைவனங்களில் நடந்தும் அயலிடங்களில் அலைந்தும் ஆற்றி வருவது என உழைப்பு நிலையை இது இங்கு நன்கு விளக்கி நின்றது.

வேளாண்மை = உபகாரம். வேள் என்னும் சொல் விருப்பம், மண், அழகு முதலியவைகளைக் குறித்து வரும். மண்ணைப் பண் படுத்தி விளை பொருள்களை உளவாக்கி வருபவர் வேளாளர் என நேர்ந்தார். நிலவளம் உடைய அவர் குலவளம் உடையராய்ப் பிறர்க்குக் கொடுத்து உதவுவர் ஆதலால் உபகாரம் அவர்க்கு இயல்பான உறவுரிமையாய் ஒளிபுரிந்து வந்தது.

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்."

(திரிகடுகம்)

என்றதனுல் பிறரை ஊட்டி உண்ணும் உண்மையும் வண்மையும் தெரிய நின்றன. முன்பு உபகார நிலையைக் குறித்து வந்த வேளாண்மை பின்பு விவசாயத்தையும் குறிக்க நேர்ந்தது.

நல்ல ஆண்மகனுய்ப் பிறந்தவன் தாளாண்மையும் வேளாண்மையும் உடையனுய் எவ்வழியும் நீளாண்மையோடு செவ்வையாய் வாழ வேண்டும் என்பது ஈண்டு உணர வந்தது. தாம் பாடுபட்டு ஈட்டிய பொருளைப் பிறர்க்கு யாதும் நீட்டாமல் பொத்தி வைத்துத் தாமே உண்டு களிப்பவர் உயர்ந்த பலனைக் கண்டு கொள்ளமாட்டார். இழிந்த நிலையையே காண நேர்வார்.

பிற உயிர்கட்கு இதமா உதவி புரிபவரே தம் உயிர்க்கு நயமா நலம் புரிகின்ருர். "ஈதல் உயிர்க்கு ஊதியம்" என்றது அனுபவசாரமான வேத மொழி. உண்ணுகின்றவன் உடலை வளர்க்கின்ருன்; உதவுகின்றவன் உயிரை வளர்க்கின்ருன்.

எரு முதலிய உரங்களை நிலத்திற்கு இட்டால் அது வளமாய்ச் செழித்து விளையும்; உரம் செய்த நஞ்செய் உயர்ந்த பலன்களை அருளுகிறது; அது செய்யாதது வறண்டு வறுமையடைகிறது. உரிமையோடு உபகாரம் செய்வது தருமம் ஆகிறது. ஆகவே அது இருமையும் பெருமையா அவனுக்கு இன்பங்களை அருளுகின்றது. ஈந்து வருபவன் ஏந்தலாய் வருகிருன்.

போகங்களை நுகரவே பொருள் யாண்டும் ஈட்டப் படுகிறது. அந்த நுகர்ச்சி என்றும் குன்ருமல் தழைத்து வருவது இழைத்து வரும் உபகாரத்தாலேயாம். இந்த உண்மையை உணர்ந்துதான் ஈதற்குச் செய்க பொருளை என்று ஓதியருளினுர்.

*தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு*
*வேளாண்மை செய்தற் பொருட்டு.* (குறள், 212)

உயர்ச்சியான மனிதர் முயற்சி செய்து ஈட்டிய பொருள் முழுவதும் பிறர்க்கு உபகாரம் செய்யும் பொருட்டேயாம் என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது. சீவர்களுக்கு இதம் செய்வதால் திவ்விய மகிமைகள் பெருகி வருகின்றன; அந்த வருவாயை வளமாகப் பெருக்கிக் கொள்பவர் புண்ணிய லோகத்தை அடைந்து எண்ணரிய போகங்களை இனிது நுகர்கின்றனர். ஈகை வழியே போகங்கள் பொங்கி வருகின்றன.

தருமம் ஆகிய உரம் சேர்ந்த போதுதான் கருமம் நன்கு கைகூடி வருகிறது; அது சேரவில்லையானல் வினையாண்மையும் வியன் பயன் காணுமல் மெலிந்து படுகிறது. செய்யும் முயற்சி மனிதனுக்குச் செல்வத்தைத் தருகிறது; அதனை இதமாச் சீவர்களுக்கு உதவின் அது தருமம் ஆய் வருகிறது; அந்த நல்வினையால் எல்லா மேன்மைகளும் எளிதே விளைகின்றன. தருமம் மருமமாய் மருவி வருகிற கருமமே அதிசய நலன்களை அருளுகிறது. புண்ணியம் இல்லையானல் முயற்சியும் எண்ணியபடி கண்ணியமான பலனைக் கொடாமல் வறிதே கழிந்து போகிறது

*மறுவில் முயற்சி இல்லாத மக்கள் போன்றும், மாற்றரிய*
*பொறியில் மாந்தர் தாளாண்மை போன்றும், அரன்மேல்அன்பில்லார்*
*நெறியின் ஆற்றும் நல்விரதம் போன்றும்நிகரில் கவின்இன்றி*
*எறிவேல் அவுணர் பெருஞ்சேனை இழிவுற்று இடரின் ஆழ்ந்தனவே.*
(காசிகாண்டம்)

முயற்சியில்லாத மக்கள் வாழ்வு, நல்லூழ் இல்லாத ஆள் வினை, சிவனை நினையாத தவம் என அசுரர் சேனைகள் அமரில் உடைந்து ஒழிந்து போயின என இது உணர்த்தியுள்ளது. முயன்று வாழ், உயிர்களுக்கு இரங்கி உதவு, தெய்வ சிந்தனை செய் என்னும் போதனைகளை இவ்வாறு கவி போதித்திருக்கிருர்.

ஒருவனுடைய தாளாண்மையின் பலன் வேளாண்மையோடு சேரவேண்டும்; இல்லையானல் புண்ணிய பலம் அவனுக்கு இல்லாமல் போம் என்பதை இங்கே நுண்ணிதா உணர்ந்து கொள்கிறோம். பகுந்து உண்ணுதல், பல்லுயிர் ஓம்புதல் உயர்ந்த மனிதப் பண்பாடுகளாய்ப் புகழ்ந்து போற்றப் பெற்றுள்ளன.

Benevolence is the distinguishing characteristic of man. (Meneius)

உபகாரம் என்பது உயர்ந்த மனிதத் தன்மையின் சிறந்த அடையாளமாயுள்ளது என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணரவுரியது. இனிய உதவியால் மனிதன் புனிதனுகிருன்.

We praise those who love their fellow-men. (Aristotle)

பிறர் பால் அன்பாய் உதவி செய்பவர்களை நாம் புகழ்ந்து போற்றுகிறேம் என அரிஸ்டாட்டல் என்பவர் உபகார நிலையை இங்ஙனம் உவந்து கூறியுள்ளார்.

Only those live who do good. (Tolstoy)

பிறர்க்கு நன்மை செய்பவர்கள்தாம் என்றும் சுகமாய் வாழுகிருர்கள் என ரசிய தேசத்து ஞானியான டால்ஸ்டாய் இவ்வாறு உரைத்திருக்கிருர். உதவி நிலைகள் உணர உரியன.

உபகார நீர்மையை எந்த நாட்டு மேதைகளும் உவந்து புகழ்கின்றனர். தொழில் செய்வதால் பொருள் வருகிறது; அது உலக வாழ்வை வளம் படுத்துகிறது; அதில் ஒருபகுதியை உயிரினங்களுக்கு உதவின் உயர்ந்த புண்ணியமாகிறது; ஆகவே இம்மை மறுமை யாண்டும் அது இன்பங்களை அருளுகிறது.

தாளாண்மை யோடு பொருளை ஈட்டி வேளாண்மை செய்து வியனுய் வாழுக; அதுவே நல்ல ஆளாண்மையாம்.

---

872. மாந்தர் பலகோடி மன்னி யிருந்தாலும்
வேந்தர் பலபேர் விளங்கினும்—ஈந்தருளும்
மாண்புடை யாரையே மண்ணும் உயர்விண்ணும்
மாண்பு புரியும் மதித்து. (உ)

இ—ள்.

பலகோடி மக்கள் உலகில் உலாவி யிருந்தாலும், பெரிய அரசர்கள் பெருமையாய் விளங்கி நின்றுலும், பிறர்க்கு இரங்கி உதவும் உபகாரிகளையே எவரும் உவந்து மதித்துப் புகழ்ந்து போற்றுவர்; அந்த மதிப்பை மாண்போடு பெறுக என்பதாம்.

எல்லாரும் மனிதராய்த் தோன்றினும் அவருள் நல்ல நீர்மையாளர் சிலரே என்றும் சீர்மையாளராய்ச் சிறந்து விளங்கு

கின்றார். அவரையே உலகம் கூர்மையாக உவந்து நோக்கிப் புகழ்ந்து பேசி எவ்வழியும் விழைந்து போற்றி வருகின்றது.

மாந்தருள் வேந்தர் சிறந்தவர்; பூமியை ஆளும் தலைமையோடு அவர் மகிமையாய்ப் போந்துள்ளனர்; ஆனாலும் தரும சீலங்களைத் தழுவி ஒழுகிச் சீவர்களுக்கு இதமா உபகாரங்களைச் செய்த போதுதான் அவர் சீர்த்தியாளராய்ச் சிறந்து விளங்குகின்றார். அரிய செயல்வழியே பெரியநலங்கள் பெருகுகின்றன.

இதம் ஈகை உதவி உபகாரம் என்னும் மொழிகள் எவர்க்கும் உவகை தருகின்றன. ஆருயிர்கட்கு ஆதரவாயுள்ளமையால் ஈகையை யாவரும் ஆவலோடு ஒகை மீதூர்ந்து போற்றுகின்றனர். இனிமை சுரந்தவழி தனி மகிமை சிறந்து வருகிறது.

காமதேனு கற்பகம் கார்மேகம் கனிமரம் என இனிய பொருள்களோடு இணைத்து உபகாரிகளை உயர்ந்தோர் புகழ்ந்து போற்றி வருவது இயலுரிமையாய் வந்துள்ளது. பிறர் இன்பமாய் இனிது வாழ அன்பு செய்து அருள்பவர் ஆதலால் உபகாரிகள் உலகம் புகழ ஒளி பெற்று நின்றுள்ளார். பயனுடையவர் யாண்டும் வியனுக வியந்து பாராட்டப்படுகின்றார்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். (குறள், 216)

நல்ல நீர்மையாளனிடம் செல்வம் சேரின் இனிய கனிமரம் ஊர் நடுவே பழுத்து நிற்பது போலாம் என உபகாரி நிலையைத் தேவர் இவ்வாறு உணர்த்தியுள்ளார். ஊரார் யாவரும் அவனை நயந்து வியந்து உவந்து போற்றுவர் என்பதை இதனால்உணர்ந்து கொள்ளுகிறோம். உதவியாளனை உலகம் வாழ்த்தி வருகிறது.

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர். (நல்வழி, 29)

பழுத்த மரம் பறவைகளுக்கு ஆதரவாயிருத்தல் போல் பழுத்த உபகாரி உலக மக்களுக்கு ஆதரவாய் அளித்தருளுகிறான் என இது உணர்த்தியுள்ளது. நல்ல உபகாரியை ஊரார் மட்டும் அன்று உலகத்தார் எல்லாருமே உவந்து கொண்டாடுவர் என ஔவையார் செவ்வையா விளக்கி இவ்வாறு கூறியிருக்கின்றார்.

யாண்டும். தன்னலமே நாடியுழலும் மனித இனத்தில் பிறர்க்கு நலமாய் உதவி புரிவார் மிகவும் அரியர். அந்த அருமையிலிருந்து அருமையாப் பிறந்த பெரிய மகிமையாளர் ஆதலால் உபகாரிகளை யாவரும் பெருமையா மதித்து யாண்டும் உரிமையோடு புகழ்கின்னர். செய்யும் இதம் தெய்வ பதம் ஆகிறது.

உயிர்களுக்கு உதவி செய்பவர் உயிர்க்கு உயிரான பரமனது பிரியத்தையும் அருளையும் எளிதே பெறுகின்றனர்.

**The most acceptable service of God is doing good to man.**
[Benjamin]

கடவுளுக்கு மிகவும் பிரியமான செயல் மனிதனுக்கு நன்மை செய்வதே என்னும் இது இங்கே உன்னி உணரவுரியது.

**The hands that help are holier than the lips that pray.**
[R. G. Ingersall]

தேவனைத் துதிக்கிற வாயைவிட சீவனுக்கு உதவி செய்கிற கைகள்மிகவும் பரிசுத்த முடையன என இங்கர்சால் என்பவர் இங்ஙனம் கூறியுள்ளார். உயிர்களின் துயர்களைவது உயர்பரமாம்.

உதவி நிலை உயர்ந்த தலைமையாய் ஒளி பெறுகின்றது. உள்ளம் இரங்கி உதவுகின்றவனை வள்ளல் என வையம் வாழ்த்தி வருகிறது. யாரும் அவன் பால் பேரன்பு புரிந்து வருகின்றனர்.

ஒல்லையூர் என்னும் ஊரில் சாத்தன் என்று பேருடைய செல்வன் ஒருவன் இருந்தான். நல்ல உபகாரி. எல்லாருக்கும் இதம்செய்து வந்தான். இரவலர் சிலர் இவனால் புரவலராயினர். வண்மையோடு திண்மையிலும் இவன் சிறந்து விளங்கினான். தாளாண்மை தோளாண்மை வாளாண்மை வேளாண்மை முதலிய ஆண்மைகள் மேன்மை எய்தியிருந்தமையால் வேந்தரும் இவனை விழைந்து வியந்து வந்தனர். யாவருக்கும் பேருபகாரியாய் இசையோடு வாழ்ந்து வந்த இவனது வாழ் நாள் முடிந்தது. இறந்து போனான். இவனது பிரிவை நினைந்து ஊரும் நாடும் ஒருங்கே வருந்தின. கீரத்தனார் என்னும் புலவர் இவனுடைய நெருங்கிய நண்பர்களுள் ஒருவர். இவன் இறந்து போனதை அறிந்து அவர் பெரிதும் பரிந்து வருந்தினார். ஒல்லையூரை நோக்கி அல்லலோடு வந்தார். காட்டு வழிகளில் முல்லைக் கொடிகள் நன்கு பூத்திருந்தன. யாரும் பறிப்பாரின்றி மலர்ந்து விரிந்

திருந்த அம்மலர்களை நோக்கி இக் குலமகனுடைய நிலைமைகளை யெல்லாம்நினைந்து உருகி அவர் மறுகிப்பாடினர். அயலே காண்க.

"இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான்; பாடினி அணியாள்;
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேல் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே." (கீரத்தனர்)

இந்த உபகாரி மாய்ந்தபொழுது அந்த நாட்டு மக்கள் துக்கம் படிந்திருந்த நிலையை இப்பாட்டு நன்கு காட்டியுள்ளது. முல்லைக் கொடியைப் பார்த்து தம் உள்ளத்துயரைப் புலவர் வெளிப் படுத்தியுள்ள இதில் இந்த வள்ளலுடைய நீர்மை சீர்மைகளைக் கூர்மையா ஓர்ந்து நாம் தேர்ந்து கொள்ளுகிறோம்.

மனித சமுதாயத்தில் உபகாரி புனிதமாய் மகிமைப் பெறுகின்றன்; உலகம் அவனைத் திலகமா உவந்து கொண்டாடி வருகிறது. மன்னுயிர்க்கு இதம் செய்து உன்னுயிரை நீ உயர்த்திக் கொள்க. அவ்வாறு உயரின் எவ்வழியும் திவ்விய இன்பமாம்.

---

873. உள்ளம் இரங்கி உவந்துதவி யாதொன்றும்
விள்ளாமல் நள்ளி வெளியகன்றன்—வெள்ளமெனத்
தந்துதவும் அல்லாமல் தான்மாறு வேண்டுமோ
நந்தா முகில்பின் நயந்து. (ங)

இ—ள்.

நள்ளி என்னும் வள்ளல் புலவரைக் கண்டு உள்ளம் உவந்து நல்ல பொருள்கள் எல்லாம் நல்கித் தன்பெயரையும் சொல்லாமல் பெயர்ந்து போனன்; மேகம் உலகில் நீரைப் பொழிந்து விட்டு வேறு யாதும் வேண்டாது மீண்டு போதல் போல் அந்த ஆண்டகை செயல் மாண்போடு அன்று விளங்கி நின்றது என்க.

சீரிய உதவியின் சீர்மை நீர்மைகள் தெளிவாத் தெரியக் கார்முகில் இங்கே நேர்முகமா நெறியே காண வந்தது.

ஈதல் அரிய செயல். அதனை இயல்பாக உடையவரிடம் உயர்வான பண்புகள் ஒளி செய்துள்ளன. தருந்தன்மையாள

ரிடம் பெருந்தன்மைகள் பெருகி வருகின்றன. நள்ளி என்பவன் எவர்க்கும் உள்ளம் இரங்கி உதவி புரியும் பெரிய உபகாரி. இவ் வள்ளலிடம் யாரிடமும் எளிதே காண முடியாத அரிய நீர்மைகள் தனியான பெரு மகிமையுடன் இனிது அமைந்திருந்தன.

ஒரு நாள் காட்டிலே புலவர் ஒருவரைக் கண்டான்; அவர் வறுமையால் வாடியிருப்பதை அறிந்து உள்ளம் உருகினன். "பொருள் தேடும் வழிகளில் புகாமல் அறிவையே நாடி அகமுகமாயிருக்கும் கல்விமான்களை மரியாதையோடு மதித்துப் பேணுதல் மன்னரின் கடமையாம்" என்பதை உன்னி உணர்ந்தான். தான் அணிந்திருந்த வயிரக்கடகத்தை எடுத்து அவரிடம் கொடுத்தான். உயர்ந்த விலையுடைய அதனை வாங்குவதற்கு அவர் கூசினர். "உங்கள் நிலையை நோக்க இந்த அணி மிகவும் இழிந்தது; தயவு செய்து இதைப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று இவன் போற்றிக் கொடுத்தான். இந்த வள்ளலுடைய குண நலங்களையும் கொடை நிலையையும் நினைந்து மகிழ்ந்து புலவர் உள்ளம் உருகினர். இவனைப் புகழ்ந்து பாட நினைந்தார். இனம் யாதும் தெரியாமையால் "தாங்கள் யார்?" என்று வினவினர். பேரைச்சொன்னல் தன்னைப் புகழ்ந்து பாடுவார் என்று எண்ணி யாதும் கூருமல் இந்த மன்னன் அயலே விரைந்து போனன். புலவர் வியந்து நின்றார். பின்பு இனம்தெரிந்து இன்பமீதூர்ந்தார்.

பட்டினியும் பசியுமாய் நித்திய தரித்திரத்தில் நெடிது வருந்தி வந்த கவிஞர் இந்தக் கொடையாளி கொடுத்த பொருளால் பெரிய செல்வராய்ப் பெருகி வாழ்ந்தார். பின்பு நன்றியறிவோடு அன்பு மீதூர்ந்து நள்ளியைப் பார்க்க வந்தார். இந்த வள்ளலால் அடைந்துள்ள தனது செல்வ நிலையையும் வாழ்வையும் நேரே வரைந்து கூறினர். அன்று கூறிய கவி அயலே வருகிறது.

கறங்குமிசை அருவிய பிறங்குமலை நள்ளிநின்
அசைவில் நோன்தாள் நசைவளன் ஏத்தி
நாள்தொறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசில்முற் றளிப்பப்
பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின் றுஎம் சிறுசெந் நாவே. (வன்பரணர்)

மேலே ஒலித்து விரைகிற அருவிகள் இடையறுது நேரே கலித்து வருகிற செழித்த மலைகளையுடைய நள்ளி! நீ அன்பால் அருளு கிற யானைகளையும் பொருள்களையும் அணிகளையும் நான் பிறர்க்குப் பரிசிலாக் கொடுத்துப் புரவலனுய் வாழுகிறேன்; ஈயாமையால் பெருமைகளை இழந்துள்ள பேரரசர்களை வீணே புகழ்ந்து பாடுதலை ஒழிந்து எனது நா இதுபொழுது புனிதம் அடைந்துள்ளது என அப்புலவர் இவ்வள்ளலை நோக்கி உள்ளம் கனிந்து இவ்வாறு பாடியிருக்கிருர். இவனது கொடைமையும் தகைமையும் கருதுந்தோறும் உறுதி புரிந்து உவகை சுரந்து வருகின்றன.

நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளி. (சிறுபாண்)

உள்ளி வருநர் உலைவுநனி தீரத்
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளி. (புறம், 158)

இரப்போர்க்கு, இழையணி நெடுந்தேர்களிருெடு என்றும்
மழைசுரந் தன்ன ஈகை வண்மகிழ்க்
கழல்தொடித் தடக்கைக் கலிமான் நள்ளி. (அகம், 238)

இவனது ஈகை நிலையைப் புலவர் பலரும் இங்ஙனம் போற்றியிருக்கின்றனர். யாதொரு கைமாறும் கருதாமல் மேகம் மழை பொழிவது போல் விழுமிய நிலையில் இவன் உதவி வந்துள்ளமையால் மழை சுரந்து அன்ன ஈகை என இவனுடைய உபகார நீர்மையை யாவரும் வியந்து புகழ்ந்துள்ளனர். பொன் மணி யானை தேர் முதலிய பெரும் பொருள்களை வாரிக் கொடுத்தும் தன் பேரைவெளிப்படுத்த விரும்பாமல் யாண்டும் மறைத்து வந்துள்ளான். அந்த உண்மையான வண்மையை உணர்ந்து உலகம் வியந்து மகிழ்ந்து எவ்வழியும் விழைந்து புகழ்ந்து வருகிறது.

தருமத்துக்குச் சிறிது பொருள் தந்தாலும் தம் பெயர் பெரிதும் வெளியே தெரிய வேண்டும் என்று வெறி கொண்டு திரிபவர் இந்தப் பெருந்தகையை நினைந்து உள்ளம் திருந்தி உயர வேண்டும். வெளிப்பகட்டு இளிப்பையே காட்டுகிறது.

நாலஞ்த் தந்தாலும் நாடித் தலைநீட்டிக்
காலனுக் கைத்தாளில் கண்ணுான்றி---மேலாகத்
தன்பெயரை நோக்கித் தவிக்கின்றார் தான்பெயரின்
என்பெயர் காண்பார் இவண்.

இவ்வகையான சிறுமையாளர் எவ்வகையிலும் பெருமைகாணார்.

உரிய தகுதி இல்லாதவர் அரிய புகழை அடைய விழைவது பெரிய மடமையாம். உள்ளத்தில் தகுதியுடையவரைப் புகழ் உரிமையோடு தேடி வருகிறது. அங்ஙனம் இல்லாதவரை அது எள்ளி இகழ்ந்து தள்ளி விட்டு எவ்வழியும் காணாமல் மறைந்து போகிறது. உள்ளம் கனிந்து உண்மையாக உதவுகின்ற உபகாரியே ஊழியும் மறையாத புகழோடு ஒளி வீசி நிற்கின்றான்.

**Renown is the mother of virtues. (Bion)**

கீர்த்தி தரும குணங்களின் தாய் என்னும் இது இங்கே அறியவுரியது. புண்ணிய நீர்மையைப் பேணிக் கண்ணியமா வாழுக.

---

874. தெள்ளமிர்த மானவுயர் தீங்கனியும் தான்உண்ணான்
கொள்ளுமென ஔவைக்குக் கோனதிகன்—உள்ளுவந்து
அன்றளித்தான் புன்கூழும் அந்தோ தமர்க்கேனும்
ஒன்றளியார் புல்லர் உவந்து. (௪)

இ—ள்.

தெளிந்த தெய்வ அமுதம் போன்ற அரிய இனிய கனியையும் தான் உண்ணாமல் அதிகமான் ஔவைக்கு உவந்து கொடுத்தான்; புல்லிய கூழையும் உறவினர்க்கும் கொடாமல் தம் வயிற்றையே நிரப்பிப் புல்லர் புலையாய் உள்ளனர் என்பதாம்.

உபகாரியின் உயர்நிலையும், உதவாதவரது புலையிழிவும் ஒருங்கே உணர வந்தன. அரிய செயல்களாலும் இனிய குண நீர்மைகளாலும் மனிதன் தனிநிலையில் உயர்கின்றான். நல்ல பான்மைகள் படிந்து வர எல்லா மேன்மைகளும் தொடர்ந்து வருகின்றன. தெளிந்த அறிவும் திருந்திய பண்பும் பொருந்திய அளவு அவர் பெருந்தகையாளராய் விளங்குகின்றார். சிறந்த அறிவுக்கு அடையாளம் எவ்வுயிர்க்கும் இரங்கி அருளுவதே. மன்னுயிர்க்கு இதம் கருதி வருபவன் மகானாய்ப் பெருகி வரு

கிருன். சிறுமை பெருமைகள் அவரவருடைய செயல் இயல்களால் வெளியே தெளிவாத் தெரிய நேர்கின்றன.

தான் உண்டு களிப்பதையே எவ்வழியும் கண்டு, தனக்கே சுகங்களையும் உயர்வுகளையும் தேடி, யாண்டும் தன்னலமே நாடி ஓடி யுழல்கின்ற மனித இனத்தில் பிறர் நலத்தை நாடுகின்றவரைக்காணுதல் மிகவும் அரிதாம். அவ்வாறு அரிய நிலையில் தெரிய வருகிற உபகாரிகளையே வள்ளல் என உலக உள்ளங்கள் உவந்து புகழ்ந்து உரிமையோடு போற்றி வருகின்றன.

அதிகமான் என்னும் குறுநில மன்னன் பெரிய உபகாரி. அவனுடைய மலையில் கரிய நெல்லிக்கனி ஒன்று அருமையாப் பழுத்திருந்தது; அது அமிர்தின் தன்மை அமைந்தது; பல ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றுவது; அதனை உண்டவர் உயர் நலம் உடையராய் நீண்ட காலம் உயிர் வாழ்ந்து வருவர். தெய்வ அமுதம் போல் சிறந்திருந்த அத்தீங் கனியை உரிமையோடு இவன் எய்தியிருந்தான். உண்ண வுரிய சமையம்நோக்கிஇருக்குங்கால் அங்கே ஔவையார் வந்தார். அந்த அம்மைக்கு அதனை உவந்து தந்தான். அவள் வியந்து மகிழ்ந்தாள். இவனது உண்மையான வண்மையை அவள் எண்ணி உருகிக் கண்ணீர் மல்கிக் கனிந்து பாடினாள். கவியின் சுவை கனியின் நிலையை விளக்கியது.

பூங்கமல வாவிசூழ் புள்வேளூர்ப் பூதனையும்
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையும்---ஈங்கே
மறப்பித்தாய் வாள்அதிகா! வன்கூற்றின் நாவை
அறுப்பித்தாய் ஆமலகம் தந்து. (ஔவையார்)

அரிய அமுதக் கனியைத் தனக்கு உண்ணத்தந்து உயிருதவி செய்துள்ள அதிகனை ஔவையார் இவ்வாறு புகழ்ந்திருக்கிருர். ஆமலகம் = நெல்லிக்கனி. என் நாவுக்கு இனிய கனி தந்தாய்; எமன் நாவை அறுத்தாய்! என்று அவனுடைய கொடை வீரங்களை ஒருங்கே வியந்து துதித்திருக்கும் இது உவந்து உணர வுரியது. அதிகன் அளித்த அரிய கனியால் பெரிய சீவியத்தை யடைந்து ஔவை நெடிது வாழ்ந்துள்ள நிலை தெரிய வந்தது.

"கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த
உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக்கடல் தானை அதிகன்." (சிறுபாண்)

நல்லூர் நத்தத்தனூர் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிருர். அதிகன் செய்தது அதிசய நிலையது ஆதலால் உலகம் அதனை உவந்து துதி செய்து வருகிறது. அந்தக் கனியை அவன் உண்டிருந்தால் இந்த இனிய புகழ் அவனுக்கு வந்திராது.

உண்ணுகின்ருன் தன்னுடலை ஓம்புகின்ருன்; ஊருண்ணப்
பண்ணுகின்ருன் பாக்கியங்கள் பண்ணியே---எண்ணரிய
புண்ணியங்கள் ஆக்கிப் புகழோங்கி நிற்கின்ருன்
எண்ணி யுணர்க இதை.

இதனைக் கருதி நோக்கி உறுதி நலங்களை ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும். தன் வயிற்றையே நிரப்பி வருபவன் உடலைக் கொழுக்க வளர்த்து முடிவில் சுடலையில் தள்ளி விட்டு ஒரு பலனும் காணுமல் பழிநிலையில் இழிந்து ஒழிந்து போகின்ருன். தனக்குக் கிடைத்ததைப் பிறர்க்கும் உண்ண உதவிக் கண்ணியமா ஊட்டியருள்பவன் புண்ணியவானுய் உயர்ந்து புகழோடு பொலிந்து என்றும் சிரஞ்சீவியாய் நின்று விளங்குகின்ருன்.

உடலைப் பெருக்கி ஊனமாய் ஒழிவது ஈன வீழ்வாம்; உயிரை உயர்த்தி ஒளி செய்து நிற்பது தெளிவான ஞான வாழ்வாம்.

சிறந்த மனிதன் எனப் பிறந்துள்ளவன் இறந்து போகுமுன் எய்த உரியதை விரைந்து அடைந்து கொள்ள வேண்டும். ஈதல் அல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை எனத் தேவர் குறித்திருப்பது கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளத்தக்கது.

ஈகையால் புகழும் இன்பமும் உளவாகின்றன; ஆகவே அது சீவ அமுதம் என நேர்ந்தது. மாட்டின் எருவைக் காட்டில் இட்டால் அது சிறந்த உரமாய் நிறைந்த விளைவுகளை நேரே தருகிறது: நீ ஈட்டிய பொருளை எளியவர்க்கு ஊட்டினுல் அது உயர்ந்த தருமமாய் உனக்கு அரிய பல நலன்களை அருளுகிறது.

உலக வாழ்வின் உண்மை நிலைகளை உணர்ந்தவனே உதவும் தன்மையாளனுய் உயர்ந்து வருகின்ருன். அரிய ஈகை பெரிய மனிதனது நீர்மையாய் மருவியுளது. மனிதனுடைய நல்ல அறிவுக்குப் பயன் பிறிதின் நோயைத் தன் நோய் போல் கருதி நீக்கும் உறுதியுடையதாம். மெய்யான அறிவு மேலான உதவியில் மேவியுள்ளது. உயிர்க்கு உய்தி செய்வதே உண்மை உணர்வாம்,

The truly generous is the truly wise. (John Home)

தெளிந்த விவேகம் என்பது சிறந்த ஈகையே என ஜாண் ஹோம் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிருர். உண்மை அறிவுக்கும் வண்மைக்கும் உள்ள உறவுரிமையை ஈண்டு நுண்மையா உணர்ந்து கொள்கிரும். உதவும் தகவே உணர்வின் மகவாம்.

The wise man does not lay up treasure. The more he gives to othes, the more he has for his own. (Lao-Tsze)

அறிவுடைய மனிதன் பொருள்மேல் கிடந்து பொத்தி வையான்; பிறர்க்கு எவ்வளவுக்கு எவ்வளவு கொடுக்கின்ருனே அவ்வளவுக்கு அவ்வளவு அவன் பாக்கியவான் ஆகிருன் என்னும் இது இங்கே நன்கு நுனித்து நோக்கத் தக்கது.

அமுதினும் இனிய அரிய கனியைத் தான் உண்ணுமல் ஔவைக்குத் தந்தமையால் அதிகமான் புகழ் அதிகமா வையம் எங்கும் பரவியுள்ளது. இம்மண்ணுலகில் பிறர்க்கு உண்ண உதவினவன் விண்ணவர்க்கு விருந்தாய் விரைந்து போகின்ருன். உண்மையை உணர்ந்து உயிர்களுக்கு உதவி உயர்கதி பெறுக.

---

875. ஆடு மயிலுக் கருள்கூர்ந்து பேகன்தான்
மூடி யிருந்ததனை முன்போர்த்து—நாடியதன்
மேன்மூடி மீண்டான்பின் மெய்ப்புகழால் மண்மூடி
வான்மூடி நின்ருன் வளர்ந்து. (ரு)

இ—ள்.

காட்டில் ஆடிய ஒரு மயிலைக் கண்டு கருணை கூர்ந்து தனது அரிய சால்வையைப் பேகன் உரிமையோடு அதன்மேல் போர்த்துப் போயினன்; அதனுல் வையகமும் வானகமும் அவனது கீர்த்தி வளர்ந்து விரிந்து பரந்து ஓங்கி யுள்ளது என்க.

மனிதனுடைய மாண்பு மனத்தின் மாட்சியால் காட்சிக்கு வருகிறது. இனிய நீர்மைகள் உள்ளே சுரந்த பொழுது அரிய சீர்மைகள் வெளியே விரிந்து பரவுகின்றன. உயிர்களுக்கு இரங்கி உதவ நேர்ந்த அளவு அந்த மனிதன் தனி நிலையில் உயர்ந்து அதிசயமான துதி மொழிகளோடு விளங்குகின்ருன்.

ஈகையாளருள் பாரியும் பேகனும் ஓரினமா உலாவி வரு கின்றனர். தம்பால் வந்து இரந்தவருக்கு ஈந்ததோடு நில்லாமல் யாதும் கேளாமல் அயலே ஒதுங்கி நின்ற முல்லைக் கொடிக்கும் மயிலுக்கும் தேரும் போர்வையும் முறையே இவர் விரும்பித் தந் துள்ளனர். கருணைகனிந்துவந்த அந்த ஈகை ஒளிமிகுந்து நின்றது.

குளிர் காலத்தில் கானகத்தே ஒரு கலாப மயிலைப் பேகன் கண்டான்; இவனைக் கண்டதும் அது இயல்பாக் கூவியது. அதன் அழகிய நிறத்தையும் சாயலையும் தோகையையும் கண்டு மகிழ்ந்த இவன் அது குளிரால் தளரலாகாதே என்று இரங்கி ஞன்; உடனே தான் போர்த்திருந்த உயர்ந்த இரத்தின கம் பிளியை விரைந்து எடுத்து அதன் மேல் போர்த்தினன்; விலை உயர்ந்த சால்வையோடு அது ஒய்யாரமாய் நடந்து போவதைப் பார்த்து மகிழ்ந்தான். அதிசயமான இந்தக் கொடை நிலையை அயலே நின்று பார்த்து வந்தவர் ஊராரிடம் பேரார்வத் தோடு உரைத்தார். அது பின்பு உலகம் எங்கும் பரவ நேர்ந்தது. புலவர் பலரும் இவனுடைய வள்ளன்மையை உள்ளம்உவந்து பாடினர்.

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்." (சிறுபாண்)

என இன்னவாறு நூலோரும் மேலோரும் இவன் மயி லுக்கு உதவியருளிய நீர்மையை வியந்து புகழ்ந்திருக்கின்றனர்.

கொடுத்தால் புண்ணியம் வரும் என்று கருதியோ, மறு மையில் தேவ போகங்களை அனுபவிக்கலாம் என்று எண்ணியோ இவன் கொடுக்க வில்லை. ஏழைகளுக்கு இரங்கியே தண்ணளி யோடு எவ்வழியும் செவ்வையாய்க் கொடுத்திருக்கிறான். அந்த வண்மையின் உண்மையை நுண்மையா அறிந்து உயர்ந்தோர் யாவரும் இவனை உவந்து பாராட்டி உரிமை காட்டியுள்ளனர்.

எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றுஎன
மறுமை நோக்கின்றோ? அன்றே; பிறர்
வறுமை நோக்கின்று அவன் கைவண்மையே. [புறம், 141

பேகன் செய்து வந்த ஈகையின் இயல்பைப் பரணர் இங் ஙனம் நயமாக் குறித்திருக்கிறார். தனக்கு ஒரு மறுமை இன்

பத்தை நோக்காமல் பிறருடைய வறுமைத் துன்பத்தை நீக்கவே கொடுத்திருக்கிறான் என்ற இதனால் இவனது உள்ளப் பண்பும் உயிர்கள் மாட்டு அன்பும் உபகார நிலைமையும் தெளிவா உணர வந்தன. அதிசய ஈகை உலகம் துதிசெய்ய ஓங்கியது.

வறுமையால் வாடித் தன்பால் வந்தவர்க்கு வழங்கியதை விடக் காட்டு மயிலுக்கு இவன் நீட்டி உதவியது நெடிய வியப்பை விளைத்து நின்றது. அதனால் கொடைமட முடையான் என ஒரு விருதுப் பெயரும் இடையே இவனை அடைய நேர்ந்தது. தரம்பாராமல் தந்து வந்தமையால் வரம்பறு வள்ளலாய் இவன் உரம் பெற்று நின்றான். பறவை இடமும் பரிவு ஓடியது.

கான மயிலுக்குக் காணரிய சால்வையை
வானம் மகிழ வழங்கினான்---தானம்
தருவார் தரம்பார்ப்பர் தண்ணளியாளர்
தருவார் எவர்க்கும் தணிந்து.

பேகன் இங்ஙனம் தந்து வந்தமையால் ஈகையாளருள் இசை மிகப்பெற்றான். ஈதலால் புகழ் வருகிறது; புண்ணியம் விளைகிறது. அரிய புகழ்களையும் பெரிய புண்ணியங்களையும் கொடையாளன் எளிதே அடைந்து கொள்கிறான். தன் உடல் மேல் முடியிருந்த சால்வையை மயில் மேல் மூடி மீண்டான்; மீளவே புகழ் நீளமாய் நீண்டு வானையும் மண்ணையும் மூடி நின்றது. அந்தநிலை இவன் அடைந்துள்ள கீர்த்தியின் எல்லை தெரிய வந்தது. கொடையால் விளையும் புகழ் உலகில் ஒளி வீசுகிறது.

பிற உயிர்கள் உவகையுற உதவி புரிகிறவன் தன்னுயிர் இன்புற உயர்ந்து வருகிறான். அங்ஙனம் உதவாதவன் இழிந்து போகிறான். உண்மையான உயர்வு இழிவுகளை ஓர்ந்து உணராமையால் நல்ல மனிதன் பொல்லாத உலோபியாய்த் தாழ்ந்து நிற்கிறான். அரியபுகழை இழந்தவன் பெரியபழியை அடைகிறான்.

To get by giving, and to lose by keeping,
Is to be sad in mirth, and glad in weeping. [Christopher]

கொடுப்பதால் உயர்வு பெறுகிறான்; கொடாமையால் அதனை இழந்து விடுகிறான்; இன்பம் பெறுவதில் வருத்தமும், துன்பம் அடைவதில் மகிழ்ச்சியும் மருவியிருப்பது வியப்பாம் என இது உணர்த்தியுள்ளது. அறிவு தெளியாமையால் வாழ்வு இழிகிறது

பொருள் குறைந்து போகுமே என்ற அச்சத்தாலும் கொடுத்துப் பழகாமையாலும் பலர் ஒன்றுக்கும் உதவாதவராய்ப் பொன்றி முடிகின்றார். உதவி நலனை ஓர்ந்து உணர்ந்தவர் யாவருக்கும் யாண்டும் இதமாய் ஈந்து இன்பம் பெறுகின்றார்.

உயிர்களின் துயர்களைத் தீர்ப்பதால் உபகாரியிடம் அதிசய மகிமைகள் தாமாகவே வந்து சேருகின்றன. அழிந்து படுகிற சில பொருள்களை நாட்டில் எளியவர்களுக்குக் கொடுத்தான்; கிழிந்து போகிற ஒரு போர்வையைக் காட்டில் ஒரு மயிலுக்குப் போர்த்தினான். அதனால் பேகன் உயர்ந்த கீர்த்திமானாய் ஒளி பெற்று யாரும் யாண்டும் நினைந்து மகிழ நின்றுள்ளான்.

இயன்றவரை எவர்க்கும் உதவி செய்; அது உன் உயிர்க்கு உயர்ந்த இன்பமாம். உண்மை தெளிந்து நன்மை பெறுக.

---

876. இலையென்று சொல்ல இசையான் குமணன்
தலையிந்தா என்றருளித் தந்தான்—மலையென்று
சொல்லும் படிசெல்வம் துன்னி இருந்தாலும்
இல்லையென்பர் புல்லர் இசைந்து. (சு)

இ—ள்.

யாதொரு பொருளும் இல்லாமல் வறுமையாயிருந்த போதும் தன்பால் வந்த புலவருக்கு இல்லை என்று சொல்லாமல் தன் தலையையே குமணன் உவந்து தந்தான்; மலை அளவு பொருள் கையில் இருந்தாலும் புல்லர் ஈயாமல் இல்லை என்று சொல்லுவர்.

பெரியரும் சிறியரும் இங்கு அறிய வந்தனர்.

யாருக்கும் யாதும் இல்லை என்று சொல்லும்படியான கொடிய சோதனை நெடிது கூடியிருந்தும் சிறிதும் உள்ளம் தளராமல் தன் இயல்பான வள்ளன்மையைக் குமணன் பேணி நின்றது அவனது குணநீர்மையை மிகவும் மணமாச்சுவை செய்துள்ளது. கொடிய அமணன் செய்த சதியால் அரச செல்வம் முழுவதும் இழந்து தனியே போய்க் காட்டில் இருந்தான். யாவர்க்கும் கொடுத்து வந்த கொடை வள்ளல் இடையே இடையூறாய் இவ்வாறு அடவி புகுந்து இருக்குங்கால் பெருந்தலைச்சாத்தனார் என்னும் பெரும் புலவர் இவனை வந்து கண்டார். கவிரா

சரைக் கண்டதும் உவகை மீதூர்ந்து உரிமையோடு உபசரித்தான். அவரது அறிவுரைகளைக் கேட்டுப் பெருமகிழ்வடைந்தான். அவருக்கு உதவி செய்ய உள்ளம் கருதியது; கையில் ஒன்றும் இல்லை; மறுகிநின்றான்; பின்பு ஒன்றை நினைந்து உறுதி கொண்டான். தன் தலையைக் கொண்டு வந்து தருவார்க்குக் கோடி பொன் கொடுப்பதாக அமணன் முன்னம் அறிவித்திருந்தது நினைவுக்கு வந்தது; கெடிது மகிழ்ந்தான்; உடனே ஒரு வாளை எடுத்துப் புலவர் கையில் கொடுத்துத் தன் தலையைக் கொய்து கொண்டு போம்படி தாழ்ந்து வேண்டினான். ஐயகோ! என்று அவர் அலறி அழுதார்; அந்த வாளோடு அமணனிடம் வந்து நிலைமையை உரைத்தார்; பொல்லாத அவனும் உள்ளம் உருகி இவ்வள்ளலிடம் வந்து அடி விழுந்து தொழுது முடிபுனைந்து அருளும்படி அழைத்துப் போனான். இந்த நிகழ்ச்சிகளைப் புலவர் நலமாக் குறித்திருக்கிறார். சில அயலே வருகின்றன.

"தாள் தாழ் படுமணி இரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்
கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனெனாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடு இழந்ததனினும் நனியின்னாதுஎன
வாள் தந்தனனே தலைஎனக்கு ஈய."

(பெருந்தலைச் சாத்தனார்)

தனது தலையைக் கொய்துகொண்டுபோகும்படி குமணன் வாள் தந்த நிலையைப் புலவர் இவ்வாறு மனம் உருகிப் பாடியுள்ளார். இருமருங்கும் மணிகள் ஒலிக்கின்ற பெரிய மதயானைகளைப் பாவலர்க்கு ஆவலோடு கொடுப்பவன்; என்றும் அழியாத நல்ல சீர்த்தி தோய்ந்தவன்; கதிவேகங்களில் சிறந்த வலிய பல குதிரைகள் வாய்ந்தவன்; தேசத்தை ஆளும் உயர்ந்த தலைமையுடையவன்; எனக்குக் கொடுத்தற்குப் பொருள் இல்லையே என்று வருந்தித் தன் தலையைக் கொடுக்க நேர்ந்தானே! என்று கவிஞர் கருதி உருகியிருத்தலை உரைகள் தோறும் உணர்ந்து கொள்கிறோம். அரிய நீர்மைகள் பெரிய சீர்மைகளாய் நின்றன.

இந்தா என்றது இதோ இதைக் கொண்டு போம் என உள்ளம் உவந்து தனது தலையைச் சாய்த்து இவ்வள்ளல் நீட்டிய

நிலை தெரிய வந்தது. உள்ளம் உயர்ந்த நல்ல கொடையாளிகள் பொருள் இல்லாமல் அல்லல் அடைந்த போதும் யாவருக்கும் இல்லை என்று சொல்லமாட்டார்; உயிரையும் விரைந்து கொடுப்பர் என்பதை இந்த உபகாரி செயலால் உலகம் அன்று வியந்து கண்டது. கொடையும் குணமும் உயர்நிலையில் ஒளிவீசியுள்ளன.

வறிய நிலையிலும் வள்ளல்கள் அரியன செய்வர்; செல்வம் பெருகியிருந்தாலும் உலோபிகள் யாதும் ஈயார். நன்மையாதும் உணராத புன்மையாளர் ஆதலால் அவர் புல்லர் என நேர்ந்தார்.

வறுமையால் வாடிவந்தவருக்கு இயன்ற அளவு உரிமையோடு உதவாமல் உள்ளம் கொடுமையாய் இல்லை என்று சொல்லுவது பொல்லாத புலைநிலை ஆதலால் அதனை நல்லோர் சொல்லார்; ஏதேனும் நல்கியே யருளுவர். அறிவு நலனும் கருணைப் பண்பும் மறுமை நோக்கமும் இல்லாமையால் பொல்லாத உலோபிகளாகின்றார். இரக்கமும் ஈகையும் இல்லாத அளவு அந்த மக்கள் இழிந்து போகின்றார். அவரது செயலும் இயலும் அயலார் இகழ மயலோடு விபரீதங்களாய் விரிந்து நிற்கின்றன.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு. (குறள், 1077)

கயவர் நிலையைத் தேவர் இவ்வாறு நயமா விளக்கியிருக்கிறார். கன்னத்தில்ஓங்கி அடித்துப் பல்லை உடைத்தவர்க்கே புல்லர் ஒல்லையில் எல்லாம் கொடுப்பர்; நல்லவர்க்கு யாதும் கொடார் என்றதனால் அவரது மடமையும் கொடுமையும் மையல்மயக்கமும் அறிய வந்தன. அவலமான பொருளாசை அவரை மருளராக்கி மயக்கியுள்ளது. மாய மயக்கால் மருண்டு இழிந்து போகின்றார்.

பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்---மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணம் கொடுத்தாலும் தாம். (நல்வழி, 18)

நயந்து வந்து அடைக்கலம் புகுந்து உற்றார் உறவினர் கெஞ்சிக் கேட்டாலும் உலோபிகள் கொஞ்சமும் கொடார்; கடுமையாய் வந்து அடித்து உதைக்கும் கொள்ளைக் கூட்டத்திற்கே எல்லாம் அள்ளிக் கொடுப்பர் என ஔவையார் இவ்வாறு அவரது இழிபுலைகளை விழிதெரிய விளக்கிக் குறித்திருக்கிறார்.

உள்ளம் இரங்கி உதவுகின்றவர் வள்ளலாய் உயர்கின்றார்; அங்ஙனம் உதவாதவர் எள்ளலாய் இழிகின்றார். இழிவு தெரியாதவர்விழிகண்குருடர் ஆகின்றார். நல்வழியில்பழகிநலம்பலபெறுக.

---

877. ஊற்றுநீர் போல உபகாரி நற்செல்வம்
ஆற்றுமுயிர்க் காரமிர்தம் ஆகுமே—தோற்றிநின்று
கட்டுக் கடையாய்க் கழிநீர் எனஎவர்க்கும்
ஒட்டா உலோபி பொருள். (எ)

இ—ள்.

உபகாரி செல்வம் இனிய ஊற்று நீர்போல் உயிர்களுக்கு அமுதமாம்; ஈயாத உலோபி பொருள் கட்டுக் கடையான குட்டத்து நீராய் இழிந்து கழிந்து ஈனமாக் கிடக்கும் என்க.

உணவும் நீரும் மனித வாழ்வின் உயிராதாரங்கள். இனிய அமுதமான இதனை வானம் வழங்கியருளுகிறது. வையகம் பல வகை நிலைகளில் உரிமையோடு இனிது பேணி வருகிறது. நதி குளம் ஏரி கூவம் முதலியன நீர் நிலைகளா நிலவியுள்ளன.

உயிரினங்களுக்கு உண்ணீர் உதவி வருதலால் தண்ணீர்த் தடங்கள் புண்ணிய நிலையங்களா எண்ண வந்தன. தண்ணளியோடு உதவி புரிகிற உபகாரிகளும் நீர்மையாளராய்ச் சீர்மை சிறந்து நின்றுள்ளார். இனிய இதம் தனிமகிமைகளைத் தருகிறது.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள், 215)

பெரிய அறிவுடைய நல்ல உபகாரியிடம் சேர்ந்துள்ள செல்வம் ஊருணி நீர் நிறைந்தது போல் எல்லார்க்கும் இனிது பயன் படும் எனத் தேவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். நீர் திருவுக்கும், ஊருணி பேரறி வாளனுக்கும் ஒப்பாய் வந்துள்ளன. உவமான நிலைகளின் நுட்பங்களையும் நயங்களையும் உய்த்துணர்ந்து கொள்ள வேண்டும். கருதிய அளவு கருத்துகள் தெரிகின்றன.

மனிதனுடைய உயர்ந்த அறிவுக்குத் தகுந்த பயன் உயிர்களுக்கு இரங்கி உபகாரம் செய்வதே; அதுவே அவன் பிறந்த பிறவியைச் சிறந்த தாக்கித் துயர்களை நீக்கி அவனுக்கு உயர் கதியை அருளுகிறது. பிற உயிர்கட்குச் சிறிது உதவுவது தன்

உயிர்க்குப் பெரிய உறுதியாம் என உணர்ந்து கொள்வது உயர்ந்த ஞானம் ஆதலால் அந்த உபகாரியைப் பேரறிவாளன் என்ருர். செய்யும் உதவியால் தெய்வத் தேசு சிறந்து வருகிறது.

நல்ல உபகாரியை உலகம் உவந்து போற்றும்; அவனுடைய சுக சேமங்களை யாவரும் ஆவலோடு கருதி வருவர்; எவ்வழியும் அவன் திவ்விய நிலையினன் என்பது இங்கே தெரிய வந்தது.

ஊருணி நிறையவும் உதவு மாடுயர்
பார்கெழு பழுமரம் பழுத்தற் ருகவும்
கார்மழை பொழியவும் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின் றூர்கள்யார்?
(இராமா, மந்திர, 82)

இராமன் அரச திருவை அடைய நேர்ந்த போது நாடும் நகரமும் கூடி மகிழ்ந்து குலாவி நின்ற படியை இது கூறியுள்ளது. ஊருணிநீர், கனிமரம், நதியின் புனல், கார்மழை இங்கே காண வந்துள்ளன. காட்சியின் மாட்சிகள் கருதி யுணரவுரியன. குண நீர்மைகள் யாவும் நிறைந்த அந்தக் கோமகனுடைய உபகார நிலைகளை யாவரும் நினைந்து மகிழ்ந்துள்ளமையை இதனால் நாம் உணர்ந்து உவந்து உள்ளம் வியந்து கொள்ளுகிறோம்.

இனிய உபகாரி மனிதருள் புனித தெய்வமாய்ப் பொலிந்து விளங்குகிறான். உள்ளம் கனிந்த கொடை உயர்ந்த தலைமையை வரைந்து காட்டி யாண்டும் விரிந்த புகழை விளைத்தருளுகிறது.

தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம் கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால்---பெண்ணீர்மை
கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி. (நல்வழி, 16)

தண்ணீர்க்கு இனிமையும், கண்ணுக்குக் கருணையும், பெண்ணுக்குக் கற்பும், மனிதனுக்குக் கொடையும் மகிமைகளை அருளுகின்றன என ஔவையார் இவ்வாறு கூறியுள்ளார். கற்பு நிலை குன்றினால் பெண்மை அற்பமாம்; ஈகை இல்லையேல் ஆண்மை அவலமாம். பெரிய மனிதனது அரிய தகைமை அறிய வந்தது.

வண்மையால் மனிதன் உண்மையான உயர் நிலையை அடைந்து கொள்ளுகிறான். கொடையில் பழகி வந்த குடியில்

பிறந்தவர் எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் இல்லை என்று சொல்லாமல் எவ்வழியும் ஈதலை உவந்து பேணி வருகின்றார்.

எற்றொன்றும் இல்லா இடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத்—தூற்றுவர்
அற்றக் கடைத்தும் அகல்யா றகழ்ந்தக்கால்
தெற்றெனத் தெண்ணீர் படும். (நாலடியார், 150)

நல்ல குடியில் பிறந்தவர் வறுமையுறினும் பிறர்க்கு ஆதரவாய் உதவி புரிவர்; நதியில் நீர்ப்பெருக்கு வற்றிப் போயினும் ஊற்று நீர் சுரந்து உண்ண உதவும் என இது குறித்துள்ளது. வெள்ளம் பெருகி வருங்கால் தண்ணீராத் தருகிறது; அது அருகிய பொழுது தெண்ணீரா உதவுகிறது. உள்ளிருந்து ஊறலாய்த் தெளிந்து வருவது தேண்ணீர் எனச் சிறந்து வந்தது.

ஆற்றுப் பெருக்கு அற்ற பொழுதும் ஊற்றுப் பெருக்கால் உலகையூட்டி உதவுகின்ற நதியை உவமை கூறியதனால் நல்ல குடிப்பிறந்தார் எவ்வழியும் யார்க்கும் இனிது உதவி வரும் இயல்பு தெரியவந்தது. உள்ளம் கனிந்து உதவும் நீர்மை வள்ளல் மரபின் வழிமுறையாய்த் தொடர்ந்து ஒளி விரிந்துள்ளது.

"மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவீன்று
பன்னீரால் பாய்புனல் பரந்தூட்டி இறந்தபின்
சின்னீரால் அறல்வார வகல்யாறு கவின்பெற
முன்ஒன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்ஒன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்." (கலி, 34)

எவ்வழியும் இனிது உதவும் உபகாரிகள் போல் ஆறு யாண்டும் உலகிற்கு நீர் அருளும் என இது உணர்த்தியுள்ளது. உரை நயங்களை ஊன்றி நோக்கிப் பொருள் நிலைகளை உணர்ந்துகொள்க.

உள்ளம் இரங்கி உதவுகின்றவர் உலகம் புகழ ஒளி பெற்று நிற்கின்றார். இவ்வாறு உதவி புரியாதவர் ஒன்றுக்கும் உதவாதவராய் எவ்வழியும் எள்ளலாய் இழிந்து கழிந்து ஒழிந்து போகின்றார். நல்ல தன்மை இழந்தவுடன் பொல்லாத புன்மைபுகும்.

உபகாரி செல்வம் ஊற்று நீர் போல் உயர் மகிமையுறுகிறது.
உலோபி பொருள் சாக்கடைச் சலமாய் இழிந்து கழிகிறது.

கட்டுக்கடை கழிநீர் என்றது யாரும் அதன் கிட்ட நெருங்

காமல் எட்ட விலகிப்போகும் இயல்பு தெரிய வந்தது. பொருள் மேல் மண்டியுள்ள மருளான பேராசையே மனிதனை அவ்வாறு படுபிசுனன் ஆக்கிப் பாழாக்கி விடுகிறது. உலோபியை எவரும் விரும்பார்; அவனுடைய மனைவியும் மக்களும் ஒக்கலும் உறவும் பக்கமுள்ள யாரும் அவனை இகழ்ந்து வெறுப்பர்.

**The avaricious man is good to no one, but he is worst of all to himself. (Syrus)**

உலோபி ஒருவருக்கும் நல்லவன் ஆகான்; எல்லா வகையி லும் தனக்கே மிகவும் அவன் கெட்டவனுயுள்ளான் என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈண்டு எண்ணி உணரவுரியது.

உள்ளத்தில் உலோபம் படிந்த பொழுது அந்த மனிதன் யாண்டும் எள்ளலாய் இழிந்து படுகிருன். நல்ல செல்வமும் அவனுல் பொல்லாததாய்ப் புலைப் படுகிறது. பொருள் கிடைப் பது அரிது; அருமையான அது கிடைத்தால் உரிமையான உப காரங்களை உவந்து செய்க; அதனுல் உயர்ந்த மேன்மைகளும் சிறந்த நன்மைகளும் சீரிய புகழ்களும் உனக்கு உளவாம்.

---

878. பாரிவள்ளல் பண்டிறந்தும் பாரிலுள்ளார் இன்றுமவன்
சீரியல்பை வாய்குளிரச் செப்புகின்ருர்—மாரிஎன
நின்றுதவு வாரேமேல் நீண்ட புகழ்எய்தி
என்றுமுள ராவர் இனிது. (அ)

இ—ள்.

பாரி வள்ளல் பண்டு இறந்து போனுன்; பாரில் உள்ளவர் இன்றும் அவன் பேரையும் ஊரையும் சீரையும் உள்ளம் உவந்து பேசிப் புகழ்ந்து வருகின்றனர்; மாரி என உதவி புரிகின்றவர் நீண்டபுகழ் எய்தி என்றும் நிலைத்து எங்கும் விளங்குவர் என்க.

பிறந்து வருதலும் இறந்து மறைதலும் சீவர்களுடைய தொழில்களாய்த் தொடர்ந்து நடந்து வருகின்றன. தோன்றி மறைவன யாண்டும் பெரிய மாயக்காட்சிகளா மருவி எவ்வழி யும் நீண்டு நிலையாமை நிலைமையை நேரே துலக்கி நிலவுகின்றன.

எவ்வளவு உயர்ந்த அரசராய்ச் சிறந்து வாழ்ந்திருந்தாலும் இறந்து போனபின் அவரை உலகம் உடனே மறந்து விடுகிறது.

அந்த மறப்பு இயற்கையாய் நிகழ்ந்து வருகிறது. உலகத்தார் உள்ளங்களில் என்றும் நிலையாய் நிலைத்து வருநிலை அரிய பெரிய செயல்களால் மருவுகின்றது. அருமையான மகிமையாளரை நினைந்து மகிழ்ந்து உலகம் உரிமையோடு புகழ்ந்து வருகிறது.

வள்ளல்கள் உயிர்கள் இன்புற உதவி வருதலால் உலக உள்ளங்கள் அவரை யாண்டும் மறவாமல் கருதி மகிழ்கின்றன.

பாரி இறந்து போய்ப் பதினெட்டு நூற்றாண்டுகள் ஆகின்றன. இன்றும் இவனை எல்லாரும் எண்ணி ஏத்துகின்றனர். இவ்வாறு கருதி வருதற்குக் காரணம் என்ன? இவனது இனிய உபகார நீர்மையே. இவன் ஒரு சிறிய அரசன். முந்நூறு ஊர்களுக்குத் தலைவன்; பாண்டி மண்டலத்தில் பிரான் மலை என்னும் ஊரிலிருந்து சீரோடு ஆண்டு வந்தான். வண்மையோடு நல்ல திண்மையும் உடையவன். யார் வந்தாலும் உள்ளம் உவந்து உதவி வந்தான் ஆதலால் இவனுடைய புகழ் எங்கும் பரவி நின்றது. பேரரசரினும் இவன் பேர் யாண்டும் பெருமகிமையாய் நீண்டு நிலவியது, நிலவவே சேரன் சோழன் பாண்டியன் என்னும் மூவேந்தரும் இவன் மேல் பொறாமை கொண்டார்; முடிவில் போராட மூண்டு படைகளோடு வந்து ஊரை வளைந்து தேரோடு செருக்கி அமருக்கு வரும்படி அடங்கொண்டு நின்றார்.

இவனும் அவரோடு போராட நேர்ந்து பொங்கி எழுந்தான். அது பொழுது ஆதினப் புலவராய் அங்கேயிருந்த கபிலர் இவனைத் தடுத்து நிறுத்தி ஊரை முற்றுகை செய்துள்ள மூவரசரையும் நேரே போய்ப் பார்த்தார். நிலைமைகளை உரைத்தார்: "பெரிய அரசராகிய நீவிர் நெடிய சேனைகளோடு ஈண்டு மூண்டு போராடவந்திருக்கிறீர்கள். பாரி நிலை இது பொழுது பரிதாபமாயுளது; உரிய பொருள்கள் யாவும் இரவலர்க்குக் கொடுத்து விட்டு வறிய நிலையில் இருக்கிறார்; ஆயினும் அவரை நீங்கள் பொருது வெல்ல முடியாது. நீவிரும் இரவலராய் மாறிப் பரிசில் பெற நேரின் எதையும் பெற்றுக் கொள்ளலாம். அவரை ஒல்லையில் வெல்ல வேண்டுமானால் இந்த வழியே நீங்கள் செல்லவேண்டும்" எனக் கவிஞர் நயமாச் சொல்லியருளினார். பகையாய்ப் போராட வந்துள்ள அந்த வேந்தரை நோக்கி அன்று அவர் கூறிய பாட்டு கூரிய சீரிய பண்பாடுகளுடையது. அயலே வருகின்றது.

"கடந்தடு தானை மூவிரும் கூடி
உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே;
முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு;
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்;
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே." [புறம், 110]

பாரியினுடைய சீரிய பண்பாடுகளையும் கொடை வீரங்களையும் நிலைமை தலைமைகளையும் இதனால் நேரே அறிந்து கொள்ளுகிறோம். தண்ணளியோடு திண்ணியனாயிருந்த இந்த வண்மையாளனை வையம் முழுவதும் வாழ்த்தி நின்றது. புலவர் யாவரும் இக் குலமகனை யாண்டும் தலைமையாகப் போற்றியுள்ளனர்.

ஆளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்துகோட் டியானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி. [அகம், 78]

கல்வி வீரரான நக்கீரனார் பாரியின் வீரத்தையும் கொடையையும் நடையையும் இவ்வாறு வியந்து பாராட்டியிருக்கிறார்.

பேரிசை உருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப்பினளே. [நற்றிணை, 253]

இங்ஙனம் பாரியைக் கபிலர் எங்கணும் கருதி மகிழ்கிறார்.

முரசுகடிப்பு இகுப்பவும் வால்வளை துவைப்பவும்
அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்
கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரி. (பெருஞ்சித்திரனார்)

சங்கப் புலவர்கள் பலரும் இன்னவாறு இந்த உபகாரியின் நீர்மை சீர்மைகளை விழைந்து புகழ்ந்துள்ளார். அரிய தீரமும் பெரிய ஈகையும் பெருகியிருந்தமையால் இவனது கீர்த்தியை நேர்த்தியாப் பாட வார்த்தைகள் ஆர்த்தியோடு வளர்ந்து வந்தன. உபகார நிலை மனிதனை உன்னத நிலையில் உயர்த்தியருளுகிறது.

**He is truly great who hath a great charity. (Kempis)**

அரிய வண்மையாளனே உண்மையான பெரிய மனிதன் என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது. உபகாரம் எவ்வு

யிர்க்கும் இன்பம் தருதலால் அதனைச் செய்பவன் எவ்வழியும் திவ்வியமகிமைகளை அடைந்து கொள்கிறான். என்றும் அழியாத புகழ் ஈகையில் உள்ளது; அதனைப் பேணிப் பெருமை பெறுக.

---

879. வள்ளல் உயர்வீரர் மாய்ந்தாலும் மாநிலத்தோர்
உள்ளமெலாம் என்றும் உளராவர்—எள்ளலுறு
பற்றுள்ளம் கொண்ட படுபிசுனர் பேடியரீண்டு
உற்றிருந்தும் செத்தார் உணர். (௯)

இ—ள்.

கொடையாளிகள் வீரர்கள் இறந்து மறைந்தாலும் உலகத்தாருடைய உள்ளங்களில் எல்லாம் என்றும் நிரந்தரமாய் நிலைத்து நிலவுகின்றார்; உலோபிகள் பேடிகள் உயிரோடு இருந்தாலும் செத்தவராய் இழிந்து சீரழிந்து கழிகின்றார் என்க.

இந்த உலகில் உயிரினங்கள் பிறந்து வருதலும் இறந்து போதலும் நிரந்தரமாய் நிகழ்ந்து வருகின்றன. எல்லையில்லாத படி எண் இறந்த சீவகோடிகள் யாண்டும் தோன்றி மறைதலால் இவ்வுலக வாழ்வு மாயத் தோற்றம் என நேர்ந்தது.

வானவில், மேகமின், நீர்மேல் குமிழி என மனித வாழ்வின் நிலைகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள இவ்வாறு உவமானங்கள் வந்துள்ளன. விரைந்து அழிந்து போகும் நிலையில் பிறந்துள்ள மனிதன் என்றும் அழியாத புகழை அடைந்து கொள்ளின் அவன் விழுமிய பாக்கியவானாய் விளங்கி நிற்கின்றான். அரிய புகழை அடைவதில் கொடையும் வீரமும் உரியவுறவுகளாய்மருவியுள்ளன. இசையின் ஒளிகள் இவற்றுள் வீசுகின்றன.

உண்மையான வண்மையும் வீரமும் ஒருங்கே அமைந்திருந்தமையினாலே தான் கன்னன் உன்னதமான கீர்த்தியில் ஒளி பெற்று மிளிர்கின்றான். இவனுடைய ஈகையும் தீரமும் விவேகமும் வீரப்போரும் யாரும் வியந்து போற்றும் அதிசய நிலையின. கோடைக்குக் கன்னன் என்னும் முதுமொழி இவன் கொடுத்து வந்துள்ள அருமை பெருமைகளைக் குறித்து வந்துள்ளது.

கன்னனுக்குப்பின் கொடையும் இல்லை;
கார்த்திகைக்குப்பின் மழையும் இல்லை.

என்னும் பழமொழி இவனது கொடையின் உயர் நிலையை நயமாக விளக்கியுள்ளது. வையத்துக்கு மாரி போல் இவன் வாரி வழங்கி வந்துள்ளமை உணர்ந்து கொள்ள வந்தது. துரி யோதனன் முதலிய கெட்ட தொடர்புகள் ஒட்டியிருந்தும் இவன் உத்தம நீர்மையில் உயர்ந்து உய்தி பெற்றுள்ளமை உய்த்துணரத் தக்கது. அருந்திறலும் பெருந்தகைமையும் பொருந்தியுள்ளன.

பாரதப் போரில் பதினேழாம் நாள் விசயனோடு இவன் கடும்போர் புரிந்தான்; முடிவில் அவ்வீரன் சீறித் தொடுத்த கூரிய பாணங்களால் உடல் முழுதும் புழைகளாய் உதிரங்கள் ஒழுக இவன் உயங்கி வீழ்ந்தான். அவ்வாறு மயங்கி விழும் பொழுதும் எதிரியைக் குறிதவருமல் எய்து கொண்டே சாய்ந் தான். அந்த வித்தக வீரம் எங்கும் வியப்புகளை விளைத்தது.

எத்தலங் களினும் ஈகையால் ஓகை
வாகையால் எதிரிலா வீரன்
மெய்த்தலம் முழுதும் திறந்துகு குருதி
வெயிலவன் கரங்கள்போல் விரிய
கொத்தலர் அலங்கல் மகுடமும் கவச
குண்டலங்களும் உருக் குலைந்தும்
கைத்தலம் மறந்த தில்லைவிற் குனிப்பும்
கடுங்கணை தொடுத்திடும் கணக்கும். (பாரதம்)

கன்னனுடைய வில்லாடலையும் வீரத்திறலையும் இங்கே வியந்து நோக்கி உள்ளம் இரங்கி நாம் உருகி நிற்கிறோம். இவ் வீரன் உடல் சோர்ந்து கீழே சாய்ந்ததைக் கண்டதும் நேரே போராடி நின்ற கண்ணனும் விசயனும் கண்ணீர் விட நேர்ந்த னர். அவ் வீரனைத் தனியே தேரில் நிறுத்தி விட்டுக் கண்ணன் விரைந்து கன்னனிடம் வந்தான்; அருகே அணுகி நின்று "வீர வள்ளலே!" என்று விளித்தான். வில்லோடு தேரில் சாய்ந்து கிடந் தவன் விழித்துப் பார்த்தான். பார்க்கவே கண்ணன் விசித்திரமா வார்த்தைகள் ஆடினன். அந்த உரையாடல்களை அயலே காண்க.

கண்ணன்: இங்கே சமூகத்தைத் தேடியே வந்தேன்.

கன்னன்: தாங்கள் யார்? எந்த ஊர்?

கண்ணன்: நான் இமயமலையில் தவம் புரிந்து இருந்தேன்;

தவம் முடிந்தது: கொடிய வறுமைத்துயரால் நெடிது வாடுகின்றேன்; அதனுல் ஈண்டு வந்தேன். வேண்டியதை வேண்டியபடியே யாருக்கும் அள்ளித்தரும் வள்ளல் என்று கேள்விப்பட்டேன் ஆதலால் நேரே இங்கு ஆவலோடு வர நேர்ந்தேன்.

கன்னன்: நீங்கள் வந்தது மிகுந்த மகிழ்ச்சி. எதிரியினுடைய பாணங்களால் அடிபட்டுப் போர்க்களத்தில் இச்சமையம் நான் சாக நேர்ந்துள்ளேன். நாள் தோறும் பொருளை எல்லாருக்கும் நான் அள்ளிக் கொடுக்கும் பொழுது நீங்கள் வரவில்லையே! என்று வருந்துகிறேன். சென்றதை நினைந்து இரங்கி என்ன பயன்? இப்பொழுது உங்களுக்கு என்ன வேண்டும்? வேண்டியதை விரைந்து சொல்லுங்கள்.

கண்ணன்: இதுவரை நீங்கள் பண்ணியுள்ள புண்ணியம் முழுவதையும் எனக்குக் கொடுங்கள்; அதனையே நான் எண்ணி வந்தேன். அதுவே எனக்குப் போதும்.

கன்னன்: என்னிடம் புண்ணியம் இருப்பதாகத் தாங்கள் எண்ணிக் கேட்டதே எனக்குப் பேரின்பம் தந்தது; என்னுடைய புண்ணியம் யாவும் உங்களுக்கு உள்ளன்போடு உரிமை கூர்ந்து உறுதியாத் தந்தேன்.

கண்ணன்: இது அரிய பெரிய கொடை; ஆதலால் தண்ணீர் கொண்டு என் கையில் தாரை வார்த்துத் தர வேண்டும். அவ்வாறு தருவதே செவ்வையாத் தந்ததாம்.

கன்னன்: அருகே தண்ணீரைக்காணேம்; என் மார்பில் புண்ணீர் உள்ளது. எதிரியின் பாணத்தால் பாய்ந்து வருகிற இந்த உதிரநீரால் தாரைவார்த்துத்தரலாமா!

கண்ணன்: குருதிப் புனல் மிகவும் உறுதியானது; தரலாம்.

கன்னன்: இதோ என் மார்பிலிருந்து பெருகிவருகிற செந்நீர் மேல் ஆணையா எனது புண்ணியம் எல்லாம் கண்ணியமான உங்களுக்கு உவந்து தந்தேன்.

கண்ணன்: அதிசய வள்ளலே! உங்களுடைய கொடையும் குணமும் எனக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்துள;

மேருமலையிலிருந்து நான் அருந்தவம் செய்தவன்; ஈசன் அருளை நேரே பெற்றவன்; உங்களுக்கு ஏதாவது சிறந்த ஒரு வரம் கொடுக்கவேண்டும் என்று விரும்புகின்றேன்; எதை வேண்டுமானாலும் கேளுங்கள்; இப்பொழுதே அதைத் தருகின்றேன்.

கன்னன்: நான் கொடுத்துப் பழகினவன்; வாங்கும் வழக்கம் எனக்கு இல்லை. யாதொன்றும் வேண்டாம்.

கண்ணன்: எப்படியாவது என்னிடமிருந்து ஏதாவது ஒன்றைப் பெற்றுக் கொள்ளவேண்டும். எதையும் கேட்கலாம். தயவுசெய்து கேளுங்கள்.

கன்னன்: நான் மீண்டும் ஈண்டு இந்த மனித உலகத்தில் பிறந்தால் யாருக்கும் இல்லை என்னாமல் எதையும் கொக்க வல்ல நல்ல உள்ளத்தை எனக்கு ஈந்தருளுக; ஈகையே எவ்வழியும் ஓகை தந்து வந்துள்ளது; புனிதமான அந்த இனிய இதயமே போதுமானது.

கண்ணன்: ஆ! உத்தம வள்ளலே! உயர்ந்த கொடைக்குரிசிலே! உனது ஈகை நிலை அதிசயமுடையது; நீ வேண்டியபடியே வளளல் நீர்மை தோய்ந்த அந்த உள்ளம் உனக்கு உண்டாம்; ஆனால் நீ பிறவி நீங்கிப் பேரின்பம் அடைய நேர்ந்துள்ளாய்! இல்லை என்று இரப்போர்க்கு இல்லை என்னாத நல்ல இதயம் எந்த வள்ளலிடம் தோன்றினாலும் அது உன்னுடைய பான்மையாய் ஒளி புரிந்திருக்கும். உன் பிறப்பே பிறப்பு; நீ பெற்றதே பேறு; உன்னைக் கண்டதே கண்; அந்தக் கண்ணை யுடையவனே உண்மையான கண்ணன்.

இன்னவாறு கூறிக் கண்ணீர் மல்கிக் கன்னனைத் தழுவிக் கண்ணன் உள்ளம் கரைந்து உருகி நின்றான். உருக்கமான இந்த நிகழ்ச்சிகளை வில்லியாழ்வார் சுருக்கமாகவும் சுவையாகவும் பாடியிருக்கிறார். அயலே வருவன காண்க.

அத்தவெற்பு இரண்டு விற்கிடை எனப்போய்
ஆதவன் சாய்தல்கண்டு அருளி

முத்தருக் கெல்லாம் மூலமாய் வேத
முதற்கொழுந்து ஆகிய முகுந்தன்
சித்திரச் சிலேக்கை விசயனைச் செருநீ
ஒழிகெனத் தேர்மிசை நிறுத்தி
மெய்த்தவப் படிவ வேதியன் ஆகி
வெயிலவன் புதல்வனை அடைந்தான். (1)

தாண்டிய தரங்கக் கருங்கடல் உடுத்த
தரணியில் தளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதி நீ எனக் கேட்டேன்
மேருவி னிடைத்தவம் பூண்டேன்
ஈண்டிய வறுமைப் பெருந்துயர் உழந்தேன்
இயைந்ததொன் றிக்கணத் தளிப்பாய்
தூண்டிய கவனத் துரகதத் தடந்தேர்ச்
சுடர்தரத் தோன்றிய தோன்றல்! (2)

என்றுகொண் டந்த அந்தணன் உரைப்ப
இருசெவிக்கு அமுதெனக் கேட்டு
வென்றிகொள் விசயன் விசயவெங் கணையால்
மெய்தளர்ந்து இரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துத் தரத்தகு பொருள் நீ
நவில்கென நான்மறை யவனும்
ஒன்றிய படிநின் புண்ணியம் அனைத்தும்
உதவுகென் றலும்உளம் மகிழ்ந்தான். (3)

ஆவியோ நிலையில் கலங்கியது யாக்கை
அகத்ததோ புறத்ததோ அறியேன்;
பாவியேன் வேண்டும் பொருள்எலாம் நல்கும்
பக்குவம் தன்னில்வந் திலேயால்
ஓவிலாது யான்செய் புண்ணியம் அனைத்தும்
உதவினேன் கொள்கநீ உனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றால்
புண்ணியம் இதனினும் பெரிதோ? (4)

என்னமுன் மொழிந்து கரம்குவித்து இறைஞ்ச
இறைஞ்சலர்க்கு எழிலியே றனையான்

கன்னனை உவகைக் கருத்தினுல் நோக்கிக்
கைப்புன லுடன்தரு கென்ன
அன்னவன் இதயத் தம்பின்வாய் அம்பால்
அளித்தலும் அங்கையால் ஏற்ருன்
முன்னமோர் அவுணன் செங்கைநீர் ஏற்று
மூவுல கமும்உடன் கவர்ந்தோன். [5

மல்லலந் தொடையல் நிருபனை முனிவன்
மகிழ்ந்துநீ வேண்டிய வரங்கள்
சொல்லுக உனக்குத் தருதுமென் றுரைப்பச்
'சூரன்மா மதலையும் சொல்வான்
அல்லல்வெவ் வினையால் இன்னம் உற்பவம் உண்
டாயினும் ஏழெழு பிறப்பும்
இல்லைஎன் றிரப்போர்க்கு இல்லைஎன் றுரையா
இதயம்நீ அளித்தருள் என்ருன். [6

மைத்துனன் உரைத்த வாய்மைகேட்டு ஐயன்
மனமலர் உகந்துகந் தவனைக்
கைத்தல மலரால் மார்புறத் தழுவிக்
கண்மலர்க் கருணைநீர் ஆட்டி
எத்தனை பிறவி எடுக்கினும் அவற்றுள்
ஈகையும் செல்வமும் எய்தி
முத்தியும் பெறுதி முடிவில்என் றுரைத்தான்
மூவரும் ஒருவனு மூர்த்தி (பாரதம்) [7

இந்தப் பாசுரங்களைக் கூர்ந்து நோக்குவோர் நேர்ந்துள்ள நிலைகளை நேரே ஓர்ந்து கொள்ளுவர். கொடையிலும் வீரத்திலும் கன்னன் உயர்ந்துள்ள உண்மைகள் ஈண்டு நுண்மையா உணர வந்தன. போர் முகத்தில் ஆவி அலமந்துள்ள பொழுதும் யார்க்கும் இல்லை என்னுமல் ஈயும் நல்ல இதயம் வேண்டும் என்று இவ் வள்ளல் வேண்டியிருப்பது உலக உள்ளங்களை உருக்கியுள்ளது.

இவனுடைய தீரச் செயலும் வீரச்சாவும் விழுமிய கொடையும் அதிசயமுடையன. யாரும் துதி செய்து வருவன. இவன் மாண்டுபோய் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகின்றன; ஆயினும் இவனது பேரும் புகழும் பாரில் யாண்டும் ஓங்கி நிற்கின்

றன. கொடைவீரங்களுக்குத் தலைமையாளனாக உலகம் புகழ எவ்வழியும் திவ்விய நிலையில் இவன் ஒளிபெற்றுள்ளான்.

கொடையுளும் ஒருவன் கொல்லும்
கூற்றினும் கொடிய வாட்போர்ப்
படையுளும் ஒருவன் என்று
பயங்கெழு பனுவல் நுண்ணூல்
நடையுளார் சொல்லிற் றெல்லாம்
நம்பி சீவகன்கண் கண்டாம்
தொடையலங் கோதை என்று
சொல்லுபு தொழுது நிற்பார். (சீவகசிந்தாமணி 464)

கொடையிலும் போர்ப்படையிலும் கன்னனைப் போல் சீவக மன்னன் சிறந்திருந்தான் என இது வரைந்து காட்டியுளது. விழுமிய மேன்மைகளுக்கு இவன் விளக்கமா விளங்கினான்.

உயர்ந்த ஆண்மகனாய்ப் பிறந்தவன் நடந்து வாழ வேண்டிய நயங்களை இங்கே வியந்து காண்கிறோம். உள்ளம் தீரமாய் உவந்து உதவுக; அதனால் புகழும் இன்பமும் பொருந்தி அகிலமும் வியந்து பேணி நயந்து வர நீ உயர்கதி யுறுவாய்.

---

880. உள்ளம் இனிக்க உரைஇனிக்க ஓதியநா
தெள்ளமுதம் என்னத் தினமினிக்க—வள்ளல்கள்
பாரோடு பேரோடு பண்பமைந் தென்றும்
சீரோடு நிற்பர் சிறந்து. (ம)

இ—ள்.

எல்லாருடைய உள்ளங்களும் உரைகளும் எவ்வழியும் விழைந்து மகிழ்ந்து புகழ்ந்து வர வள்ளல்கள் வாழ்ந்து வந்து இவ்வுலகத்தில் என்றும் நிலையான கீர்த்திகளோடு நிலவி நிற்கின்றனர்; அவரது தலைமை தனிமகிமை யுடையது என்பதாம்.

சுயநலம் கருதலும், தன் பெருமை கூறலும் சீவசுபாவங்களாய் மேவி வந்துள்ளன. தன்னை வீணே உயர்வா எண்ண நேர்ந்தபோது பிறரை மதியாமல் மனிதன் பிழையாய் இழிவுறுகின்றான். செருக்கு இறுமாப்பு என்னும் மொழிகள் மனிதனுடைய மயலான செயல்களை நோக்கி வெளிவந்திருக்கின்றன.

பெரும்பாலும் இவ்வாறு மனத்திமிர் மண்டியுள்ள மனித சமுதாயத்தில் ஒருவன் தனியே இனிய புகழைப் பெறுவது மிகவும் அரிதாம். இந்த அரிய புகழை உபகாரி எளிதே பெற்றுக் கொள்ளுகிறான். செய்யும் உதவிகள் தெய்வீக நிலைகளை அருளுகின்றன.

உள்ளங்களில் மாறுபாடுகள் மருவியுள்ளவர்களும் வள்ளல்களை உரிமையோடு உவந்து புகழ்ந்து பெருமையாப் பேசுகின்றனர். உயிர்களுக்கு இதமா உபகாரம் புரிவதால் கொடையாளிகளை யாவரும் மரியாதையோடு மகிழ்ந்து போற்றுகின்றனர். பாவலரும் ஆவலாய் அவரைப் புகழ்ந்து பாடுகின்றனர்.

வாசம் கலந்த மரைநாள நூலின்
வகை என்பதுஎன்னை? மழைஎன்று
ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்
சாராமன் வெண்ணெய் அணுகும்
தேசம் கலந்த மறைவாணர் செஞ்சொல்
அறிவாளர் என்றிம் முதலோர்
பாசம் கலந்த பசிபோல் அகன்ற
பதகன் துரந்த உரகம். (இராமா, நாகபாசம்,263)

வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலை அணுகினவருடைய பசித்துயரம் நீங்கியது போல் இலக்குவனைப் பிணித்திருந்த நாகபாசம் கருடனைக் கண்டதும் அடியோடு நீங்கிப்போயது என இது அவரது கொடையின் பாங்கோடு குறித்திருக்கிறது.

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட்டு எம்கோமான்
தண்டார் புனைசந் திரனசுவர்க்கி---கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி. (நளவெண்பா, கலிநீங்கு, 48)

சந்திரன் சுவர்க்கியைக் கண்ட பாவலர் பசி நீங்கியதுபோல் நளனைப் பிடித்திருந்த கலி நீங்கியது என இது காட்டியுள்ளது.

நாகையாப் புகழான் பெண்ணை நதிவளம் சுரக்கும் நாடன்
வாகையால் பொலிதிண் தோளான் மாகதக் கொங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசுபெற்றவர்கள் போல
ஓகையால் செருக்கி மீண்டார் உதிட்டிரன் சேனை யுள்ளார்.
(பாரதம், 16ம்போர் 90)

வரபதியாட் கொண்டான் என்னும் வள்ளலிடமிருந்து பரிசு பெற்றவர்கள் உள்ளம் உவந்து மீண்டது போல் தருமன் சேனையில் உள்ளவர்கள் வெற்றிக்களிப்போடு மீண்டனர் என இது உரைத்துள்ளது. கம்பர், புகழேந்தி, வில்லியாழ்வார் இங்கே உள்ளம் உவந்து வள்ளல்களைப் பாராட்டியிருக்கின்றனர். இவ்வாறு பாவலர் வாயால் பாடப் பெற்றமையால் கொடையாளிகள் பூவலயம் எங்கும் புகழ் ஓங்கிப் பொலிந்து நிற்கின்றனர்.

தம்மிடம் வந்து சிறிய உதவிகளைப் பெற்றுக் கொண்டு தமக்குப் பெரிய புகழ்களைக் கொடுத்தலால் பாவலர்களை வள்ளல்கள் உள்ளம் உவந்து உயர்ந்த மரியாதைகளை விழைந்து செய்து உரிமையோடு தழுவிப் போற்றிக் கொள்ளுகின்றனர்.

வள்ளியோர் எவ்வளவு வாய்ப்புற் றிருந்தாலும்
கொள்ளுவோர் இன்றெனில்சீர் கூடாதே---பிள்ளைதான்
உண்டோ மனைவி உருவிடத்தே பேராண்மை
கொண்டவனே ஆனாலும் கூறு.

வலிய ஆண்மையாளனே ஆயினும் உரிய மனைவி இல்லை எனின் அரிய மகன் அவனுக்கு இல்லையாம்; வண்மையாளன் எவ்வளவு வளம் பெற்றிருந்தாலும் வாங்குவார் இல்லையானால் அவனுக்கு யாதொரு புகழும் உண்டாகாது என இது உணர்த்தியுள்ளது. ஒப்பின் நுட்பங்களை உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும். எளிய வழியில் இறைஒளி தழுவி வருகிறது.

தம்பால் ஏதேனும் வாங்க வருபவர் தமக்குப் பெரும் பொருள் தர வருபவராகச் செல்வர் கருத வேண்டும்: ஏன்? எனின், அவராலேயே அவர்க்குப் புகழும் புண்ணியங்களும் உளவாகின்றன. இந்த மருமத்தை உணர்ந்தவர் மனம் உவந்து கொடுத்து யாண்டும் தருமத்தை அடைந்து கொள்ளுகின்றனர்.

சிறந்த வள்ளலான காரி சீரிய பண்போடு யார்க்கும் உவந்து உதவி வந்தான். ஒரு நாள் அவனிடம் ஒரு கவிஞர் வந்தார். நல்ல கல்விமானான அவர் வறுமையால் அல்லலுழந்து வந்துள்ளாரே என்று வருந்தினான். இனிமேல் யாரிடமும் செல்லாமல் அவர் நல்ல நிலையில் வாழவேண்டும் என்று கருதினான். உடனே இரண்டு குதிரைகள் பூட்டிய தேரைக் கொண்டுவரும்படி செய்தான்; புலவரை அதில் ஏற்றிப் பொருளை வாரிக்கொடுத்

துப் போற்றி அனுப்பினன். அந்த அதிசய நிலையை ஊரும் நாடும் அறிந்து அவனது சீரிய வண்மையை வியந்து புகழ்ந்தது.

“வாலுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல்தொடித் தடக்கைக் காரி.” (சிறுபாண்)

காரி வள்ளல் ஈர நன்மொழி கூறி இரவலர்க்கு ஈந்து வந்த இயல்பையும், உலகம் வியந்து மகிழப் புலவர்க்குப் புரவியும் தேரும் புகழ்ந்து உதவியுள்ள நிலையையும் இங்கே உணர்ந்து நிற்கிறோம். இனிய நீர்மைகள் தனி மகிமைகளை அருளுகின்றன.

நல்ல கொடையாளிகளைக் கருதுந்தோறும் எவரும் உவகையுறுகின்றனர்; உவந்து புகழ்கின்றனர்; அவரது பேரை யாண்டும் விழைந்து கேட்கின்றனர். உபகாரிகள் இனிய நீர்மையர் ஆதலால் அவருடைய புகழ்கள் எவர்க்கும் இன்பம் தருகின்றன. நன்மையை நாடிச் செய்பவனை இம்மையும் மறுமையும் இனிமையாய் நாடி உரிமையோடு வருகின்றன.

பிறவுயிர் இன்புறப் பேணி வாழ்பவன்
அறவுயிர் அன்புயிர் அரிய நீதியின்
நிறவுயிர் நிருமலன் நேரில் நேர்கிற
உறவுயிர் உறுதியை உணர்க ஊன்றியே.

இந்த உயிரின் கவியின் சுவையை ஓர்ந்து சிந்தனை செய்க.

## இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

உபகாரம் செய்வது உயிர்க்கு உறுதி.
உபகாரியை விண்ணும் மண்ணும் வியந்து புகழும்.
பலனை எதிர்பாராமல் உதவுவோர் உலகில் உயர்ந்து திகழ்வர்.
பிறர் இன்புறப் பேணுவார் பேரின்பம் காணுவார்.
ஈகையாளர் எவ்வுயிர்க்கும் இரங்கி அருளுவார்.
தன் உயிரையும் அவர் தந்து மகிழ்வார்.
வறுமை யுறினும் மாறாது உதவுவார்.
உதவியாளர் யாண்டும் ஒளிமிகுந்து திகழ்வார்.
உலகம் அவரை என்றும் உவந்து புகழ்ந்து வரும்.
நிலையான சிரஞ்சீவிகளாய் அவர் நிலைத்து விளங்குவார்.

அஅ—வது உரம் முற்றிற்று.

# எண்பத்தொன்பதாம் அதிகாரம்.

## வ ர ம்.

அஃதாவது உறுதி நலங்களை உணர்ந்து ஒழுகுவதால் உள வாகும் விழுமிய மேன்மை. உள்ளத்தின் உயர்வால் ஒளிபெற்று வெளியே விளங்கிவருதலால் உரத்தின்பின் இது வைக்கப்பட்டது.

881. ஒத்த உருவின ரேனும் உணர்வுடையார்
உத்தமர் ஆகி உயர்கின்றார்—வித்தகர்
என்னும் பெருமகிமை எய்தியே எவ்வழியும்
மன்னும் புகழ்கள் மலிந்து. (க)

இ—ள்.

மனித உருவில் ஒருநிகராய்த் தோன்றினும் புனிதமான உணர்வுடையவர் சிறந்த உத்தமரா உயர்ந்து விளங்குகின்றார்; தெளிந்த ஞானம் அடைந்தவர் எவ்வழியும் உயர்ந்த கீர்த்திகளால் நிறைந்து யாண்டும் திவ்விய நிலைகளில் திகழ்வர் என்க.

உலகக் காட்சியில் மனித இனம் மாட்சிமையுடையது; ஆயினும் மாண்பு மருவிய அளவுதான் அது மதிப்படைந்து வருகிறது. பல உருவங்கள் மக்கள் வடிவில் நெடிது உலாவி வந்தாலும் மாக்களாகவே அவை மயங்கி இயங்குகின்றன. நல்ல நீர்மைகள் இல்லையானால் அந்த மனிதத் திரள்கள் பொல்லாத வழிகளில் இழிந்து கழிந்து அவலமாய்ப் புலையுறுகின்றன.

எல்லாரும் மானிடவர் ஆவரோ? ஈங்குள்ள
கல்எல்லாம் மாணிக்கக் கல்லாமோ?—நல்லார்
ஒருவர் உளரேல் அவரையே வையம்
உரிமையாக் கொள்ளும் உவந்து.

மனித சாதியுள் இனிய நீர்மை தோய்ந்து புனிதமாய் ஒருவன் இருப்பின் அவன் அரிய மாணிக்க மணிபோல் பெரிய மகிமையை யுறுகிறான் என்பதை இதனால் இனிது தெரிகின்றோம்.

பட்டம் தட்டிய வெட்டுக் கல்லுகள் பள பள என்று மின்னினும் மதிப்பறியும் மதியுடையார் அவற்றை மதியார்; உள்ளத்தில் நல்ல பண்பில்லாமல் வெளியே பகட்டாய் மினுக்கிப் பெரிய மனிதர் போல் பிலுக்கி நின்றாலும் அவரை உணர்வுடை

யார் ஒரு பொருளா மதிக்கமாட்டார். புனித நிலையே மனிதனை மகிமைப்படுத்தி வருகிறது. அந்தநிலை அளவே தலைமை யுறுகிறது.

தோற்றத்தால் மாத்திரம் எவரும் உண்மையான ஏற்றங்களை அடையமுடியா. உள்ளப்பண்பே உயர்வை உதவுகிறது.

உருவத்தால் ஒத்திருந்தாலும் சித்த சுத்தியுடையவர்க்கும் அஃது இல்லாதவர்க்கும் எத்தனையோ வேறுபாடுகள் உள்ளன.

முன்னவர் அரிய பொன்போல் உயர்ந்தவர்; பின்னவர் வறிய மண்போல் இழிந்தவர். உயர்வும் இழிவும் இயல்பின் விளைவு.

பண்பட்ட நல்ல உள்ளமே மனிதனை எல்லாவகையிலும் உயர்த்தி எவ்வழியும் இன்ப நலங்களை அருளுகிறது. மனித உருவில் மருவியிருப்பினும் புனித மனமுடையவன் புண்ணியவானாய் உயர்ந்து புதிய ஒரு தேவனாய்ப் பொலிந்து நிற்கின்றான்.

மனதின் இனிய அசைவுகளே நினைவு உணர்வு என வெளியே ஒளி வீசி வருகின்றன. அதிசயமான மதிநலங்களுக்கு எல்லாம் மூல காரணமாய் மனம் இனிது அமைந்துள்ளது.

மனம் மாசு இன்றி இருந்தால் அதில் ஈசனது அருள் ஒளி நேரே வீசுகின்றது. வீசவே அது தேசுமிகுந்து திவ்விய நிலையில் திகழ்கிறது. மனம் புனிதம் ஆனபோது அந்த மனிதன் இனிய ஓர் அமிர்தமாய்த் தனி நிலையில் உயர்ந்து விளங்குகிறான்.

புனிதமனம் உடையவனே புண்ணியவான்
ஆகின்றான்; புகழ்கள் ஓங்கி
மனிதஇனம் தொழுதுவர மதிப்படைந்து
வருகின்றான்; மனமே யாண்டும்
இனியகதி தரவல்ல இன்துணையாம்;
அதுதூய்மை எய்தி வந்தால்
தனிமகிமை பெருகிவரும்; தனிமுதலின்
திருவருளும் சாரும் அன்றே (இந்தியத்தாய் நிலை, 266)

இது இங்கே நன்கு சிந்திக்க வுரியது.

உயர்நலங்கள் உள்ளத்தூய்மையால் வருதலால் அது தீமை ஆயபோது அந்தமனிதன் ஈனமாய் இழிந்து எள்ளப் படுகிறான். கொடியவன் தீயவன் புல்லன் பொல்லாதவன் எனப் புலைப் படுபவர் உள்ளம் பழுதுபட்டவரே. அது பழுதுபடாமல் உள்ளவரே விழுமியோராய் எவ்வழியும் விளங்கி வருகின்றனர்.

**"Distinguish between baseness and merit, not by descent, but by purity of life and heart."** **[Horace]**

மேன்மைக்கும் கீழ்மைக்கும் உள்ள வேற்றுமையை ஊன்றிப்பார்; அது பெரிய பிறப்பால் அன்று; உள்ளத்தூய்மையான நல்ல உயிர் வாழ்வினால் உயர்வும் அங்ஙனம் இல்லாமையால் இழிவும் உண்டாகிறது என இவ்வாசகம் உணர்த்தியுள்ளது.

இதயம் புனிதம் ஆயின் எல்லா மேன்மைகளும் அங்கே உதயம் ஆகின்றன: அது வழுவாயின் எவ்வழியும் இழிவுகளே எழுகின்றன. நல்ல மனம் இல்லையானால் அல்லலேயாம்.

தன்னுடைய இருதயத்தை ஒருவன் பரிசுத்தப்படுத்திவரின் அவன் அற்புத சத்திகள் வாய்ந்து அதிசய மேன்மைகளை அடைகிறான். உயர்ந்த மேன்மையை எல்லாரும் விரும்புகின்றனர்; இழிந்த கீழ்மையை யாவரும் வெறுக்கின்றனர். அவை விளைந்து வரும் வழியை விழி திறந்து பாராமல் பலர் இழிந்து போகின்றார். கருதிவருவதில் உறுதிநலங்கள் பெருகிவருகின்றன.

சிந்தனை, அறிவு, உணர்வு, யூகம், விவேகம், ஞானம் என வந்துள்ள மொழிகள் அரிய பொருள்களையுடையன. பெரிய மனித உரிமைகளா மருவி யிருக்கின்றன. இந்த ஆறுவகைகளுள் ஏதேனும் ஒன்றைத் தகுதியாக வுடையவன் மிகுதியான மகிமையை மேவி மிளிர்கின்றான். உணர்வின் அளவு உயர்வாகிறது.

வித்தகர் என்றது ஞானநலம் நன்கு வாய்ந்த மேலோரை, வித்தகம் = ஞானம், திறம். தத்துவ நிலைகளை உய்த்து உணர்ந்து உத்தம நெறிகளில் உயர்பவர் வித்தகர் என நின்றார்.

சித்துஎன அருமறைச் சிரத்தில் தேறிய
தத்துவம் அவனது தம்மைத்தாம் உணர்
வித்தகர் அறிகுவர் வேறு வேறுணர்
பித்தரும் உளர்சிலர் வீடு பெற்றிலார். (இராமா, இரணி 60)

இந்தக் கவியின் பொருளைக் கருதி உணர வேண்டும். வித்தகர் நிலையை இது நன்கு விளக்கியுள்ளது. தன்னை அறிந்து தலைவனை உணர்பவன் மன்னிய ஞானியாய் மகிமை பெற்றுள்ளான். பரம நீர்மைகளை அறியும் உரம் உடையவனே வரமாயுயர்ந்து வளமான புகழ்களை அடைந்து கொள்கிறான். நீ சிறந்த பிறவியை அடைந்து வந்துள்ளாய்; உரிமையை உணர்ந்துகொள்க.